# ஸதாநந்த போதக சாமியார்




எம். எஸ். ராமுலு கம்பெனி
எஸ்பிளனேட் மதராஸ்

விலை ரூபா 2—4—0

# ஸதாநந்த

# போதக சாமியார்

3-00
28

வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார், B. A.



எம். எஸ். ராமுலு கம்பெனி
286, அப்பர்பில்டிங்ஸ்
எஸ்பிளனேட் : மதராஸ்

உ

# ஸதாநந்த போதக சாமியார்



## அத்தியாயம்—1

### மன்மத பீட மகா யோகீசுவரர்

திவ்ய மங்கள விக்ரகங்களாய்ப் பரமாத்மா கோவில் கொண்டிலங்கித் திருவருள் கொழிக்கும் தென்னாட்டில் திருச்சிராப்பள்ளியிலிருந்து திருவையாற்றிற்குச் செல்லும் இராஜபாட்டையில், 1895-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 15-ம் தேதி பகல் சுமார் ஒரு மணி சமயத்தில் ஒரு குதிரை வண்டி தடதடவென்று நிரம்பவும் விசையாக வந்துகொண்டிருந்தது. வண்டியின் முன்னும் பின்னும் திரைகள் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தமையால், அவைகள் உள்ளே இருந்தவர்களை மறைத்துக்கொண்டிருந்தன. அந்த இராஜபாட்டையின் இரு புறங்களிலும் மரங்கள் அடர்ந்திருந்தனவாயினும், வெயிலின் கொடுமை தாங்க இயலாததாயிருந்தது. வாயுபகவான் போன இடம் தெரியாதபடி ஓடி ஒளிந்துகொள்ளவே, சகலமும் ஓய்ந்து ஒடுங்கிப்போயிருந்தது. மரஞ் செடி கொடி முதலியவை ஸ்தம்பித்து அசைவற்று நின்

றன. இலை பூ காய் கனி முதலியவை வாடித் துவண்டு வீழ்ந்துபோயின. மிருக பட்சி முதலிய ஜீவ ராசிகள் யாவும் சோர்ந்து தளர்ந்து உணர்வற்று அதனதனிடத்தில் தலை சாய்த்து உறங்கின. மனிதரது நடமாட்டமும் அரிதாயிற்று. அத்தகைய கொடிய நடுப்பகலில் வந்துகொண்டிருந்த வண்டியின் குதிரை, மாதம் காதவழி பறக்கும், பட்டணத்து மாயப் புரவிபோல் இல்லாமல், திடகாத்திர தேகமும், கம்பீரத் தோற்றமும் உடையதா யிருந்ததானாலும், அதிகாலை முதல் மிக தூரமான இடத்திலிருந்து ஓயாமல் ஒரே தொடர்ச்சியாய் ஓடி வந்துகொண் டிருந்ததுபற்றி, அலுத்துப் போனதாய்த் தோன்றியது. அதன் உடம்பின் சர்வாங்கங்களிலிருந்தும் வியர்வை ஊற்றுநீர் போல் விசையாய்ப் பொங்கி வழிந்தபடி இருக்க, வாயிலிருந்து வெண்மையான நுரை வெளிப்பட்டு விகாரமாய்த் தொங்கிக் கட்டி கட்டியாய்த் தரையில் விழுந்தபடி இருந்தது.

வண்டிக்காரன் சுமார் நாற்பது வயதடைந்தவனும், பூதாகாரமான கறுத்த திருமேனி யுடையவனும் இருந்தான். அவன், ஒரு சாணகல மிருந்த இடத்தில் உடம்பின் ஒரு சிறிய பாகத்தை வைத்துக் காலைமுதல் அந்தரத்தில் தொங்கிக்கொண்டே வந்தவனாதலால், அவன் தனது பெரிய உடம்பை அப்புறம் இப்புறம் நகர்த்தி நெளித்துப் புரட்டிக் கொடுப்பதும், நிமிர்ந்து குனிந்து தத்தளிப்பதும், அப்படியே உட்கார்ந்திருக்கவும், கீழே இறங்கவும் மாட்டாமல் தவித்து, பஞ்சாக்னி மத்தியில் இருந்து தவம் புரிந்து, அடிக்கடி கண்களை மூடி நிஷ்டை செய்து உடம்பை அயரவிடுவதும், அப்போதைக்கப்போது திடுக்கிட்டு விழித்துக்கொண்டு சாட்டைக் குச்சியை வண்டிச் சக்கரத்தில் கொடுத்து சடசட கடபுட லொடலொட படபட என்று ஓசையுண்டாக்கிக் குதிரையை

அடிக்காமல் அச்சுறுத்தி ஊக்குவதுமாய்த் தனது வேலையை அபார சாமர்த்தியத்தோடு செய்துகொண்டிருந்தான்.

திரைகளுக்குள்ளிருந்து ஒரு சிறுமி அடிக்கடி மெது வாய் அழுத குரலொலியும், அவளுடைய தாய் சமாதானப் படுத்திய குரலொலியும் உண்டாயின. "அடீ, சுந்தரீ, வெறு மனே அழுகாதேடி, அழுதழுது மூஞ்சி யெல்லாம் வீங்கிப் போச்சுடீ. விச்சா அழுதா, தலெயெ வலிக்கும்டீ, நம்ப ஊரு இன்னும் கொஞ்ச தூரத்துலெதான் இருக்கு. இன்னம் கொஞ்ச நாழிலெ நம்ப ஊரு வந்துடும். எறங்கினோணெ சாப்பிடலாம். கொஞ்சம் பொறுத்துக்கோடீம்மா. இப்பி டியே எம்மடீலெ சாஞ்சுண்டு, கண்ணெ மூடித் தூங்கி டீம்மா" என்று, ஒரு யௌவன மாது குயிலொலியைத் தோற்கச் செய்த அதிமாதுரியமான குரலில், மிக உருக்கமாக வும் பரிவாகவும் கூறித் தன் குழந்தையான சிறுமியை சமா தானப்படுத்தி, அவளைத் தன் உடம்போடு சேர்த்து அணைத் துக்கொண்டு இதமாய் அதன் உடம்பில் தட்டிக் கொடுத்தது தெரிந்தது.

அந்த யௌவன மாது தன் குழந்தைக்கு அவ்வாறு கனிகரமாய் இதோபதேசம் செய்தாளானாலும், அவளுடைய சுய நிலைமை அந்தக் குழந்தையின் நிலைமையை விடப் பன் மடங்கு கேவலமாயிருந்ததென்றே கூறவேண்டும். அப்பெண் மணி விடியற்காலையிலிருந்து தண்ணீர்கூட அருந்தாமல் ஒரே நிலைமையில், பெட்டிகளுக்கும் மனிதருக்கும் இடையில் நெருங்கிக் கால்களை முடக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்த தனால், அவளுடைய உடம்பு முழுதும் நெருப்பால் வெதுப் பப்பட்டதுபோலப் பற்றி எரிந்தது. நா வறண்டுபோயிற்று. கண்கள் இருண்டிருண்டு மூடிக் கொண்டன. இரத்தக் கட்டி னால் கைகால்களெல்லாம் மரத்துப்போய் விண்விண்ணென்று

தந்தி மீட்டின. உடம்பு கட்டி லடங்காமல் துவண்டு துவண்டு அங்குமிங்கும் சாய்ந்தது. அந்த நிலைமையில் அவள் தன் குழந்தைக்கு இதோபதேசம் செய்து தட்டிக்கொட்டி அணைத்து, அதன் வேதனையை சமனப்படுத்தியபடி நரக மத்தியி லிருந்து தத்தளித்தாள்.

ஆனால் அந்த இளஞ் சிறுமியோ தன் தாய் கூறிய சொற்களைச் சிறிதும் கவனியாதவளாய், மழலை மாறாத மொழிகளால், கல்லுளிப் பிடிவாதமாய், "அம்மா, நேக்குப் பசிக்கறதுடீ, சாதம் போட்றீ; அம்மா நேக்குப் பசிக்கறதுடீ, சாதம் போட்றீ" என்ற பல்லவியையே திரும்பத் திரும்பப் பாடிக் கண்களை மூடுவதும் திறந்துகொள்வதும், தாயின் விலாப் பக்கத்தில் சாய்ந்து உறங்குவதும் நிமிர்வதுமாய் சாமியாடிக் கொண்டிருந்தாள்.

அவர்கள் இருவருக்கும் அடுத்தாற்போலப் பின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த, அந்தச் சிறுமியின் தகப்பனார் அதிருப்தியாலும், மன வேதனையாலும் அடிக்கடி தமது முகத்தைச் சுளித்துக்கொண்டவராய், "என்ன கஷ்டம் இது! வழியா மாள மாட்டேங்கறது! கொழந்தையா தவிக்கறது! ஆத்துலெ இருந்தா இத்தருவா மூணுதரம் சாப்பிட்டிருப்பா. இண்ணைக்கிக் காப்பிக்கிக்கூட இழுப்பாப் போச்சு. அடீ, பாப்பா, அழுகாதே! இன்னொரு பிஸ்கோத்துத் தின்னூட்டுக் கொஞ்சம் தூத்தம் குடிக்கிறியா? அடீ, கொழந்தைக்கி பிஸ்கோத்து எடுத்துத் தாடீ" என்று அன்பொழுகக் கூறியதன்றி, பின்பக்கத்துத் திரைத் துணியை அடிக்கடி தூக்குவதும், "உஸ், அப்பாடா, உஸ் அப்பாடா" என்று அதன் அடிப் பாகத்தை விசிறியாய் உபயோகித்துத் தமக்கும் குழந்தைக்கும் காற்றை உண்டாக்கிக் கொள்வதுமா யிருந்தார்.

தமது மனைவிக்கும் காற்று இன்றியமையாத வஸ்து என் பதை அவர் உணர்ந்தாராயினும், இராஜபாட்டையில் தாம் தமது மனையாளுக்குக் காற்று 'சப்ளை' செய்வதை யாராவது பார்த்துவிட்டால், தமக்கு கௌரவதைக் குறைவு ஏற்படு மென்று கருதி, அவர் அவளை விலக்காக விட்டுவிட்டார். அவ ருடைய வீட்டின் உட்புறமா யிருந்தால், அவர் தமது மனை விக்குப் பங்காப் போடுவாரோவென்று சிலர் ஐயமுறலாம். அப்போது அவர் விசிறியை அவளுடைய கையில் கொடுத்து தமக்கும், தம் குழந்தைக்கும் விசிறிக்கொண்டே இருக்கச் செய்வாராகையால், இவ்வித ஐயத்திற்கே இடமில்லை.

அவர் கூறிய சொற்களைக் கேட்ட அந்த யௌவனப் பெண்மணி, "ஏண்டீ பாப்பா, அப்பா பிஸ்கோத்துச் சாப் பிடச் சொல்றா; எடுத்துக் குடுக்கட்டுமா? சாப்பிட்றியாடீ?" என்று மிக உருக்கமாய் வினவ, சிறுமி கண்களைத் திறவாமல் தலையை மாத்திரம் அசைத்து, "நேக்குப் பிச்சுக்கோத்து வாண்டாம்; வயத்தைப் பெரட்டி வாந்தி யெடுக்க வரது. நேக்குச் சாதம் போடு," என்று திக்கித் திக்கி மழலை மொழி யாய் உத்தரம் கொடுத்தபடி மயங்கி உறங்கித் தலையைத் தாயின் உடம்போடு சார்த்தி ஆடி ஆடி விழுந்தாள்.

அந்த வேதனையைக் கண்ட தகப்பனார் தாம் என்ன செய் வதென்பதை அறியாதவராய்த் தலையை அழுத்தமாய்த் தடவிக் கொண்டு, ஓங்கிய குரலில் பேசத் தொடங்கி, "ஏம்பா, வண் டிக்காரா, எதிரக்க பிராம்மணா ஸத்ரம் கித்தரம் ஏதாவது இருக்கோ? நோக்குத் தெரியுமோ?" என்றார்.

கண்களை மூடி சுஷுப்தியில் ஆழ்ந்து போய்க் குதிரை யின் வால்வரையில் தனது தலையைக் கொண்டு போவதும்

நிமிர்வதுமாயிருந்த வண்டிக்காரன் திடுக்கிட்டு, சிவந்து போய் பயங்கரமாய்க் காணப்பட்ட தனது கண்களைக் கசக்கி விட்டு நன்றாய் விழித்துக்கொண்டு, தெளிவும் உற்சாகமும் அடைந்து நிமிர்ந்து உட்கார்ந்து கனைத்துத் தொண்டையை சுத்தப்படுத்திக்கொண்டு, "எனக்குத் தெரியாதுங்க சாமி; நானும் இந்த ரஸ்தாவுலெ இதுபரியந்தம் வந்ததே இல்லீங்க. இதுதான் மொதப்பயணமுங்க. சத்தரம் ஏதாச்சும் தெம் பட்டா, வண்டியெ நிறுத்தறேனுங்க. விடிகாத்தாலெ மொத ஒரே முசுவா ஓட்டியாறத்துலெ, குருதையும் ஜக்கிப் போச்சு துங்க. என்னமோ ரொம்ப அவசரமின்னு எசமான் சொன் னீங்களேன்னு ஒரே ஓட்டமா ஓட்டியாறேனுங்க. இப்பிடியே இன்னும் ஒரு மணி நேரம் ஓட்டினா, முன்னூறு ரூபாக் குருதெ செத்துப்பூடுங்க" என்று கூறியபடி, மேலும் குதி ரையை ஊக்க, அது, "ஆ, தலைவிதியே, கிராதகப் பிரம்மா என் தலையில் இப்படியும் எழுதுவானா" என்று நினைப்பது போல் பரம ஸாதுவாய் மேலும் அரை நாழிகை காலம் ஓடியது.

வண்டிக்காரன், தான் உட்கார்ந்திருந்தால், தூக்கம் வருமென்று நினைத்து எழுந்து ஏர்க்கால்களின்மேல் நின்று கொண்டு, எதிரிலோ பக்கத்திலோ ஏதேனும் சத்தரம், அல் லது, வீடுகள் காணப்படுகின்றனவோ என்று கவனித்தபடி இருக்க, எதிரில் சிறிது தூரத்தில் வந்துகொண் டிருந்த ஒரு பிராம்மணருடைய வடிவம் அவனுக்குப் புலனாயிற்று. உடனே அவன் குதிரையின் வேகத்தை மிதப்படுத்தி, அந்தப் பிராம்மணர் அருகில் நெருங்கிய இடத்தில் வண்டியை நிறுத்தி, "சுவாமிகளே தண்டம்; வண்டிக்குள்ளாற ஓங்கள வங்க ஐயமாரு இருக்காங்க. அவுங்க திருவையாத்துக்குப் போறவங்க. விடிகாத்தாலெ மொத கொணசேகரத்துக்கு அண்

ஞண்டையிருந்து வாராங்க. இன்னம் யாரும் பூசைகீசை பண்ணல்லீங்க. பச்சைக் கொளந்தை பசி தாங்காமெ துடிக்கு துங்க. எதுருலே சத்தரம் கித்தரம் ஊரு கீரு ஏதாச்சும் இருக்குதுங்களா? எங்கநாச்சும் ரவை யூண்டு சாதம் அம் பிடுமா?" என்று தனது கைகளை அஞ்சலிசெய்தபடி விநய மாகக் கேட்டான்.

அந்தப் பிராம்மணர் மாநிறமான மெல்லிய தேகமுடை யவர். அவருடைய வயது சுமார் ஐம்பதிருக்கும். அவர் தம் நெற்றியில் சந்திரப்பிறைபோல சந்தனத்தினால் கீற்று நாமம் இட்டிருந்ததன்றி, கழுத்து, கைகள், மார்பு ஆகியவற்றிலும் சந்தனத்தை ஊர்த்துவ புண்டரம்போல மொத்தாகாரமாய்ப் பூசிக்கொண்டிருந்தார்; நீர்க்காவி ஏற்றப்பட்டிருந்த ஒரு வஸ் திரத்தை இடுப்பில் பஞ்சகச்சமாய் அணிந்து, பழுர்த்துண் டொன்றை நீளத்தில் கொசுவி இடது தோளின்மேல் போட் டிருந்தார். அவரது முன் கச்சம் நான்கு விரலகலமும், பின்கச் சம் இரண்டு விரலகலமும் இருந்தன. அவருடைய மார்பில் ஒரு துளவசி மணி மாலையும், உள்ளங்கழுத்தில் தங்கக்கொடி யில் கோக்கப்பெற்றிருந்த ஒற்றை உருத்திராக்ஷமும் பிர காசித்தன. வெற்றிலை, புகையிலை, வெட்டுப்பிளவு, கற்றைக் காம்பு, காசுக்கட்டி, சுண்ணும்புக்கரண்டம், பாக்குவெட்டி முதலியவை நிறைந்த ஒரு சிறிய ஓலைப் பெட்டியை அவர் தமது இடது கக்கத்தில் வைத்துக் கையால் இடுக்கிக்கொண் டிருந்தார். அவரது வலது கையின் ஆள்காட்டி விரலிலும் பவித்திர விரலிலும் இரண்டு வெள்ளி மோதிரங்கள் காணப் பட்டன. பாதங்களில் நுணுக்கட்டைப் பாதக்குறடுகள் இருந்தன. அவர் தமது வலது கையில் ஒரு சிறிய குமிழ்ப் பிரம்பை ஊன்றிக்கொண்டு விசுக் விசுக்கென்று மிக சுறு சுறுப்பாக நடந்து வந்துகொண்டிருந்தார். அவ்வாறு வந்த

ஐயர், வண்டிக்காரன் தம்மோடு பேசியதைக் கேட்டு சடக் கென்று நின்றார். அவர் எப்போதும் தமது வாயின் ஒரு பக்கத்தில் ஒரு பெரிய புகையிலைச் சுருளை அடக்கி, வாய் நிறைய உமிழ்நீரைத் தேக்கி, அதை உமிழ மனமற்றவராய், வாயிலேயே வைத்துக்கொண்டிருப்பாராதலால், அவருடைய வாய் ஒத்தூதுகிறவனுடைய வாயும் கழுத்தும் உப்புசமா யிருப்பதுபோல எப்போதும் வீங்கியே இருக்கும். எவரே னும் அவருடன் பேச விரும்பினால், அவர் தமது வாயில் நிறைந்திருந்த அருமையான வஸ்துக்களை, வஸ்திரங்களில் எச்சில் சிந்தாதபடி உதடுகளை இறுக மூடிக்கொண்டு, ஜாக்கிர தையாக ஒருபுறம் ஒதுக்கி வழி செய்து, மறுமொழி கொடுப் பதற்குள், அவருடைய முகத்தில் ஏற்படும் குணக்குகளும் கோளாறுகளும் அவர் எதிரிலிருப்போரைப் பரிகசித்துக் கோணங்கி வேடிக்கை காட்டுவதுபோ லிருக்கும். உலகமே இடிந்து விழுவதாயிருந்தாலும், அவர் அந்த விஷயத்தில் பத றாமல் நிதானம் தவறாமல் மிக சாந்தமாகவே நடந்து கொள் வார். இனி தமது வாயில் இடமில்லையென்றும், வஸ்திரங் களுக்கு அபாயம் வந்துவிடுமென்றும் அவருக்கே பட்டால் தான், அவர் சதக்கென்று ஒரு தரம் எச்சிலின் ஒரு பாகத் தைக் கீழே உமிழ்வார். அவர் பேசும்போது உதடுகளைத் திற வாமலேயோ, அல்லது, முகத்தை மேலே திருப்பி வாயை சொற்பமாகத் திறந்துகொண்டோ பேசுவாராதலால், அவ ருடைய சொற்கள், வெள்ளைக்காரர் பேசும் இங்கிலீஷ்போல, வழவழ கொழகொழவென்று விளக்கெண்ணெயாயிருக்கும். வண்டிக்காரன் திடீரென்று தம்மோடு பேசவே, ஐயர், காக்கை தன் முகத்தை அப்புறமும் இப்புறமும் மேலும் கீழும் திருப் புவதுபோலத் தமது முகத்தைத் திருப்பி, சிறிதளவு எச்சிலைக் கீழே உமிழ்ந்துவிட்டு, மிகவும் நிதானமாய்ப் பேசத் தொடங்கி,

"ஓ! அப்பிடியா! எங்களவங்களா! எங்கே, நான் அவாளைப் பாக்கட்டும்" என்று மறுமொழி கொடுத்தவராய், இரண்டோரடி நடந்து, வண்டியின் பின் பக்கத்தை யடைந்து சிறிது தூரத்தில் நின்றபடி உட்புறத்தில் இருந்தவர்களைப் பார்க்க முயன்றார்.

அப்போது வண்டிக்காரன் உள்பக்கம் திரும்பி, "சாமீ, சாமீ, ஒங்களைத்தானே; இதோ ஐயரு ஒருத்தரு பின்பக்கம் வந்திருக்கிறாரு. அவருக்கிட்ட கேளுங்க" என்றான்.

அதற்குள் ஐயருடைய வாயில் புகையிலை ரஸம் மறுபடி பெருக்கெடுத்துப் பூர்த்தியாய் நிறைந்துபோகவே, அவர் தமது உதடுகளை மூடி முகத்தை மேல்பக்கம் நிமிர்த்திய படி பேசத் தொடங்கி, "என்னப்பா பிழாம்மணுங்கழே, ஆக் குடுமி தீக்ஷதா சம்பிழதாயமாத் தெழை போட்டிழுக்கே! ஆழையா ஹழிகீ! தெழையைத் தூக்குங்கோ; நேக்கு ஒங்க மொக தெழிசனம் கொஞ்சம் கெடைக்கட்டும்" என்று ஏளனம் செய்வதுபோலப் பேசினார். அது சரியான தமிழில், "என்னப்பா, பிராம்மணாளென்கிறாய்! வாய்க்குடுமி தீக்ஷிதாள் சம்பிரதாயமாய்த் திரை போட்டிருக்கிறதே! யாரையா ஹரிகீ, திரையைத் தூக்குங்கள்; எனக்கு உங்கள் முக தரிசனம் கொஞ்சம் கிடைக்கட்டும்" என்றாகிறது.

அவ்வாறு மேற்படி ஐயர் பேசியதை, வண்டிக்குள் இருந்தவரான கிருஷ்ணமூர்த்தி ஐயர் என்பவர் கேட்டு வெட்கமடைந்து, பின்புறத் திரையின் ஒரு பக்கத்து முடி

---

ஸ்மார்த்தப் பிராம்மணர் மரியாதைப்பட்ட மற்ற பிராம்மணர்களை அழைக்கும்போது 'ஹரிகி' என்று அழைப்பது வழக்கம். அந்த வழக்கம் தஞ்சை ஜில்லாவில் அதிகமாய் உபயோகத்தில் இருந்து வருகிறது. 'வாய்க்குடுமி தீக்ஷிதர்' என்பது தாடி வைத்திருக்கும் துருக்கரைக் குறிக்கும் சங்கேதச் சொற்கள்.

ச்சை அவிழ்த்து விடவே, திரை விழுந்து எதிர்ப்பக்கம் போய் ஒதுங்கியது. வாய்க்குடுமி தீக்ஷிதர் இருப்பதாகப் புரளிசெய்த ஐயர் உடனே தாம் எங்கேயோ கோவிலின் ஸந் நிதியில் நிற்பதுபோலவும், தமக்கு ஸ்வாமி தரிசனம் கிடைப் பது போலவும் நினைத்து திடுக்கிட்டு பிரமித்துப் போனார்; அவர் தம்முடைய வாயிலிருந்த 'ரஸ குல்லா'வை அசட்டை செய்து, உடனே தூரத்தில் துப்பிவிட்டு, மிக விநயமாகப் புன்னகை செய்து உள்ளே இருந்த மூவரையும் அன்பாகக் கடாக்ஷித்தார்.

வண்டியில் இருந்த புருஷருக்கு சுமார் முப்பது வய திருக்கலாம். அவர் பரம்பரையான கோடீசுவரருடைய புத் திரர்போல் அற்புதமான தேஜஸோடு விளங்கினார். உடம்பு சிவப்பாகவும் மினுமினுப்பாகவும் அழகான அமைப்புடைய தாகவும் இருந்தது. முகம் வசீகரமும் ஜ்வலிப்பும் பெற்று, காண்போர் மனதை உடனே கவரத்தக்கதா யிருந்ததன்றி, பெருந்தன்மை, உயர்குடிப் பிறப்பு, பரம்பரையான செல்வச் செழுமை முதலிய தன்மைகளைப் பெரிதும் காட்டியது. அவ ருடைய செவிகளில் இருந்த வைர மோதிரங்களும் நட்சத் திரங்கள்போலப் பிரகாசித்தன. அவருடைய இடுப்பில், பட்டு ஜரிகையும் பளிச்சென்று மின்னிய கரைகளுமுடைய விலை யுயர்ந்த வஸ்திரமும், உடம்பில் 'ஸில்க் ஷர்ட்டும்' இருந் தன. அவருக்கப்பால் வண்டியின் மையத்தில் உட்கார்ந் திருந்த பெண்பாவைக்கு வயது சுமார் இருபத்திரண்டிருக்க லாம். திரை விலக்கப்பட்டவுடன், அவளுடைய அற்புத மான தோற்றம், காரிருள் மேகத்தினிடையில் திடீரென்று மின்னல் தோன்றிப் பளிச்சென்று மின்னுவதுபோல் இருந் தது. ஸ்வர்ணத்தை உருக்கி அச்சில் வார்த்துக் கடைந் தெடுத்து மெருகு கொடுத்தாற்போல அந்த சுந்தரவனிதை

யின் அங்கங்களின் அமைப்பும் தேக நிறமும் அத்யாச்சரிய கரமான சிருஷ்டியா யமைந்திருந்தன. அந்த மடந்தையின் அழகை நாம் ஒரே வாக்கியத்தால் சுலபத்தில் விளக்கி விடலாம். அதாவது, அவ்வளவு ஸொகுஸான பெண்மணி இது வரையில் இந்த உலகில் பிறந்ததுமில்லை; இனி பிறக்கப்போவதுமில்லை என்று கூறும்படியும் எவரும் பிரமிக்கும்படியும் அவள் ஓர் அபூர்வமான கவர்ச்சியைப் பெற்று தேஜோமயமாய் விளங்கினுள். அவளுடைய அங்கங்கள் ஒவ்வொன்றும் அதீதமான உப்புசம், அல்லது, மெலிவு என்ற குற்றத்திற்கு இடமின்றி கணக்கான உருட்சி திரட்சி பருமன் அழகு செழுமை தளதளப்பு முதலியவை அமையப் பெற்றவையா யிருந்தன.

அவளுடைய சிரத்தில் எவ்வித பிசிருமில்லாமல், ஒன்றோடொன்று சிக்காமல், ஒரே அளவாய் நீண்டு செழித்து அலையலையாய் நெளிந்து மினுமினுப்பாய் சுத்தமாய்ப் பெருஞ் சுமையாய் அடர்த்தியாய் வளர்ந்திருந்த அளக பாரத்தை அப்பெண்பாவை சாதாரணமாய் முடிந்து, மெருகு கொடுக்கப்பட்ட தங்கப் பாளம்போ லிருந்த பின்கழுத்தின் கீழ் தொங்க விட்டிருந்த மகா திவ்யமான இயற்கைக் காட்சி, கோடி மகாலக்ஷ்மிகள் ஒன்றுகூடித் தாண்டவமாடுவதுபோல் அமைந்திருந்த முக வசீகரத்தைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டும் சாதனமாயிருந்தது. அரக்குக் கரையும் கறுப்பு உடலுமுடைய தகத்தகாயமான பட்டுச் சேலை, சுவர்ணச் சாயலாயிருந்த உடம்பின் ஜ்வலிப்பை அமோகமாய்ப் பெருக்கிக் காட்டுவதாயிருந்தது. செவிகளில் வைரக் கம்மல்கள், மூக்கில் வைர மூக்குப் பொட்டுகள், வைர புல்லாக்கு, கழுத்தில் கல் அட்டிகை, காசுமாலை முதலியவைகள், கையில் வைரம் பதித்த புது மோஸ்தர் வளையல்கள்,

இடுப்பில் அழகான முகப்பு வைத்த தங்க ஒட்டியாணம், விரல்களில் வைர மோதிரங்கள் ஆகிய சிறந்த ஆபரணங்கள் புது நாகரிக முறைமைப்படி ஆங்காங்கு பொருத்தந் திருத்த மாய் அமைந்திருந்தன வாதலால், ரவிவர்மாவின் படங்களில் தீட்டப்பட்டுள்ள மங்கையருள் மகா சிலாக்கியமாய்க் கருதப் படும் வடிவங்களில் இப்பொற்கொடியாளின் நிழற் சாயலி லுள்ள அழகுகூட இராதென்று நாம் துணிந்து கூறலாம்.

ஸ்வர்ணம்பாள் என்ற பெயருடைய அம்மடந்தை யின் வயது உண்மையில் சுமார் இருபத்திரண்டிருக்கலாமாயி னும், பார்வை மதிப்பு பதினெட்டிற்குமேல் போகவே இல்லை. அந்த யௌவனப் பூங்கொம்பின் பக்கத்தில் உட்கார்ந்திருந்து, சாய்ந்து கண்களை மூடித் தபசுசெய்துகொண் டிருந்த சுந்தரி என்ற சிறுமிக்கு ஐந்தாவது வயது நடந்தது. தாயின் வடி வத்தை சிறிய அளவில் படமாய்ப் பிடித்தால் அது எப்படி இருக்குமோ அப்படியே அந்தச் சிறுமி அசலுக்குச் சரியான நகலாயும், ஐந்து வயதில் தாய் எப்படி இருந்திருப் பாள் என்பதைக் கண்கூடாய்க் காட்டும் போட்டோப் படம் போலும் காணப்பட்டாள். ஒரு வடிவம் பெரியது, ஒரு வடி வம் சிறியது என்ற ஒரே ஒரு தாரதம்மியத்தைத் தவிர வேறு எவ்வித வேறுபாடும் காணப்படவில்லை.

பின் பக்கத்துத் திரை திடீரென்று விலக்கப்படவே, உள்ளே இருந்த மாது சுறுசுறுப்பாகச் சரேலென்று நிமிர்ந்து உட்கார்ந்து, ஆடையை இழுத்திழுத்து உடம்பை நன்றாக மூடி, நாணிக்கோணி இலஜ்ஜையோடு குனிந்து, அடக்கமாய் உட்கார்ந்துகொள்ளவே, கண் கொள்ளாக் காட்சியாயிருந்த அந்தத் திருக்கோலம் இராஜபாட்டையில் நின்ற ஐயருடைய மனதையும் கண்களையும் உடனே கவர்ந்து, அவர் பிரமித்துப் போகும்படி செய்தது. சாதாரணமான மனிதர்கள் எவரே

னும் வண்டிக்குள் இருப்பார்கள் என்று நிரம்பவும் அலட்சிய மாய் மதித்து முதலில் மிக அசட்டையாய்ப் பேசத் தொடங் கிய ஐயர் உள்ளே இருந்து காட்சி கொடுத்த மூன்று அற் புத வடிவங்களையும் கண்டு வியப்படைந்து அடக்கமும் விநய மும் மதிப்பும் மரியாதையும் காட்டிப் புன்னகை தவழ்ந்த முகத் தோற்றத்தோடு பார்த்து, "ஐயரவாள் எந்தூருக்குப் போருப்பலெயோ?" என்று அடக்கமாகவும் பணிவாகவும் வினவினர்.

உள்ளே இருந்தவரான கிருஷ்ணமூர்த்தி ஐயர், "நாங்க திருவையாத்துக்குப் பக்கத்துலெ ஒரு கிராமத்துக்குப் போகணும். கொழந்தை பசிச்சு அழறது, ஆகாரம் கிடைக்கக் கூடிய எடம் ஸமீபத்துலெ எதாவது இருக்குமோ?" என்றார்.

கீழே நின்றவரை இனி நாம் கைலாசையர் என்று குறிப்போம். அவர் கிருஷ்ணமூர்த்தி ஐயரைப் பார்த்து "திருவையாத்துக்கு இன்னம் அஞ்சு கல்லுக்குமேலே போகணுமே! குதுரெக்கிப் பின்னங்கால் ரெண்டும் தொவண்டுபே முட்டிதட்றதே! இன்னம் அரைக்கல்லு போறத்துக்குள்ளெ குதுரெ கீழே பள்ளிகொண்டுடும்போலிருக்கே! இது ஒங்களெத் திருவையாத்துலெ எப்பிடிக் கொண்டுபேச் சேக்கப் போறது! நீங்க எல்லாருமே சுத்த ஏகாதசி விரதம்போலிருக்கே! மொக மெல்லாம் வாடிக்கெடக்கு! கொழந்தைக்கிமேலே அம்மாள் சோந்து கெடக்கறு. அதுக்குமேலே நீங்களும் களேச்சுப் போயிருக்கிக. ஏது, இந்தக் குதுரெயை நம்பினு, மண் குது ரெயை நம்பி ஆத்துலெ எறங்கினுப்புலெதான். இண்ணக்கி ராத்திரிகூட நீங்க போஜனத்தைக் காணுவிகளோங்கறதே நேக்கு சந்தேகமா யிருக்கு. ஒங்களெ யெல்லாம் பாத்தா ரொம்பப் பெரிய எடத்து மனுஷாளாத் தோண்ட்றது.

ஆரோ வழியோடெ போற பைத்தியக்காரப் பிராம்மணன்னு என்னை நீங்க எண்ணமெ, தயவு பண்ணி என் பேச்சுக்குக் கொஞ்சம் மதிப்புக் குடுக்கணும். இதோ கூப்பிடு தூரத்திலே எங்க ஊர் இருக்கு. முழுக்க நம்படவாள் அக்கிராரந்தான்” என்றார்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் :—ஒங்க ஊருக்குப் பேரென்ன?

கைலாசையர் :—விஷ்ணுபுரம்னு சொல்லுவா.

கிருஷ்ண :—அங்கே பிராம்மண ஸத்ரம் இருக்கோ?

கைலா :—ஸத்ரமும் இருக்கு. நம்படவா எத்தனை பேர் வந்தாலும் தினம் ரெண்டு வேளையும் கருக்கான போஜனமும் உண்டு. ஐயங்கார் ஜாதிபாரா யிருந்தா, அவாளே சொயம்பாகம் பண்ணிக்கத் தனியான எடமிருக்கு. அந்த ஸத்ரத்து மணியம் உத்யோகம் பாக்கறவன் நான்தான். ஆனா, இண்ணக்கி ஸத்ரத்து அடுப்புலெ பூனை தூங்கறது.

கிருஷ்ண :—என், நாங்க வரப்போறோமுன்னு ஆராவது மின்னெயே வந்து சொல்லிப்புட்டாளோ!

கைலா :—(சிரித்துக்கொண்டு) ஐயரவாள் நன்னாப் பேசறெகளே! கேவலம் ஏழைப் பிராம்மண வந்தாக்கூட ஆசார ஒபசாரமா அவாளுக்குக் கருக்கான போஜனம் பண்ணி வைக்கற வழக்கமாச்சே! அப்பிடியிருக்க, இப்பேர்ப்பட்ட பெரிய மனுஷா வரான்னா,அடுப்பெ அணைப்பமோ. ஒங்களைப் போலெ இருக்கப்பட்ட சீமான்கள் வரக் குடுத்து வைக்கணுமே! ஆனா, நீங்க சொன்னதும் ஒருவிதத்துலெ பொருத்தமாத்தான் இருக்கு. அதுக்கு ஒங்க வாய்க்கி சக்கரை போடணும். இப்பேர்ப்பட்ட பெரிய மனுஷாளுக்கு ஏழைப் பிராம்மண சாப்பிடும் ஸத்ரம் சரியான எடமல்லத்

தான். தெய்வ சங்கல்பமா இண்ணெக்கி எங்க ஊருலெ ஒரு சுப காரியம் நேந்திருக்கு.

கிருஷ்ண :—என்ன சுப காரியமோ?

கைலா :—இந்தக் கிராமம் இருக்கோன்னோ. இது பெரிய பண்ணை ராமாமிர்த ஐயரவாளோடே ஏக போக கிராமம். ஸத்ரம், சாப்பாடெல்லாம் அவாளோடெ ஏற்பாடுகள் தான். இண்ணெக்கி அவாளாத்துலெயே ஒரு பெரிய விசேஷம் நடக்கறது. அதுக்காக அவாளாத்துலெயே ஆயிரக் கணக்கான பிராம்மணாளுக்கு லட்டு ஜிலேபியோடெ ஸந்தர்ப்பணை நடக்கறது. அதனாலெ ஸத்ரத்துலெ இண்ணைக்கி அடுப்பே பொகையல்லெ. இப்ப ரெண்டாம் பந்தி போஜனம் நடந்துண்டிருக்கு. இன்னம் மிச்சமிருக்கும் ஸாப்பாடு ஐநூறு பேருக்குக் காணும். தாங்கள் தயவுபண்ணி அம்மாள் குழந்தை ஸகிதம் அங்கே விஜயம் பண்ணி, போஜன காரியத்தை நடத்திக்கணும். அம்மாளைப் பாத்தா, ஸாக்ஷாத் மகா லக்ஷ்மியைப் பாக்க வைகுண்டத்துக்குப் போகவே வேண்டியதில்லைப்போ லிருக்கு. தங்களைப் பாத்தா, ஸ்ரீ ராமபிரானைப் போலையே இருக்கு. ஒங்களையெல்லாம் பாத்தா, பெரிய பண்ணை ஐயரவாள் அப்பிடியே பூரிச்சுப் பொங்கிப் போவா. அவாளோடெ தர்மபத்நி இருக்காளோன்னோ; அந்தப் புண்ணியவதி இந்த மகா லக்ஷ்மியைப் பாத்துட்டா, அப்பிடியே புஷ்பமாட்டமா ரெண்டு கையாலெயும் தாங்கித் தலைமேலே வச்சுக்குவா. எஜமான், எஜமானியம்மா ரெண்டு பேரும் தங்கமான மனுஷ்யாள். அன்னியாளிடத்துலெ, அவாளுக்கு இருக்கற பக்ஷமும் பாசமும் இவ்வளவுதான்னு சொல்ல முடியாது. நீங்க அங்கே விஜயம் பண்ணி அவளோடெ மோகத்தைப் பாத்திகளானா ஒங்கிளுக்கே நெஜம் புரிஞ்சுபோம்.

கிருஷ்ண :—ஓ, அப்பிடியா! அவ்வளவு நல்ல மனுஷ யாளா! சந்தோஷமாச்சு. அவாளாத்துலெ இண்ணைக்கி என்ன விசேஷமோ?

கைலா :—அவாளாத்துலெ அடிக்கடி சுப காரியம் நேந்துண்டுதா னிருக்கும்; இந்த மாதிரி பிராம்மண ஸந்தர்ப்பணை நடந்துண்டுதா னிருக்கும். இண்ணைக்கி ஒரு பெரிய விசேஷம். வட தேசத்துலெ இருந்து மன்மத பீடத்து மடாதிபதி ஸ்வாமிகள் திருவையாத்துக்கு வந்து சுமார் மூணுமாஸ காலமாத் தாமஸிச்சு, தினம் லக்ஷார்ச்சனை பண்ணி, வேளை ஒண்ணுக்கு ஆயிரம் பிராம்மணாளுக்குப் போஜனம் பண்ணிவச்சு, ஜெஞ்சாமிருதமா உபந்நியாஸம் நடத்தி, திக் விஜயம் பண்ணிண்டிருக்கா. அவாளுக்கு வயஸு இருபத்தஞ்சுகூட இருக்காது. மொகத்துலெ அருள்பால் சொட்டறது; ஒடம்பு கொடிபோலெ தங்கப் பாளமாட்டமாப் பழுத்துப்போயிருக்கு. அவாளெ சரஸ்வதி அவதாரமின்னுதான் சொல்லணும். அவாள் கையாலெ விபூதி எடுத்துக் குடுத்தா, தீராத வியாதியெல்லாம் தீந்துபோறதாம்; கொழந்தை யில்லாதவாளுக்குக் கொழந்தையுண்டாறதாம்; பேய் பிசாசெல்லாம் போன எடம் தெரியாமெப் பறந்துபோறதாம். பெரிய பண்ணை ஐயரவாள், நாலஞ்சு தினங்கள் இங்கே பிக்ஷைபண்ணி வைக்கறதாக ஸ்வாமிகளை அவாளோடெ பரிவாரங்களோடெ அழைச்சிண்டு வந்திருக்கா; ஓங்களுக்கும் ஸ்வாமி தரிசன பலன் ஸித்திக்கும்.

கிருஷ்ண :—ஓங்க ஊருக்கும் ரஸ்தாவுக்கும் எவ்வளவு தூரமிருக்கும்?

கைலா :—இங்கே இருந்து ஒரு கால் கல்லு தூரம் போனா, எடது பக்கமா ஒரு வழி திரும்பறது. அப்பிடியே

வண்டியெ விட்டா, அது ஒரு பெரிய தென்னந்தோப்புக்குள்ளெயே போகும். அப்பிடியே ஒரு கூப்பிடுதூரம் போனு, அங்கே அக்ராரம் ஆரம்பமாறது. மின்னுலெ ஸத்ரமும் தாமரைக் கொளமும் இருக்கு. ஸத்ரம் சின்னதாத்தான் இருக்கும். அதுலெ ஸ்வாமிகளோடெ பரிவாரங்கள்ளாம் தங்கியிருக்கா. ஸ்வாமிகளும் முக்கியமான மனுஷாளும் பண்ணையாராத்து மெத்தைமேலே தனியான ஒரு பாகத்துலெ இருக்கா. பிராம்மண போஜனமெல்லாம் பண்ணையா ராத்துக் கீழ்ப்பாகத்துலெ நடக்கறது. நீங்க ஸத்ரத்து வாசல்லெ எறங்கி, கொளத்துலெ ஸ்நானத்தை முடிச்சுண்டு மடிபண்ணிக்கிங்க. நான் இதோ கால்நாழீலே அங்கே வந்துசேந்து, ஓங்களை அழைச்சிண்டுபே ஸ்வாமி தெரிசனம் போஜனம் எல்லாம் ஒரு க்ஷணத்துலெ முடிச்சு வைக்கறேன்.

**கிருஷ்ண:**—(சிறிது தயங்கி) நாங்க இது வரையிலெ புதுசா ஆராத்துக்கும் போஜனத்துக்குப் போனதில்லே. எங்களைப்பத்தி அக்கறையில்லே; இந்தக் கொழந்தைதான் பசிச்சுப் பறக்கறது; நீங்களும் இப்பிடியே எங்களோடெ இந்த வண்டீலெயே வரலாமே.

**கைலா:**—இல்லெ, நேக்குக் கொஞ்சம் அவசரக்காரியமிருக்கு. இதோ பக்கத்துலெ பண்ணையாரோடெ மாட்டுப் பட்டி இருக்கு; பால் பாயஸம் பண்ணினது இழுத்துக்கும் போலிருக்கு. இன்னும் ஒரு கொடம் பால் அவசரமா வேணும். அதை ஒடனே அனுப்பச் சொல்லிப்புட்டு நான் இதோ ஒங்களுக்குப் பின்னுலெயே வந்துட்டேன்.

**கிருஷ்ண:**—சரி; பெரியவா இவளவு தூரம் சொல்லச்சே, தட்றது பெசகு; நீங்க வரவரையிலெ நாங்க ஸத்ரத்து வாசல்லெயே இருக்கோம். சரி; வண்டிக்காரா, ஓட்டு வண்

டியே; ஐயா சொன்ன அடையாளத்தைக் கேட்டுண்டி யோன்னே ?

கைலா:—அப்பா, வண்டிக்காரா, நேருலெ கால் கல்லு தூரம் போ. எடது கைப் பக்கம் வண்டிப்பாதை திரும்பறது; கண்ணெ மூடிண்டு அதுலெபே வண்டியெ விட்டுண்டுபோ. மொதல்கட்டடம் ஸத்தரம்; அங்கெயே நிறுத்திக்கோ; சீக்கிரம் ஓட்டிண்டு போ ; இண்ணேக்கி நீ நரி மொகத்துலெ முழிச்சிருக்கே ; ஓம்பாடும் வேட்டைதான்.

—என்று கூறியவண்ணம் விரைவாகப் போய்விட்டார். மறுபடி திரை வண்டியின் பின்பக்கத்தை மறைத்துக் கொண்டது. கடுமையான பசியினால் களைத்து வாடி யிருப் போருக்கு போஜனமென்றால் சந்தோஷம் உண்டாகு மென்று நாம் சொல்லவும் வேண்டுமா? அந்த சந்தர்ப்பத்தில் வடை, பாயஸம், லட்டு, ஜிலேபி, கனிவர்க்கங்கள், சித்திரான்னங் கள் உள்பட விருந்து போஜனம் கிடைப்பதென்றால் அதைப் பற்றி வண்டிக்காரன் குதூகலமடையாமல் இருப்பது சாத்திய மான விஷயமா ? அவனைக் கப்பிக்கொண்டிருந்த களைப்பு, சோர்வு, உறக்கம், கண்ணிருளல், காதடைப்பு முதலிய துர்த் தேவதைகளெல்லாம் இருந்த இடம் தெரியாதபடி ஒரே நொடி யில் பறந்து போயின. அவன் மிகவும் தெளிவாய் நிமிர்ந்து உட்கார்ந்து குதிரையைத் தட்டிக் கொடுத்து தாஜாப்படுத்தி மறுபடி ஓட்டத்தொடங்கினான். மேலே விவரித்த சம்பாஷணை நடந்த காலத்தில் சுமார் பத்து நிமிஷ காலம் ஓடாமல் நின் றது அந்தக் குதிரைக்கு சுவர்க்க போகம் போலவே இருந்த தாகையால், அதற்குள் அதன் இறைப்பு, வியர்வை, நுரை ஆகியவை சிறிது அடங்கிப் போனதன்றி, அதன் கால்கள் ஓய்வும் இரத்த ஓட்டமும் பெற்றன. எனவே, அது முன்னி லும் சிறிதளவு தெளிவாக ஓடத்தொடங்கியது.

வண்டி சத்திரத்தை அடைவதற்கு அரை நாழிகை காலம் பிடிக்குமாதலால், அதுவரையில் நாம் அந்த வழியின் இயற்கை அமைப்பைப்பற்றி சில முக்கியமான தகவல்களைக் குறிப்பிடுவோம். அது திருச்சிராப்பள்ளியிலிருந்து திருவையாற்றிற்கு வரும் இராஜபாட்டையென்று முன்னரே குறிப்பிட்டோமல்லவா, அந்த இரஸ்தா பெரும்பாலும் காவிரியாற்றின் கரை யோரமாகவே வருகிறது. அந்த ஆறு பொன்னி நதி என்ற சிறப்புப் பெயரால் குறிக்கப்படுகிற தென்பது எல்லோர்க்கும் தெரிந்த செய்தியே. பரம புருஷனுடைய இருதய கமலத்தைத் தனக்கு உற்பத்திஸ்தானமாய்ப் பெற்றிருத்தலால் 'கமலாசனி' என்று பெயர்பெற்ற திருமகளின் கிருபாகடாக்ஷம் காவிரி நீரில் அடங்கி இருப்பது எல்லோர்க்கும் நிதரிசனமாய்த் தெரிந்ததாகையால் அதற்குப் பொன்னியென்ற பெயர் கிடைத்தது முற்றிலும் பொருத்தமானதே யன்றோ. சோழ நாட்டின் செல்வம், செழுமை, புனிதம், கலைஞானம், நற்குண நல்லொழுக்கம், சிறந்த பகுத்தறிவு, அபாரமான புத்தி நுட்பம், தெய்வ பக்தி, ஈகை, தயாளம், பெருந்தன்மை முதலிய சகலமான ஐசுவரியங்களும், அந்த தெய்விக நதியின் தீம்புனலின் அருளொளியில் அடங்கி இருத்தலால், அதுவே சோழ நாட்டின் உயிர்நிலை என்று நாம் கூறுவதும் பொருந்தும்.

அத்தகைய பெருமை வாய்ந்த மகா பரிசுத்தமான காவிரி நதி, உற்பத்தியாகும் இடத்திலிருந்து கடலில் கலக்கும் இடம் வரையில், வெவ்வேறு வித வடிவையும், புதுப் புது வனப்பையும் பெற்றுத் திருநடனம் புரியும் அற்புதக் காட்சியை நாம் உள்ளபடி வர்ணிக்கப் புகுந்தால், அதுவே ஒரு தனி நூலாய்ப் பெருகும். அதன் தோற்றம், சில இடங்களில் மகா பயங்கரமாகவும், வேறு சில இடங்களில்

மிக கம்பீரமாகவும், மற்றும் சில இடங்களில் கண்கொள்ளா எழிலைச் சொரிவதாகவும், இதர இடங்களில் முதிர்ந்து தளர்ந்து மெலிந்து, "இதுவோ தெய்விகப் பொன்னி நதி" என்று எவரும் சங்கை கொள்ளும்படி வறுமை நிலை யடைந்து உருக்குலைந்து தோன்றுவதாயும் அமைந்திருக் கிறது.

அதன் உற்பத்தி ஸ்தானம் முதல் ஈரோடு வரையில் அது மலைகளைப் பிளந்து, குன்றுகளைக் குடைந்து, காடுகளைத் தகர்த்து பயங்கரமான பள்ளங்களை நிறைத்து, கீழும் மேலு மாய் விழுந்தெழுந்து திக் விஜயம் செய்து ஜெயக்கொடி தாங்கி வரும் காட்சி, உலகம் முழுதையும் அழித்துக் கபளீ கரம் செய்துவிடுவதாய் அச்சுறுத்தும் பிரளயகால ருத்திரனோ என்று எல்லோரும் அஞ்சி நடுங்கும்படி, மகா கொடிய பெரும்பேய் இரத்த வெறிகொண்டு தலைவிரித்தாடிக் கடும் போர் புரிவது போன்றிருக்கிறது.

ஈரோடு முதல் குணசேகரபுரம் வரையில், அது இரை விழுங்கி, நகர மாட்டாமல் தரையில் கிடந்து புரண்டு தத்த ளிக்கும் பிரம்மாண்டமான மலைப்பாம்போ, அல்லது, பூர்த்தி யான சூல்கொண்டு காலடி பெயர்த்துவைக்க இயலாது நெடுமூச்செறிந்து திணரித் தவிக்கும் திக்கஜமோ என்று உவ மிக்கத் தக்கதாய் இருப்பதன்றி, அது அப்புறத்தில் நடாத் திய பயங்கரமான கொடிய யுத்தத்தினால், அலுத்து உணர் வற்றுக் கீழே கிடந்து புரளுகிறதோ, அல்லது, அது அந்த அபாரமான போரில் சூரையாடித் திரட்டிச் சுமந்து வரும் கொள்ளைப் பொருளின் சுமை அழுத்துவதால், நகரமாட்டா மல் கிடந்து உழன்று ஊடாடுகிறதோ என்று ஐயுறும்படி கண் காணாத் தூரம் பரவி, "அகண்ட காவிரி"யாய் அகன்று, மந்த கதியோடு வரும் திருக்கோலம் பெருந் திகைப்பையும்,

பேரச்சத்தையும் உண்டாக்கி மனதைப் பரவசப்படுத்துவதா யிருக்கிறது. குணசேகரபுரத்திற்கு வந்தவுடன் பொன்னித்திரு, "ஆகா, நம் குழந்தைகள் ஏராளமாய்ப் பெருகிப் பல இடங் களில் ஆவலோடு காத்திருக்கின்றனரே. நாம் இப்படி மந்த கதியில் போவது தவறு; இரண்டுருக் கொண்டுபோய் எல் லோரது கலியையும் விரைவில் தீர்ப்போம்" என்று கருது கிறவள்போல இரண்டு வடிவங்களடைந்து, மூத்தவள் கொள் ளிடமாகவும், இளையவள் காவிரியாகவும் பிரிந்து செல்லும் பரவசக் காட்சியைக் காணுத கண்களும் கண்களோ! அந்த இடத்திலிருந்து திருவையாறு வரையில் பொன்னித்தாய் இளநங்கை வடிவம் பெற்று கண்கொள்ளா வனப்பையும் கணக்கிலடங்காக் கல்யாண குணங்களையும் அள்ளிச் சொரி யும் தெய்விகத் திருக்கோலத்தை உள்ளபடி வர்ணிக்கும் திறமைபெற்ற தெய்விகப் புலவர் யாவரே இருக்கின்றனர். அழிந்துபோன கோசல தேசத்திற்கு நாட்டுப் படலமென் றும், நகரப் படலமென்றும், ஆற்றுப்படலமென்றும் நூற் றுக்கணக்கில் விருத்தங்களை அள்ளித் தூவிய பாவள்ளலான கல்வியிற் பெரிய நம் கம்பநாடர் தமது பொன்னி நாட்டின் அழகை வர்ணித்த இடத்தில் பரமலோபியாய் மாறித் தமது அமிர்த கலசத்திலிருந்து கேவலம் நான்கு துளிகளைச் சொட்டவிட்டு நம்மை முற்றிலும் ஏமாற்றி விட்டாரன்றே. அம்மகான் தமது தாயாகிய பொன்னித் திருவைப்பற்றி ஒரு நூறு விருத்தங்களாகிலும் பாடி இருத்தல் கூடாதா? காவி ரியை அடுத்துள்ள நாட்டைத் தமது இராமாயணத்தில் அவர் எப்படி வர்ணித்திருக்கிறாரென்பதை கவனிப்போம்:—

1. கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ்
   தடறு தாங்கிய கூன்இளந் தாழையின்

மீடறு தாங்கும் விருப்புடைத் தீங்கனி
இடறு வார்நறுந் தேனினி ழுக்குவார்.

2. குழுவு மீன்வளர் குட்ட மெனக்கொளா
எழுவு பாடல் இமிழ்கருப் பேந்திரத்
தொழுகு சாறகன் கூனையின் ஊழ்முறை
முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே.

3. பூவெ ருங்கிய புள்ளுறு சோலைகள்
தேனெ ருங்கு சொரிதலில் தேர்வில
மீனெ ருங்குறும் வெள்ளம் வெரீப்பல
வான ரங்கள் மரங்களில் வைகுமால்.

4. தாறு காறுவ தாழைகள் தாழையின்
சோறு காறுவ தூங்குறு மாங்கனி
காறு நாறுவ நாறுவ ளர்க்குறும்
சேறு காறுவ செங்கழு நீரரோ.

ஆகா! அச்சில் வார்த்தெடுக்கப்பட்ட சர்க்கரைப் பதுமைகள்போலல்லவா பாக்கள் அமைந்திருக்கின்றன. சொற்களை வெகு சுத்தமாயும் பணிக்காயும் ஆய்ந்து சேர்த்து, தேனும், பாகும் கசியும் லட்டு ஜிலேபிகள்போல இப்படி உருட்டிவிடத் தக்க கவிராயர்கள் இனி இந்நாட்டில் வந்து பிறக்கப் போகின்றனரா? பிறந்தாலும், அவரை ஆதரிக்க சடையப்ப வள்ளல் ஒருவர் தோன்றப் போகிறாரா? இனி தமிழன் ஒருவன் இந்நாட்டின் அரசனாய் வந்தால்கூட, அவன் அடியோடு உருமாறி சட்டைக்கார துரையாய் இலங்கி, இங்கிலீஷையே பலுக்கித் தமிழை இளக்கரப்படுத்துவானென்பதை நாம் நிச்சயமாய் நம்பலாம். இனி நாம் கம்பரையும், வள்ளுவரையும் நினைத்து நினைத்துருகி நெடுமூச்செறிந்து கண்ணீர் விடுத்தேங்குவதால் என்ன பயன் உண்டாகப்போகிறது?

இது நிற்க, நாம் மேலே குறித்த குதிரைவண்டி வந்த இராஜபாட்டை கம்பரால் வர்ணிக்கப்பட்ட சோழநாட்டின் இடையே வருவதாகையால், அந்தப் பிரதேசத்தின் அழகை உள்ளபடி எடுத்துரைக்க நம்மால் இயலுமோ? பார்க்குமிட மெல்லாம் ஒரே பசுமையாய்த் தோன்றி, காய்களைத் தாறு தாறுய்ச் சுமந்து வனமாய் வளர்ந்து செழித்திருக்கும் வாழை வனங்களும், ஓர் ஆளை மறைக்கும் உயரம் தழைத் தோங்கி நிற்கும் நெற்பயிர்களும், ஆகாயத்தையளாவி வண்டி வண்டியாய்க் குலைகளைச் சுமந்து நிற்கும தென்னை கமுகு முதலியவற்றின் தோப்புகளும், வெற்றிலைக் கொடிக் கால்களும் ஒன்றன்பின் ஒன்ருய் மாறிமாறி வந்து கொண்ருக்கும் கோலாகலத்தை நாம் எப்படித்தான் விஸ்தரிக்கப் போகிறோம்! இடையிடையில் ஆயிரக்கணக்கான கால்வாய் களில் தண்ணீர் சலசலவென்று ஓடிக்கொண்டிருக்கும் அற் புதக் காட்சியும், தாமரை, அல்லி, நீலோத்பலம், செங்கழுநீர் முதலியவற்றின் இலைகளும் பூக்களும் தண்ணீரே தெரியாத படி மறைத்துவனமாய்த் தழைத்துக் கிடக்கப்பெற்ற தடாகங் கள், வாவிகள், வதிகள் முதலியவற்றின் மனோகரத் தோற்ற மும் மனதைப் பரவசப்படுத்து மென்பதைக் கூறவும் வேண் டுமோ? ஆங்காங்கு சிவாலயங்கள் விஷ்ணுவாலயங்கள் ஆகிய வற்றின் கோபுரங்களும், கொடிமரங்களும் தலையை நீட்டி எல்லா உலகங்களையும் படைத்து, எங்கும் எப்போதும் வியாபித்து, தோன்ருத் துணைவனயிருந்து எல்லோரையும் காத்து ரக்ஷிக்கும் பரம்பொருளின் நினைவை ஒவ்வொருவரது உள்ளத்திலும் சதா காலமும் இருத்தி, அவர்களது மனோ மெய்கள் பரிசுத்த நிலையடையும்படி ஊக்கும் சாதனங்களாய் அமைந்திருக்கின்றன. அத்தகைய மனோக்கியமான பிரதேசத் தின் இடையில் வந்த இராஜபாட்டையின் பக்கங்களில் பிரம்

மாண்டமான மண்டபங்களும், சத்திரங்களும், சாவடிகளும் ஒன்றன்பின்னொன்றாய் மாறிமாறி வந்து நம்முன்னோரின் தயாள மனப்போக்கை விளம்பரப்படுத்துவனவாய் அமைந்திருக்கின்றன. ஜீவகாருண்யத்தைக் கருதி, பாதையின் இரண்டு பக்கங்களிலும் வைத்து வளர்க்கப்பட்டுள்ள ஆல மரங்கள், நாவல் மரங்கள், மாமரங்கள், நெல்லிமரங்கள் முதலியவை பிரம்மாண்டமாய் வளர்ந்து கண்பார்வை நுழைப்பாதபடி பந்தல் போல அடர்ந்து, காய்களையும், கனிகளையும் குலை குலையாய் சரம் சரமாய்த் தொங்கவிட்டும் அவற்றைத் தரையில் சொரிந்தும் தோன்றும் வசீகரக்காட்சியின் தன்மை நேரில் காண்போருக்கே உள்ளபடி விளங்கும். அம்மரங்களில் நூற்றுக்கணக்கில் நிறைந்து தாவிக்குதித்து விளையாடி ஒன்றோடொன்று சண்டையிட்டுப் பெருப்பூசல் விளைத்துக் கொண்டிருக்கும் குரங்குகள் பாட்டைசாரிகளை வியப்போடு பார்த்து, அதற்குமுன் எங்கேயோ பழக்கமானவரைக் காண்பது போல, அதிசயித்துப் பல்லிளித்துப் புளி செய்யும் கோலம் எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் ஒரு தன்மைத்தாய் மறைந்திருக்கும் பிரம்ம ரந்திரத்தின் பெருமையை விளக்குவதாயிருக்கும். காக்கைகள் குயில்கள் முதலிய பறவை இனங்கள் மேற்படி விருக்ஷங்களில் கோடிக்கணக்கில் நிறைந்து சமுத்திர கோஷம்போன்ற கம்பலையை உண்டாக்குவது உண்மையில் பேரானந்தக் காட்சியாயிருக்கும்.

அத்தகைய இராஜபாட்டையில் வந்துகொண்டிருந்த குதிரைவண்டி கால் நாழிகை காலத்தில் விஷ்ணுபுரம் சத்திரத்தின் முன்னால் போய் நின்றது.

உடனே வண்டிக்காரன் சொர்க்க லோகத்தில் நுழைபவன் போல அளவற்ற மகிழ்ச்சியோடு வண்டியை விட்டுக் கீழே குதித்து, “சாமீ, இதா சத்தரம் வந்துடிச்சிங்க; ஏறங்

குங்க" என்றான். உடனே கிருஷ்ணமூர்த்தி ஐயர், உறக்கத்தில் ஆழ்ந்துபோயிருந்த தமது மனையாட்டியின் தோள்பட்டையில் மெதுவாய் இரண்டொரு தட்டுகள் தட்டி, "அடீ, அடீ, ஸத்ரம் வந்துட்டுது; எறங்கணும்; கொழந்தையை இழுப்பு" என்று கூறிய வண்ணம், பின்பக்கத்துத் திரையை அவிழ்த்துவிட்டுக் கீழே குதித்துத் தமது ஆடைகளை சரிப்படுத்திக் கொண்டார்.

ஸ்வர்ணம்பாள் சுந்தரியைத் தட்டி எழுப்பி, "அடி பாப்பா, ஊரு வந்துட்டுது; எந்திரு. ஆத்துக்குப்பே சாப்பிட லாம்" என்று கூறி அவளுக்குத் தெளிவுண்டாக்க, கிருஷ்ண மூர்த்தி ஐயர் அந்தச் சிறுமியைக் கீழே இறக்கிவிட்டார். உடனே ஸ்வர்ணம்பாள் தனது ஆடைகளை இழுத்திழுத்து உடம்பை செவ்வையாய் மூடிக்கொண்டு, பம்பரம் சுழலுவது போல விசையாய்த் திரும்பி நகர்ந்து, பின்னால் வந்து கீழே குதித்து உடம்பை அப்புறம் இப்புறம் திருப்பிக்கொடுத்து, புடவையிலிருந்த தூசி முதலியவற்றைத் தட்டிவிட்டுக் கீழே குனிந்து கொசவத்தை சரியாய் இழுத்து விட்டு, கைகால் களிலிருந்த நகைகளை ஒழுங்காய்த் தள்ளிவிட்டு சுந்தரியைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு, புருஷருக்குப் பின்னால் போய் அடக்க வொடுக்கமாய் நின்றாள்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் வண்டிக்காரனை நோக்கி, "இங் தாப்பா, மின்பக்கத் தெரையை அவுத்துட்டு, டிரங்குப் பெட்டி ரெண்டையும் எடுத்துண்டுவந்து ஸத்ரத்துத் திண்ணை யிலே வை" என்றார்.

அவன் அவ்வாறே செய்து, உடனே குதிரையை வண் டியை விட்டு அவிழ்த்து விட்டான். பக்கத்திலிருந்த சத்திரம் இரண்டு வாசல்களும் விசாலமான திண்ணைகளும் உடைய தாய் இருந்தது. திண்ணைகளில் மூலைக்கொருவராய் சில

பிராம்மணர்கள் உட்கார்ந்திருந்தனர். சத்திரத்திற்கு எதிரில், சுத்தமான படித்துறையுடைய பெரிய தாமரைத் தடாகம் ஒன்று காணப்பட்டது. தாமரை இலைகளும், பூக்களும், மொட்டுகளும் ஒரே வனமாய்த் தழைத்து அடர்ந்து தண்ணீரே தெரியாமல் குளம் முழுதையும் மூடிக் கொண்டிருந்தன வாணாலும், படித்துறையின் ஓரத்தில் தெரிந்த தண்ணீர் பளிங்கு போல நிர்மலமாய்க் காணப்பட்டது. சத்திரத்திற்கும் தடாகத்திற்கும் நடுவில் பிரம்மாண்டமான வாதா மரங்களும், தென்னை மரங்களும், பாக்குமரங்களும் அடர்ந்து தமது கிளைகளாலும், இலைகளாலும் இயற்கைப் பந்தல் போட்டிருந்தன. சத்திரத்தின் பக்கத்தில் இருநூறு கஜ தூரம் இடைவெளி விட்டு, அதற்கப்பால் விசாலமான ஒரு தெருவை அமைத்திருந்தனர். அதில் சுமார் ஐம்பது ஓட்டுவீடுகள் இரட்டைச் சரகாய்க் காணப்பட்டன. தெருவின் நடுவில், சத்திரத்தைவிடப் பன்மடங்கு பெரியதாயும், இரண்டுவாசல்களும், விசாலமான திண்ணைகளும், மேன் மாடங்களும் உடையதாயும், அரண்மனைபோல் ஓங்கிநின்ற மாளிகையே பெரிய பண்ணை இராமாமிர்த ஐயருடைய ஜாகையாயிருக்க வேண்டுமென்று கிருஷ்ணமூர்த்தி ஐயர் யூகித்துக் கொண்டார். அந்த மாளிகையின முன் பக்கத்தில் இருந்த கொட்டகைப் பந்தலில் வாழை மரங்கள், மாவிலைத் தோரணம், தென்னங் குருத்துத் தோரணம் முதலியவை காணப்பட்டன. குரங்காட்டிகள், திருவோட்டுப் பரதேசிகள், சுரைக்குடுக்கை, நரித்தோல்பை முதலியவற்றோடிருந்த தொம்பர்கள் ஆகியோர் பந்தலுக்கு வெளியில் காணப்பட்டனர். சமயல்காரர்கள் கூடை கூடையாய்க் கொணர்ந்து பந்தலிற்கு வெளியில் கொட்டிய எச்சில் இலை முட்டுகளைச் சுற்றிப் பல ஏழைகள் உட்கார்ந்து, துணிகளை விரித்துப் போட்டு பெரிய பெரிய அப்ப

ளங்கள், லட்டுருண்டைகள், வடைகள், வாழைப்பழங்கள், மாம்பழங்கள், பலாச்சுளைகள், சித்திரான்னங்கள், சாதம், காய்கறிகள் முதலியவற்றைப் பிரித்து முட்டுமுட்டாய் வைப்பதும், இடையிடையில் சிலவற்றை ஆவலோடு வாயில் பொட்டு மென்று உள்ளே செலுத்துவதுமாய் மிக சுறு சுறுப்பாய் வேலை செய்து கொண்டிருந்தனர்.

நமது கதையை நாம் மேலும் விஸ்தரிக்குமுன் சில முக்கியமான தகவல்களைத் தெரிவிப்பது அத்யாவசியமாதலால், அதை முதலில் கவனிப்போம். அந்த விஷ்ணுபுரம் கிராமத்தைச் சுற்றிலும் சுமார் முப்பது மயில் அகலச் சுற்று வட்டத்திலுள்ள ஸ்மார்த்தப் பிராம்மணர்களுடைய அகராதியின்படி "ஐயரவாள்" என்றால், விஷ்ணுபுரம் பெரிய பண்ணை இராமாமிர்த ஐயரையே குறிப்பதாகக் கொள்ளவேண்டும். ஐயரவாளுடைய கிரகத்தில் ஒவ்வொரு மாதத்திலும் இன்னின்ன தினங்களில் பிராம்மண போஜனம் நடக்குமென்பது மேற்படிச் சுற்றுவட்டத்திலிருக்கும் ஸ்மார்த்தப் பிராம்மணர்களுக்கு மனப்பாடமாய்த் தெரியும். ஒவ்வொரு ஸந்தர்ப்பணையைப் பற்றியும் பல தினங்களுக்கு முன்னிருந்தே ஜனங்கள் ஆவலோடு பிரஸ்தாபித்து, வயிற்றில் இடங்கோலிக் கொண்டிருப்பார்கள்.

ஒருவரையொருவர் காணும்போது, "ஏண்டா வைத்தா, ஆச்சு, நெருங்கிப்போச்சு. நீ வரியோன்னோ?" என்று குசலம் விசாரிக்கத் தொடங்கிவிடுவார். வைத்தா, "என்னடா, கிட்டுச் சாமி, அப்பிடிக் கேக்கறே! பருப்பில்லாமெக் கல்யாணம் உண்டாடா? என்னன்னியிலே ஸந்தர்ப்பணை பண்ண, 'ஐயரவாளுக்கு' அவ்வளவு தைரியமாடா! நான் மொதனுளே போயி ஆஜர் சொல்றவனுச்சே" என்பார்.

இன்னொருவர், "அடே சாமா, அடே முத்து, போன தபா குடுத்தமாதிரி இந்தத் தபாவிலெயும் ஒத்தொத்தருவா பூரி தக்ஷிணையாண்டா. இந்த தபா தலைபாமங்கலத்துலே இருந்து பத்துவண்டி மாம்பழம் வந்திருக்காம். ஒவ்வொரு பழமும் சொம்பு சொம்பா இருக்காம். உள்ளே கொட்டை, அறைக் கொழந்தை அரசெலை அவளவே இருக்காம். தோலைக் கொஞ்சம் கிள்ளவேண்டியதுதான்; உள்ளே இருக்கற ஸாரமெல்லாம் தயிர்க்கட்டி தயிர்க்கட்டியா அப்பிடியே பூர்த்தியா வெளீலெவந்துடுமாம். லவலேசம் நாறு, நரம்பு, பால் காரல், புளிப்பு இருக்கணுமே; பேசப்படாது. ஒரு பழம் ஸாப்ட்டா வயறு ரொம்பிப்போமாம்" என்பார்.

தஞ்சை ஜில்லாவின் வடக்குக் கோடியிலிருந்து இராமேசுவரம் வரையில் ஐந்து மயிலுக்கொன்று, பத்து மயிலுக்கொன்றாய் புண்ணியவான்கள் பிராம்மண சத்திரங்களைக் கட்டி வைத்திருக்கிறார்கள். வழிப்போக்கர்களுக்கு தினம் தினம் மேற்படி சத்திரங்களில் போஜனம் கிடைப்பதன்றி, அந்த தர்மத்தை ஏற்படுத்தியுள்ள சீமான்களுடைய வீட்டில் சுபா சுபங்கள் நிகழும் தினங்களிலும் மூன்று வித பழங்கள், ஐந்து வித பக்ஷணங்கள், பாயஸம், பலவகைச் சித்திரான்னங்கள், பத்துப் பதினைந்து கறிகள், ஐந்தாறு பச்சடிகள், மோர்க்குழம்பு, பொரித்த குழம்பு, பருப்பு ஸாம்பார் முதலிய அலங்காரங்களோடு போஜனம் கிடைக்குமாதலால், அந்த ஜில்லாவிலுள்ள பெரும்பாலான பிராம்மணர்களுக்கு அந்த இலாகாவில் பூர்த்தியான அநுபவமுண்டு. அவர்கள் அடிக்கடி சென்று மேற்படி வைபவங்களில் குதூகலமாய்க் கலந்து கொண்டு ஆநந்தமாய் விருந்துண்டு பூரிதக்ஷிணை பெற்றுக் கொண்டு வீடு திரும்புவார்கள்.

ஆனல், அதில் ஐயங்கார் ஜாதியார்தான் கொடுத்து வைக்காத பாவிகள். பரான்ன போஜனம் செய்தல்கூடாதென்று அவர்களுடைய மூதாதை சாஸ்திரங்களில் எழுதி வைத்திருக்கிறாம். அதைக் குரங்குப் பிடியாய்ப் பிடித்து, தம் சுய ஜாதியார் வீட்டில்கூட ஒருவருக்கொருவர் போஜனம் செய்துகொள்ளாமல் வைதிகர்கள் பல தினங்கள் வரையில் வயிற்றைப் பிடித்துக்கொண்டு பட்டினி கிடப்பார்களென்றல், அவர்கள் பொதுச் சத்திரங்களில் சாப்பிடுவதில்லையென்பதை நாம் கூறவேண்டியதே இல்லை. மகாராஜாவின் சத்திரத்தில் முதல் தரமான இராஜ போஜனம் நடந்தால்கூட, ஐயங்கார்கள் அதை விட்டு, அதற்குப் பக்கத்தில் எங்கேயாகிலும் ஒரு விஷ்ணுகோவிலிருந்தால், அங்கே தயாரிக்கப்படும் களிமண் உருண்டையை தேவாமிருதமாய் சிலாகித்து, "பெருமாள் பிரஸாதம், பெருமாள் பிரஸாதம். தளிகை போக்யமாய் அமைஞ்சிருக்கு. பெருமாள் போக்யமாய் அமுது செய்திருக்கிறர்" என்று கொண்டாடி, இலை, தண்ணீர், தொட்டுக்கொள்ளப் பதார்த்தம் முதலிய எந்த உபகரணமுமின்றி, கீழே விழ விழக் கையில்வாங்கி, வாயில் போட்டுக் கொண்டு, கையலம்பக் குளத்தங்கரைக்குப் போய்ச் சேருவார்கள். நல்ல மாதிரியமான பதார்த்தங்கள் அவர்களுக்குத் தள்ளுபடியானவை. உதாரணமாய், முருங்கைக்காய், வெங்காயம், முள்ளங்கி, பீர்க்கங்காய், சுரைக்காய் முதலியவற்றை உண்டால், அவற்றிலிருந்து தாமஸகுணம், மோகாந்தகாரம் முதலியவை பெருகுமாம். அதீதமான ஸ்திரீ சம்போகம், ஏராளமான குழந்தைகளைப் பெறுதல், அதனல் தமது மனைவி அருகமற்றவளாய்ப் போவதனல் பரஸ்திரீ நாட்டம் ஏற்படுதல் முதலிய துர்க்குணங்களை விலக்கும் பொருட்டு சுத்த ஸாத்விகமான வஸ்துக்களையே உண்ணவேண்டுமாம்.

வைதிக ஐயங்கார்கள் இவ்வித விபரீதமான பிடிவாதமான கொள்கைகளை உடைய அபூர்வப் பிறவிகள்.

இது நிற்க, விஷ்ணுபுரம் ஐயரவாள் வீட்டில் போஜன மென்றால், முதல் நாளிலிருந்தே அந்த ஊர் முழுதும் 'ஹரிகி' சப்தங்களும், எச்சில் இலைகளுக்காக அடித்துக் கொள்ளும் தொம்பர்கள், நாய்கள் ஆகியோர் சண்டைகளும் பெருகி ஊரைக் கிடுகிடுக்க அடித்துவிடும். ஒவ்வொரு பிராம்மணரும் மறந்து போகாமல் கையில் ஒவ்வொரு பஞ்சபாத்ரத்தையோ, ஸ்தாலிச் செம்பையோ எடுத்துக்கொண்டு வருவார். ஒவ்வொருவரிடத்திலும் மூன்றுவது துண்டுவஸ்திரம் ஒன்று தவறாமல் இருக்கும். இலைகள் போட ஆரம்பித்தால், அவரவர் தம் தம் மூன்றுவது அவுக்கத்தை இலைக்குப் பக்கத்தில் விரித்துப்போட்டு ஆசனங்கோலிவிட்டு, சந்தலக்கல், சந்தனக் கட்டை, தொன்னை, ஜலம் முதலியவை இருக்குமிடங்களுக்குப் போய்விடுவார்கள். சிலர் தாம் எதிர்பார்க்கும் நண்பர்கள், அல்லது, உறவினருக்கும் சேர்த்து இரண்டு மூன்று இலைகளுக்குப் பக்கத்தில் மேல் துணியை நீளமாய்ப் போட்டிருப்பார்கள்.

போஜனத்திற்கு முன் அவர்கள், முன் திண்ணைகளில் உட்கார்ந்திருக்கையில் அவரவர் தம் தமக்குத் தெரிந்த வித்தைகளையெல்லாம் காட்டிக் கொண்டிருப்பார்கள். சிலர் தேவாரம், அருட்பா, தாயுமானவர் பாடல் முதலியவைகளைப் பாடுபவர்கள். சிலர் வாயால் மிருதங்கம் வாசிப்பார்கள். பலர் தாளம் போடுவார்கள். சிலர் விகடம் செய்வார்கள். சிலர் பதினைந்தாம் புலி யாடுவர்கள். சிலர் தாமே அதிகமாய்ப் படித்த பண்டிதர்கள் என்று காட்டிக்கொண்டு, எவரோடும் பேசாமல் கம்பீரமாய் உட்கார்ந்து துளசிமணி மாலையை

வைத்து மணிகளை உருட்டி, "ராம, ராம, ராம, ராம," வென்று உரத்த குரலில் ஜெபம் செய்துகொண்டிருப்பார்கள். வேறு எவரேனும் பிராம்மணர் அவருக்கு அருகில் நெருங்கிவந்து விட்டால்,ஜெபம்செய்பவர் உடனே தூர்வாச மகாமுனிபோல மாறி, "என்னங்கிணும் சுத்த அஸப்பமாயிருக்கிரே! மனுஷா ஒக்காண்டிருக்காளேங்கற மரியாதை மட்டு இல்லேப்போலிருக்கே" என்று பிரமாதமாய்க் கூச்சலிட்டுத் தம்மை விளம்பரப் படுத்திக் கொள்வார். எதிராளியும் சண்டைக்காரரா யிருந்தால், அவரும் கூச்சலிட்டு, "அடெ ஏங்கிணும் சுத்தப் பிச்சு மாதிரி பேத்தறீர்! கூட்டத்துலெ ஒத்தர்மேலே ஒத்தர் படாமெ இருக்க முடியுமோங்கிணும். நீர் ஒத்தர்தான் மகாமோஷ்டு போலிருக்கே. மத்தவாள்ளம் சுத்தப் பாஷாண்டன்னி எண்ணிண்டீரா! விழுந்து கெடங்கிணும் சும்மா! அதியமா ஓங்கிறை, ஒடம்புக் காகாதுங்கிணும். வாயை மூடிக்கும் செத்தநா செருப்பைக் கடிச்சாப்பலே" என்பார். உடனே அந்த இடத்தில் பெருத்த அமளி ஏற்பட்டுப் போகும். ஒவ்வொருவரும், தாம் போய்விட்டால் தர்மம் நடத்தும் கர்த்தாவுக்குப் புண்ணியமே இல்லாமல் போய்விடு மென்று கருதி, அற்ப சண்டையானாலும், உடனே எழுந்து,"நான் போறேங்கிணும்; நான் போறேங்கிணும். ஆருங்கிணும் இந்த போஜனத்துக்கு வீங்கிக் கெடக்கறு! என்னமோ பெரிய மனுஷா வருந்தி அழைக்கறுளேன்னு, அவா வார்த்தைக்கு மதிப்பு வச்சு வந்தா, நடுவுலெ கெடக்கற நாயே யெல்லாம் கண்டபடி பேசறதாவதுங்கிணும். இந்த மாதிரி நடக்குமின்னு தெரிஞ்சிருந்தா,நான் ஸர்வதேவ இந்த எடத்துலெ காலடி வச்சிருக்க மாட்டேங்கிணும்" என்று கூறிக் கூச்சலிட்டு வெளியில் போக முயற்சிப்பார். சிலர் வழி மறித்து அவரை சமாதானப் படுத்தி வேறிடத்திற்கு அழைத்துப் போய் உட்காரவைப்

பார்கள். சில குள்ளநரிகள் சமயல் செய்யப்படும் இடத்திற்குப்போய், மேல் விழுந்து உதவிசெய்யக் கிளம்பி விடுவார்கள். ஒருவர் பலாப் பழப்பத்தைத் திருத்திச் சுளைகளை எடுக்கத் தொடங்குவார். ஒருவர் காய்கறி நறுக்கிக் கொடுப்பார். ஒருவர் இலைகள், பழவகைகள் முதலியவற்றை அலம்பி வைப்பார். ஒருவர் வடை முதலியவற்றிற்கு மாவறைத்துக் கொடுப்பார். ஒருவர் தேங்காய்களைத் துருவுவார். பலர் கட்டிலடங்கா ஆவேசத்தோடு பரிமாறக் கிளம்பி, அதற்கு சமயல்காரர்களை விடாமல், தமக்குள்ளாகவே இன்னின்ன வஸ்துவைப் இன்னின்னார் பரிமாறுவதென்று ஏற்பாடு செய்து கொள்வார்கள். "அடே சுப்புக்குட்டீ, நீ மாம்பழம் பரிமாறு," "ஓய் சாமி ஐயரே, நீர் நெய் பரிமாறுங்கிணும்," "எலே சீனு, நீ தூத்தம் விசாரீடா" "டேய் நாணு, நீ கறி பரிமாறுடா," "இந்தாடா கோபு, நீ குஞ்சாலாடு பரிமாறுடா," " ஓய் நாகநாதையனே, நீர் பரமன்னம் பரிமாறும்" என்று தமக்குத் தாமே நியமன உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டு, பதார்த்தங்களை எடுத்துக் கொண்டு தலைவிரித்தாடத் தொடங்கிவிடுவார்கள். அவர்கள் அங்குமிங்கும் ஓடி ஓடித் துள்ளித் துள்ளிப் பாய்ந்து உற்சாகத்தோடு குனிந்து நிமிர்ந்து பரிமாறும் விதரணையை நேரில் கண்டே நாம் ஆநந்திக்கவேண்டும்.

அவர்கள் கணக்கு வழக்கின்றி பக்ஷண பதார்த்தங்களையெல்லாம் வாரிக் கொட்டுவார்கள் ; தேங்காய்ப் பருமனிருக்கும் குஞ்சாலாடுக்களை இரண்டு மூன்று தூக்கி அலட்சியமாய் வீசுவார்கள். அதில் ஒன்றை உதிர்த்தாலே பாதி இலை நிறைந்து போகும். (பெரும்பாலோர் தமக்குப் பின்புறத்தில் தமது மூன்றுவது சவுக்கத்தை விரித்துப் போட்டிருப்பாராதலால், முக்கியமான பக்ஷண பலகாரங்களை மேன்மேலும் இடது கையால் வாங்கி வாங்கி மேற்படித் துணியில் வைத்துக்

கொண்டு, எழுந்து போகும்போது, சவுக்கத்தின் நான்கு மூலைகளையும் சேர்த்து இடதுகையால் தூக்கிக்கொண்டு போவார்கள்.) பலர் புத்துருக்கு நெய்யை, மண்மொந்தைகளில் எடுத்துக் கொண்டு அடிக்கடி வந்து சித்திரான்னங்களின் மேலும்,பக்ஷணங்களின் மேலும் ஜலம்போலச் சாய்ப்பார்கள் சிலர்பாலைக்கொணர்ந்து போளி முதலியவற்றின்மேல் கொட்டுவார்கள். அவர்கள் போடும் கூச்சல் அடுத்த ஊர் வரையில் கேட்கும். ஒரு தடவை பரிமாறப் பட்ட வஸ்துவை மறுபடியும் எடுத்துக்கொண்டு வருவோர் அதன் பெயரைச் சொல்லிச் சொல்லிக் கதறி ஏலம் போட ஆரம்பித்து விடுவார்கள். ஒருவர், " ரஸவாங்கீ, ரஸவாங்கீ " என்று கூறிக்கொண்டே ஓடுவார். இன்னொருவர், " பயத்தம்பருப்புக் கோசுமலி யாருக்கு வேணும் ?" என்று கேட்டுக்கொண்டே போவார். வேறொருவர், "ஐயா ரஸம், ஐயா பங்களூர் ரஸம், ஐயா பன்னீர் ரஸம், ஐயா மைசூர் ரஸம்" என்று ரஸத்தை அபாரமாய் வர்ணித்து ஏலம் போட்டுக்கொண்டே செல்வார். இன்னொருவர் " பொடலங்காப் பிட்லே, பொடலங்காப் பிட்லே", என்று சொல்லிக்கொண்டே அடிக்குப் பயந்து ஓடுகிறவர்போலஓட்டமாய்ப்போவார். வேறொருவர், "ஐயா கொழம்பு, ஐயரவாளுக்குக் கொஞ்சம் மோர்க் கொழம்பு, ஐயர் ஸாம்பார், ஐயா சாண்பார், ஐயா கொழம்பு " என்று புன்னகையோடு கேலி செய்துகொண்டே போவார். ஒரு பையன், " ஐயா கெங்காமிருதம், ஐயா கெங்காமிருதம், சந்தேகத்துக்குக் கொஞ்சம் தீர்த்தம், ஐயா பச்சைக் கற்பூரம் கெங்காமிர்தம், ஆருக்குவேணும் தூத்தம், சந்தேகத்துக்குக் கொஞ்சம் தண், ஐயா தயவு செய்து கொஞ்சம் கெங்காமிர்தம்" என்று உற்சாகத்தோடு கூறிக் கொண்டே போக, நடுவில் ஒருவர், "அடெகொழந்தை, கொஞ்சம் வென்னீர் தயவு பண்

ணப்பா" என்பார். "ஓ, உஷ்ணோதகமா வேணும்? இதோ பின்னாலே வரப் போறது, வந்திண்டிருக்கு, வந்துட்டுது" என்று மிக குஷியாய் ஆசை வார்த்தை கூறி விட்டு அப்பால் நழுவிவிடுவான்.

அவரவர் தம் தமக்கு அறிமுகமானவர்களைப் பார்த்து கண்ஜாடை கைஜாடைகள் காட்டி, இலையில் உள்ள வஸ்துவில் எது தமக்கு இன்னம் தேவையோ, அதைத் தொட்டுக் காட்டுவார்கள். அந்த மனிதர் அடுத்த தடவை வரும் போது, அதைக் கொணர்ந்து ஏராளமாய்க் கவிழ்த்து விட்டுச் செல்வார். பாயஸம் பரிமாறப்படும் போதுதான் அது பெரிய கள்ளுக்கடைபோ லாகிவிடும். இலையில் விடப்படும் பாயஸம் கட்டிலடங்காமல் தறுதலைத்தனமாய் நாலாபக்கங்களிலும் வெள்ளமாய் ஓடுமாதலால், எல்லோரும் ஓரே காலத்தில் வெள்ளத்தைக் கட்டுப்படுத்த முனைந்து ஆவேசத்தோடு, கையையும் வாயையும் உபயோகித்து 'புஸ்' 'புஸ்' (Booz) என்று உறிஞ்சுவதும், நாக்கை நொட்டையிடுவதும் ஊரை கிடுகிடுக்க அடித்துவிடுவதோடு, 'குருட்டுப்பறைச்சி நத்தை உறிஞ்சுவது' என்ற பழமொழியை நினைப்பூட்டும். சிலர் பெரிய தொன்னைகளை வரவழைத்துக் குளம் குளமாய்ப் பலதடவை வாங்கி நெட்டுவதில் தொன்னைகள் சக்கை சக்கையாய்க் கிழிந்து பாயஸத்தோடு வாய்க்குள் பிரயாணம் போய்விடும்; சிலருக்கு இலைகள் கிழிந்து போகத் தரையின் அழுக்கும் பாயஸத்தோடு சேர்ந்துவிடுமானாலும், பெரு நெருப்பிற்கு ஈரமில்லையென்கிறபடி, தேவாமிர்தம்போ லிருக்கும் பரமான்னத்தின் யோக்யதைக்குமுன் தரையின் சாணி யழுக்கு எம்மாத்திரம் என்று கருதி, அதைப் பொருட் படுத்தாது தமது காரியத்தைப் பார்ப்பார்கள். அவ்வாறு பரமான்னம் உறிஞ்சும் பரவசத்தில் ஸ்வாமியை ஸ்தோத்திரம் செய்ய வேண்டு

மென்ற எண்ணம் சிலருக்கு உதித்து விடும்; கழுத்தில் ருத்ராக்ஷம் கட்டிக்கொண்டிருக்கும் ஒருவரைப் பார்த்துச் சிலர், "ஓய் பஞ்சுவையரே, ம், ஆகட்டும்," என்பர்.

அவர் தமது பாயஸத்தை அருந்திவிட்டு, தமது வயிறு, தொண்டை, மூச்சு முதலியவற்றை சரிப்படுத்திக் கொண்டு, தமக்கெதிரிலுள்ள ஒரு சிறுவனைப் பார்த்து, "அடே, மிருத்திஞ்சயா, நோக்கு சுதிபோடத் தெரியும்னு பக்கத்து ஊரெல்லாம் பிரஸ்தாபமா யிருக்கு. எங்கே, ஆகட்டும் கொஞ்சம்; காட்டு ஒன் சாமர்த்தியத்தை" என்று நயமாய்க் கிளப்பி விடுவார். அவன் ஒத்து ஊதுவதுபோல் வாயினாலேயே சுருதி போடத்தொடங்குவான்; உடனே பஞ்சுவையர் தமது காளைவாய்த் தொண்டையைக் கிளப்பி, இரண்டு மூன்று தடவை கனைத்து சுருதியைத் தமது குரலுக்கு சரியாய்ச் செய்து கொண்டு, வீட்டின் எஜமானர் எங்கே இருந்தாலும், அவருடைய காதில் படும்படி அடியில் வரும் ஸ்லோகங்களைப் பாட ஆரம்பித்துவிடுவார்:—

"நிகமே ஸரஸி ரத்நம், நித்யமாஸக்த ரத்நம்,
நிகில ஸுக்ருதி ரத்நம், ஜாநகீ நுப ரத்நம்,
பு<sup>b</sup>வந வலய ரத்நம், பூ<sup>b</sup>ப்<sup>b</sup>ருதா மேக ரத்நம்,
ப்ரக்ருதி ஸுலப<sup>b</sup>ரத்நம், மைதிலீப்ராண ரத்நம்.

ப<sup>b</sup>க்தாபாய பு<sup>b</sup>ஜங்க காருட<sup>d</sup>மணிஸ்
த்ரைலோக்ய ரக்ஷா மணிஹி,
கோபீலோசன சாதகாம்பு<sup>b</sup>த<sup>db</sup>மணிஸ்
சௌந்தர்ய முத்ரா மணிஹி,

யக்காந்தாமணீ ருக்மணி கனேதசத்<sup>db</sup>வம்த்<sup>db</sup>வைக
பூ<sup>b</sup>ஷாமணிஸ்
ச்ரேயோதே<sup>db</sup>வ சிகாமணிர் தி<sup>db</sup>சதுநோ
கோபால சூடா<sup>d</sup>மணிஹி,

சத்ருஸ் சேதைdhக மந்த்ரம், ஸகலமுப நிஷத்
வாக்ய ஸம்பூஜ்ய மந்த்ரம்,
ஸம்ஸாரோத்தர மந்த்ரம், ஸமுபச்சித
தமஸ்ஸங்க நிர்யாண மந்த்ரம்,

ஸர்வைச்வர்யக மந்த்ரம், வ்யஸன புbஜகஐஸ்
ஸந்தdhஷ்ட ஸந்த்ராண மந்த்ரம்,
ஜிக்வே ஸ்ரீ கிருஷ்ண மந்த்ரம் ஜெபஜெப
ஸததம் ஜென்ம ஸாபல்ய மந்த்ரம்."

என்று இராகங்களை மாற்றி மாற்றி, இராக மாலிகையாய்ப் பாடி, முடிவில் "ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்" என்று மதயானை கதறுவதுபோலப் பிரமாதமாய்க் கூச்சலிடுவார். மற்ற ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து, "கோவிந்தா, கோவிந்தா" என்று சமுத்திர கோஷம்போல ஒரே அலறலாய் அலறுவார்கள். மறுபடி பஞ்சுவையர், "நமப்பார்வதீ பதயே" என்று முறை வைக்க, மற்றவர், "ஹரஹர மகா தேவா" என்று முன்னிலும் அதிகமாய் ஓங்கிக் கூச்சலிடுவர். முடிவாய்ப் பஞ்சுவையர், "அன்னதா(dh)தா ஸுகிப(b)வ" என்று முறை வைக்க, மற்றவர், "ததாஸ்து" என்று கூறி முற்றுப்புள்ளி வைப்பர். அதற்குள் சாதமும் மோரும் பரிமாறப்பட்டு விடும். அவ்வளவோடு போஜன நாடகம் ஸமாப்தியாகும்; வயிற்றுப் பளுவைத் தாங்கமாட்டாத சிலர், "உத்தரா போஜனம், உத்தரா போஜனம்" என்று அவசரமாய்க் கூச்சலிடுவார்கள். "அவாளவாளே வாத்துக்குங்கோ" என்பர் பலர், அந்த சாங்கியமும் நிறைவேறும். உடனே எல்லோரும் குபீரென்று எழுந்து மூட்டையிலிருந்து கொட்டப்பட்ட நெல்லிக்காய்களைப்போல நாலா பக்கங்களிலும் சிதறிச் சென்று கைவாய் முதலியவற்றை அலம்பிக்கொள்ள, எல்

லோரையும் ஒரு கோவிலுக்குள்ளோ, பெரிய கட்டிடத்திற் குள்ளோ அடைத்து, சந்தனம், வெற்றிலை பாக்கு முதலி யவை வழங்குவார்கள். அந்த சமயத்தில் மேற்படி பிராம்மணர் கள் இரண்டு கோஷ்டிகளாய், "ஆ எதனம் வேதா," "ஆ எதனவான் பவதி," "பசுமான், புஷ்பவான், பிரஜாவான் பவதி," "ஆ எதனம் வேதா," "ஆ எதனவான் பவதி" என்று மாறி மாறி, முறை வைத்து சமுத்திர கோஷம் செய்து தாம்பூலம் பெற்றுக்கொள்வர்.

முடிவில், எஜமானே, அவருடைய காரியஸ்தரோ அந்தக் கட்டிடத்தின் வாசலில் நின்று, உள்ளே இருப்போரை ஒவ் வொருவராய் வெளியில் விட்டு, கையில் அரை ரூபாய், கால் ரூபாய் பூரிதக்ஷிணை கொடுத்து அனுப்பி வைப்பார்கள். சிலர் படுத்துப் புரள வசதியான திண்ணைகளைத் தேடிச் செல்வர்; சிலர் ஆறு குளங்களைத் தேடி, தேக பாதை நிவர்த்தியின் பொருட்டு ஓடுவார்கள். சிலர் தம் தம் ஊருக்குப் புறப்படுவர். இதுவே ஸந்தர்ப்பணை நடக்கும் தோரணை.

இம்மாதிரி முதலாவது இரண்டாவது பந்திகள் முடி வடைய, மூன்றாவது பந்தி போஜனம் ஆரம்பமான சமயத் தில் நமது நண்பர்களான கிருஷ்ணமூர்த்தி ஐயர், ஸ்வர்ணம் பாள் ஆகியோர் வண்டியை விட்டிறங்கி தாமரைத் தடாகத் தில் தமது ஸ்நானத்தை முடித்துக் கொண்டு, வேறு ஆடை களை அணிந்து ஆயத்த மாயினர். வண்டிக்காரன் குதிரையை அவிழ்த்து, அதற்குத் தண்ணீர் காட்டி, அதை ஒரு வாதா மரத்தடியில் கட்டி, வண்டியின் அடியிலிருந்த புல்லை எடுத்து அதற்கு முன்னால் போட்டுவிட்டு, குளத்தில் இறங்கி நன் றாய் ஸ்நானம் செய்து, வஸ்திரத்தைக் காயவைத்துக் கட்டிக் கொண்டு, கட்டுக்கட்டாய்ப் பளிச்சென்று விபூதி பூசி ஸந் தர்ப்பணையில் கலந்து கொள்வதற்கு எவ்விதத்திலும் அருக மான வைதிகப் பழமாய் நின்று கொண்டிருந்தான்.

அந்த நிலைமையில், மணியம் கைலாசையர் விரைவாக நடந்து வந்து சத்திரத்து வாசலை யடைந்தார். அவருக்குப் பின்னால் பால் குடத்தைத் தலையில் வைத்திருந்த ஆள் ஒருவ

னும் வந்து சேர்ந்தான். கைலாசையர் அவனைப் பார்த்து, "அடே முத்து வீரு, சுருக்கா நடந்து, பண்ணையார் ஊட்டுப் பின் பக்கமாப்போயி, சொயம்பாகி சாம்பசிவையனைக் கூப்பிட்டு, பாலை ஒப்பிச்சுடு. இதோ நான் பின்னாலே வறேன். போ, ஓடு" என்றார். அவன் அப்படியே விரைவாகச் சென்றான்.

கிருஷ்ண மூர்த்தி ஐயர் முதலியோர் ஸ்நானம் செய்து, இலக்ஷணமாய் இருந்த காக்ஷியும், தகப்பன் தாய் குழந்தை ஆகிய மூவருடைய அபூர்வமான அழகும், தேஜஸும், பெரிய மனிதத் தோற்றமும், அலங்காரமும் எவரையும் பிரமிக்கச் செய்வனவாயிருந்தன வென்பதை நாம் மீண்டும் கூறுவது மிகையாகாது. அவர்களைக் கண்டு முகமலர்ச்சி யடைந்த கைலாசையர், "நேக்கு இப்பதான் மனஸு குளுந்துது. லஜ்ஜைப் பட்டுடகளே, இஞ்செ வராமெ ரஸ்தாவோடெ சவாரி வச்சுட்டுடகளோன்னு ஸந்தேகப்பட்டுண்டே வந்தேன். ரொம்ப ஸந்தோஷ மாச்சு; களம்புங்கோ, போகலாம்" என்றார். உடனே கிருஷ்ணமூர்த்தி ஐயர் சிறிது தயங்கி, "டிரங்குப் பொட்டி ரெண்டிருக்கு; அதை ஆராவது பாத்திண்டிருக்கணும்; என்ன சேயலாமுன்னு யோஜிக்கறேன்" என்றார்.

கைலாசையார், "அதென்ன மொள்ளச் சொல்றகளே. அது அவசியம் யோஜிக்க வேண்டிய விஷயந்தானே. பொட்டிலே வெலை பெத்த சாமான் எவளவோ இருக்கலாம். வண்டிக்காரனும் அலுத்து வந்திருக்கான்; பசி வேதனேலெ தூங்கிப் போனாலும் போயிடலாம். ஸத்ரத்துக்குள்ளே ஒரு உள்ளு காலியாயிருக்கு. அதிலெ வச்சுப் பூட்டிண்டு போகலாம்" என்றார்.

கிருஷ்ண மூர்த்தி ஐயர் அதை ஆமோதிக்க, உடனே பெட்டிகள் ஓர் அறைக்குள் வைத்துப் பூட்டப்பட்டன. கைலாசையர் வண்டிக்காரனை நோக்கி, "வண்டிக்காரா, நீ இப்பிடியே இரு. நோக்கு சாப்பாடு இஞ்செயே அனுப்பறேன்" என்று அவனை நிறுத்தி விட்டு, மற்ற மூவரையும் அழைத்துக்

கொண்டு, அக்கிரகாரத்திற்குள் சென்று ஐயரவாள் வீட்டுப் பந்தலை யடைந்தார். அங்கே பிச்சைக்காரர் வழியை மறைத்துக் கொண்டு நிற்க, கைலாசையர் அவர்களைப் பார்த்து பலமாக அதட்டி, "ஆர்ரு அது? எடு செருப்பு; போங்க அந்தண்டை; மனுஷா போறத்துக்கு வரத்துக்குக்கூட வழியில்லாமெ சொவரு வச்சுட்டிகளே! போங்கடா அந்தண்டை" என்று கூச்சலிட்டு, வழி விலக்கியபடி மூவரையும் அழைத்துக் கொண்டு குறட்டில் ஏறினர்.

திண்ணைகளில் உட்கார்ந்திருந்த பிராம்மணர்கள் புதிய விருந்தினர் மூவரையும் பார்த்து பிரமிப்பும் வியப்பும் அடைந்து, அவர்கள் பண்ணையாருக்கு உறவினர்களாயிருக்க வேண்டுமென்று கருதி ஒருவரோடொருவர் இரகசியமாய்ப் பேசிக்கொண்டனர். கைலாசையர், வழிநெடுக நின்று சொண்டிருந்த பிராம்மணர்களைப் பார்த்து, "ஒத்துங்கோ, ஒத்துங்கோ, நகருங்கோ, வழிவிடுங்கோ" என்று மிக ஆடம்பரமாய் அதிகாரம் செய்தபடி மூவரையும் அழைத்துக் கொண்டு உள்ளே சென்றார்.

அந்த மாளிகை ஒன்றுக்குப் பின் ஒன்றாய் இருந்த மூன்று கட்டுகள் உடைய பிரம்மாண்டமான கட்டிடம். ஒவ்வொரு கட்டின் நடுவிலும் சுமார் 20 கஜ சதுரமான முற்றமும், அதைச்சுற்றி, நாற்புறங்களிலும் மும் மூன்று கஜ அகலமுள்ள தாழ்வாரங்களும், பத்துகஜ அகலமுள்ள கூடங்களும் அமைந்திருந்தன. இரண்டிரண்டு ஆள்கள் சேர்த்துப்பிடிக்கத் தக்கவையும், அடியிலும் தலையிலும் பித்தளைப் பூண்கள் கட்டப்பட்டவையுமான, மெருகு கொடுக்கப்பட்ட கருங்காலித் தூண்கள் கம்பீரமாயும் அழகாயும் நின்றுகொண்டிருந்தன. ஒவ்வொரு கட்டிலும் பெரிய பெரிய தலைவாழை இலைகள் 200 க்குமேல் போட இடமிருந்தது. மேற்படி மூன்று கட்டுகளின் மேலும், சன்னகாரை பூசப்பெற்ற வழுவழுப்பான மேன்மாடம் அமைந்திருந்தது. மேன்மாடத்தில் முதலாவது, இரண்டாவது கட்டுகள் மன்மத பீட மகா யோகீசுவரருடைய வாசம், பூஜை முதலியவற்றிற்கு ஏக

போகமாய் ஒழித்துவிடப்பட்டிருந்தன. மூன்றாவது கட்டில் பண்ணையாரும் அவருடைய சம்சாரமும் இருந்தனர். மேன் மாடத்தின் முதல் கட்டில் அமைக்கப்பட்டிருந்த பூஜை மண்டபத்தில் யோகீசுவரர் அம்பிகையின் விக்ரகம், படங்கள், ஸாளிக்ராமங்கள், பூஜைப் பாத்திரங்கள், தீப ஸ்தம்பங்கள் முதலியவற்றை அலங்காரமாய் வைத்துக்கொண்டு, முன்னால் ஒரு பீடத்தில் மான் தோலின்மேல் அமர்ந்து நிஷ்டையில் ஆழ்ந்திருந்தார். அந்த மண்டபம் முழுதிலும் அலங்காரங் களும் புஷ்பங்களுமே மயமாய் நிறைந்து, காண்போர் மன தைப் பிரமிக்கச் செய்தன. புஷ்பம், தசாங்கப் பொடி, கஸ் தூரிக்கதம்பம், பச்சைக்கற்பூரம் முதலியவற்றின் பரிமள கந்தம் மனிதரைப் பரவசப்படுத்தி ஆநந்த மூட்டியது. யோகீசுவரர் இருபத்தைந்து வயதுகூட அடையாத அதி பால்ய விட புருஷர். உடம்பு மெருகு கொடுத்த தங்கப் பாளம்போல் அதீத தேஜஸோடு ஜ்வலித்ததன்றி, மிதமான பருமனும் உயரமும் உடையதாயிருந்தது. முகம் அழகாயும், மிக வசீகரமாயும் அமைந்திருந்தது. தலை முழுதும் முண்ட னம் செய்யப்பட்டிருந்தது. காஷாயத்தில் நனைக்கப்பட்ட தகத்தகாயமான முழுப்பட்டு வஸ்திரத்தை அவர் இடுப்பில் தரித்து தலையிலும் போட்டு மறைத்துக் கொண்டிருந்தார். முகம், மார்பு, கைகள் முதலிய பாகங்களில் விபூதி பளிச் சென்று பிரகாசித்தது. நீளமாயிருந்ததும், உச்சியில் கிருஸ் தவர் சிலுவைபோல குறுக்குக் குச்சி கட்டப் பெற்றதுமான ஒரு தண்டம் அவருடைய இடது தோளில் சார்த்தப்பட் டிருந்தது. எதிரில் செம்புஸ்தாலி, பஞ்சபாத்திரம், உத்தி ரணி முதலியவை காணப்பட்டன. அன்றைய தினம் காலை முதல் அம்பிகைக்கு லக்ஷார்ச்சனை முதலியவற்றை நடத்தி விட்டு, எல்லோருக்கும் குங்குமப் பிரஸாதங்கள் வழங்கிவிட்டு, தமது குக்ஷி பாதையை நிவர்த்திசெய்துகொண்டு உட்கார்ந்த படியே அப்போதுதான் யோகீசுவரர் யோக நித்திரையில் ஆழ்ந்தார். வெள்ளித் தடி தாங்கிய கட்டியக்காரர் இருவர் வாசற்படியில் மறைவாக இருந்தனர். அந்த மேன்மாடத்தின் இரண்டாவது கட்டில், அவருடைய முக்கிய சிஷ்யர்களும்,

நிர்வாகஸ்தர்களும் அவருடைய விலையுயர்ந்த பெட்டி,பேழை, கஜானக்கள் முதலியவற்றை வைத்துக்கொண்டு தம் தம் காரி யங்களை கவனித்துக்கொண்டிருந்தனர். ஆனல் ஒரு கட்டிற் கும் மறு கட்டிற்கும் வாசற்படியைத் தவிர, வேறு ஜன்னல் கள் முதலிய திறப்புகள் இல்லையாதலால், ஒரு கட்டில் இருப் பவர் என்ன செய்கிறர்கள் என்பது மறுகட்டில் இருப்பவர் களுக்குத் தெரிய வகையில்லை. கீழே இருந்த ஒவ்வொரு கட்டிலிருந்தும், அததற்குமே லிருந்த மேன்மாடத்திற்கு ஏற, ஒவ்வொரு கட்டின் தாழ்வாரத்திலும் படிக்கட்டு அமைக்கப் பட்டிருந்தது. கிருஷ்ண மூர்த்தி ஐயர் முதலிய மூவரையும் அழைத்துக்கொண்டு உள்ளே நுழைந்த கைலாசையர் அவர் களை நேராய் இரண்டாங் கட்டிற்கு அழைத்துப்போய், அங் கிருந்த படிக்கட்டின் வழியாக மேலே நடத்திக்கொண்டு போனர். ஏனென்றல், தாங்கள் முதலில் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டு அதன் பிறகு போஜனத்தை முடித்துக் கொள்ள உத்தேசிப்பதாய் கிருஷ்ணமூர்த்தி ஐயர் கைலா சையரிடம் தெரிவித்தாராதலும், ஸ்வாமிகளை தரிசிக்க யாரே னும் விரும்பினல், அவருடைய முக்கிய நிர்வாகஸ்தரிடம் முதலில் தெரிவிக்க, அவர் ஸ்வாமிகளிடம் போய் அனு மதி பெற்றுவந்த பிறகே, எவரும் பூஜை மண்டபத்திற்குப் போக வேண்டுமாதலாலும், கைலாசையர் அம்மூவரையும் இரண்டாவது படிக்கட்டின் வழியாக அதற்குமே லிருந்த உப் பரிகைக்கு அழைத்துக்கொண்டுபோய், அங்கு தனிமையான ஓர் அறையிலிருந்த முக்கிய நிர்வாகஸ்தரைக் கண்டு கிருஷ்ண மூர்த்தி ஐயரைப்பற்றிய வரலாறு முழுதையும் கூறினர். அப்போது ஸ்வாமிகள் யோக நித்திரையி லிருந்தாரென்பது மேற்படி முக்கிய நிர்வாகஸ்தருக்குத் தெரியுமாதலால், அப் போது ஸ்வாமிகளின் தரிசனம் கிடைக்காது என்று கூற உத்தேசித்த முக்கிய நிர்வாகஸ்தர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஸ்வர்ணம்பாள், சுந்தரி ஆகிய மூவருடைய அபூர்வமான தேஜஸையும், ஜ்வலிப்பையும் கண்டு பிரமித்துப் போனராத லால் அவர் தமது வாயைத் திறக்கவில்லை. முக்கியமாய் அவர் ஸ்வர்ணம்பாளின் ஒப்புயர்வற்ற கட்டழகைக் கண்டு தேனில்

விழுந்த எறும்புபோலாய், இரண்டொரு விநாடி மௌனமா யிருந்தபின் கைலாசையரைப் பார்த்து, "ஸ்வாமிகள் யோகாப்பியாசம் பண்ணிண்டிருக்கா. திருநேத்ரம் படைச் சவாளா யிருந்தாக்கூட இந்த ஸந்தர்ப்பத்துலெ அவாள் தரி சனம் கொடுக்க மாட்டா. ஆனா இவாளோடெ வாலாற் றைக் கேட்ட மொதக்கொண்டு, எப்பிடியாவது பாடுபட்டு ஸ்வாமிகளோடெ தரிசனம் பண்ணி வைக்கணுமின்னு நேக் குள்ளே ஒரு சிந்தனை உண்டாறது. எல்லாரும் இப்பிடியே இருங்கோ. நான் போயி ஸந்தர்ப்பம் எப்பிடி இருக்குன்னு பாத்துண்டு வறேன்" என்று கூறி, அவர்களை அவ்விடத்தி லேயே நிறுத்திவிட்டு, முதல் கட்டில் நுழைந்து, ஸ்வாமிகள் உட்கார்ந்தபடி தூங்கிக்கொண்டிருந்த இடத்தை அடைந்து, பத்து நிமிஷகாலம் கழித்து புன்னகை தவழ்ந்த முகத்தோடு திரும்பி வந்தார். வந்தவர் கைலாசையரை நோக்கி, "இந் தாத்துப் பண்ணையார் ஸ்வாமிகளை தரிசிக்கப் பிரயத்தனப்பட் டிருந்தாக்கூட, இந்த அசந்தர்ப்ப வேளேலெ, அவரோடெ பிரார்த்தனை கைகூடி இருக்காது. நான் போன ஸமயத் துலெ ஸ்வாமிகள் ஆசமனம் பண்ணறத்துக்காகக் கண்களைத் தறந்தா. நானும் உள்ளே நொழைஞ்சேன். எங்கே போனா லும் புண்ணியாத்மாக்களுக்கு ஜெயந்தான். மத்தவாள் வருஷக் கணக்குலெ பகீரதப் பிரயத்தனம் பண்ணுக்கூட வழிவிடாத இரும்புக்கோட்டையா யிருந்தாலும், புண்ணி யாத்மாக்களைக் கண்டா ஒடனே வெண்ணெபோலெ எளகி எடங்குடுக்குமுன்னு பெரியவா சொல்லுவா. அதை இப்ப இவா விஷயத்துலெதான் நான் நிதரிசனமாப் பாக்கறேன். என்னமோ தெரியல்லெ; ஸ்வாமிகள் இப்ப ரொம்ப ஸெளமு கமா இருக்கா. அது இவாளோடெ பாக்யந்தான்னு நெனைக் கறேன். ஆனா ஒரு விஷயம். ஸ்வாமிகள் நிஷ்டையிலெ இருக்கச்சே, பொண்ணுப் பொறந்தவாளுக்கு தரிசனம் குடுக் கற வழக்கமில்லெ. நீங்க ஒரு காரியம் சேயுங்கோ. அம் மாள் பூஜை மண்டபத்துக்கு வெளீலெ நிக்கட்டும். ஐய ரவாள் கொழந்தையை மாத்தரம் எடுத்துண்டு வாங்கோ. சந் தர்ப்பம்போலெ பாத்துக்குவோம்" என்றார்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் சுந்தரியைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தாராதலால், அவர் அப்படியே முன் கட்டுப் பக்கம் நடந்தார். அவருக்குப் பின்னால் ஸ்வர்ணம்பாள் சென்றாள். முக்கிய நிர்வாகஸ்தர் அவர்களுக்கு வழிகாட்டி முன்னால் நடந்தார். கைலாசையர் அவர்களுக்குப் பின்னால் தொடர்ந்து சென்றார். இரண்டொரு நிமிஷத்தில் எல்லோரும் பூஜை மண்டபத்திற்கு வெளியில் இருந்த தாழ்வாரத்தை யடைந்தனர். கைலாசையரையும், ஸ்வர்ணம்பாளையும் அவ்விடத்திலேயே நிற்க வைத்துவிட்டு, முக்கிய நிர்வாகஸ்தர், சுந்தரியைத் தூக்கிக்கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி ஐயரை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றார். பின்னவர் பூஜைமண்டபத்தின் வைபவத்தையும், பால சந்நியாசிகளின் அதிஜாஜ்வல்லியமான தெய்விக தேகஜஸையும் கண்டு பிரமித்து ஆநந்த பரவசமடைந்து பக்திப் பெருக்கினால் நெக்குவிட்டிளகி ஸ்வாமிகளுக்கு சிறிது தூரத்தில் நின்றபடி "பாப்பா, ஸ்வாமிகளை நமஸ்காரம் பண்ணு" என்று கூறி குழந்தையைக் கீழே குப்புறப் படுக்கவைத்து, தாமும் கீழே வீழ்ந்து சாஷ்டாங்கமாகப் பன்முறை நமஸ்காரம் பண்ணி, அபிவாதனம் சொல்லிவிட்டுக் கைகட்டி வாய் புதைத்து நிற்க, பெரும் போதையில் இருப்பவர் நலிந்து கண்களைத் திறப்பதுபோல, யோக நிஷ்டையிலிருந்த ஸ்வாமிகள் மிகப் பாடுபட்டுத் தமது கண்களைத் திறந்து பார்த்து, "ஆகா! ஆர் இவா! கொஞ்ச நாழிக்கி மின்னே என் யோக நிஷ்டையில் ப்ரமேச்வரனும், பார்வதியும், பாலாம்பிகையும் காக்ஷிகொடுக்கறப்புலே என் அகக்கண்ணால் கண்டேன். பார்வதி மாத்ரம் அந்தரத்யானமாய்விட்டாள். மத்த ரெண்டுபேரும் சாக்ஷாத் அப்படியே இதோ நேருலெ வந்திருக்காளே!" என்று தமக்குத்தாமே உரக்கக் கூறிக்கொண்ட பின்னர், கிருஷ்ணமூர்த்தி ஐயரைப் பார்த்து, "கொழந்தை கிருஷ்ணமூர்த்தி, ஒன்னையும், ஒன் ஸம்சாரம் கொழந்தைகளையும் அம்பாள் குளுரக் கடாக்ஷித்திருக்கா; கிரகசாரத்துனாலெ இப்ப கொஞ்சம் சலனம் ஏற்பட்டிருக்கு. ஆனாலும், அம்பாளோடெ கிருபை ஒங்களுக்கு ஸம்பூர்ணமா உண்டாகப்

போறது. எதைப் பத்தியும் இனி நோக்குக் கவலேயே வாண் டாம். தீர்க்காயுஷ்மான்பவா" என்று கூறி அம்பாளுடைய பாதத்தடியிலிருந்து குங்குமம், புஷ்பம் முதலியவற்றை சிறி தளவு எடுத்து கிருஷ்ணமூர்த்தி ஐயரிடத்தில் கொடுக்க, அவர் குங்குமத்தைத் தமது நெற்றியில் இட்டுக்கொண்டு, குழந்தை யின் நெற்றியிலும் இட்டு, புஷ்பத்தைத் தமது தலேயில் சூடிக் கொண்டு, குழந்தையின் தலேயிலும் சூட்டிவிட்டு, கைகட்டி வாய்பொத்தி பக்தி பரவசராய் நிற்க, மேலும் ஸ்வாமிகள் பேசத் தொடங்கி, "குழந்தை கிருஷ்ணமூர்த்தி, நீ மகா பாக்யவான். ஒன் கொழந்தை சுந்தரி சாக்ஷாத் பாலாம்பி கைபோலவே இருக்காள். ஸாமுத்ரிகா லக்ஷணங் களுக்கு அல்பமும் பழுதில்லாமல் பொண் கொழந்தைகள் கெடைக்குமானுல் அவாளே அம்பிகை ஸ்தானித்தில் வச்சுப் பூஜை பண்ணும்படி சாஸ்தரம் சொல்லறது. இந்த மாதிரிக் கொழந்தை ஆப்பிடுமான்னு நான் பல வருஷமாப் பாக்க றேன். எங்கெயும் அகப்படல்லெ. இப்பதான் அந்த பாக் யம் நேக்குக் கெடைச்சுது. இந்தக் கொழந்தையை வச்சு நான் பூஜைபண்ண உத்தேசிக்கறேன். இண்ணேய பூஜை முடிஞ்சு போச்சு. நாளேய தினம் காலேயிலெ அதை வச்சுக் கலாமுன்னு யோஜிக்கறேன். நீங்கள் இருந்து அம்பாள் கிரு பைக்குப் பாத்ரராய், அதுக்குமேல் ஊருக்குப் போகலாம்" என்றூர்.

உடனே கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஸ்வாமிகளின் உத்த ரவை மறுக்க மாட்டாதவராய், "அப்பிடியே ஸித்தமாகக் காத்துண்டிருக்கேன்" என்றூர்.

அப்போது சிறிது தூரத்திற் கப்பால் வணக்க ஒடுக்க மாய்க் கைகட்டி, வாய்பொற்றி நின்றுகொண்டிருந்த முக் கிய நிர்வாகஸ்தர், "ஐயரவாளோடெ ஸம்சாரம் தரிசனத் துக்காக வெளீலே காத்துண்டிருக்கா. ஸந்நிதானத்துலெ நியமனமாகணும்" என்று மிக விநயமாய்க் குனிந்து விக்ஞா பனம் செய்துகொள்ள, ஸ்வாமிகள் திடுக்கிட்டு சிறிது மௌனமாயிருந்த பின், "இது ஸம்பிரதாயத்துக்கு விருத்த

மானது. இருந்தாலும் பாலாம்பிகைக்குத் தாயார் சாக்ஷாத் பரமேச்வரிக்கு ஸமானமல்லவா. சரி, போய் அனுப்புங்கோ" என்று கிருஷ்ணமூர்த்தி ஐயரை நோக்கிக் கூறினார்.

உடனே கிருஷ்ணமூர்த்தி ஐயரும், முக்கிய நிர்வாகஸ்தரும் வெளியில் சென்றார்கள். அதுவரையில் உள்ளே நிகழ்ந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு மறைவில் நின்றுகொண்டிருந்த ஸ்வர்ணும்பாளை முக்கிய நிர்வாகஸ்தர் அழைத்துக்கொண்டு மறுபடி உள்ளே சென்றார். கிருஷ்ணமூர்த்தி ஐயர் சுந்தரியை வைத்துக் கொண்டு வெளியிலேயே நின்றார். ஸ்வர்ணும்பாள் நாணிக் கோணி உடம்பை நெளித்துக் குனிந்து நிமிர்ந்து மான்போல் மருண்டு மருண்டு உள்ளே சென்று, யோகீசுவருக்கு சிறிது தூரத்தில் நின்று, மண்டியிட்டுப் பன்முறை அஞ்சலி செய்து எழுந்து கைகூப்பி வணக்க வொடுக்கமாய்க் குனிந்து நின்றாள். ஒரே அழகுத்திரளாய், இன்பமயப் பதுமையாய், மின்னற்கொடி போல வந்து எதிரில் நின்ற வடிவழகியை யோகீசுவர் அப்போது ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவள் வாசற்படியில் நுழைந்த போதும், நமஸ்காரம் செய்த போதும் அவர் கீழ்ப்பார்வையாய் அவளுடைய உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் இரண்டுமூன்றுதரம் நன்றாகக் கடாக்ஷித்து விட்டாராதலால், அவள் எழுந்து நின்றகாலத்தில் ஸ்வாமிகள் தமது கண்களை மூடியபடியே குங்குமம் புஷ்பம் ஆகியவற்றை யெடுத்து மௌனமாய் இருந்தவண்ணம் கையை நீட்டினார். அப்போது பின்னுலிருந்த முக்கிய நிர்வாகஸ்தர், "அம்மா, பிரஸாதம் வாங்கிக்குங்கோ." என்று ஊக்கினாராதலால், ஸ்வர்ணும்பாள் ஸ்வாமிகளுக் கருகில் போய் பிரஸாதம் பெற்றுக் கொண்டாள்.

உடனே யோகீசுவரர் முக்கிய நிர்வாகஸ்தரைப் பார்த்து, "இந்த அம்மாளோடெ கொழந்தையை வச்சு நாளையதினம் பூஜைபண்ணும்படி அம்பாளோடே ஆக்ஞை ஆயிருக்கு. இவாளோடெ பர்த்தா அதுக்கு எணங்கி இருக்கா. நாளையை தினம் பூஜை முடியறவரையிலே இந்தம்மா தன் கொழந்தை

யெ வச்சுண்டு, சுத்தமான எடத்துலெ இருக்கணும். இண்ணை ராத்திரி தாயும் கொழந்தையும் புருஷாமேலே படாமெ தணியாப்படுத்துக்கணும். இந்த மாதிரி பூஜை நடக்கற காலத்துலெ, மொத நாள் ராத்திரி கொழந்தைக்கித் தாயார் படுத்துண்டிருக்கச்சே, ஸொப்பனத்துலேயோ நேருலெயோ அம்பாள் பிரஸன்னமாய்ப் பரீக்ஷிக்கிறதுண்டு. இதுக்குமின்னெ பல எடத்துலெ இந்த மாதிரி பூஜை நடந்த காலத்துலெ, அம்பாள் அப்பிடித்தான் பிரஸன்னமாய் சோதனை பண்ணிணா. அது போலயே, இப்பவும் ஒரு வேளை நடக்லாம்; அம்பாள் ஆணுமல்ல, பொண்ணுமல்ல, அலியுமல்ல, ஆணாகவும்மாறுவாள், பொண்ணாகவும் மாறுவாள், அலியாகவும் மாறுவாள். எந்த ரூபத்துலெயும் அவள் பிரஸன்னமாவாள்; அதைப் பாத்து இந்தம்மாள் பயப்படாமெ, கூச்சப் போடாமெ, பய பக்தியோடெ எந்திருந்து நமஸ்காரம் பண்ணி, அம்பாளுக்குத் திருப்தி உண்டாறாப்லெ நடந்துக்கணும். ஜாக்ரதை;ஏமாறிப் போகவாண்டாம்," என்றார்.

உடனே முக்கிய நிர்வாகஸ்தர், "ஆமா, வாஸ்வந்தான். போன தபா அம்பாள் ஒரு ஸுமங்கலி மாதிரி வந்து வாயிலெ தம்பலத்தை உமிஞ்சுட்டுப்போனான்னு, அந்தக் கொழந்தையோடெ தாயார் சொல்லல்லியோ" என்றார்.

யோகீசுவரர், "அது அவாளவாளோடெ பக்தியைப் பொருத்தது. இவாளுக்கு நெஜமான பக்தி இருந்தா, அம்பாள் தன் பிரியத்தை எப்பிடி வேணாலும் காட்டுவா; தூர நின்னாலும் நிப்பா; ஆலிங்கனம் பண்ணினாலும், பண்ணுவா; முத்தம் கொடுத்தாலும் கொடுப்பா; அது அம்பாள் பிரியத்தையும், இவாளோடெ பக்தியையும் பொருத்தது. ஆனால், அம்பாள் சேவதெல்லாம் அத்தனையும் இவாளுக்கு அமோகமான க்ஷேமத்தை உண்டாக்கும். இவா பயப்படாமெ, வாயைத் தறக்காமெ அம்பாள் மனஸு போலெ நடந்து அம்பாளை சந்தோஷப்படுத்தி அனுப்பிச்சுட்டா, ஜெயிச்சமாதிரி தான். நாளைய பூஜைக்கு பூர்த்தியான பலன் ஸித்திக்கும்" என்றார்.

உடனே நிர்வாகஸ்தர் ஸ்வர்ணும்பாளைப் பார்த்து, "ஏனம்மா ஸந்நிதானத்துலெ ஏற்பட்ட வாக்கைக் கேட்டுண்டிகளா?" என்றார்.

பெண்மணி தனது கைகளைக் குவித்தபடி "சரி; அப்பிடியே நடந்துக்கறேன்" என்று கூறினாள்.

யோகீசுவரர் அப்போதும் கண்களைத் திறவாமல் நிர்வாகஸ்தர் இருந்த பக்கம் தமது முகத்தைத் திருப்பி, "சரி; நேக்குக் காலஹரணமாறது. மறுபடி நிஷ்டைபண்ணனும்; ராத்திரி இவாளுக்கு மடியான எடத்துலெ படுக்கைக்கு ஏற்பாடு பண்ணும். போகலாம்" என்றார்.

உடனே நிர்வாகஸ்தர் ஸ்வர்ணும்பாளை அழைத்துக் கொண்டு வெளியில் வந்து சேர்ந்தார். உள்ளே நடந்த சம்பாஷணை வேண்டுமென்றே தணிவான குரலில் நடத்தப்பட்ட தாகையால் அதன் விவரம் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு சிறிதும் தெரியாமல் போயிற்று; நிர்வாகஸ்தர் அவ்விடத்தில் நின்ற கைலாசையரிடம் மறுநாள் பாலாம்பிகை பூஜை நடக்க ஸ்வாமிகளின் ஆக்ஞை பிறந்திருப்பதையும், அதற்கு கிருஷ்ணமூர்த்தி ஐயர் இணங்கி இருப்பதையும் கூற, கைலாசையர் அதைக் கேட்டு, மிகுந்த களிகொண்டவராய் அவர்களை அழைத்துக் கொண்டு போய் தனியான இடத்தில் உட்காரவைத்து விமரிசையாக போஜனம் செய்து வைத்து, அந்த சந்தோஷச் செய்தியை பண்ணையார், அவருடைய சம்சாரம் ஆகியோரிடத்தில் தெரிவிக்கும் பொருட்டு அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்றார். அவர்கள் எல்லோரும் அப்பால் போனவுடன் முக்கிய நிர்வாகஸ்தர் மறுபடியும் பூஜை மண்டபத்தை யடைந்து யோகீசுவரரண்டை போய் நின்று சம்பாஷிக்கத் தொடங்கினர்.

யோகீசுவரர், "இந்த எடம் ஸௌகரியமா இருக்கோன்னோ?" என்றார்.

நிர்வாகஸ்தர், "பேஷான எடம். ஒவ்வொரு கட்டும் ஒவ்வொரு தனித்தனி ஊருமாதிரி இருக்கு. கொலைபண்ணக் கூடக் கேக்கறவா இல்லெ. கீழே தண்ட பிண்டம் கொட்டிக்கற

காக்காப்பாளேய மெல்லாம் ஸாயாங்காலத்துக் குள்ளெ போன எடம் தெரியாமெப் பறந்து போம். இந்தாத்தைச் சேந்தவா ஒரு நாலஞ்சு பேர் எங்கயோ ஒரு மூலேலெ இருப்பா. எல்லாத்துக்கும் ராத்திரி நேவேத்தியத்துக்குப் பஞ்சாமிர்தம் பண்ணச் சொல்றேன். இவா மூணுபேருக்கும் இந்தாத்து மனுஷாளுக்கும் குடுக்கறத்துலெ கொஞ்சம் தூக்க மருந்தெக் கலந்துக் குடுத்துட்றேன். எல்லாரும் வாயைப் பொளந்துண்டு லக்ஷணமாத் தூங்கட்டும். இதோ பக்கத்துலெ ஒரு உள்ளு இருக்கு. அதுலெ அந்தப் பொண் படுத்துக்க ஏற்பாடு பண்ணறேன். நீங்க அம்பா வேஷம் போட்டிண்டு பிரத்தியக்ஷமாக் குளூரக் கடாக்ஷியுங்கோ" என்றார்.

யோகீசுவரர், "சரி; தலேக்கு வச்சுக் கட்டிகற டோப்பா, நல்ல பட்டுப் பொடவை, ரவிக்கை, நகைகள் எல்லாத்தியும் மத்தவாளுக்குத் தெரியாமெ எடுத்துண்டு வந்து அம்பாள் பீடத்துக்குப் பின்னலெ வச்சுடு." என்றார்.

நிர்வாகஸ்தர், "சரி; அப்பிடியே ஆகட்டும். ஒங்களுக்கு ராத்திரிக்கு என்ன ஆகாரம் கொண்டுவரட்டும்?" என்றார்.

யோகீசுவரர், "நான் எப்போதும் ராத்திரி சுத்தப்பட்டினியா யிருக்கறவன்ங்றது எல்லாருக்கும் நண்ணாத்தெரியும். நீ ஒரு காரியம் பண்ணு. அம்பாளுக்கு நேவேத்தியம் பண்ணணும்னு சொல்லி, வாதாப்பருப்பு ஹல்வா ஒரு தேங்கா யளவும், கெட்டியாக் காச்சினபால் ஒரு அரைப்படியும், பஞ்சாமிர்தமும் கொண்டுவந்து வைக்க ஏற்பாடு பண்ணு" என்றார்.

நிர்வாகஸ்தர், "சரி; அப்பிடியே ஆகட்டும்; நீங்க நிஷ்டை பண்ணுங்கோ. நான் போறேன்" என்று கூறிவிட்டு, மெதுவாய் நழுவி வெளியில் போய்விட்டார்.

அதுவரையில் ஸ்வாமிகளுக்கு ஏற்பட்டிருந்த தூக்கக் கலக்கம் போன இடம் தெரியாமல் பறந்துபோய்விட்டது. அவர் இரவு எப்போது வரப்போகிறது என்ற ஜெபத்தில் மும்முரமாய் ஆழ்ந்துபோய்த் தேவத்யானமாய் உட்கார்ந்து கொண்டிருந்தார்.



## அத்தியாயம்—2

---

### அர்த்த ராத்திரியில் அம்பாள் பிரஸன்னம்

இருஷ்ண மூர்த்தி ஐயர் முதலியோர் இராஜபாட்டையில் கைலாசையரைச் சந்தித்ததற்கு முன்னால் கடுமை யான பசியினாலும், கொடூரமான வெயிலினாலும், காற்றின்மை யாலும், அதிகாலையிலிருந்து ஒரே நிலைமையில் முடங்கி உட்கார்ந்தபடி குதிரை வண்டியில் பிரயாணம் செய்து சர்வாங்கமும் நொறுங்கி நோவடைய வந்தமையாலும், நாவறட்சிகொண்டு சோர்ந்து வாடித் துவண்டு வந்த காலத்தில், அவர்களுக்குக் கேவலம் கஞ்சி அகப்பட்டிருந்தால் கூட, அது தேவாமிருதம்போல் இனித்திருக்கு மென்பதை நாம் கூற வேண்டுவதில்லை. அதன் பிறகு அரை மணிக்குள் தமக்கு இராஜோபசாரத்தோடு முதல்தரமான அலங்கார போஜனம் கிடைக்கப்போகிற தென்பதை அவர்கள் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. "ஒன்றை நினையாமுன் வந்தெய்தினும் எய்தும்" என்ற அநுபவ தத்துவப்படி, கைலாசையர் தங்களை வற்புறுத்தி, அரண்மனைபோலிருந்த மாளிகைக்குள் அழைத்துச் சென்றதும், அங்கு மடாதிபதிகளின் தரிசனமும் அருள் வாக்கும் ஏற்பட்டதும், பிறகு தங்களை கைலாசையர் சன்னகாரை கண்ணாடிபோல் வழுவழுப்பாய்த் தேய்த்துவிடப் பெற்று மிக சுத்தமாயிருந்த ஒரு கூடத்திற்கு அழைத்துப்

---

பிழைதிருத்தம்: 10-வது பக்கத்தில் 19-வது வரியில் "இருந்த" என்ற சொல்லிற்குப்பின் "வைரக் கடுக்கன்களும் கைவிரல்களில் இருந்த" என்ற சொற்களைச் சேர்த்துப் படிக்கவும்.

போய் உட்காரவைத்து, இரண்டு பரிசாரகர்களைத் தூண்டி, தலைவாழை இலைகள் போடச் செய்து, பழங்கள், பக்ஷணங்கள் சித்திரான்னங்கள், பாயஸம் முதலிய உள்பட சுமார் ஐம்பது வகைப் பக்குவ பதார்த்தங்களடங்கிய போஜனத்தை மழை போல் பொழியச் செய்ததும், கிருஷ்ணையர் முதலியோருக்குக் கனவுபோல் தோன்றினவேயன்றி உண்மைபோல் தோன்ற வில்லை.

அவ்வாறு அவர்களுடைய போஜனம் நிறைவேறிய பிறகு, அவர்களுக்கு வாசனைச் சந்தனம் தாம்பூலம் முதலிய வற்றை வழங்கச்செய்த பின்னர், கைலாசையர், அவ்விடத்தி லேயே இருந்து இளைப்பாறும்படி அவர்களை விட்டுவிட்டு, அங்கிருந்து அடுத்த கட்டிற்குள் போய்ச் சேர்ந்தார். அது மேன்மாடத்தின் மூன்றாவது கட்டென்பதையும், பண்ணையார் இராமாமிர்த ஐயரும் அவருடைய குடும்பத்தாரும் இருந்தஇடம் என்பதையும் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அந்தக் கட்டிற்குள் கைலாசையர் ஓசை செய்யாமல் பயபக்தி வணக்க வொடுக்கத்தோடு நுழைந்தார். அங்கிருந்த பெரிய கூடத்தில் அன்றைய பகலில் ஒரு சாஸ்திரிகள் பண்ணையாருக்கு ஹோமம் முதலிய சுத்திகரமான சடங்குகளை நடத்தி வைத்தா ராதலால், ஹோமம் செய்யப்பட்ட இடத்தில் கிடந்த சாம்பல், அக்ஷதைகள், சமித்துகள், தர்ப்பைப் புற்கள் ஆகியவற்றை ஒரு மாவிலைக் கொத்தினால் ஒன்று சேர்த்து, ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் எடுத்துக் கொண்டிருந்த பண்ணையாருடைய சம்சாரமாகிய எஜமானியம்மாள் கைலாசையர் வந்ததைக் கண்டு சரேலென்று எழுந்து நிற்க, உடனே கைலாசையர் பயபக்தியோடு கூடிய புன்னகை தவழ்ந்த முகத்தினராய், "மன்னிக்கி ஒரு பெரிய ஸந்தோஷ சங்கதி கொண்டு வந்திருக்கேன்" என்று மிக மரியாதையாகக் கூறினர்.

'மன்னி'. 'மாமி' என்பவை ஸ்மார்த்தப் பிராம்மணர்கள், தமயன் சம்சாரம், மாமன் சம்சாரம், அல்லது, மரியாதைக் குரிய பெரிய இடத்து ஸ்திரீகள் ஆகியோரை அழைப்பதற்கு உபயோகப் படுத்தும் சொற்கள். 'மன்னி' என்பது 'மன்னன்' என்னும் சொல்லின் பெண்பால். தலைவி அல்லது இராஜ ஸ்திரீ என்பது அதன் கருத்து. பழைய காலங்களில் பிராம்மணர்களே அரசராகவும் எல்லோர்க்கும் குலகுருவாக வும் இருந்து வந்தனர். அந்தக் காலத்தில் பழக்கத்தில் இருந்த 'மன்னி' என்ற மரியாதைச் சொல் ஸ்திரீகளுக்குள் இன்னமும் மாருமல் இருந்து வருகிறது. 'மாமி' என்பதும் அது போன்றதே. 'ஆம்' என்பது 'ஆயம்' என்ற சொல் லின் சுருக்கம். அதற்கு வீடு, அல்லது, பண்ணை என்பது கருத்து. அதன் பெண்பால் ஆமி. மாமி என்ருல் மா, ஆமி, அல்லது, பெரிய வீட்டுக்காரி என்பது அதன் பொருள். பிராம்மணர்கூட அரசரா யிருந்ததுண்டா என்று சிலருக்கு சம்சய முதிக்கலாம். சமீபகாலம் வரையில் மகோன்னத தசை யில் இருந்து, இப்போது அழிந்து போன விஜயநகரம் என் னும் சமஸ்தானம் 'ராயர்' எனப்படும் மாத்வப் பிராம்மண அரசர்களால் ஆளப்பட்டு வந்ததென்பதையும், நம் தென்னிந் தியா முழுதும் அதற்குக் கீழ்ப்பட்டதாகவே இருந்து வந்த தென்பதையும் நாம் நம் தேச சரித்திரத்தால் அறிகிருேம். இன்னமும் வடகலை வைஷ்ணவப் பிராம்மணர்களில் பலர் சக்ரவர்த்தி என்ற பரம்பரைப் பட்டப் பெயர் உடைய வர்களாயிருக்கிருர்கள்.

அவ்விஷயம் நிற்க, நாம் இனி கதையை கவனிப்போம். கைலாசையர் பெரிய சந்தோஷச்செய்தி கொண்டு வந்திருப்ப தாய்க் கூறியதைக் கேட்ட பண்ணையார் வீட்டு எஜமானி யம்மாள் மடமையாகவும், பெருந்தன்மையோடும் சந்தோஷ

முகமலர்ச்சி காட்டி, "ஆ, அப்பிடியா! பெரிய ஸந்தோஷச் சங்கதியா! அது நேக்கு மாத்தரந்தானா! இந்தாத்து எஜமானருக்கும் அதுலெ பங்குண்டோன்னோ?" என்று ஆவலை அடக்கியும் சொற்பமாய் வெளிப்படுத்தியும் மறுமொழி கூறினாள்.

அந்த அம்மாளுக்கு வயது சுமார் 38 ஆயிருக்கலாம். உடம்பு மிக செழுமையாகவும், மினுமினுப்பாகவும், எலுமிச்சம் பழம்போன்ற நிறமுடையதாகவும் இருந்தது. முகத்தில் லக்ஷ்மீ விலாசம் ஜ்வலித்தது. தேகச் சாயல், நடையுடை பாவனைகள் யாவும் கம்பீரமாகவும் பெரும் போக்காவும் காணப்பட்டன. பரம்பரையான செல்வப் பெருந்தன்மையும், தயாளம், பக்ஷம், ஈவிரக்கம், கபடமின்மை, பேதைமை, அச்சம், அடக்கம், மரியாதை ஆகிய சிறந்த ஸ்திரீ லக்ஷணங்களும் அந்த அம்மாளிடம் பூர்த்தியாய் நிறைந்து சான்னித்யம் செய்தன. அவர்களுக்கு ஏராளமான சிப்பந்திகள் இருந்தனராலும், போஜனம் செய்த அலுப்பையும் பாராமல் நெற்றியில் வியர்வை முத்து முத்தாய்த் துளிக்கத் துளிக்கத் தனது பொன்போன்ற தேகத்தை ஒடுக்கி சாம்பல் முதலியவற்றை எடுத்து அந்த இடத்தை சுத்திசெய்ய முயன்றது குடும்ப ஸ்திரீகளுக்குரிய உத்தம லக்ஷணம் அந்த அம்மாளிடம் சம்பூர்ணமாய் நிறைந்திருந்த தென்பதை நிதரிசனமாய்க் காட்டியது.

அந்த அம்மாள் கூறிய மறுமொழியைக் கேட்ட கைலாசையர், "இந்த ஸந்தோஷத்துலெ மொதல் நேவேத்யம் எஜமானுக்கும் மன்னிக்கும்தான். மத்தப்படி எங்களுக்கும் பூர்த்தியா சந்தோஷந்தான்." என்றார்.

அந்தக் கூடத்திற் கடுத்தாற்போ லிருந்த ஓர் அறைக்குள் கருங்காலி விசிப்பலகையின்மேல் நாலுமடித் திண்டு தலையணை

களில் சாய்ந்து சிரமபரிகாரம் செய்துகொண்டிருந்த பெரிய பண்ணை ஐயரவாள், அங்கு நடந்த சம்பாஷணையைக் கேட்டு ஆவலும் புன்னகையும் கொண்டவராய், "என்ன, கைலாஸம், பாலுக்குப் போனியோ? வந்துட்டுதா? கடைசிவரைக்கும் வருமோன்னோ?" என்றார்.

அதைக் கேட்ட கைலாசையர் கைகட்டி வாய் பொற்றிய படி வணக்க ஒடுக்கமாய் அந்த அறையண்டை போய் வெளியிலயே நின்று, "பால் அப்பவே வந்துட்டுதே. இப்ப மூணும்பந்தி போஜனம் நடக்கறது. நாலாம் பந்திக்கு ஒரு சுமார் நூறு பிராம்மணா தேறுவான்னு தோண்ட்றது. பாலைப் பத்திக் கவலை இல்லை. ராத்திரிக்குக்கூட மிஞ்சலாம்." என்றார்.

அதைக் கேட்டுத் திருப்தியடைந்த இராமாமிர்த ஐயர், "நீயும் ஒங்க மன்னியும் இப்ப பங்கு போட்டிண்டியளே. அது என்ன சங்கதியப்பா?" என்றார்.

கைலாசையர் சந்தோஷம் ததும்பிய முக மலர்ச்சியோடு, "இண்ணைய ஸந்தர்ப்பணைக்கி நான் சாக்ஷாத் நாராயண மூர்த்தியையும், லக்ஷ்மியையும் நேருலெயே அழைச்சிண்டு வந்துட்டேன். ஸ்வாமிகளே அவாளைப் பாத்து பிரமிச்சுப் பேட்டா. அவாளோடெ பொண் குழந்தையெ வச்சு நாளையதினம் பூஜெபண்ண சந்நிதானத்துலெ நேமனம் ஆயிப்போச்சு. எஜமானும், மன்னியும் அவாளைப் பாத்து ரொம்ப சந்தோஷப்படப் போறிக" என்றார்.

இராமாமிர்தம் ஐயர் புன்சிரிப்போடு பார்த்து, "என்னப்பா பெரிய ஆச்சிரியத்தைக் களப்பிவிட்றியே! அப்பேர்ப்பட்டவா ஆரப்பா வந்திருக்கா? ஆராவது ஐயங்காரும் ஐயங்காரம்மாளும் போஜனத்துக்கு வந்திருக்காளோ?" என்று சம்சயமாக வினவினர்.

கைலாசையர், "நம்படவாளாத்துப் போஜனம் ஐயங்கா ராத்துவாளுக்குத் தொண்டேலெ எறங்குமா என்ன. இங்கே போஜனம் பண்ணினு அவாளோடெ தொண்டெ கருத்துப்போ காதா. நல்ல போஜனம் அவாளுக்குக் குடுத்து வச்சான்னு. அதைத் தள்ளுங்கோ. இவா வேறே. எஜமான் எத்தருவா யோஜனே பண்ணுலும்,இவா இன்னார்ன்னு சொல்லமுடியாது" என்றார்.

பர்வதலக்ஷ்மி என்னும் பெயருடைய எஜமானியம்மாள் மிகுந்த வியப்பும் ஆவலும் கொண்டு, "அப்பிடிப் பட்டவா வேறெ ஆர் வரப்போறு? இன்னார்ங்கறது புரியல்லியே? நம்ப ஸொந்த மனுஷாளா அன்னியாளா ?" என்றாள்.

கைலாசையர் புன்னகையோடு, "நான் பாலுக்காகப் போனேன்னே; எதுருலெ ஒரு குதுரை வண்டி வந்துது. ரெண்டு பக்கமும் தெரை போட்டு மறைச்சிருந்துது. ஆரோ வாக்குடுமி தீக்ஷதாளோடெ பாய்ஸாப் சவாரிபோராளாக்கும், நாம்ப மொகத்தை அந்தப் பக்கம் திருப்பினு, வாக்குடுமி தீக்ஷதர் கத்தியெ உருவிண்டு அத்திரிமாக்குப் பிலாச் சொளேன்னு நம்பமேலெ பாஞ்சுடுவாரே, கண்ணெ அலம்பும் படி ஆயிடப்போறதே, நம்பபாடு திண்டாட்டத்துலெ வந்துட்டா, அப்பறம் பரமான்னத்துக்குப் பால் இல்லாமெ ஊட்டிப்பேடுமேன்னு எண்ணிண்டு எம்பாட்டுலெ அண்ணண்டெ திரும்பிண்டேபோனேன். வண்டிக்காரன் திடீர்ன்னு என்னைக் கூப்ட்டு, 'வண்டிலெபிராம்மணு இருக்கா, ரொம்பதூரத்துலெ இருந்து வரா. கொழந்தை பசிச்சுப் பறக்கறது. பிராம்மணு ஸத்ரம் பக்கத்துலெ இருக்குமோ' ன்னு கேட்டான். நேக்குத் தூக்கி வாரிப் போட்டுது. அடாடா, நாம்ப தப்பா நெனச்சட்டமே, ஆரோ என்னமோ, மனுஷ்யாளைப் பாக்கலாம்,

அவாளெயும் போஜனத்துக்கு அழெச்சிண்டு வரலாம்னு நேக்குள்ளெ யோஜனெ பண்ணிண்டு, பின்னாலெ போயித் தெரையெ எடுக்கச் சொல்லிப் பாக்கறேன் ! அடாடா ! என்ன போங்கோ ! நேக்கு அப்பிடியே பதறிப்போச்சு ! ஆரோ கொடீசுவராளாத்துக் கொழந்தையளாட்டமா, ஆம்படை யான், ஸம்ஸாரம், கொழந்தை மூணுபேர் தங்க விக்ரக மாட்டமா ஒக்காண்டிருக்கா. பாக்கப் பதினாயிரம் கண்ணு கூடப் போறுது போலிருக்கு. பசி தாங்காமெ கொழந்தை தொவண்டுபே அப்பிடியே பேச்சு மூச்சில்லாமெக் கெடக் கறது. அந்தக் கொழந்தையோடெ தாயார் தாமரைப் பூ ஓடிஞ்சுபே வாடித் தொங்கறாப்லே அப்பிடியே பள்ளிகேலெ அமுங்கிக் கெடக்கறா. அந்தப் பொண்ணோடெ புருஷர் ஒக்காண்டிருக்கவும் மாட்டாமெ, சாஞ்சுண்டிருக்கவும் மாட் டாமெ நெருப்புமேலே இருக்காப்லெ கெடந்து தவிக்கறார். அவாளெப் பாத்த ஒடனே நேக்கு உசிரே போய்ட்ட மாதிரி ஆயிப்போச்சு.குபேர பட்டணம் கொள்ளை போகச்சே, ஆருக் கோ, காதறந்த ஊசி ஆப்பிட்டுதாம்னு சுலோகம் சொல்லுவா. அதெப்போலே, போஜனத்துக்கு வாங்கோன்னு கூப்ட்டா, அவா, கொழந்தைக்கு ரவையூண்டு ரஸம் சாதம் குடுத்தாப் போறுங்கறா. நேக்கா சிரிப்பு ஒரு பக்கத்துலெ வரது, துக்கம் ஒரு பக்கத்துலெ உண்டாறது, வேதனை ஒரு பக்கத் துலெ புடிங்கித் திங்கறது. பாலுக்குப் போகணுமேங்கற துடிப்பு காலெப் புடிச்சு அந்தண்டை இழுக்கறது. அப்பறம் நல்லவார்த்தை சொல்லி, அவாளெ இஞ்செ அனுப்பிச்சபாடு பிரம்மப் பிரயத்தனமா முடிஞ்சுது. 'நீங்க போயி ஸ்நானம் பண்ணி, மடி பண்ணிக்கிங்கோ, நான் இதோ வந்துட்டே ன்னு' சொல்லி அவாளெ அனுப்பிச்சுட்டு ரெண்டு எட்டுலெ பட்டிக்கி ஓடி, பாலெக்கொண்டுண்டு ஓடி வந்தேன். அவாளும்

மடி பண்ணிண்டு ஸித்தமா இருந்தா, அழைச்சிண்டு வந்து ஸ்வாமி தரிசனம் பண்ணிவச்சேன். ஸ்வாமியளோடெ நேமனமும் ஆச்சு. அம்படத்தான் சேதி" என்ருர்.

அந்த வரலாற்றைக் கேட்ட பர்வத லக்ஷ்மியம்மாள் நிரம் பவும் பதறிப்போய், "ஆ, அப்பிடியா, கேக்கக் கண்ட்ருவியா இருக்கே. காதாலெ கேக்கப் போகலியே! அவா இப்ப எங்கே இருக்கா? நீங்க போயி மொதல்லெ அவாளுக்கு போஜனம் பண்ணிவைங்கோ. போங்கொ, போங்கொ, மத்த சங்கதியெ யெல்லாம் அப்பறம் பேசிக்கலாம்" என்று படபடப்போடு கூறினுள்.

கைலாசையர் சந்தோஷமான முக மலர்ச்சி காட்டி, "அவாளுக்கு போஜனம் பண்ணி வச்சுட்டுத்தான் நேரே இங்கே வரேன். மின்பக்கக் கூடத்துலெதான் அவா ஸாப்ட்டா. கொஞ்சம் சிரம பரிகாரம் பண்ணிக்கச் சொல்லிப்புட்டு வந்தேன். இன்னும் செத்த நாழி பொறுத்து, மன்னியும் எஜமானும் பெரிய மனஸு பண்ணிஅவாளோடெ மொகத்தை அவசியம் பாக்கணும். இதுவரையிலெ நாம்ப இந்த மாதிரி மொகலக்ஷணத்தோடெ இருந்த மனுஷாளெப் பாத்திருக்கவே மாட்டோம். புருஷன், ஸம்ஸாரம், கொழந்தை மூணுபேரு க்கும் அவாளவாளே ஸமமுன்னுதாஞ் சொல்லணும். வேறெ பேச்சுப் பேசப்படாது. அந்தப் பொண்ணெ அசப்புலெ பாத்தா, அப்பிடியே மன்னி சாயலா இருக்குன்ஞ. அதுன்ஞ நேக்குப் பெரிய அதிசியமாயிருக்கு. பாக்கப் பாக்க, என்னெ அறியாமெ, எம் மனசு பூரிச்சுப் போறதுன்ஞ." என்ருர்.

பர்வத லக்ஷ்மியம்மாள் மிகுந்த மகிழ்ச்சியும் கிலேசமு மடைந்தவளாய், "என்ன, நீங்க எங்கெங்கெயோ வளேச்சு

வளெச்சு சவுக்கங் கட்டிப் பேசி, ஏருங்கடைசிலே, என்னெப் பரியாஸம் பண்ணுறப்லெ இருக்கே." என்ருள்.

கைலாசையர் அதிக விநயத்தோடு கைகட்டி வாய் பொற்றி, அந்தக் கரண சுத்தியாய் உண்மையைப் பேசுகிறவர்போலக் காட்டி, "அடாடா, நான் கேவலம் பேப் பய; இருந்திருந்து நான் மன்னியைப் பரியாஸம் பண்ணற தாவது. எஜமானே அவாளெப் பாக்கட்டும்; நான் சொன்னத் துலெ லவலேசம் பெசகிருந்தா என் கண்ணெப் புடுங்கிப் புடட்டும். வேறெ பேச்சில்லெ." என்ருர்.

உடனே இராமாமிர்த ஐயர், "கைலாஸம், ஒங் கண்ணெப் புடுங்கறது இருக்கட்டும். அதுக்கு இப்ப அவசர மில்லெ. அவா எந்த ஊருலெ இருந்து வரா, எங்கெ போருங்கற சங்கதியெத் தெரிஞ்சுண்டியோ?" என்ருர்.

கைலாசையர், "அதெ யெல்லாம் இன்னமேதான் கேக்கணும். இதுவரைக்கும் ஸமயம் வாய்க்கல்லெ. கொஞ்சம் சிரம பரிகாரம் பண்ணிக்கட்டும். நான் போயி அவாளோடெ வண்டிக்காரனுக்கு போஜனம் பண்ணிவச்சு, அவனுக்கு வண்டிச் சத்தத்தெ வாங்கிக் குடுத்து அனுப்பிச்சுட்டு வரேன்" என்ருர்.

உடனே ஐயரவாள், "சரி; அந்தக் காரியம் மின் ஞலே ஆகட்டும்" என்ருர்.

அதைக் கேட்டுக்கொண்டு கைலாசையர் வெளியில் நடக்க, அந்த சமயத்தில், "அச்சி, அச்சி" என்று மிகுந்த ஆவலோடும், வியப்போடும், குதூகலத்தோடும் தனது தாயை அழைத்துக்கொண்டு பண்ணை இராமாமிர்த ஐயரு டைய செல்வக் குமாரனை கோபாலரத்னம் உள்ளே ஓடி

வந்தான். அவனுக்குப் பின்னுல் நம் கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய பெண் குழந்தையான சுந்தரியும் மிக உல்லாஸமாய்த் துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடி வந்தாள்.

பண்ணை இராமாமிர்த ஐயருடைய குமாரனுக்கு சுமார் பத்து வயதிருக்கலாம். அவன் அவருடைய ஒரே புதல்வன். சிறுவன் சுவர்ண விக்கிரகம் போல ஒரே அழகின் திரளாய் அமைந்திருந்தான். அவனுடைய அங்கங்களெல்லாம் சாமுத்திரிகா லக்ஷணத்தின்படி அச்சில் கடைந்தெடுக்கப்பட்டவை போல் அத்யாச்சரியகரமாயும், அபூர்வமான வசீகர சக்தி வாய்ந்தவையாயும் அமைந்திருந்தன. பரந்து கம்பீரமாயிருந்த முகத்தில் சுத்த ஸாத்விகக் களை ஜ்வலித்தது. விசாலமாயிருந்த கண்களின் விழிகள் மிகத் துடிப்பாய்ச் சுழன்று அதீதமான மூளை வேகத்தைக் காட்டின. புருவங்கள் விற்கள் போல் வளைந்து கருத்து அடர்ந்து தோன்றி முகத்திற்குப் பிரமாதமான மோகன சக்தியை உண்டாக்கின. செழித்து நெருங்கிப் பெரும் சுமையாய்ப் பொதிர்ந்து முழங்கால்கள் வரையில் நீண்டிருந்த கேசம் அழகாய்ப் பின்னித் தொங்க விடப்பட்டிருந்தது. கைகளில் தங்கக் காப்புச் சங்கிலிகள், விரல்களில் மோதிரங்கள், கால்களில் வெள்ளிக் காப்புச் சங்கிலிகள், செவிகளில் சீமைக்கமலக் கடுக்கன்கள், இடுப்பில் சிவப்புப் பட்டினுலும் ஜரிகையினுலுமான அகன்ற கரைகளையுடைய வெண்பட்டு வஸ்திரம் ஆகியவை ஒன்றுகூடி அவனுடைய இயற்கையழகை அபாரமாய்ப் பெருக்கி, அவன் தகத்தகாயமாய் ஜ்வலிக்கும்படி செய்தன. அவனுடைய நெற்றியில் சந்தனத்தினுல் சந்திரப்பிறை போல இடப்பட்டிருந்தகுறி ஒன்றே அவனுக்குஒரு ரிஷிபுத்திரனுடைய பிரம்ம தேஜஸை உண்டாக்கியது. அத்தகைய விசேஷ சௌந்தரியம் வாய்ந்த செல்வக் குழந்தையான கோபாலரத்னம், தனது

அன்னையான பர்வத லக்ஷ்மியை அவளது பெற்றோர் அச்சி அச்சி என்று சுருக்கமாயும் செல்லமாயும் அழைப்பதைக் கண்டு அப்படியே அவனும் அழைத்து வந்தான்.

அவன் திடீரென்று மிகுந்த ஆவலும் பதைப்பும் காட்டித் தன்னை அழைத்துக்கொண்டு உள்ளே ஓடி வர, தாய் அவனது குரலோசையைக் கேட்டு திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். அவனுக்குப் பின்னால் ஓடிவந்த சுந்தரி என்ற சிறுமி பர்வத லக்ஷ்மியம்மாள் நின்றதைக் கண்டவுடன், முட்டுக்கட்டை போடப்பட்ட தேர்போல, சடக்கென்று சுவரோரமாய் நின்று, நாணித் தனது கண்களை மூடிக்கொண்டு இடது கையின் பின்புறத்தால் நெற்றி முதலிய முகத்தின் மேல்பாகத்தை மறைந்துக்கொண்டாள்.

கோபாலரத்னம் ரப்பர் பந்துபோலத் துள்ளிக் குதித்துக்கொண்டு தனது தாயண்டை ஓடி, "அச்சி, அச்சி, அதோ ஆரு வந்திருக்கான்னு பாரு" என்று மழலையாய்க் கூறியபடி அந்த அம்மாளின் கையைப் பிடித்து பலவந்தமாய் இழுக்கத் தொடங்கினான்.

திடீரென்று மின்னற்கொடி தோன்றுவதுபோல் வந்து காட்சி கொடுத்து, அழகுத் திரளாய் நின்ற பெண் குழந்தையான உயிர்ப் பதுமையைக் கண்ட பர்வத லக்ஷ்மியம்மாள் அபாரமான பூரிப்பும் ஆவேசமும் கொண்டு, அம்பு பாய்வது போல ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்தோடி வந்து, சுந்தரியை வாரி யெடுத்து மார்போடணைத்துத் தனது ஆசா பாசங்களை யெல்லாம் வெளிப்படுத்தி முகத்தை ஆட்டி ஆட்டி அதன் கன்னங்களில் மாறி மாறி முத்த மழை பொழிந்து, தனக்குள் பொங்கிய அமிர்தரஸத்தை உஸ் அப்பா, உஸ் அப்பா என்று சுவாரஸ்யமாய்ப் பருகியபடி, இராமாமிர்த ஐயர் இருந்தஅறை

யைநோக்கி, "இதோ பாத்தெயளா, இதோ பாத்தெயளா, என்று கூப்பாடு போட்டுக்கொண்டே அம்பு பாய்வதுபோல ஒரே ஓட்டமாய் ஓடி, சுந்தரியோடு இராமாமிர்த ஐயருக் கெதிரில் நிற்க, அவரும் சகிக்க இயலாத பிரமிப்பும், என்று மடையாத ஆநந்தமும் ஆவலும் அடைந்தவராய் சரேலென்று எழுந்து உட்கார்ந்து, சுந்தரியை உற்று உற்றுப் பார்த்து, "ஆரு இந்தக் கொழந்தை! கைலாசம் ஆரையோ அழெச்சிண்டு வந்தேன்னுனே. அவா கொழந்தைபோ லிருக்கு" என்று கூறி சுந்தரியை வாங்கிக்கொள்ள ஆவல்கொண்டு ஆசையோடு தமது இரண்டு கைகளையும் நீட்டினார். பர்வத லக்ஷ்மியம்மா ளின் மார்பிலிருந்ததே சுந்தரிக்கு மிகுந்த அச்சமும் திகிலுமா யிருந்ததாகையால்,அவள் மெதுவாக நழுவி நழுவிக்கீழே இறங்க முயன்று கொண்டிருந்தாளானாலும், அம்மாள் அவளை விடா மல் இறுகப் பிடித்து இதமாய் மார்போ டணைத்துக் கொண்டி ருந்தா ளாதலால், மிகுந்த மனக் கலக்கத்தோடு மார்பின்மீது தொற்றிக் கொண்டிருந்தாள். அந்த நிலைமையில், புருஷரான இராமாமிர்த ஐயர் தன்னை எடுத்துக்கொள்ள முயன்றதைக் காணவே,அந்தச் சிறுமி பயந்து நடுங்கி பர்வத லக்ஷ்மியம்மாளை விட்டு வராமல் மிகுந்த ஆவலோடு தனது இரு கைகளையும் அந்த அம்மாளின் கழுத்தைச் சுற்றி இறுகக் கட்டிக்கொண்டு முகத்தைக் கழுத்தில் புதைத்துக் கொள்ளலானாள். அவ்வாறு அந்தக் குழந்தை செய்தது, யானைக்குப் பயந்து வள்ளி தம்பிரானைக் கட்டிக்கொண்டதுபோ லிருந்தது.

உடனே பர்வத லக்ஷ்மியம்மாள், சுந்தரியின் முதுகில் வாஞ்சையோடு தட்டிக் கொடுத்து, "கொழந்தை பயப் படாதே. நீ எங்கிட்டயே இரு. அவாகிட்டப் போவாண் டாம்." என்று நயமாய் இதோபதேசம் செய்து, சிறிது தூரத் திற் கப்பால் வைக்கப்பட்டிருந்த பழ தினுசுகளிலிருந்து

இரண்டு ஒட்டு மாம்பழங்களை எடுத்து, சுந்தரியின் இரு கைகளிலும் கொடுக்க, அவள் அவைகளை இரண்டு கைகளிலும் வாங்கிக் கொண்டாள். அவளது திகில் சிறிதளவு விலகியது.

அவளுடைய முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் பர்வத லக்ஷ்மியம்மாள் ஆநந்த பரவச மடைந்தவளாய், அதன் கன்னங்களைக் குடைந்துவிட முயல்கிறவள்போல முகத்தைக் குலுக்கிக் குலுக்கி ஓயாமல் முத்தம் கொடுத்தபடி கொஞ்சிக் கொஞ்சிப் பேசி, "கொழந்தே, ஒம்பேரென்ன அம்மா? சொல்லு. பயப்படாதே" என்று தட்டிக்கொட்டி உற்சாகப்படுத்த, அது கிலேச மடைந்து இமைகளை மூடிக் கொள்வதும் திறந்துகொள்வதுமாய்ச் சிறிது காலம் தத்தளித்து, "ச்சுந்திரி" என்றது.

அதைக் கேட்ட பர்வத லக்ஷ்மியம்மாள் சுந்தரி தன் பெயரைச் சொன்னதற்காக சன்மான மளிக்கிறவள்போல இன்னொரு முறை அவளை ஆசையோடு அணைத்து முத்தமிட்டு, "சமத்துச் சக்கரைக் கட்டி" என்று அதற்கு ஒரு பட்டம் வழங்கிவிட்டு, தன் புருஷரை நோக்கி, "கொழந்தை பேசற அழகெப் பாத்தெயளோ! 'ச்சுந்திரியாம்' இவ பேரு. அத்தனையும் தங்கம். ஸ்வாமியள் இவளெ வச்சுத்தான் பூஜெ பண்ணப் போறுப்லெ இருக்கு" என்றாள்.

உடனே ஐயரவாள், "ஸ்வாமியள் ஸரியாத்தான் பாத்துப் பொறுக்கிருக்கா. அவா திரிகாலக்ஞானியோன்னோ. ஆமா, இந்தக் கொழந்தை ஆரெப்போலிருக்குன்னு கவனிச்சியோ! நம்ப குட்டி லக்ஷ்மி படத்தை இப்பிடி எடு" என்றார்.

அதைக் கேட்ட அம்மாளுடைய முகம் சடக்கென்று மாறுபட்டது. கருமேகம் திடீரென்று தோன்றி சந்திர பிம்

பத்தை மறைப்பதுபோல அவளுடைய மலர்ந்த முகம் உடனே சுருங்கிப் போயிற்று. உள்ளார்ந்த பூரிப்பும் அடங்கியது. அவள் சிறிது தூரத்திற்கப்பால் போய் அங்கிருந்த படமொன்றை எடுத்து வந்து, ஐயரவாளுக் கெதிரில் அதைக் காட்டியபடி அதிலிருந்த ஒரு சிறிய பெண் குழந்தையின் வடிவத்தையும், சுந்தரியின் வடிவத்தையும் மாறி மாறி ஒத்திட்டுப் பார்த்தாள். அது போலவே பண்ணையாரும் செய்து அடுத்த நிமிஷம் வியப்போடு பேசத்தொடங்கி, "என்ன ஆச்சிரியம். ரெண்டும் ஒண்ணுபோலெயே இருக்கே!" என்றார்.

அவருடைய மனையாள், "ஆமான்னா, அப்ப மொத, இது யாரோ நாம்ப பாத்துப் பழகின சாயலா இருக்கேன்னு நேக்குள்ளெ ஒரு சந்தேகம் உண்டாயிண்டே இருந்துது. இந்தப் படத்தெப் பாத்தப்பறந்தான் இன்னதுன்னு புரிஞ்சுது. மூக்கு, முழி, கன்னம், கின்னம், ஒடம்பு, கிடம்பு எல்லாம் அதே அச்சா யிருக்கே! கொஞ்சங்கூட வித்தியாசம் தெரியல்லியே!" என்றாள்.

ஐயரவாள், "இந்தக் கொழந்தெயோடெ தாயாரும் நீயும் போன ஜென்மத்துலெ ஒருவேளை அக்கா தங்கையா யிருந்தியளோ என்னமோ" என்றார்.

மனையாள், "ஆமான்னா. நேக்கு இப்பதான் ஞாபகம் உண்டாறது. இந்தக் கொழந்தெயோடெ அம்மாளெப் பாத்தா, என்னைப்போலெ இருக்குன்னு ஸத்ரம் மணியாரர் செத்தெ மின்னெ சொன்னாரே." என்றாள்.

ஐயரவாள், "எல்லாத்துக்கும் நீ போயி, அந்தம்மாளெப் பாத்து, அவாளுக்கு சௌகரியமான ஜாகை யெல்லாம்

காட்டி, அவா எந்தூருங்கற சங்கதியெல்லாம் விசாரிச்சுண்டு வா. நம்பாத்தைத் தேடிண்டு வந்தவாளெ ஒபசாரம் பண்ணி அழெக்காமெ இருக்கப்படாது. சீக்கிரம் போ." என்றார்.

உடனே அம்மாள் வெளியில் போக முயல, அதுவரையில் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கோபாலரத்னம், "கொழந்தெயெக் கீழே விடு அச்சி. நாங்க வெளையாடணும். நாங்க வெளையாடினப்பறம் நீ தூக்கிக்கல்லாம்" என்று நயமாய் வேண்ட, உடனே சுந்தரி கீழே விடப்பட்டாள். கோபாலரத்னம் பக்கத்திலிருந்த ஒரு கூடத்திற்கு அவளை அழைத்துக்கொண்டுபோய் அவளுடன் விளையாட ஆரம்பிக்க, சுந்தரியும் அவனுடன் நெடுங்காலம் பழகினவள் போல் தாராளமாய்ப் பழகிக் குதித்து விளையாடத் தொடங்கி விட்டாள்.

சிறிது காலத்திற்கு முன்னர் உள்ளே இருந்து வெளியில் வந்த கைலாசையர் வண்டிக்காரனுக்குக் கூலி கொடுத்து அனுப்பிவிட்டு, சத்திரத்தில் வைக்கப்பட்டிருந்த பெட்டிகளை எடுத்துக்கொண்டு வரும்பொருட்டு கிருஷ்ணமூர்த்தி ஐயரையும் அழைத்துக்கொண்டு போய்விட்டாராதலால், தனிமையில் விடப்பட்ட ஸ்வர்ணாம்பாள் சுந்தரியைத் தேடுகிறவள்போல அந்த விசாலமான மாளிகையின் அமைப்பைப் பார்த்துக்கொண்டே பண்ணையார் இருந்த இடத்தை நோக்கித் தயங்கித் தயங்கி மான்போல மருண்டபடி வந்துகொண் டிருந்தாள்.

அந்த சந்தர்ப்பத்தில் எதிரில் வந்த பண்ணையாருடைய பத்னி அவளைச் சந்திக்க சுந்தரியைக் கண்டபோது அந்த அம்மாளுக்கு எவ்வளவு ஆநந்தமும், மனவெழுச்சியும்,

வியப்பும், பிரமிப்பும் உண்டாயினவோ அதுபோலவே, ஸ்வர்ணும்பாளைக் கண்டபோதும் உண்டாயினவானாலும் ஸ்வர்ணும்பாளின் வயதிற்குத் தக்கபடி அவளை மிக உவப்போடு உபசரித்து அழைத்துக்கொண்டு தான் முன்னிருந்த பெரிய கூடத்திற்குள் நுழைந்து, அங்கு போடப்பட்டிருந்த ஒரு கருங்காலி ஊஞ்சற் பலகையின்மேல்அவளை உட்கார வைத்துத் தானும்அருகில் உட்கார்ந்து, அவளிடம் அந்தரங்கமான விநய விசுவாசத்துடன் சம்பாஷித்து,அவளுடைய பிறந்த ஊர் எது, புருஷன் ஊர் எது, அப்போது போக உத்தேசித்து வந்தது எந்த ஊருக்கு என்பன போன்ற வரலாறுகளை விசாரித்தபடி உட்கார்ந்திருந்தாள். அவர்களிருவரும் ஒன்றாயிருந்து பழகிய அந்த சொற்ப காலத்திற்குள் இருவரும் நெருங்கிய உறவினர்போல் அன்னியோன்னிய உணர்ச்சி பாராட்டத் தலைப்பட்டனர். அவர்கள் இருவருக்கும் சந்திப்பும் சல்லாபமும் நேர்ந்ததுபோல, சிறிது காலத்திற்குப் பிறகு, இராமாமிர்த ஐயருக்கும் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கும் நேர, அவர்களும் அபாரமான மகிழ்ச்சியும் குதூகலமு மடைந்து சம்பாஷித்திருந்தனர்.

அன்றைய பகல் கழிய, மாலை வேளை வந்து சேர்ந்தது. இரவில் எல்லா ஜனங்களுக்கும் போஜனம் இல்லை யென்பது பகலிலேயே தெரிவிக்கப்பட்டதானாலும், சுமார் ஐந்நூறு ஜனங்கள் வரையில் தங்கி இருந்தனர். பகலில் தாங்கள் போஜனம் செய்ததனால் ஏற்பட்ட வயிற்று பளுவைத் தூக்கிக்கொண்டு தங்கள் தங்கள் ஊருக்குப்போக இயலவில்லை யென்றும், தங்களுக்கு இராப் போஜனம் தேவையில்லை யென்றும், ஸ்வாமிகள் மாலையில் பூஜை செய்தபின் வழக்கமாய் நிகழ்த்தும் உபந்நியாசத்தைக் கேட்க விரும்புவதாகவும் கூறி அந்த ஊரிலேயே தங்கி விட்டனர்.

ஸ்வாமிகள் இரவு எப்போது வருமென்று ஆவலோடு எதிர்பார்த்திருந்ததாக நாம் முதல் அதிகாரத்தின் முடிவில் கூறினோமல்லவா. ஆதி சங்கரர் கூடுவிட்டுக் கூடு பாய்ந்தது போல, இவரும் அன்றிரவு அம்பிகையாய் மாறி, ஸ்வர்ணம் பாளின் மனதைப் பரிசோதிக்க எண்ணியவராதலால்,அதைப் பற்றியே மனனம் செய்தவராய்ப் பொழுதைப் போக்கி, சாயங்காலமானவுடன் நித்ய கர்மாநுஷ்டான ஜப தபங்களை முடித்து, விக்கிரகங்களுக்குப் பூஜை நைவேத்தியங்களை நிறை வேற்ற, பக்தகோடிகள் ஸ்வாமி தரிசனம் செய்து தீர்த்தம் விபூதி குங்குமம் பெற்றுக் கொண்டனர்.

முடிவில், வழக்கப்படி, ஸ்வாமிகள் பகவத் விஷயமாய் உபந்நியாசம் புரியத் தொடங்கினார்.

ஸ்திரீகள் சுமார் ஐம்பதின்மர் தனியாய் ஒரு பக்கத்தில் நாணிக் குனிந்து அடக்க வொடுக்கமாய் நின்றுகொண்டிருந் தனர். ஏராளமான புருஷர்கள் பயபக்தி விநயத்தோடு பத்தி பத்தியாய் முன்னால் உட்கார்ந்திருந்தனர்.

ஸ்வாமிகள் பக்த சிகாமணிகளை கிருபா நோக்கமாய் ஒருமுறை பார்த்தார்; ஸ்திரீ ஜனங்களைக் கடைக்கண்ணால் மாத்திரம் கடாக்ஷித்தாரேயன்றி அவர்களிருந்த பக்கம் தமது முகத்தைத் திருப்பாமலே மிகவும் ஸௌமுகமாய் அடியில் வரு மாறு சொற்பொழிவு நடத்தலானார். [அவர் ஸ்மார்த்த பரி பாஷையில் பேசினாராலும், அதை வாசகர்கள் சுலபத்தில் தெரிந்துகொள்ளுமாறு நாம் தமிழ் நடையில் மாற்றி எழுது கிறோம்]:—

இந்த கிராமத்தின் பெயர் விஷ்ணுபுரம். உங்கள் லலாடங்களில் கோபீசந்தன ஊர்த்வ புண்டரங்கள் ஜ்வலிக் கின்றன. நீங்கள் எல்லோரும் மகரிஷிகளின் புத்ரர்கள் போல் சுத்த ஸாத்விக தேஜஸோடு ஜ்வலிக்கிறீர்கள். மகா

புண்ய பூமியாகிய இந்தப் பரத கண்டத்திற்கு பிரத்யேகமாய் ஏற்பட்டுள்ள பிரம்மதேஜஸோடு கூடிய இப்படிப்பட்ட பார மார்த்திக ஸதஸ்ஸுகளைப் பார்க்கும் போதெல்லாம் எனக்குப் புளகாங்கிதம் ஏற்படுவது வழக்கம். என் மனமும் மெய்யும் பெரு விம்மித மடைந்து பூரித்து ஆநந்த பரவச மடைவது நிச்சயம். அதே நிலைமையில் நான் இப்போது இருக்கிறேன். என் நா தழுதழுக்கிறது; உடம்பு நடுங்குகிறது; வார்த்தை கள் வெளியில் வராமல் தொண்டையிலேயே இருந்து கிலேச மடைகின்றன. ஆனாலும், இந்த ஸ்தானத்தின் கட மையை உத்தேசித்தும், நான் உங்களுக்கு உபயோகமான விஷயங்கள் எதையேனும் சொல்வே னென்று எதிர்பார்த்து நீங்கள் இங்கு கூடி யிருப்பதைக் கருதியும், எனக்குத் தெரிந்த சில விஷயங்களை பகவத் ஆக்ஞையாயும், பகவத் பிரீத்யர் த்தமாயும் சொல்லுகிறேன்.

நான் உங்களைப் போலிருக்கும் விஷ்ணு பக்தர்கள் வஸிக் கும் ஊர்களுக்கும் போவதுண்டு; சைவர்கள் வஸிக்கும் ஊர்களுக்கும் போவதுண்டு. போகுமிடத்தில், அவரவர் களுக்கு எந்த தெய்வத்தினிடம் அபிமானமுண்டோ அதைப் பற்றி விசேஷமாய்ப் பேசுவதையே வழக்கமாய் வைத்துக் கொண்டிருக்கிறேன். அது ஏனென்று நீங்கள் கேட்கலாம். புளித்த கூழையே தலைமுறை தலைமுறையாய்க் குடிப்பவருக்கு உயர்ந்த சம்பா அரிசியில் செய்த அபூர்வமான சித்ரான்னங் கள், பாகு சிலேபிகள் முதலியவற்றைக் கொட்டினால், அவர் களுக்கு அவை பிடிக்கா; அவர்களுடையதேக ஆரோக்கியத்தை யும் அவை சீக்கிரத்தில் குலைத்துவிடும். அதுபோல, பரம்பரை யாக சுத்த ஸாத்விக பதார்த்தத்தையே போஜனம் செய்பவர் களுக்கு, மகாராஜாக்களுக்குத் தயாரிக்கப்படும், மாம்ஸாதிகள் கலந்த 'புலாவ்' முதலிய மதோன்ம ஸ்தான போஜனத்தை

நினைக்கும்போதே குமட்டலும் வாந்தியும் உண்டாவது நிச்சயம். தேள் கொட்டியதனால், அவஸ்தைப்படுவோனுக்கு, தேள் கொட்டு மருந்தை உபயோகிப்பதே பொருத்தமாகுமன்றி, அவனுக்கு பேதி மருந்தோ, ஜுர மருந்தோ கொடுப்பது பொருத்தமாகாது. அவரவர்களுடைய தேகக் கூறை அநுசரித்து, ஆகாரம் மருந்து முதலியவை கொடுப்பது போல, மனதின் பரிபக்குவ நிலைமை, கிரகண சக்தி முதலியவற்றை யநுசரித்தே பாரமார்த்திக விஷயங்களை போதிக்க வேண்டும். ஆகவே, ஸதஸ்ஸின் அந்தஸ்தைக் கருதி நான் இன்று விஷ்ணுபரமான சில விஷயங்களைத் தெரிவிக்கின்றேன்.

நான் திக் விஜயம் செய்யப் போகும் இடங்களில் சிலருக்கு ஒரு சந்தேகம் உண்டாவது வழக்கம். "ஆதி சங்கரர், 'மன்மத பீடம்' என்று ஒரு பீடத்தை ஸ்தாபிக்கவில்லையே, இந்த ஸ்வாமிகள் யார்?" என்று சிலர் சம்சயிப்பதுண்டு. உண்மையில் இந்தப் பீடம் அவரால் ஸ்தாபிக்கப்பட்டதல்ல. தத்காலத்து மிஸ்ரநாகரிகத்திற்கு உகந்த சில புதிய தத்துவங்களை போதிப்பதற்காக, சில விவேகிகளால் இந்தப் பீடம் சமீப காலத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. என் பிரசங்கங்களை நீங்கள் கேட்டுக்கொண்டே வருவீர்களானால், இந்தப் பீடம் ஏற்பட்டதன் நோக்கம் வெளிப்படையாய்த் தெரிந்துபோகும். ஆயினும், ஒரே ஓர் உதாரணத்தைச் சொல்லி அதை நான் விளக்குகிறேன். விசிஷ்டாத்வைத பாஷ்யத்தை எழுதிய ராமாநுஜருடைய ஜீவிய சரித்திரத்தை நாம் எடுத்துக்கொள்வோம். தத்காலத்தில் சகலமான துறைகளிலும் மகா மேதாவிகளாயும், அதிமாநுஷ சக்தி வாய்ந்தவர்களாயும் விளங்கும் வெள்ளையர்களான மயன்மக்கள் ராமாநுஜருடைய பாஷ்யத்தைப்படித்து, "மூளையின் வேகம் இவ்வளவு உச்ச நிலைமையை இதுவரையில்

எட்டியதுமில்லை; இனி எட்டப்போகிறதுமில்லை" யென்று மனதார மெய்ச்சி மூக்கில் விரலை வைத்து ஆச்சரியப்படுகிறார்கள். இந்த உலகம் முழுதிலும் வெளிப் பார்வைக்குத் தமது பரம்பரை மதங்களை அநுஷ்டிப்பதாகக் காண்பித்துக் கொண்டாலும், பேச்சிலும் எழுத்திலும் வியவகாரங்களிலும் ராமாநுஜருடைய சித்தாந்தங்களையே ஆசிரயிக்கிறார்கள். அத்தகைய அபார ஞானமும் பகுத்தறிவும் வாய்ந்த ராமாநுஜரைப்பற்றி பிற்காலத்தில் அவருடைய சரிதங்களை எழுதிய சிலர் பல விகாரமான சம்பவங்களை எழுதி வைத்திருக்கின்றனர். ராமாநுஜர் செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள ஸ்ரீ பெரும்பூதூரில் ஜனித்தவர்; கஞ்சீவரத்தில் வித்யை கற்றுக்கொண்டு அவ்விடத்திலேயே வரதராஜப் பெருமாளுக்குக் கைங்கரியம் செய்து கொண்டிருந்தவர். அப்போது ஸ்ரீரங்கத்தில் வைஷ்ணவ மதத் தலைவராயிருந்த ஆளவந்தார் என்பவர் தமக்கு அந்திய காலம் நெருங்கி விட்டதைக் கண்டு, காஞ்சியிலிருந்த ராமாநுஜரைத் தமது ஸ்தானத்தில் அமர்த்தக் கருதி, அவரை அழைத்து வரும்படி தமது சிஷ்யர் ஒருவரை அனுப்பினார். அவர் அப்படியே போய் ராமாநுஜரை அழைத்து வந்தார். அவர்கள் ஸ்ரீரங்கத்தை அடைந்த காலத்தில் ஆளவந்தார் இறந்துபோய் விட்டார். ராமாநுஜர் அவருடைய பிரேதத்தைப் பார்த்த காலத்தில், அவருடைய கை விரல்களுள் மூன்று மடங்கிப் போயிருந்தன. "ஏன் மூன்று விரல்கள் மடங்கி இருக்கின்றன" என்று ராமாநுஜர் மற்றவர்களிடம் கேட்டாராம். மற்றவர்கள், "இறந்தவருடைய மனதில் மூன்று குறைகள் இருந்தன. அவற்றோடு அவர் இறந்துபோனார், அதனால் மூன்று விரல்கள் மடங்கிப் போயிருக்கின்றன" என்று கூறி, அம்மூன்று குறைகளும் இன்னின்னவை என்று சொன்னார்களாம். ராமாநுஜர் ஒவ்

வொரு குறையையும் விஸ்தரித்து, அதைத் தாம் பூர்த்திசெய்வ தாய்ச் சொல்லச்சொல்ல, ஒவ்வொரு விரலாய் நீண்டுபோயிற் ரும். பிற்காலத்தில் சரித மெழுதியவர்கள் இவ்வாறெல்லாம் நடந்ததாக நம்பி எழுதி வைத்திருக்கிருர்கள். ஒருவர் இறந்துபோனுல், அதற்கு இரண்டொரு நாழிகைச்குப் பிறகு உடம்பு முழுதும் ஒரே விரைப்பாய் விரைத்துக் கொள்வதையும், விரல்கள் மடங்கிப் போவதையும், மேலும் சில நாழிகை காலத்தில் எல்லாம் துவண்டு போவ தையும நாம் பிரத்தியட்சமாய்ப் பார்க்கிரும். அவரவர் செய்யும் தொழிலைப் பொருத்து சில அவயவங்கள் ஆயுட் காலம் முடிய அதிகமாய் உழைக்கின்றன. ஆயுட்காலம் முடிய உபாத்தியாயர் வேலைசெய்து கூச்சலிட்டுக் கதறுகிற வர்களுக்கு ஸ்வாசகாச வியாதி வந்துவிடுகிறது. ஓயாமல் படித்தபடியே இருப்பவருக்கும், அவருடைய குழந்தைகளுக் கும் கண்பார்வை துர்ப்பலப்பட்டுப் போகிறது. எப்போதும் கடைகளில் உட்கார்ந் திருப்பவர் பலருக்கு யானைக்கால் ஒத பீஜம் முதலியவை உண்டாய் விடுகின்றன. எப்போதும் எழு திக்கொண்டே இருப்பவருக்கு வலது கையின் விரல்கள் அடிக்கடி மரத்துப் போகின்றன. இந்தப் பிரபஞ்ச மர்மங் களையும், கண்ணிற்கும், மனதிற்கும் எட்டாத பிரபஞ்சத் தின் உள் ரங்கரங்களையும் நேரில் கண்டவர்போல விளக்கி, நமக்கு தேவாமிருத நவநீதம் திரட்டிக் கொடுத்துள்ள அதி மாநுஷ சக்தி வாய்ந்த ராமாநுஜர், இறந்துபோன அன்ன மய கோசத்திலடங்கிய விரல்கள் அவருடைய மன ஆக் ஞையை, இறந்த பிறகும் தோற்றுவிப்பது சாத்தியமானதல்ல வென்பதை ராமாநுஜர் உணர்ந்திருக்க மாட்டாராவென் பதை, சரித மெழுதியவர்கள் நினைக்கவில்லை. ஆளவந்தா ருடைய உயிர் நீங்கியதற்கு முன்பே, மூன்று விரல்கள் மற்ற

அங்கங்களுக்கு முன்னுகவே பட்டு விரைத்துப்போயினவென் பதை அவர்கள் அறியவில்லையென்றே நாம் சொல்லவேண் டும். பொதுவாகவே, நம் சரிதங்களில் பகுத்தறிவிற்கு ஒவ்வாத இத்தகைய அசம்பாவிதங்கள் இருப்பதே பிற மதஸ்தர்கள் நம் மை இழிவுபடுத்த முகாந்தரங்களாய் இருந்து வருகின்றது. பலாப் பழத்தின் வெளியில் முள்கள் நிறைந்திருந்தாலும், நாம் நிர்த்தாக்ஷண்யமாய் அவற்றை வெட்டி, பகுத்தறிவற்ற மாடுகளுக்கு ஆகாரமாய்ப் போட்டு, சாரமான சுளைகளையே சுவீகரிப்பதுபோல், நாம் நம் மத கிரந்தங்களிலும், ஆசார சீலங்களிலும் செய்தாலன்றி, நமக்குரிய மகோன்னதஸ்தானம் உள்ளபடி கிடைக்கவே கிடைக்காது. ஆனுல் இவ்வித அபூத கற்பனைகள் ராமாநுஜ சரிதத்தில்தான் மிக சொற்பமாய்க் காணப்படுகின்றன. இதர பாகங்களெல்லாம் சர்வ சாதாரண மாய் மனுஷ ஜீவியத்தில் நடக்கக் கூடியவையாகவே இருக் கின்றன.

நாம் ஆதிசங்கரருடைய ஜீவிய சரித்திரத்தை எடுத்துக் கொண்டாலோ, "கந்தப் புராணத்தின் புளுகு வேறு எந்தப் புராணத்திலும் இல்லை" என்று சிலர் சொல்லும் பழமொழி யைத் தோற்கச் செய்வதாயிருக்கிறது. அவர் இப்போதைக்கு சுமார் 2442 வருஷங்களுக்கு முன்னே மலையாள தேசத்தில் பிறந்த, உச்சிக் குடுமி வைக்கும் நம்பூதிரி பிராம்மணர். இந்தக் காலத்தில்கூட மலையாள தேசத்தின் நாகரிகம் எவ் வளவு முன்னேற்றமடைந்திருக்கிறதென்பது எல்லோர்க்கும் பிரத்தியட்சமாய்த் தெரிந்த விஷயம்; "கேரளம் வானரா சாரம்" என்பது சர்வ சாதாரணமான பழமொழி. அந்த தே சத்திலுள்ள பிராம்மணர்கள் உள்பட எல்லா ஜனங்களுக்கும் நம்மைப்போல உடைகள் உடுத்திக்கொள்வதுகூட இன்னும் தெரியாது. நம்முடைய பிரம்மசாரிகள் வேஷ்டி கட்டுவது

போலவே, அவர்களில் பெரிய வேதபாரகர்கள்கூடக் கட்டு கிறார்கள். நம் தேசத்தில் கிரகஸ்தன பஞ்ச கச்ச மில்லாவிட் டால், அவன் எதற்கும் அருகமற்றவன். அவர்கள் ஒரு கற்ப காலம் பகீரதப் பிரயத்தனம் செய்தால்கூட, பஞ்சகச்சம் கட்டத் தெரிந்துகொள்ள மாட்டார்களென்று நாம் துணிந்து கூறலாம். அவர்களுடைய ஸ்திரீகளும் புருஷரைப்போலவே நான்கு முழ வெள்ளை வேஷ்டியை உடுத்தி, மார்பை மூடாமல் அரை நிர்வாணமாயிருந்து வருகிறார்கள். நம் தேசத்து ஸ்திரீகளைப் பார்த்து இப்போதுதான் அவர்கள் ரவிக்கை போட்டு மார்பைமூடக் கற்றுக் கொள்ளுகிறார்கள். அவர்க ளுடைய காதிலுள்ள தங்க ஓலை ஒரு பெரிய சூரிய காந்திப் புஷ்பத்தைவிடப் பெரிதாயிருக்குமென்றால், காதுத் தொளை யின் உள்ளளவு எவ்வளவென்பதை நாம் சொல்ல வேண்டிய தில்லை. அவர்கள் பேச ஆரம்பித்தாலோ, கொடிய ஜெந்துக் கள் நம்மீது விழுந்து கடிக்க வருகின்றனவோவென்று நினைக் கும்படியாயிருக்கும். நம் தேசத்தில் கலகங்கள் ஏற்பட் டால், ஜனங்களை அடித்து நொறுக்கித் தூளாக்குவதற்கு தற்காலத்தில் 'மலையாளப் போலீசாரே' தருவிக்கப்படுவதும், அவர்களுடைய மிருகத்தன்மையும் பிரத்தியட்சமானவை. அந்த தேசத்திலுள்ள நாயர் ஸ்திரீகளில் எத்தனைபேரை வேண்டுமானாலும், நம்பூதிரிப் பிராம்மணர்கள் பகிரங்கமாய் வைத்துக் கொள்ளலாம். அவர்கள் பிராம்மணர்களுடைய சமயலறைக்குள்கூடப் போய் எல்லா வேலைகளையும் செய்து கொடுப்பார்கள். அவற்றால் நம்பூதிரிகளின் பிராம்மணீகம் கெடுகிறதில்லை. இந்த தேசத்திலிருந்து ஸ்மார்த்தப் பிராம் மணர்கள் மலையாளத்தில் போய்க் குடியேறி இருந்து வருகின் றனரானாலும், அவர்கள் நம்பூதிரிகளோடு போஜனம் செய் வதுமில்லை; கொள்வினை கொடுப்பினை செய்து கொள்வது

மில்லை. மலையாளம் பரசுராம க்ஷேத்ரமென்பது பிரசித்த மான விஷயம். பரசுராமரென்பவர் அசுர குருவான ப்ருகு என்பவருக்குப் பிறந்தவர். நமது நாதப்ரம்மமான ஸ்ரீ தியாக ராஜஸ்வாமிகள் பல கீர்த்தனங்களில் "ப்ருகு ஸுத மத ஹரணு" என்று ஸ்ரீராமனை ஸ்த்தோத்திரம் செய்திருக் கிறார். அதாவது, அசுர குருவின் பிள்ளையான பரசுராம னுடைய திமிரை அடக்கியவனே யென்று மேற்படி ஸ்வாமி கள் பாடி இருக்கிறார்கள். மலையாளத்தார் சந்ததி இரணியன், இரணியாக்ஷன், இராவணன், கும்பகர்ணன் முதலிய அசுரர் சந்ததி. இராவணன் சைவப் பிராம்மணனென்றும், கைலா சத்தையே அடியோடு பெயர்த்துத் தன் வீட்டிற்குக் கொண்டு போய்விட முனைந்தவனென்றும் நாம் படித்திருக்கிறோம். அவ்வசுரர்கள், தாமே தெய்வமென்றும், தம்மைவிட வேறு தெய்வமில்லையென்றும் கூறி முந்திய யுகங்களில் ஊரை இம் சித்ததாய் நம் புராணங்கள் கூறுகின்றன. அவர்களுடைய சித்தாந்தமே அத்வைத சித்தாந்தம். அதையே கலியுக ஆரம் பத்தில் ஆதிசங்கரர் உலகத்திற்குப் போதித்தார்.

அவர் தமது பாஷ்யத்தில் தாறுமாறாக எழுதி வைத்தி ருந்தவைகளைத் திருத்தவும், ஆதிமுதல் இருந்துவந்த வேத தத்துவங்களின் உண்மையான கருத்துகளை எடுத்துக்காட்ட வுமே, ராமாநுஜர், மாத்வர் முதலியோர் சரியான பாஷ்யங் களை எழுதினார்கள். உண்மை அப்படி இருக்க, நாக ரிகத்தில் சிறந்த மலையாள தேசத்தில் இப்போதைக்கு 2442 வருஷங்களுக்கு முன்னர் ஜனித்த ஒரு நம்பூதிரிப் பிராம்மணர் இந்தியா முழுதும் பல தடவைகள் பிர யாணம் செய்ததாகவும், 72 துர்மதங்களை அழித்து, வைஷ்ணவம், சைவம் முதலிய ஆறு மதங்களை நம் நாடு உள்பட இந்தியா முழுதிலும் ஸ்தாபித்ததாகவும், இன்னம்

பல அதிமாநுஷ வேடிக்கைகளைச் செய்ததாகவும் தாராள மாய் எழுதி வைத்திருக்கிறார்கள். இப்போதும் மலையாள பகவதி, மலையாள மாந்திரீகம், மலையான யக்ஷணி, குறளி, பில்லி, சூனியம், ஆடு மாடு பலி முதலிய அக்ஞான இருள் அந்த ஜனங்களிடை ஏராளமாய் இருந்து வருகின்றது. எல்லோரும் அதில் பூர்த்தியான நம்பிக்கை வைத்து வருகிறார் கள். அத்தகைய ஊரில் ஜனித்த நம்பூதிரிப் பிராம்மணர் கூடுவிட்டுக் கூடுபாய்ந்தது, இந்தியா முழுதும் இறகில்லாமல் பல தடவைகள் பறந்தது, மற்ற எல்லா மத வித்வான்களை யும் வாதத்தில் வென்றது, வைஷ்ணவம், சைவம் முதலிய மதங்களை ஸ்தாபித்தது முதலியவற்றை நாம் எவ்வளவு தூரம் நம்பலாமென்பது கூறுமலே விளங்கும். ராமாநுஜர் காலம் வரையில் அதாவது சுமார் 900 வருஷங்களுக்குமுன் வரை யில் சங்கரரே வைஷ்ணவர்கள், சைவர், மாத்வர் ஆகிய எல் லோர்க்கும் பரம ஆசாரியனாய் இருந்ததாகக்கூட சிலர் காற்று மூட்டைப் புராணம் கட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். வைஷ்ணவர்களுடைய குருபரம்பரையில் அவருடைய பெயர் காணப்படவில்லை. சுமார் 2442 வருஷம் முதல் சுமார் 900 வருஷத்திற்குமுன் வரையில் ஆதி சங்கருடைய பெயர் வைஷ்ண மகா ஜனங்களுடைய பரமாசாரியரின் பரம் பரையில் வந்திருந்தால், அது ராமாநுஜர் காலத்திற்குப்பிறகு எப்படி மறைந்திருக்கும் என்பதைக்கூட யோசியாமல் சிலர், தங்களுடைய ஆசாரிய பக்தியில், தங்கள் பகுத்தறிவை விலக் கிப் பேசுகிறார்கள்.

உண்மையை ஆராயுங்கால், கலி 28-வது வருஷத்தில், அதாவது, 5008-வது வருஷத்தில் தோன்றிய கொல்லத்து அரசர் ஒருவரைப்பற்றி வைஷ்ணவ ஆழ்வார் சரித்திரங்களில்

எழுதப்பட்டிருக்கும் சில தகவல்களை நான் உங்களுக்குப் படித்துக் காட்டுகிறேன் :—

"இப்படி இருக்க, உபய விபூதி நிர்வாஹகனும் ஸர்வ நியந்தாவுமான ஸ்ரீமந் நாராயணன், தன் நிர்ஹேதுக பரம கிருபையாலே, இவருடைய ராஜஸ, தாமஸ குணங்கள் தலை மடிந்து ஸத்வகுணமே தலையெடுக்கும்படி கடாக்ஷித்து, தம்முடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை யெல்லாம் நன்றாகக் காட்டிக் கொடுக்க, இவ்வாழ்வார், அவற்றை யெல்லாம் பகவத் பக்திரூபமான ஜ்ஞானத்தை உடையவராய்க் கண்ட பின்பு, இப்பூமியிலுள்ள ஸம்ஸாரிகள் தேகத்தில் ஆத்மாபிமானத்தைப் பண்ணி, தேகத்துக்கு வசப்பட்டு, தேஹ போகத்தை அநுபவித்து ஸர்வேசுவரனை நினையாமல், ஐம்புலன்கள் கண்ட இன்பத்தை ஆதரித்துத் திரிவதையும், அவர்களுக்கு நடுவே உயிர்க்கழுவி லிருப்பதுபோல் தாமிருப்பதையும் கண்டு, யானைக் கழுத்திலிருந்து அரசாண்டு ஸுக ரூபமாக ராஜபோகத்தை அநுபவிக்கிற ராஜத்வமும் இவர்க்கு நெருப்புப் போலத் தோற்ற, ஸஹிக்க மாட்டாதவராய், ஸ்ரீ விபீஷணாழ்வான் எல்லாப் போகங்களையும் அடியோடே விட்டு ஸர்வலோக சரண்யனான பெருமாளை ஆசிரயித்தாற் போல் இவரும், 'இன்பமரும் செல்வமு மிவ்வரசும் யான் வேண்டேன்' என்று சிற்றின்பங்களில் நசையற்று, திருவரங்கப் பெருநகரில் அரவணையில் பள்ளிகொள்ளும் திருவரங்கனைக் கண்ணாரக் கண்டு களிக்கும் காதலுடன், கோவிலையும் அங்குள்ள வைஷ்ணவ ஸமூகத்தையும் கண்டு அநுபவிப்பதெப்போதோ என்று ஸ்ரீரங்க யாத்ரையில் நாடோறும் ஆசையுடையவராய், அங்கே நித்ய வாஸம் பண்ணி, கங்கை தொடக்கமான தீர்த்தங்களுக்கும் மேலான ஸ்வாமி புஷ்கரணியை உடைத்தாய், பரமரிஷிகள் முதலான மஹாத்மாக்கள்

நித்யவாசம் பண்ணும் திருவேங்கடமலையில் ஸ்தாவர திரியக் ஜங்மங்களைப் பரிக்ரஹித்து வாஸம் பண்ண ஆசைப்பட்டு இப்படி மற்றுமுண்டான திவ்ய தேசங்களெங்கும் எழுந் தருளி, அங்கங்குள்ள எம்பெருமான்களையும் ஸேவித்து அங் கங்கே நித்யவாஸம் பண்ண ஆசையுடையவராய் அஷ்டதச புராண இதிஹாஸாதிகளின் ஸாரபூதமான முகுந்த மாலையை அருளிச் செய்தார்."

"மந்திரிகள் நம்முடைய ராஜாவான இவர்க்கு ஸ்ரீ வைஷ்ணவ ஸகவாஸத்தால் இத்தனை கலக்கங்களும் தேற் றங்களும் வந்தன. அவர்களுடைய ஸகவாஸத்தைத் தவிர்க்க வேண்டும்" என்று நினைத்து, இவ்வாழ்வாருடைய க்ரஹார்ச் சனை எம்பெருமானுடைய திருவாபரணப் பெட்டியில் நவ ரத்ந ஸோபிதமாயிருந்ததொரு ஆரத்தை வைத்து மறைத்து, 'இவருக்கு அந்தரங்கரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் எடுத்தார் கள்' என்று அவர்கள்மேல் பழி சுமத்த, அதற்கு ஆழ்வாரும் 'பரனன்பர் கொள்ளார்' என்று சபதம்பண்ணி, அவர்களுக் காகத் தாம் பாம்பின் குடத்தில் கையிட்டருளி ஜயிக்க, அம் மந்திரிகள் கண்டு தாங்கள் செய்த அக்ருத்யத்தை விண் ணப்பம் செய்து, அந்த ஆரத்தை இவர் திருமுன்பே வைத்து தெண்டன் சமர்ப்பித்தார்கள்:"

"பின்பு, ஆழ்வார்க்கு, பகவத் வைபவம் சொல்லப் பொறுதார் நடுவில் இருந்த இருப்பு அக்நிஜ்வாலையில் அகப் பட்டாற்போல் அதிதுஸ்ஸஹமா யிருக்கையாலே, தம் குமா ரருக்கு ராஜ்யாபிஷேகம் பண்ணி, ராஜ்ய பாரத்தை அவரி டத்தில் வைத்து, 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ, வானாளும் செல்வமும், மண்ணரசும் யான் வேண்டேன்' என்று ஐஹிக ஆமுஷ்மிக திவ்ய மாநுஷ போகங்களில் நசை யற்று, தமக்கு அந்தரங்கரான ஸ்ரீ வைஷ்ணவ ஸஹவாஸத்

துடன் திருவரங்கத்துக் கெழுந்தருளி, தகட்டாலழுத்தின மாணிக்கம் போன்ற தேஜஸ்ஸோடே உறங்குவான்போல் யோகு செய்கின்ற அணியரங்கத்தம்மானைக் கண்களாரக் கண்டு வாயார வாழ்த்தி அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான அதிக ப்ரீதியாலே, பகவத் பாகவத வைபவத்தை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்கைக்காக 'பெருமாள் திருமொழி' என்கிற திவ்யப் பிரபந்தத்தை அருளிச் செய்து லோகத்தை வாழ்வித் தருளினார்." என்பது 5008 வருஷங்களுக்கு முன்னிருந்த கொல்லத்து அரசருடைய சரித்திரம். அப்போது ஸ்ரீரங்க க்ஷேத்ரம், காஞ்சீக்ஷேத்ரம், திருப்பதி க்ஷேத்ரம் முதலிய வைஷ்ணவஸ்தலங்களும் வைஷ்ணவர்களும் இருந்திருக்கிறார்கள். வைஷ்ணவப் பிராம்மணர்கள் கொல்லம் வரையில் போய் அசுர பரம்பரை அரசருடைய அக்ஞான இருளைப்போக்கி, அவருக்கு என்று மழியாத ஆழ்வார் ஸ்தானத்தை அடையும் யோக்யதையை உண்டாக்கியிருக்கிறார்கள். அப்படி இருக்க, சுமார் 2442 வருஷங்களுக்குமுன் தோன்றிய நம்பூதிரிப் பிராம்மணர் வைஷ்ணவம், சைவம் முதலிய ஆறு மதங்களை நம் நாட்டில் ஸ்தாபித்ததாகவும், அதுவரையில் 72 துர்மதங்களே இருந்ததாகவும், தாம் திக்விஜயம் செய்து அவர்களை வென்றதாகவும் ஏன் கூசாமல் காற்றுமூட்டை கட்டுகிறார்கள்? 'திக் விஜயம்' என்றால் ஊரூராய் பிக்ஷை வாங்கி ஜீவித்துக் கொண்டு போவது என்பதே கருத்தன்றி, எல்லோரையும் ஜெயிப்பது என்ற அர்த்தம் எப்படி உண்டாயிற்றோ தெரியவில்லை. மலையாளத்தார் பேசும் தோரணையைக் கண்டு பயந்து எவரும் கிட்ட நெருங்காமல் போயிருக்கலாம்; தாம் எல்லோரையும் ஜெயித்துவிட்டதாய் அவர் நினைத்துக்கொண்டு போயிருக்கலாம்.

அந்தக் குலசேகராழ்வார் பக்தியினால் உருகிப் போய்ப் பாடி இருக்கும் பாடல்களை நீங்கள் கேட்பீர்களானால், அப்படியே பரவச மடைவீர்கள் என்பது நிச்சயம்."

அவர் திருப்பதியைப்பற்றிப் பாடி இருக்கும் சில பாசுரங்களை உங்களுக்குச் சொல்லுகிறேன். எப்படி இருக்கிறது பாருங்கள்.

(1) ஊனேறு செல்வத் துடற்பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்க மிடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே.

(2) ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே.

(3) பின்னிட்ட சடையானும், பிரமனு மிந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள் வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேன் ஆவனே.

(4) ஒண்பவள வேலை உலவுதண் பாற்கடலுள்
கண்டுயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்கு
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்து
செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே.

(5) கம்ப மதயானைக் கழுத்ததின் மேலிருந்து
இன்ப மரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங்கட மலைமேல்
தம்பமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே.

(6) மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர் தம் பாடலொடு ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தான் ஆவேனே.

(7) வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே.

(8) பிறையேறு சடையானும் பிரமனு மிந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான் மறையானான்
வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேன் ஆவேனே.

(9) செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே,
நெடியானே, வேங்கடவா, நின்கோவிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் நடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

(10) உம்பர் உலகாண் டொருகுடைக் கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்,
செம்பவள வாயான் திருவேங்கட மென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே.

—என்று இந்த மகாராஜா தம் அபாரமான செல்வ போகங்களைத் துறந்து, திருவேங்கட மலைமேல் "பக்தர் மிதித்து நடக்கும் படியாய்க் கிடக்க மாட்டேனா, கோவிலில் கம்பமாய் நிற்கமாட்டேனா, சுவாமியின் எச்சில் தம்பலத்தை வாங்கப் பொன் வட்டிலைத் தாங்கி நிற்க மாட்டேனா" என்று பாடி ஏங்கி உருகுகிறார்; ஊர்வசி, மேனகை, திலோத்தமை வந்தால்கூட, ஏற்கேன் என்கிறார். அவர் காலத்திற்கு இரண்டா

யிரத்தைந்நூறு வருஷங்களுக்குப் பின் வந்த ஆதிசங்கரர் சந்திர மௌலீசுவரருடைய அவதாரமாம். அவர் 12-வது வயதில் சந்நியாசம் வாங்கிக்கொண்டு, ஜீவனைத் தவிர மற்ற எல்லாம் மாயை என்று ஸ்தாபிக்கிறார். யாரோ ஒரு ஸ்திரீ அவரைக் கொக்கோக லீலா சாஸ்திரத்தில் பரீட்சிக்கிறாளாம். அவளுக்கு சரியான உத்தரம் சொல்லவேண்டுமென்று கருதி, அவர் கூடுவிட்டுக் கூடு பாய்கிறாராம். அந்த சமயத்தில் அவரை உத்தேசித்து, ஓர் அரசன் இறந்துபோக, அவருடைய பிணம் தகனம் செய்யப்படாமல் கிடக்கிறதாம். அதில் ஆதிசங்கரர் புகுந்துகொண்டு, விதவையாய்ப் போன ராஜ ஸ்திரீயின் கற்பை யழித்து, அவளிடம் சிருங்கார லீலைகளைக் கற்றுக்கொண்டு, மறுபடி தம்முடைய சரீரத்துக்குத் திரும்பிவந்து தம்மோடு வாதித்த ஸ்திரியை வெல்கிறாராம். என்ன அகம்பாவம் பாருங்கள் சந்நியாசியாய்ப்போன இவருக்கு. இவர் பகவானுடைய அவதாரமாம்; உலகத்திற்கு ஞானம் போதிக்க அவதரித்தாராம். கொக்கோகப் புஸ்தகத்தை மாத்திரம் மறந்துபோய்த் தம் சொந்த ஊரிலேயே வைத்துவிட்டு வந்து அவதாரம் எடுத்தார்போலிருக்கிறது. ஆதிசங்கரருடைய வரலாறு எழுதப்பட்டுள்ள ஒரு நூலிலிருந்து இந்த சம்பவத்தைப்பற்றிய வரலாற்றை உங்களுக்குப் படித்துக் காட்டுகிறேன், கேளுங்கள்.

"பிறகு சங்கரர் ப்ரயாகையிலிருந்து மாஹிஷ்மதி நகரத்திற்குச் சென்று, அங்கே அரசனுடைய ஸபையில் வெகு செல்வாக்குடன் விளங்கிவரும் ஆஸ்தான பண்டிதரான மண்டன மிச்ரரை சாஸ்த்ர வாதத்திற்கு அழைத்தார். அவர் வேதங்களில் கர்ம காண்டத்தையே முக்ய ப்ரமாணமாய்க் கொண்டவர்; ஆகையால் ஸந்யாசிகளை வெறுப்பவர்; புதிதாய் சங்கரரால் ப்ரசுரம் செய்யப்பட்ட மதத்தை வேரறுப்

பதற்கு அதே நல்ல ஸமயமென்று கருதி அவருடன் வாதஞ் செய்ய ஸம்மதித்தார். அவருடைய பார்யை ஸரஸ்வதியின் அவதாரமென்று சொல்லப்படுகிறது. இவ்விருவரும் அவளையே மத்யஸ்தராய் வைத்து பலநாட்கள் வரையில் வாதஞ் செய்தார்கள். முடிவில் மண்டனமிச்ரர் தோற்றார். வாத நியமத்தின்படி தான் கிருஹஸ்தாச்ரமத்தை விட்டு ஸந்யாசியாய் சங்கரருக்கு சிஷ்யரானார். அப்பொழுது அவருடைய பார்யை குறுக்கிட்டு சங்கரருடன் சாஸ்திரவாதம் செய்ய ஆரம்பித்தாள். லௌகிக வைதிக சாஸ்திரங்களில் அவரை அசைக்க முடியாதென்று கண்டு, அவர் பால்யத்திலேயே ஸந்யாஸம் பெற்றவராதலால் அவருக்குத் தெரியாத சிருங்கார சாஸ்திரத்தில் அவள் அவரைக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள். அப்பொழுது சங்கரர் அதை எதிர்பார்க்காதவரானதால் சற்றுத் தயங்கி, தனக்கு ஒருமாஸம் தவணை கொடுக்கும்படி வேண்டிக்கொண்டு, அங்கிருந்த நர்மதா நதிக்கரைக்கு வந்து, ஒரு மரப் பொந்தில் தன் தேஹத்தைவிட்டு, சிஷ்யர்களைக் காவல் வைத்துத் தன் யோக சக்தியால் அதிலிருந்து கிளம்பி அக்காலத்தில் உயிரிழந்த அமருகனென்ற அரசனுடைய தேஹத்தில் ப்ரவேசித்தார். பிறகு ஒரு மாஸம் வரையில் அவ்வரசனுடைய அந்தப்புரத்தில் வஸித்துத் தான் அறிந்துகொள்ள வேண்டியதைக் குறைவறத் தெரிந்து கொண்டார். அவருடைய நடத்தையால் முன்னிருந்த அரசனல்லவென்று கண்டுகொண்ட ராஜமஹிஷி, வேறு யாரோ மஹா புருஷன் அந்தத் தேஹத்தில் ப்ரவேசித்தான் என்று சந்தேஹித்து, மறுபடியும் அதை விட்டு அவர் போகாவண்ணம் நாடெங்கும் ஜாக்ரதையாய்த் தேடி, ஸந்யாஸி யோகி ஸித்தன் முதலியவர்களின் உயிரற்ற தேஹம் எங்கிருந்தாலும் கண்டுபிடித்துத் தஹனம் செய்யும்படி மந்த்ரிகளுக்கு ரஹஸ்யமாய்க் கட்டளை

யிட்டான். அப்படிச் செய்யப்பட்டபொழுது சங்கராசார்ய ரின் சிஷ்யர்கள் பயந்து, குருவின் தேஹம் எரிக்கப்பட்டால் மறுபடியும் அவர் அதில் வந்து ப்ரவேசிக்க முடியாதென் றறிந்து, தங்களில் சிலரைப் பாம்புப் பிடாரர்களைப்போல் வேஷம் தரிக்கச் செய்து, அமருகனுடைய ஸபைக்குச் சென்று அங்கே பாம்பாட்டுவதுபோல் அபிநயித்து அதற் கேற்ற பாடலைப் பாடினார்கள். அவைகளின் உட்கருத்தை அறிந்த ஆசார்யர் தன் தேஹத்திற்கு நேரும் அபாயத்தை யறிந்து உடனே அதில் வந்து ப்ரவேசித்தார். பிறகு ஸரஸ் வதி யிடத்திற்குச் சென்று அவள் கேட்ட கேள்விகளுக்குப் பூர்ணமாய்ப் பதில் அளித்து அவளை ஜயித்து அவளுடைய சாப காலம் முடிந்து தன்னுலகத்திற்குப் போக அவள் தயாராயி ருந்ததும் அப்படிச் செய்யக்கூடாதென்றும், தன் அவதார கார்யம் நிறைவேறும் வரையில் பூமியில் இருக்கவேண்டுமென் றும் வேண்டிக்கொண்டார்.” என்று ஒரு வரலாறு சொல்லு கிறது. இது சுருக்கமானது. இன்னொரு வரலாறு மிக விஸ்தாரமானது; அதில் சொல்லப்பட்டிருப்பதாவது: தம் தேகத்திற்கு அபாயம் வந்துவிடப் போகிறதென்று சிஷ்யர் களால் நினைவூட்டப்பட்டவுடன், சங்கரர் அரசனுடைய தேகத்தை விட்டு வந்தாராம். அதற்குள், இராஜ சிப்பந்தி கள் அவருடைய தேகத்தை கட்டைகளில் போட்டுக் கொளுத்த ஆரம்பித்து விட்டார்களாம். ஜ்வாலையும் புகை யும் சூழ்ந்துகொண்டனவாம்; சங்கரர் தம் தேகத்திற்குள் புகமாட்டாமல் ஆகாயத்தில் இருந்தபடி தவித்து, பகவானை ஸ்தோத்திரம் செய்கிறாராம். உடனே மழையும் காற் றும் அடித்து அவருடைய தேகத்தை வெளியில் உருட்டி விடுகின்றனவாம். அவர் உடனே தம் சரிரத்தில் புகுந்து கொள்கிறாராம். இந்த வரலாற்றைப் படிக்கும் போது நமக்கே

சிரிப்பு வருகிறதே ; நம்முடைய மதாசாரங்களைத் தூஷிக்கத் தயாராய்க் காத்திருக்கும் இதர மதஸ்தர்கள் இதை வைத்துக் கொண்டு இந்தப் பரதகண்டம் முழுதுமே இப்படிப்பட்ட அக்ஞான இருள் நிறைந்ததென்று சொல்லி கரியை வழித்து நம்முகத்தில் பூசத் தடை யென்ன ?

மண்டன மிஸ்ரர் என்பவர் ஸுரேஸ்வராசார்யர்; அதாவது, தேவகுரு. அவர் வேதங்களுக்கு அதிகாரி. சரஸ்வதியே அவருடைய சம்சாரம், சங்கரர் அசுரகுரு. அவருடைய தேவதை சரஸ்வதி. தம்முடைய தேவதையின் புருஷராயிருந்தவரை இவர் ஜெயிப்பதெப்படி? ஜெயிப்பதற்கு நிபந்தனை யென்ன ? மண்டனமிஸ்ரர் தோற்றால், அவர் கிரகஸ்தாசிரமத்தை விட்டு, சந்யாசிஆகி,சங்கரருக்குத் தொண்டு செய்வது. சங்கரர் தோற்றால் என்ன தண்டனை ? அவர்தான் ஏற்கனவே சந்நியாசியாயிற்றே. அவர் மண்டனமிஸ்ரருக்கு சிஷ்யராவது மாத்திரம் சரியாகுமா? ஏன், அதைப்போலவே, மண்டனமிஸ்ரர் கிரகஸ்தராயிருந்தபடியே இவருக்கு சிஷ்யராகக் கூடாதா ? சங்கரர் மண்டன மிஸ்ரரைவிட அதிக மேதாவியா யிருந்ததற்காக, பின்னவருடைய சம்சாரம் தன் குடும்ப வாழ்க்கையை இழக்கிறதா ? இன்னும் பாருங்கள். அதற்குமேல் அந்த அம்மாள் சிருங்கார லீலைகள் சம்பந்தமாய் சங்கரருடன் வாதம் செய்கிறாளாம். சரஸ்வதியின் அவதாரமான ஓர் உத்தம ஸ்திரீ அன்னிய புருஷரான ஒருவரிடம் அதுவும் உலகைத் துறந்தவரான சந்நியாசியிடம் சிருங்கார ரகஸியங்களைப்பற்றி வாக்குவாதம் செய்யக் கூசாமல் முன் வருவாளா ? இது ஒருகால் மலையாளத்தில் நடக்கலாம்; அப்படியே அவள் வாக்குவாதம் செய்ததாகவே வைத்துக் கொள்வோம். சங்கராசார்யர் ஸர்வக்ஞனை பகவானுடைய அவதாரமாய் வந்தவர் ; 12-வது வயதில்

சந்நியாசியானவர். மற்ற சகலமான கலைக்ஞானங்களும் அவருக்குப் பிறவியிலேயே உண்டாயிருக்க, அறிவென்பதே சிறிதும் தேவையில்லாத கேவலம் ஜட சம்பந்தமான, மிருக சேஷ்டையான சிருங்கார லீலா விஷயங்களை மாத்திரம் கற்றுக்கொள்ள வேண்டிய நிலைமையில் அவர் இருந்தாரா? அந்த சாஸ்திரம்கூட மலையாளத்துப் பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொடுக்கப்படுகிறதா? கேவலம் மிருகங்களுக்குக்கூட இயற்கையிலேயே தெரியக்கூடிய ஜட சம்பந்தமான இந்த அற்ப விஷயத்தை அறியமாட்டாதவர், இந்த பிரம்மாண்டத்தைப் பூர்த்தியாய் நிறைத்துக் கொண்டிருக்கும் ஜடப்பொருள் யாவும் மாயை என்றும், பொய்த்தோற்றமென்றும் ஏற்கனவே எப்படிக் கண்டு பிடித்தார்? அந்த அம்மாள் கேட்ட கேள்விகளுக்கு அவர் மறுமொழி கொடுக்க இயலவில்லையே. அவர் உண்மையில் தோற்றவர்தானே? தோற்றவர் உடனே பெண் வேஷம் பூண்டு, அவளுக்கு சிஷ்யராவதல்லவா நியாயம். அதை விட்டு, ஒருமாத வாய்தா கேட்பதேன்? பரீட்சையில் கேள்விக் காகிதம் கொடுக்கிறார்கள். 'எனக்குத் தெரியவில்லை; நான் போய் மறுபடி இன்னொரு வருஷம் பள்ளிக்கூடத்தில் படித்துவிட்டு வருகிறே' னென்று ஒரு மாணவன் சொல்லி விட்டுப் போனால், அதற்கு அர்த்தமென்ன? அந்தப் பரீட்சையில் அவன் தவறினவன்தானே? அப்படித்தான் அவர் சிருங்கார லீலைகள் கற்றுக்கொள்ளப் போனாரே; அவருடைய தத்துவப்படி ஆன்மா நிர்க்குணமானது: தேகமே சகலமான உணர்ச்சிகளுக்கும், அநுபவங்களுக்கும் ஸ்தானமானது. அவர் தம்முடைய தேகத்தைப் போட்டுவிட்டுப் போகும் போது, அவருடைய ஆன்மா நிர்க்குணமானது; மறுபடி திரும்பி வந்தபோதும் அது நிர்க்குணமானது. ராஜஸ்திரீயிடம் கற்றுக்கொண்ட சிருங்கார லீலைகளைப் பற்றிய அநுபவ

வாசனை அரசனுடைய தேகத்தோடு போயிருக்குமா, அல்லது, நிர்க்குணமான அவருடைய ஆன்மாவோடு வந்திருக்குமா? அதிருக்கட்டும். அரசனுடைய பிணம் கேவலம் தீட்டிற்கு இலக்கானது. இவர் போய் அதில் புகுந்து கொண்டு, உண்மையிலேயே புருஷனை இழந்து விதவையாய்ப் போன இராஜ ஸ்திரீயின் பதிவிரதைத் தர்மத்தைக் கெடுத்து, உலகரீதிப்படி சுமார் பதினாறு தினங்கள் வரையில் தீட்டை அநுஷ்டித்து உத்தர கிரியைகள் நடத்தவேண்டிய காலத்தில் சிருங்கார லீலைகளை அவளிடம் நடத்தலாமா? அரசனுடைய தேகத்தில் புகுந்த இவருடைய ஆன்மாவிற்கு பழைய நினைவு இருந்ததா இல்லையா? தம் தேகத்திற்கு அபாயம் வரப்போவதை ஏன் அவர் அறியவில்லை? அல்லது, பழைய நினைவு இல்லை யென்றால், பாம்பாட்டிகளாய் வந்த சிஷ்யர்கள் ஆயிரம்தான் சமிக்ஞை செய்தாலும், நேரிலேயே சொன்னாலும் பழைய நினைவு உண்டாகுமா? அரசனுடைய தேகத்திலிருக்கையில் அவருக்குப் பழைய நினைவு போய்விட்டதல்லவா. அதுபோல அவர் மறுபடி தம் தேகத்தை யடைந்தவுடன் தாம் செய்த லீலைகளின் நினைவு எப்படி உண்டாகும்? அவர் அரசனுடைய தேகத்தை விட்டு மறுபடி வந்தாரே; சிதையில் கிடந்த தம் தேகத்தில் புகுந்துகொள்ளத் தடையென்ன? அவருடைய ஜீவன் அரூபமானதாயிற்றே. சேவகர்களைப் பற்றி அது பயப்படுவதேன்? நெருப்பையும் புகையையும் பற்றி நிர்க்குண ஜீவன் அஞ்சுவதேன்? அவரே தெய்வத்தின் அவதாரம்; அவருடைய ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று; அவர் ஏன் கடவுளை ஸ்தோத்ரம் செய்யவேண்டும்? ஒரு நிர்க்குணப் பிரம்மம் இன்னொரு நிர்க்குணப்பிரம்மத்தைக் கூப்பிட்டதா? மேலே இருக்கும் பரமாத்மா எதிலும் சம்பந்தப் படாமல் நிற்கும் நிர்க்குண

பிரம்மமல்லவா. அவருடைய வேண்டுகோளைக் கேட்டு, அது மழையை எப்படி உண்டாக்கியது? நம் தேசத்தில் பிணம் இரண்டு மூன்று தினங்களுக்கு மேல் இருந்தால், அது அழுகி ஜலமாய் ஓடிப்போகிறதே. ஒரு மாத காலம் அவருடைய சரீரம் கெடாமல் எப்படி இருந்தது? தம்முடைய உடம்பை விட்டு ஜீவனைப் பிரித்துக்கொண்டு போகும் சக்தி அவருக்கு யோகாப்யாசத்தினாலோ, தபோபலத்தினாலோ ஏற்பட்டதல்ல; பிறவியிலேயே ஏற்பட்டது. அப்படி இருக்க, அவர் ஆதியில் ஜனித்தபோது நேராய் ஒரு சரீரத்தில் புகுந்து கொண்டிருக்கலாமே. அதற்காக ஒரு தாயின் ஊற்றைத் துருத்தியிலும் மலப்பாண்டத்திலும் பத்துமாத காலம் கிடந்து உழன்றுவந்து, பன்னிரண்டு வயதுகாலம் ஒரு தாய் தகப்பன்மார்களால் வளர்க்கப்பட்டு, அவ்வளவு காலத்தை வீணாக்க வேண்டிய அவசியமென்ன! குழந்தைக்காகத் தவங்கிடந்து பெற்ற தாய் தகப்பன்மாரிடம் 12-வயது வரையில் வளர்ந்து, அதன் பிறகு அவர்களுடைய இருதயத்தைப் பிளந்து, அவர்களை துக்கசாகரத்தில் வீழ்த்துவதா அவர்களுக்கு தெய்வம் கொடுத்த வாக்கிற்கு அர்த்தம்? இவைகளை யெல்லாம் விட அதிக ஆச்சரியகரமானது இன்னொரு விஷயம். ஸர்வக்ஞரான சங்கரர் ராஜனுடைய பத்னி சந்தேகங் கொள்ளும்படியாய் நடந்து கொள்வதேன்? அரசனுடைய தேகத்தில் இவருடைய நிர்க்குண ஆத்மா புகுந்தால், தேகத்தின் குணம் தலையெடுக்குமா? ஆன்மாவின் நிர்க்குணம் தலை யெடுக்குமா? யாரோ ஒரு மகானுடைய ஆத்மா வந்து புகுந்து கொண்டிருக்க வேண்டுமென்றும், அந்த மகானுடைய வெற்றுடம்பு ஒளிய வைக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும் ராஜஸ்திரீ சந்தேகங் கொண்டாளென்பது மனித சுபாவத்திற்கு உகந்ததாகுமா? அப்படித்தான் அவள் சம்சயங்கொண்டாலும், உத்தம ஸ்திரீ,

தனது வைதவ்ய நிலைமையில் தன் கற்பு அழிபட்டுப் போன தைப் பற்றி வருந்தி, அந்த வேஷதாரியை விலக்க முயலு வாளா? அல்லது, அவரையே சாசுவதமாய் வைத்துக்கொண்டு மேலும் சிற்றின்பம் அநுபவிக்க முயற்சிப்பாளா ? இந்த வரலாற்றை ஆராய ஆராய சர்வாங்கமும் பொத்தலாகவே இருக்கிறதென்பது அற்ப அறிவு படைத்தவர்களுக்கூட எளிதில் விளங்கும். இவையெல்லாம் மலையாள மாந் திரீகம், மலையாள ஸ்திரீ சம்போக தர்மம், மலையாள மாயா ஜாலம், மலையாள நாகரிகம் முதலியவற்றிற்கே யன்றி நம் தென்னாட்டிற்கும் பகுத்தறிவிற்கும் சிறிதும் பொருந்தவில்லை. இவருடைய சரித்திரத்தில் இன்னொரு பெரிய விபரீத விஷயம் இருப்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். ஆதி சங்கருடைய அத்வைத மதத்தின் மூலாதாரக் கொள்கைகளாவன : இந்த சிருஷ்டியிலுள்ள ஜீவன்கள் எல்லாம் தெய்வமே; நாம் வேறு, தெய்வம் வேறு என்று சொல்வது மூடத்தனம். நாமே அவன்; அவனே நாம். ஜீவனைத் தவிர உள்ள மற்றப் பொருள் களெல்லாம் மாயையினால் ஏற்பட்ட பொய்த்தோற்றம் என்று ஆதிசங்கரர் கண்டு பிடித்து ஸ்தாபித்திருக்கிறார். அவருடைய சிஷ்யகோடிகளும், அவரால் நியமிக்கப்பட்டுள்ள பீடா திபதிகளும் என்ன சொல்லிப் பெருமை பாராட்டுகிறார்களெ ன்றால், தெய்வமே ஆதிசங்கரராய் அவதரித்து உலகத்திற்கு ஞானத்தை போதித்து, ஆறுமதங்களை ஸ்தாபித்தது என்று ஆதாரங்களோடு மெய்ப்பிக்கிறார்கள். இப்படி மெய்ப்பிப்ப தால், ஆதிசங்கரர் ஒருவருடைய ஜீவனைத்தவிர மற்ற எல்லா ஜீவர்களும் தெய்வாம்சமானவையல்ல என்று அவர்கள் ஸ்தாபிக்கிறார்கள். இது த்வைதமா, அத்வைதமா ? இதையா ஆதிசங்கரர் அவ்வளவு பாடுபட்டுக் கூடுவிட்டுக் கூடு பாய்ந்து ஸ்தாபித்தார்? அவர் இப்போது உயிரோடிருந்தால்,

தம் சிஷ்யகோடிகள் தமக்கு மாத்திரம் உண்டாக்கி வைக்கும் தெய்விக அவதார விசேஷத்தைப் பற்றி சந்தோஷப் படுவாரா, அல்லது, அத்வைதக் கொள்கையில் தாம் ஜெயித்த வித்வான்களுக் கெல்லாம் தாமே சிஷ்யராய்ப் போவாரா? இதில் இன்னொரு விசேஷம் பாருங்கள். இந்தப் பீடாதி பதிகளும், சீஷர்களில் பெரும்பாலோரும் பரப்ரம்ம மாகிய நாராயணனை ஆதி குருவாக வைத்து ஆராதிக்கிறார்கள். நாராயணன் நிர்க்குணப் பிரம்மமல்ல; சர்வ மங்கள குணங் களும் பொருந்திய கருணாசாகரன்; மற்ற சகலமான ஜீவர் களையும் சேஷனாகக் கொண்ட சேஷி. அதாவது, அவன் ஆண்டான். மற்ற ஜீவர்கள் நிரந்தர அடிமைகள். நாராயணன் மற்ற ஜீவர்கள் தம்மோடு இரண்டறக் கலந்துபோகவிடாத தெய்வம். அதுவா ஆதிசங்கராருடைய கொள்கை? அவர் என்ன போதித்தார்? நாம் வேறல்ல, தெய்வம் வேறல்ல; நாமே பிரம்மமென்பதை அறிவதே முக்திக்குப் போது மானது. தெய்வம் எதனாலும் பாதிக்கப்படாதது, எவ் வித குணமு மற்றது என்று அவர் சொன்னார். ஒரு மூச்சில் அவர் அப்படிச் சொன்னாரா? இன்னொரு மூச்சில் என்ன சொல்லுகிறார்? "பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோ விந்தம் மூடமதே" என்று சொல்லி, "ஏ, முட்டாள் மனதே, கோவிந்தனைப் பஜனை பண்ணு" என்கிறாராம்; கோவிந்தன் சேஷ சேஷி பாவமுடையவன்; பஜனை யென் பது பக்திமார்க்கமும், கிரியா மார்க்கமும் நிறைந்தது. ஜீவா த்மா பரமாத்மா வாகாது என்று சொன்னவரை அவர் முத லில் முட்டாளாக்கினார்; பிறகு, பரமாத்மாவைக் குறித்து பஜனை பண்ணாதவன் முட்டாளென்கிறார். அத்வைதக் கொள் கையை ஸ்தாபித்தவர் இதையும் சொன்னாரென்றால், அவரால் உண்டாக்கப்பட்ட அத்வைதம் அவராலேயே

கொல்லப்பட்டுப் போனதாக நாம் கொள்ள வேண்டு வதைத் தவிர வேறு மார்க்கமில்லை. நம்மைத்தவிர, இன்னம் நம் நாட்டிலுள்ள சைவர்கள் எந்த சித்தாந்தத்தை அநுஷ்டிக்கிறார்கள் தெரியுமா? அவர்களும் ஆதிசங்கரருடைய மதத்தைக் காலை வாரி விட்டுவிட்டார்கள். சங்கரருடையது ஒரே ஒரு பொருள்தான்; நம் நாட்டு சைவர்கள் பதி, பசு, பாசம் என்று மூன்றாய் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் வைஷ்ணவ விசிஷ்டாத்வைதமே யன்றி வேறல்ல. 'பதி' என்பது பரமாத்மா 'பசு' வென்பது ஜீவாத்மா, 'பாசம்' என்பது இரண்டிற்கும் பரஸ்பரம் ஏற்பட்டுள்ள ஒன்றை யொன்று கட்டும் தளை. விசிஷ்டாத்வைத மென்ற சொல்லில் விசி இஷ்டம் என்பதன் பொருளென்ன வென்றால், விசி என்பது கட்டும், அல்லது, இணைக்கும், இஷ்டம் என்பது பிரியம், அல்லது, சித்தம். பரமாத்மாவும், ஜீவாத்மாவும் விசி இஷ்டத்தால் ஒன்றோடொன்று சம்பந்தப் பட்டிருப்பன என்பதே விசிஷ்டாத்வைதம்; அதன் பொருளே பதி பசு பாசம். இதை இன்னொரு சமயத்தில் நான் நன்றாய் விளக்குகிறேன். சுருங்கக் கூறுமிடத்து, சங்கரர் தம்மைத் தாமே கை விட்டு விட்டார். ஸ்மார்த்தர்களும் அவரைக் கை விட்டு விட்டார்கள்; சைவர்களும் கை விட்டு விட்டார்கள். ஆகையால் நீங்கள் எல்லோரும் வைஷ்ணவர்களாய், விசிஷ்டாத் வைதத்தைக் கடைப்பிடிப்பது சரியான காரியமே. நமக்கு சங்கரர் தாலி கட்டின புருஷர்; ராமாநுஜர் ஆசை நாயகர். நாம் உண்மையில் ராமாநுஜரை வைத்துக் கொண்டு ரமிக்கிறோம்; சங்கரரை வெறும் மரியாதைக்குப் புருஷரென்கிறோம்; மாடு மலையேறி மேய்ந்தாலும், குட்டி கோனாருக்குச் சொந்த மல்லவா. ஆதி சங்கரர் ஏற்படுத்திய நிர்க்குணப் பிரம்ம மாயாப்பிரபஞ்சக் கொள்கைக்குத் தக்க சன்மானமே அவருக்குக் கிடைக்

கிறது. பிரம்மத்தைத் தவிர மற்ற யாவும் பொய்யென்றும், மித்யை என்றும் அத்வைதிகள் இன்னமும் வாயால் சொல்லு கிறார்கள். இவற்றிற்கு ஆதாரம் வேதமென்றால், அந்த வேதமே பொய்யாகிறது. பொய்யான சிஷ்யனுக்கு உண் டான பொய்யான அக்ஞானத்தை பொய்யான குரு பொய் யான வேத வாக்யங்களால் போக்கி பொய்யான ஞானத்தை போதித்து பொய்யான பந்தத்திலிருந்து விடுவித்து பொய் யான மோக்ஷத்தைக் காட்டுகிறார் என்பதிலேயே அவர்க ளுடைய தத்வம் போய் முடிகிறது. வைஷ்ணவர்கள் ப்ரம் மத்தை நாராயணனுடைய வெளிப்படையான ரூப மென்றும், அதன் பிள்ளையென்றும், நாராயணன் அதன் அந்தராத்மா வென்றும் ஏற்படுத்தி இருக்கிறார்கள். அத்வைதிகளின் கொள்கைப்படி நாராயணனைத் தவிர மற்றவை பொய்யென் றால், சிவலிங்கம், சந்திரமௌலி, காமகோடி, சுப்ரமண்யம், கணேசர், சண்டிகேசர் முதலிய முப்பத்து முக்கோடி தேவர் களை சங்கராருடைய பீடாதிபதிகளும் சிஷ்யர்களும் ஏன் பூஜி க்கிறார்கள்? ஷை தேவதைகள் நிர்க்குணப்ரம்மத்திற்குள் மறைந்திருப்பவைகளா? அல்லது, மாயாப்பிரபஞ்சத்தில் இரு ப்பவைகளா? ஒரே தெய்வத்தைத் தவிர வேறொன்று மில்லை யென்று வாக்கு வாதம் செய்கிறவர்கள், மற்ற மதத்தாரை விட அதிகமான தேவதைகளைப் பூஜிப்பதேன்? போதாக்குறை க்கு வைஷ்ணவ தெய்வங்களான கிருஷ்ணன், கோபாலன், கோ விந்தன் முதலியவர்களை இரவல் வாங்குவதேன்? நிர்க்குணமா கிய பரப்ரம்மத்தைத் தவிர மற்றதெல்லாம் மாயை என்றவர் காமகோடி, சரஸ்வதி என்ற பெயர்களைக்கொண்ட சுக்ரனை அசுர குருவையும், ஆசாபாசகாமங்களின் வடிவமான பொய் மாயையையும் வணங்கும்படி ஐந்து பீடங்களை ஸ்தாபித்தா ரென்றால், அவருடைய மதத்தின் கௌரதை எவ்வளவென்று

நீங்களே யோசியுங்கள். ஆகவே, நாமே தெய்வமென்றால், நமக்குக் கோவிலும் தேவையில்லை, பீடாதிபதிகளும் தேவையில்லை, பாத பூஜையும் தேவையில்லை. நம்மை நாமே பூஜை செய்து கொள்ள வேண்டுமேயன்றி, இதர தெய்வத்தை நமக்கு மேற்பட்டதாக நினைத்து பூஜை பஜனை முதலிய பொய்ச் சடங்குகளை நடத்த வேண்டுவதில்லை.

பிராம்மண ச்ரேஷ்டர்களே, உங்களுடைய ஸாத்விக முக தேஜஸைப் பார்க்க நான் பரவசமடைகிறேன். இந்த தேஜஸ் நம்முன்னோர்கள் யுகம் யுகமாய்ப் பாடு பட்டு தேகத்தையும் மனத்தையும் ஒடுக்கித் தூய்மைப் படுத்தி நமக்குக் கொடுத்த விலை மதிக்க முடியாத பெருந்தனம். ஆனால், வெளித்தோற்றமான ஸாத்விக குணம் மாத்திரம் போதாது. உள்ளுக்குள் ஆசா பாசங்களையும், அடக்கமுடியாத மிருக வேட்கைகளையும் சம்பூர்ணமாக வைத்து வளர்த்துக்கொண்டு, வெளித் தோற்றத்தில் மாத்திரம் சுத்த ஸாத்விகத் தன்மையைக் காட்டுவது சங்கருடைய அவித்யாவாதத்தைவிட அதிக அபாயகரமானது; அதிக வஞ்சகமானது; அதிக துரோகமானது. அதுவே ப்ராம்மண சமூகத்திற்கு என்றும் மாறாத தூஷணையையும், களங்கத்தையும், இளக்காரத்தையும் உண்டாக்குவது. ஆகையால், உள்ளும் புறம்பும் ஒத்த ஸாத்விகத்தை வகியுங்கள். ஸாத்விக முகத் தோற்றமொன்றே உலகை அபாரமாய் வசீகரப்படுத்தும் சக்தியுடையதென்றால், உள்ளும் புறம்பும் ஒத்த ஸாத்விக குணம், எதற்கும் கட்டுப்படாத ஸர்வ சக்தியும், ஸர்வக்ஞமும் வாய்ந்த சங்கருடைய நிர்க்குணப் பிரம்மத்தைக்கூட மயக்கி, அது உங்களை அழைத்து, தான் அநுபவிக்கும் நித்யாநந்த ஸுகத்தை நீங்களும் அநுபவிக்கும்படி செய்யத்தக்க மகத்திற்கும் மகத்தான சக்தி வாய்ந்த சாதனமென்பதை உறுதியாய்

வைத்துக் கொள்ளுங்கள். நானே தெய்வம் என்னும் அசுரமம தையை விட்டு, இராமலிங்க ஸ்வாமிகள் சொல்லுகிறபடி "நானுனக்கு மகனலனே, நீ எனக்கு வாய்த்த தந்தை யலவோ" என்று கதறி,

"பின்னுருவாய் முன்னுருவில் வேத நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானய்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமுப்பில்லாப்
பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்ணுது, எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவில் பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி
தன்னுருவாய்ப் பொன்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமேலவே"

என்று பாடிப்பரவி, சுத்தமான ஆகாரங்களை மிதமாயுண்டு, ஆசாபாசங்களையும் தேவைகளையும் குறைத்து, எங்கிருப் பினும், என்ன செய்யினும், இரவு பகல் இடைவிடாமல் நாராயண நாம ஸ்மரணம் செய்து பழகி, வேத விதிப்படி உங்கள் உங்கள் கடமைகளைக் கூடிய வரையில் விடாமல் செய்து, உண்மை, இரக்கம், தானம் முதலிய கல்யாண குணங்களைக் கைவிடாது, எவ்விதமான கஷ்ட நிஷ்டூரங்கள் நேரினும் அவற்றை பகவத் கிருபையென்று ஸகித்து, தனக்குக் கிடைத்ததோடு பரிபூர்ண திருப்தியடைந்து, பக வான் நமது ஹிருதயத்திற்குள் கோவில் கொண்டிருப்பதாக வும், நமது அந்தராந்தரமான நினைவுகளையும், நமது காரியங் களையும், சாட்சியா யிருந்து, கவனித்திருப்பதாயும் கருதி, அக்கிரம நெறியில் நுழைய அஞ்சி, ஸன்மார்க்கத்தையே பின்பற்றி, நமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் பகவா னுக்கே அர்ப்பணம் செய்து, "கருணாநிதியே, நான் அசக் தன், மஹாபாபி, அக்ஞானி, என்னை ரக்ஷித்துக்கொள்ள மாட்டாதவன், நீயே எனக்கு ரக்ஷகன், உன்னைச் சரணமடை கிறேன், உன்னையன்றி எனக்கு வேறு கதியில்லை" யென்று அவனிடம் விக்ஞாபனம் செய்து, அவனையே சரணாகதியாய் அடைந்து,

“சிற்றம் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றாமரைகளிலே போற்றும் பொருள் கேளாய்,
பெற்ற மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட் செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்”

என்னும் மனனத்தை உங்களுடைய இகபர மூலதனமாக வைத்துக் கொள்ளுங்கள். நான் அதிகமாய்ப் பேசி உங்களுக்கு மிகவும் பிரயாசை கொடுத்து விட்டேன். என் பீடத்தின் கருத்து இன்னதென்பது இப்பொழுது விளங்கி இருக்கும். நம் மத தத்துவங்களிலும் சாஸ்திரங்களிலும் உள்ள ஊழல்களை நீக்கி உண்மையை தைரியமாய் விளக்குவதே இதன் கொள்கை. இதோடு இன்றைய ஸதஸ்ஸு கலையட்டும். மற்ற விஷயங்களை நாம் இனி நாளைய தினம் மாலையில் கவனிப்போம்—என்று கூறி மன்மத பீடாதிபதி ஸ்வாமிகள் பிரசங்கத்தை முடித்தார்கள்.

உடனே எல்லா ஜனங்களுக்கும் பஞ்சாமிர்தம் முதலிய விநியோகங்கள் வழங்கப்பட்டன. அவற்றைப் பெற்றுக்கொண்டு ஸ்வாமிகளை நமஸ்கரித்துவிட்டு எல்லோரும் சென்றனர். ஸ்வாமிகள் தனிமையில் விடப்பட்டார். அவரைச் சேர்ந்த நிர்வாகஸ்தர், கட்டியக்காரர்கள் முதலியோர் மேன்மாடத்தின் இரண்டாவது கட்டிற்குப் போய்ப் படுத்துக் கொண்டனர். மேன்மாடம் மூன்றாவது கட்டில் பண்ணை இராமாமிர்த ஐயர், அவருடைய மனையாள், புத்திரன், கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஆகியோர் சயனித்துக் கொண்டனர்.

மற்ற பிராம்மணர்களும், சிப்பந்திகளும் கீழ்ப்பாகங்களிலும் தெருத் திண்ணைகளிலும் படுத்து மிக விரைவில் கடுமையான நித்திரையில் ஆழ்ந்துபோயினர்.

அன்றைய பகலில் ஸ்வர்ணாம்பாள் முக்கிய நிர்வாகஸ்தரோடு ஸ்வாமி தரிசனம் செய்த காலத்தில், இரவில் அவள்

தனது குழந்தை சுந்தரியோடு, பரிசுத்தமான ஓரிடத்தில் படுத்துக்கொள்ள வேண்டுமென்றும், ஒருகால் அம்பாள் பிரஸன்னமானாலும் ஆகலாமென்றும் கூறினாரல்லவா. அதைக் கேட்டதுமுதல், அவளுடைய மனதில், இன்னதென்று விவரிக்க இயலாத ஓர் உணர்ச்சி எழுந்து பெருகி மனதை சலனப்படுத்தியபடி இருந்தது. அதன் பிறகு அவள் தன் புருஷனோடு தனிமையில் இருந்த காலத்தில், தானும் சுந்தரியும் அன்றிரவு தனியான அறையில் படுத்துக்கொள்ள வேண்டுமென்று ஸ்வாமிகளுடைய நியமனம் ஆயிருப்பதாய்க் கூறினாளேயன்றி, ஒருவேளை அம்பாள் பிரஸன்னமாகலாமென்று ஸ்வாமிகள் தெரிவித்த செய்தியைக் கூறவில்லை. அந்தச் செய்தியைத் தான் வெளியிடலாமோ, கூடாதோ என்ற சம்சயத்தை நிர்ணயிக்க மாட்டாதவளாய், அவள் அதைத் தெரிவிக்காமலே இருந்து விட்டாள்.

அதன் பிறகு அவள் பண்ணையாருடைய மனையாளிடம் சம்பாஷித்திருந்த காலத்திலும் ஸ்வர்ணாம்பாள் தன் புருஷனிடத்தில் சொன்ன அளவே அவளிடத்திலும் தெரிவித்தாள். ஸ்வாமிகளுடைய முக்கிய நிர்வாகஸ்தர் கிருஷ்ணமூர்த்தி ஐயரிடத்திலும், பர்வத லக்ஷ்மியம்மாளிடத்திலும்பேசி, ஸ்வர்ணாம்பாள் சுந்தரியோடு ஸ்வாமிகளின் பூஜை மண்டபத்திற்கு அடுத்தாற்போலிருந்த ஒரு கூடத்தில் சயனித்துக்கொள்ள வேண்டுமென்று ஏற்பாடு செய்தாராதலால், கிருஷ்ணமூர்த்தி ஐயரே நேரில் தமது மனைவியையும், குழந்தையையும் அழைத்து வந்து மேற்படி கூடத்தில் மடியாய்ப் படுக்க வைத்துவிட்டுப் போய் மூன்றாவது கட்டில் படுத்துக் கொண்டார்.

அவருடைய குடும்ப விஷயங்களில் பல கஷ்டங்களும், அபாயங்களும் நேர்ந்திருந்தமையால், அவற்றைக் கருதியே அவர் மனைவி குழந்தையோடு தமது சொந்த ஊரை விட்டு இரகஸியமாய்ப் புறப்பட்டு விரைவாய்த் திருவையாற்றுப்பக்கம் சென்றவராதலால், அவருடைய இடர்கள் சீக்கிரம் விலகிப் போகுமென்று ஸ்வாமிகள் கூறிய

வாக்கைக் கேட்டது முதல் கிருஷ்ண மூர்த்தி ஐயருக்கு ஸ்வாமிகளிடத்தில் அபாரமான மதிப்பும், நம்பிக்கையும் ஏற்பட்டுப் போனதன்றி, ஸ்வாமிகளின் அருளாலும், சுந்தரியை வைத்து அவர் பூஜை செய்வதால் ஏற்படும் தெய்வ கடாக்ஷத்தாலும், தமது அபாயங்கள் விலகிப் போகும் என்ற நம்பிக்கையைக் கொண்டு, பெருத்த நன்மையையும் மங்கள கரமான மாறுபாடுகளையும் எதிர்ப்பார்த்து ஸ்வாமிகளுடைய விருப்பத்தின்படி நடந்துகொள்ள முனைந்து நின்றார். அதற் கநுகூலமாக இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது. ஸ்வர்ணம் பாள் பார்வத லக்ஷ்மியம்மாளோடும், கிருஷ்ண மூர்த்தி ஐயர் பண்ணை ஐயரவாளோடும் சம்பாஷித்துத் தங்கள் குடும்ப வரலாற்றைத் தெரிவித்த காலத்தில், தாங்கள் சில விரோதி களுக்காக பயந்து, மறைந்து கொள்ளும் பொருட்டே திருவையாற்றிற்றிப் பக்கத்திலுள்ள ஒரு பந்துவின் வீட் டிற்குப் போகக் கருதி குதிரை வண்டியில் மறைவாக வந்த தாய்க் கூற, அதைக் கேட்ட பண்ணையாரும், அவருடைய மனையாளும், தங்கள் வீட்டிலேயே அவர்கள் கொஞ்சகாலம் தங்கி மறைந்திருக்கும்படி கேட்டுக் கொண்டனராதலால், கிருஷ்ண மூர்த்தி ஐயர் அந்த ஏற்பாட்டை ஒப்புக்கொண் டார். தங்களது நிலைமையில் அவ்வாறு பெரிய மாறுபாடு நேர்ந்தது பற்றி, கிருஷ்ண மூர்த்தி ஐயரும் ஸ்வர்ணம்பாளும் அபாரமான மன வெழுச்சியும் சந்தோஷகரமான ஆவலும் கொண்டாடி இருந்தனர்.

அவ்வித மனப்பான்மையோடு ஸ்வர்ணம்பாள் ஸ்வாமி களுடைய பூஜை மண்டபத்திற்குப் பக்கத்திலிருந்த கூடத் தில் சுந்தரியோடு சயனிக்க, சொற்ப காலத்தில் சுந்தரி நித்தி ரையில் ஆழ்ந்துபோய் விட்டாள்.

ஸ்வர்ணம்பாள் படுத்துக் கண்களை மூடியபடி இருந் தாளே யானாலும் அவளுக்கும் தூக்கத்திற்கும் வெகு தூரமா யிருந்தது. தங்களது குடும்ப விஷயங்கள் சம்பந்தமான மனக்கிளர்ச்சியோடு, அம்பாள் ஒரு வேளை தனக்குப் பிர ஸன்னமாவாளோ, அவளுடைய வடிவம் பயங்கரமா யிருக்

குமோ, சுமுகமாயிருக்குமோ, அம்பாள் தன்னிடம் என்ன கேட்பாளோ என்பன போன்ற எண்ணங்களால் அபாரமாய் உலப்பப்பட்டவளாய், அவள் புரண்டு புரண்டு படுத்தபடி நலிந்து பொழுதைக் கடத்தினாள். எங்கேனும், அற்ப ஓசையுண்டானாலும், அவள் திடுக்கிட்டுக் கண்ணிமைகளை விழித்துக் கொண்டு பார்ப்பதும், மறுபடி மூடுவதுமா யிருக்க, மணி சுமார் பத்து ஆயிற்று. எல்லா ஜனங்களும் நித்திரையில் ஆழ்ந்து குறட்டை விட்டுத் தூங்கிய ஓசை நாலாபக்கங்களிலு மிருந்து உண்டாயிற்று. அந்தக் கூடத்தில் அதிக இருளோ, அதிக வெளிச்சமோ இல்லை யாதலால், மாலை வேளைபோல இருளும், வெளிச்சமும் கலந்திருப்பதாய்த் தோன்றின.

அப்போது திடீரென்று அந்தக் கூடத்தின் ஒரு பக்கத்துச் சுவரில் பளிச்சென்ற ஒரு பெரிய ஜோதி வந்து தாக்கியது. அந்த ஜோதி நூற்றுக்கணக்கில் இதழ்களைக் கொண்ட ஒரு பிரம்மாண்டமான வெண்தாமரைப் புஷ்பத்தின் வடிவமாயிருந்தது. சூரிய வட்டத்திலிருந்து கிரணங்கள் நாலாபக்கங்களிலும் பரவுவது போல, அந்தப் புஷ்பத்திலிருந்து கிரணங்கள் வீசின. அந்தப் புஷ்பம் கிருகிரென்று ஓரே விசையாகச் சுழல வாரம்பித்தது.

அதைக் கண்டவுடனே ஸ்வர்ணம்பாள் மின்சார விசையால் தாக்கப்பட்டவள்போல திடுக்கிட்டு மான்போல மருண்டு துள்ளிக் குதித்தெழுந்தாள். அபாரமான திகிலும் பிரமிப்பும் கிளம்பி, அவளுடைய கவனத்தை அப்படியே கவர்ந்து கொண்டன. தான் என்ன செய்வதென்பதை அறியமாட்டாதவளாய், அதுதான் அம்பிகையோ என்ற சம்சயத்தைக் கொண்டவளாய்த் தனது இரண்டு கைகளையும் குவித்து பயபக்தி விநயத்தோடு மார்பின்மீது வைத்துக் கொண்டு, தன் சிரத்தைக் குனியவைத்து தனக்குள்ளாகவே அம்பாளை தியானிக்கத் தொடங்கினாள்.

சுவரில் ஓரே தேஜோமயமாய்ச் சுழன்ற ஜோதிச்

சக்க்ரத்தின் வெள்ளை நிறம் சடக்கென்று இரத்தச் சிவப்பாய் மாறியது; அந்த நிறம் இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு நீலம், ஊதா, கபிலம், மஞ்சள், ஆரஞ்சு முதலிய அபூர்வ வர்ணங்களாய் மாறிக் கடைசியில் வெள்ளைக்குத் திரும்பியது. அதற்கு முன் பார்த்தே அறியாத, அந்த மகா அற்புத ஜெகஜாலக் காட்சியைக் கண்ட ஸ்வர்ணும்பாள் மெய்ம் மறந்து, மயிர் சிலிர்க்க, பக்தி பரவசையாய் ஒய்ந்து ஸ்தம் பித்து நடுநடுங்கி நிற்க, அப்போதும் சுழன்று கொண்டிருந்த அந்த ஜோதியின் நடுவில் திடீரென்று சரஸ்வதியின் வடிவம் தோன்றியது. அந்தத் தோற்றம்,

புத்தகம் படிக மாலை குண்டிகை பொருள் சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை விமலையை அமலை தன்னை
மொய்த்த கொந்தளகபார முகின்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்"

—என்ற வர்ணனைப்படி வீணை, சுவடி, ஸ்படிகமாலை முதலிய அலங்காரங்களுடையதாய் தெய்விக சக்தி வாய்ந்ததாய்க் காணப்பட்டது. அதன் முகம் ஆநந்தமயமான புன்முறுவ லுடையதாயிருந்தது. அதன் ஒரு கை ஸ்வர்ணும்பாளை ஆசிர் வதிப்பதுபோல உயர்ந்தது. வாயிலிருந்து, "மங்களானி பவந்து; தீர்க்க ஸுமங்கலீ பவ" என்ற சொற்கள் மாதுரிய மாக த்வனித்தன.

ஸ்வர்ணும்பாள் ஆவேசங்கொண்டவள் போல நடுநடுங்கி நெக்கு நெக்குருகி சிறிது துணிவடைந்து அம்பாளுக் கரு கில் நெருங்கிப்போய், "தாயே, பரதேவதே! ஏழையைக் காப் பாத்துடி அம்மா" என்று தழுதழுத்த குரலில் ஸ்தோத்திரம் செய்தபடி கீழே உட்கார்ந்து மண்டியிட்டுப் பன்முறை நமஸ்காரம் செய்து எழுந்து கன்னங்களில் அடித்துக் கொண்டு மறுபடி அஞ்சலி செய்தபடி பக்தி பரவசையாய்த் தன்னை மறந்து குனிந்து நின்றாள்.



## அத்தியாயம்—3

### எமிஜேசேதிரா, ராமாநுஜா! எதிராஜா!!

நமது கதை ஆரம்பமான காலத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னர் சென்னையில் ரமணைய செட்டியார் என்ற பெயருடைய கோமுட்டிச் செட்டியார் ஒருவர் இருந்தார். அவர் வெளியூர்களில் உற்பத்தியான பலவகைப் பட்ட பழங்களை மொத்தமாக ரயிலில் தருவித்து சில்லரை வியாபாரிகளுக்கு விற்பவர். அதிக பிரயாசையின்றி அந்த வர்த்தகத்தில் அவருக்கு நாள் ஒன்றுக்கு ஐம்பது ரூபாய்க்குக் குறையாமல் இலாபம் தேறும். அவ்வாறு பல வருஷ காலம் தொடர்ச்சியாய் இலாபம் சம்பாதித்து, வட்டியின் மூலமாயும் அதை ஏராளமாகப் பெருக்கி சுமார் இரண்டு லக்ஷம் ரூபாய் வரையில் சேர்த்திருந்தார். அந்தக் காலத்தில் 'பாங்கி'யில் பணம் போடும் வசதி ஏற்படவில்லையாகையால், அவர் சுமார் ஒரு லக்ஷம் ரூபாய் வரையில் கொடுத்து அரண்மனைக்காரத் தெரு முதலிய இடங்களில் பல வீடுகளை வாங்கி, குடிக்கூலிக்கு விட்டிருந்தார். மிகுதியிருந்த பணத்தை அவா தமது வீட்டில் ரூபாய்களாகவும், பவுன்களாகவும், நகைகளாகவும் இரும்புப் பெட்டியில் வைத்து பத்திரப்படுத்தி, பூமிக்குள் கட்டப் பட்டிருந்த ஒரு குடவறைக்குள் மேற்படி பெட்டியை மறைத்து வைத்திருந்தார். தரையின்மேல் ஓர் இரும்புக் தகடு போட்டு அறையின் வழி மூடப்பட்டிருந்தது. அதன் ஒரு பக்கத்தில் இருந்த ஓர் இரும்பு வளையத்தைப் பிடித்துத் தூக்

கினுல், உள்பக்கத்தில் இரும்புப் பெட்டியும், மனிதர் உள்ளே நின்று பெட்டியின் கதவுகளைத் திறப்பதற்குத் தேவையான இடவசதியும் இருந்தன. அவ்வாறு இரும்புப் பெட்டியோடு கூடிய குடவறையிருந்த அறை அவருடைய வீட்டின் நடுமத்தியில் பந்தோபஸ்தான பாகத்தில் இருந்தது. அந்த அறையின் கதவு கால் அடி கனமுடைய அழுத்தமான நூக்க மரப் பலகையினுல் செய்யப்பட்டிருந்ததன்றி, கதவு, பெரிய சட்டி போன்ற பிரம்மாண்டமான பூட்டினுல் பூட்டப்பட்டிருந்தது.

செட்டியாருக்கு சுமார் நாற்பது வயதிருக்கலாம். அவருடைய உடம்பு சாம்பல் பூத்த கருப்பாயிருக்கும். அவர் குள்ளமான வடிவ முடையவரா யிருந்தார். முன்பக்கத்தில் தொந்தியும், பின்பக்கத்தில் இரண்டு பிரஷ்ட பாகங்களும் குண்டுப் பூசனிக்காய்கள்போல் வெகுதூரம் வெளிப்பட்டுப் பிதுங்கி நின்று, தத்தள தளதள வென்று குலுங்கிக் குலுங்கி ஆட்டம் போடும். மார்பு மடுவுபோல் குழிந்தும், இரண்டு புஜங்களும் கைகளும் அதன் கரைகள் போல் உயர்ந்தும் இருக்கும். அதுவன்றி முகமும் நேராய் நிற்காமல், ஒட்டகத்தின் முகம்போல் முன்னுல் நீண்டிருக்கும். கண் விழிகளிரண்டும் பயங்கரமாக வெளியில் பிதுங்கிப்போ யிருக்கும். அவர் மிக சாந்தமாகப் பேசும்போதுகூட, அவரது அடித்தொண்டைப் பேச்சும், பிதுங்கிய விழிகளும் எதிரிலிருப்போரை நடுங்கச் செய்யும். அவர் சிறிது கோபமாகப் பார்த்துப் பேச ஆரம்பித்தால், அவருடைய கண்விழிகளைச் சேர்ந்தாற் போல் இரண்டு நிமிஷ காலம் நாம் பார்த்திருக்க முடியாது. கண் வலியினுல் சிவந்துபோயிருக்கும் கண்ணைப் பார்ப்பது எப்படி எதிரிலிருப்போருக்குக் கூச்சத்தையும், கண்ணீரையும் உண்

டாக்குமோ, அதே நிலைமையை உண்டாக்கும். ஆகவே, எந்த வியாபாரியும் அவரிடம் அதிகமாய் வாக்குவாதம் செய்யவோ, பேரம் பேசவோ அஞ்சி, அவருடைய நோக்கத்தை அநுசரித்தே நடந்துகொண்டு போய்விடுவார்கள்.

அவருடைய மனைவியும், மனைவியைச் சேர்ந்த மனிதர்களும் நெற்றியில் கரிப்பொட்டு, சந்தனப் பூச்சு முதலிய மத சின்னங்களைத் தரித்தவர்கள். அவர்கள் கந்தசாமியைத் தெய்வமாக வணங்கினவர்கள்; ரமணைய செட்டியார் சென்னையிலிருந்த பிரபல வர்த்தகர்களான கோமுட்டிச்செட்டியார்கள் நல்ல பக்திமான்களான வைஷ்ணவர்களா யிருந்ததைக் கண்டு, தாமும் அவர்களைப் போல் நடிக்கத் தொடங்கி நெற்றி முழுதிலும் பளிச்சென்று பெரிய நாமமிடும் வழக்கத்தை அநுசரித்ததன்றி சமய சந்தர்ப்பமின்றி ராமாநுஜா, எதிராஜா என்று குருநாம ஸ்மரணை செய்துகொண்டே இருப்பார். அவர் பழையகாலத்துக் கர்னாடகச் செட்டியார் நாகரிகத்தோடு சிறிதளவு இங்கிலீஷ் நாகரிகத்தையும் கலந்துகொண்டவர். அவர் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் படிக்கவில்லையானாலும், பழக்கத்தில் பொட்லர் இங்கிலீஷ் சிறிதளவு கற்றுக்கொண்டிருந்தார். எப்படி யென்றால், அவரிடம் நேரில் பழங்கள் வாங்கும் பொருட்டு பல வெள்ளைக்கார தொரைஸானிகள் பொட்லர்கள் முதலியோர் வருவார்களாதலால், அவர்கள் இங்கிலீஷும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் பேசியதைக் கண்டு தாமும் அதே போலப் பேசக் கற்றுக்கொண்டார். ஈச் ஒண்ணணஸ், மாடம் (Each one annas, Madam), புருட் வெரி டேஸ்ட், மாடம் (Fruit very taste, Madam), மாங்கோ வீஸன் கானேகான், மாடம் (Mango season gonay gone, Madam) என்று சண்ட

மாருதமாக செட்டியார் இங்கிலீஷைப் போட்டு நொறுக்கித் தள்ளிவிடுவார். மற்ற பெரும்பாலோரான செட்டிமார்கள் பணத்தை ஏராளமாக வைத்துக்கொண்டிருந்தாலும், தாமும் அநுபவியாமல், பிறர் விஷயத்திலும் எச்சிற் கையால் காக்கை ஓட்டாமல் இருந்தது போலின்றி நமது ரமணீய செட்டியார் ஒரு விஷயத்தில் வேறு மாதிரி நடந்துகொண்டார். பிறர் சம்பந்தப்பட்ட வரையில் அவர் பரமலோபியாக நடந்துகொண்டாராலும், தமது சொந்த சுகபோகங்கள் சம்பந்தப்பட்டமட்டில் அவர் டம்பாச்சாரிக்கு அண்ணனாய் நடந்துகொண்டார். உதாரணமாக, அவருடைய சொந்த மனைவி மாம்பழம் வேண்டுமென்று கேட்டால், தமது கிடங்கில் அழுகிப் போய் விற்பனைக்கு அருகமற்றவையாகி குப்பைத் தொட்டிக்குப் போக வேண்டிய நிலைமையிலிருக்கும் பழங்களில் சிலவற்றைக் கொடுத்தனுப்புவார்; அவர் வைத்திருந்த தாசி தனக்குயிலுக்கு ஒவ்வொருநாளும் வந்த புதுதினிசு பழங்களில் முதல் தரமானவைகளாகப் பொறுக்கி ஒரு கூடைநிறையக் கொண்டு போய் நிவேதனமளிப்பார். அவர் சில விஷயங்களில் மிக கூர்மையான புத்தியோடு நடந்து கொண்டால், சில விஷயங்களில் அடியோடு ஏமாறிப் போவார். அவருடைய மனையாள் கட்டியும் உருண்டையுமாய் ஏராளமான நகைகளை வாரி அணிந்து கொண்டிருந்தாளானாலும், முகத்தில் இயற்கையான களையும் ஜ்வலிப்பும் இல்லையாதலால், அவ்வளவும் பிரேதத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரம் போலவே இருந்தது. நகைகளையும், பட்டாடைகளையும் விலக்கி, சாதாரண ஆடையாபரணங்களில் பார்த்தால், செட்டியாரம்மாள் சாக்ஷாத் பஞ்சமச் சேறியிலிருந்து நேரில் அப்போதே வந்தவள்போலிருப்பாள். ஆனால் அந்த அம்மாளுடைய ஆசாரமோ பிர

மாதமானது, வீட்டில் பின்னுள்ள கக்கூசுக்கு பகலில் எப்போது போனாலும், தனது ஆடைகள் முழுதையும் அவிழ்த்து வைத்துவிட்டு, சுத்த நிர்வாணமாகப் போய்விட்டுத் திரும்பி வந்து ஸ்நானம் செய்து, பிறகு ஆடைகளை அணிந்து கொண்டு வீட்டிற்குள் நுழைவாள். அவளுக்கு மூன்று வயதிலும், ஒரு வயதிலும் ஆண் குழந்தைகள் இரண்டு இருந்தன. ஆகவே செட்டியாருக்கு தம் மனையாட்டி கசந்து போகவே, அவர் மாதம் ஒன்றுக்கு 100 ரூபா கொடுத்து, தனக்குயில் என்ற முதல்தர தாசிப் பெண் ஒருத்தியைக் கொணர்ந்து, தமக்குச் சொந்தமான ஒரு பெரிய மெத்தை வீட்டில் வைத்துக்கொண்டிருந்தார். அவளுக்கு சமையல் முதலியன செய்து உபசரிக்க ஒரு வேலைக்காரியும், வெளிக் காரியங்களைச் செய்து கொடுக்க ஒரு போயியும் நியமிக்கப்பட்டிருந்தனர். அவருடைய வீட்டின் கதவு எப்போதும் மூடி, உள்புறம் தாளிடப்பெற்றிருந்தது. உள்புறத்தில் நடையில் போயி கையில் நூலை வைத்து மீன் பிடிக்கும் வலை பின்னிக் கொண்டே ஆஜராய்க் காத்திருந்தான்.

செட்டியாருடைய பழக்கடை வேலை பகல் பத்து மணிக்குள் தீர்ந்து போகுமாதலால், அவர் அதன்பிறகு தமது வீட்டிற்கு வந்து ஸ்நானபான அநுஷ்டான நியம நிஷ்டைகளையும் போஜனத்தையும் முடித்துக்கொண்டு நான்கு மணிவரையில் வீட்டில் இருப்பார். மணி சரியாக நான்கு அடிக்கையில், அவருடைய மோட்டார் வண்டி ஆயத்தமாக வீதியில் வந்து நிற்கும். செட்டியார் தத்ரூபம் புது மணப்பிள்ளை போலவே தம்மை அலங்கரித்துக் கொண்டு போய் மோட்டாரில் உட்கார்ந்துக்கொண்டு சவாரி புறப்படுவார். பிறகு

இரவு சரியாய் ஒன்பது மணிக்கே அவர் தமது சொந்த வீட்டிற்கு வந்து சேருவார்.

அதுபோல ஒரு நாள் பிற்பகல் நான்கு மணிக்குப் புறப்பட்ட செட்டியாருடைய மோட்டார் வண்டி பத்து நிமிஷங்களில், அவருடைய தாசி தனக்குயிலின் ஜாகைக்கு முன்னால் போய் நின்றது. வண்டியோட்டி ரத்னவேலு என்னும் யௌவனப் புருஷன் உடனே இறங்கி வந்து கதவைத் திறந்துவிட, செட்டியார் "ராமாநுஜா" என்று குரு நாமஸ்மரணம் செய்தபடி கீழே இறங்கி, தமது சோட்டாத் தடியை ஊன்றி, தொந்தியையும், பிரஷ்டபாகங்களையும் அப்புறம் இப்புறம் ஆட்டியாட்டிக் கோணங்கி நடை நடந்து, தாசி வீட்டின் முன்வாசற் கதவண்டை போய் சோட்டாத்தடியால் கதவை மெதுவாய் இரண்டு மூன்றுதரம் லொட்டு லொட்டென்று தட்டி, உஹா உஹா என்று கனைத்து அடித்தொண்டையால் பேசத் தொடங்கி, "அரே, எவுர்ரு அக்கடா? அரே போய்" என்றழைக்க, உள்ளே சிறிது தூரத்தில் இருந்த போயி, "ஆஜர், தேவரா," என்று கூறித் தனது உடைகளை சரிப்படுத்திக்கொள்ள, உடனே செட்டியார் பொறுமையின்றி மறுபடி பலமாய்த் தட்டி, "அரேய், தலுபு, ஜல்தி, எந்த ஸேபுரா! முண்டா கொடகா," என்று அதட்டினார்.

உடனே போயி, "ஒச்சே, ஒச்சே, ஒஸ்துன்னானு தேவரா" என்று கூறிக்கொண்டு கதவைத் திறந்துவிட்டு, "தண்டாலு ஸ்வாமி" என்று கூறி வணக்கமாய் அஞ்சலி செய்து, கைகளைக் கட்டிக்கொண்டு ஒரு பக்கமாய் ஒதுங்கி நிற்க, செட்டியார், "மஞ்சிதி, அரே ஸோலிகாடு, பண்ட்லோ, ஒக கம்பலோ பண்ட்லு உன்னாய், திஸுகுரா" என்று

உத்தரவு கொடுத்தபடி ஸொகுஸாக மேலும் நடக்க, போயி, "புத்தி, புத்தி," என்று கூறிக்கொண்டே வீதியிலிருந்த வண்டிக்கு ஓடி, உள் பக்கத்தில் இருந்த பழக்கூடை ஒன்றை எடுத்துக்கொண்டு வந்தான்.

தொப்பைச் செட்டியார் அடிக்கடி, "ராமாநுஜா" "எதிராஜா" என்று உரக்கக் கூறுவதும், இடையிடையில் வேண்டுமென்றே அடித்தொண்டையால் கனைத்துக் குரல் கொடுப்பதுமாய் ஆடி ஆடி அசைந்து தொந்தியை இடது கையால் தடவிக்கொண்டே முதல் கட்டுத் தாழ்வாரத்தைக் கடந்து எதிரிலிருந்த படிக்கட்டின் வழியாய் ஏறி மேன் மாடம் போய்ச் சேர்ந்தார். அவருக்குப் பின்னால் பழக்கூடை யோடு தொடர்ந்து வந்த போயி, அதை, மேன்மாடக் கூடத் தில் போடப்பட்டிருந்த சோபனலங்கிருதக் கட்டிலிற்குப் பக்கத்தில் வைத்துவிட்டு, ஒரு மூலையில் கெங்காளத்தில் ஆயத்தமாக வைக்கப்பட்டிருந்த ஜலத்தை ஒரு செம்பில் எடுத்து செட்டியாருடைய கால்களிரண்டையும் அலம்பி விட, அவர் "ராமாநுஜா" "எதிராஜா" என்று பல மாய்க் குரல் கொடுத்தபடி வெல்வெட்டு மெத்தைக் கட்டி லின்மேல் போய் ஸொகுஸாய் உட்கார்ந்துக்கொள்ள, உடனே போயி, கீழே இறங்கி அடிப்பாகத்திற்குப் போய்விட்டான்.

செட்டியார் இரண்டொரு நிமிஷம் அப்புறம் இப்புறம் கவனித்துப் பார்த்து ஆந்தைபோல் விழித்து, எவரும் வராததை உணர்ந்து, "ஹலோ, மை டியர் தனக்குயில், ஹியர் இஸ் ஸம் பிரஸென்ட் டு யூ" (Hallo, my dear Dhanaquil here is some present to you) என்று இங்கிலீஷில் கூறி, செல்லக் கூப்பாடு போட்டார். அது தமிழில் "ஏ, என்

அருமை தனக்குயில் இதோ உனக்குக் கொஞ்சம் சன்மானம் வந்திருக்கிறது" என்றுகிறது.

அடுத்த நிமிஷம், டக் டிக்கென்று கால் மெட்டிகளும் கல் கல்லென்று பாதச் சிலப்புகளும் சப்தம் செய்கின்றன. பட்டுப்புடவை ஸரஸரவென்று உராயும் ஓசை யுண்டாகிறது. ரோஜாப் புஷ்பம், அத்தர், ஜவ்வாது முதலியவற்றின் ஒன்று கலந்த பரிமள கந்தம் குபீரென்று ஓடி வந்து அந்தக்கூடம், கட்டில், செட்டியாருடைய நாசித்துவாரங்கள் முதலியவற்றில் பூர்த்தியாக நிறைந்துகொண்டு, "எச்சரிக்கை பராக், இந்திராணி வருகிருள்" என்று கட்டியங்கூறுகிறது. செட்டியாருடைய முகம் ஆநந்தத்திஞல் மலர்ந்து ஒன்றிற்கிரண்டு பங்ககலம் ஜல்லடைபோல் விரிகிறது. வாய் விரிந்து காதுகள் வரையில் நீண்டு போகிறது. இருளில் பெரிய மின்னல் தோன்றி, அதைப் பிளப்பதுபோலவும், நடுவில் எலெக்ட்ரிக் வெளிச்சத்திஞலான ஒரு ஸ்திரீ ரூபம் தோன்றுவதுபோலவும் தகத்தகாயமாக மின்னிய ஸ்வர்ணச்சாயலைக்கொண்ட, ஒரு யௌவன யடக்கொடி தனது கையில் பூஜைத்தட்டு, பனீரீஸ் பட்டு வஸ்திரம் முதலியவற்றை ஏந்தி, நாணிக்கோணி, மார்பை நெளித்து, மாறி மாறி இரண்டு பக்கத்து ஸ்தனமிதுனம் தன் தன் அருமை பெருமைகளைப்பற்றி ஓரத்தியாயம் ஊமை ஜாடைப் பிரஸங்கம் புரியும்படி காட்டிக்காட்டி ஒய்யார நடை நடந்து, கீழே குனிந்து கட்டை விரல்களைப் பார்த்தபடி அன்னம்போல் ஊர்ந்துவந்து செட்டியாருடைய காலகளுக்கடியில் தட்டு முதலியவற்றை வைத்து, இரண்டு கைகளையும் தாமரை மொட்டுபோல் அழகாகக் குவித்து, "வாங்க ஸாமி, தாஸனங்க" என்று கூறித் தனது அழகான பல் வரிசைகளை சொற்பமாய்த் திறந்து புன்னகை செய்ய,

செட்டியார் அப்படியே இன்பசாகரத்தில் தோய்ந்துபோனார். சந்தோஷப் பெருக்கினால் விரிந்துபோன அவருடைய முகம் சுருங்காமல் சாசுவதமாகவே நிலைத்து நின்றுவிட்டது.

அந்த தாசிப்பெண் தமிழ்ப்பாஷை பேசும் ஜாதியைச் சேர்ந்தவளாதலால், செட்டியார் அவளுடன் தெலுங்கில் பேசாமல் தமிழிலேயே பேசுவது வழக்கம். அவளுக்கு வயது பதினெட்டிற்குமேல் இருபதிற்குள்ளாகவே இருக்கும். உடம்பு கொடிபோல சிறிது நெட்டைப் பாங்கா யமைந்திருந்ததாயினும், இருக்கிறதோ இல்லையோ என்ற சந்தேகத்தை உண்டாக்கிய துவண்ட குறுகிய இடையைத் தவிர மற்ற அங்கங்களெல்லாம் பூசி விடப்பட்டதுபோல கரவு சரிவாயும் தளதளப்பாயும் செழுமையாயும் இருந்தன. தேர்த்தட்டுபோல மேல்பாகம் பருமனாயும், கீழ்ப்பாகம் சரிவாயும் அமைந்திருந்த அவளுடைய இடையோடு ஒட்டினாற் போலிருந்த நீல வெல்வெட் பாவாடை மடங்கி மடங்கிச் சென்று, தகத்தகாயமாய் மின்னிய ஜரிகைப் பேட்டிலும், மல்லிகை மொட்டுகள்போல் சுற்றிலும் தொங்கிய ஜரிகைக் குஞ்சங்களிலும் போய் முடிந்ததும், அதன்கீழ் பட்டைக் கொலுசு முதலிய ஆபரணங்கள் தந்தம்போலிருந்த கால்களை அழகுபடுத்தியதும், மேல்பாகத்தில் ஜரிகைப் புட்டாக்கள் நிறைந்த ரோஜா வர்ண தாவணியை இலேசாய்ப் போட்டு, இடையில் ஒட்டியாணம் அணிந்திருந்ததும், கட்டுங்கடங்காமல் வளர்ந்து செழித்து நீண்டு கிடந்த அளகபாரத்தை பக்கவகிடு செய்து அடக்கிப் பின்னி தாழம்பூக் கிள்ளுகளை வைத்து அகலமாய்ப் பின்னி பின் முழங்கால் வரையில் தொங்கவிட்டிருந்ததும், தலையில் பெரிய ரோஜாப் புஷ்பமொன்றைச் சொருகிக்கொண்டிருந்ததும், நெற்றியில் அகல

மான ஜவ்வாதுப் பொட்டிட்டிருந்ததும், அந்த அற்புத அலங்காரத்தில் அவள் தனது கைகள், கால்கள், உடம்பு முதலிய அங்கங்களை, வில்வைத்த சக்கரங்களை (Spring wheels) அநாயாசமாயும், வேகமாயும், சுலபமாயும் இயக்குவதுபோல பொறித்தட்டும் காலத்தில் இயக்கித் தனது அலுவல்களைச் செய்ததும், உலகத்தை மயக்கி வசீகரிக்க வந்த மோகனுவதாரக் காட்சிகளாய் அமைந்திருந்தன.

அவளுடைய உடம்பிலும், ஆடைகளிலும் கமகமவென்று கமழ்ந்த மாதுரியமான மணம், அந்த மேன்மாடம் முழுதையும் நிரப்பி, காற்றின் மூலம் அண்டை வீடுகளுக்குள்ளெல்லாம் பிரவேசித்துக் கலகம் விளைத்தபடி இருந்தது. செட்டியார் பரம பாகவதோத்தமர் என்பதை அந்த வசீகர வஞ்சி உணர்ந்துகொண் டிருந்தாளாதலால், அவருக்குத் தகுந்தபடி அவள் நடந்து கொண்டாள். அவள் அவரை நமஸ்கரித்தவுடன், செட்டியார், அவள் கொண்டுவந்திருந்த பன்னீர்க் கூஜாவை எடுத்து அவள்மீது தலை முதல் கால்வரையில் மெதுவாய்த் தெளித்து 'ஓம் சுத்திரஸ்து' என்று கூறி அவளுக்குப் புண்ணியாக வாசனம் செய்ய, அவள் அவரது பாதத்தண்டை உட்கார்ந்து, அப்போதும் ஈரமாயிருந்த அவருடைய பாதங்களிரண்டையும், பனுரீஸ் பட்டினுல் மெதுவாகத் துடைத்து விட்டு, வாசனை கலந்த சந்தனத்தை எடுத்து பயபக்தி விநயத்தோடு கால்களில் பூசி விட்டு, தட்டில் இருந்த உதிரி ரோஜாப் புஷ்பங்களை எடுத்து பாதங்களின் மேல்பாகத்தில் போட்டுப் பூஜை செய்து, கைகளைக் குவித்துக் கொண்டு எழுந்து, செட்டியார் இருந்த கட்டிலைச் சுற்றி மூன்றுதரம் பிரதக்ஷணம் வந்து, முடிவாக இன்னெருதரம் கீழே மண்டியிட்டுப் பன்முறை குனிந்து

குனிந்து நமஸ்கரித்து, கால்களை தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு, ஒரு புஷ்பத்தை எடுத்துத் தலையில் சூட்டிக்கொண்டு கைகட்டிக் குனிந்து பயபக்தி உருக்கத்தோடு கட்டிலுக்குப் பக்கமாக நெருங்கி நிற்க, அவள் செய்த பூஜையைக் கண்டு ஆநந்த பரவசமடைந்து மெய்ம்மறந்து அடிக்கடி, 'ராமாநுஜா' 'எதிராஜா' என்று கூறியவண்ணம் தேன் குடித்த நரிபோல் செட்டியார் உட்கார்ந்திருக்க, பெண்மணி, வாசனைச் சந்தனத்தை எடுத்து செட்டியாருடைய கழுத்து முதல் இடுப்பு வரையிலும், கைகளிலும் பூசிவிட்டு, தலையில் புஷ்பம் சூட்டிவிட்ட பின்னர், கூடையிலிருந்த பழங்களில் முக்கியமான சிலவற்றை எடுத்து பணிக்காக நறுக்கி, பரமஸாதுவாய் அவருக்குப் பக்கத்தில் நின்று, அவருடைய வாயில் போட்டபடி இருக்க, தொந்திச் செட்டியார் அடிக்கடி அடித்தொண்டையால் ஆட்டுக்கடா கனைப்பது போல் கனைத்து, "ராமாநுஜா, எதிராஜா, ஆகா, மஞ்சீதி, மஞ்சீதி, ஆநந்தம், பிரம்மாநந்தம், ராமாநுஜா, எதிராஜா, அந்தா மீதயா" என்று இடையிடையில் கூறியபடி கனித்துண்டுகளை ஸ்வீகரித்தருள, கடைசியில் அவள் நீட்டிய பால் பாத்திரத்தைக் கையில் வாங்கிய செட்டியாருக்கு வைஷ்ணவ சம்பிரதாயம் நினைவிற்கு வந்துவிட்டது.

வைஷ்ணவப் பிராம்மணர்கள் தண்ணீர் அருந்தும் போது இதர ஜாதியார் எவரேனும் எதிரில் இருந்தால், தமது மேல் வஸ்திரத்தை விரித்துத் தலைக்குமேல் போட்டு முகத்தை மறைத்துக்கொண்டு, அந்தத் திரைக்குள் ஜல பாத்திரத்தை வைத்துக்கொண்டு வாயில் பாத்திரம் படாமல் தூக்கி விட்டுக்கொள்வது வழக்கம், தொந்திச் செட்டியார் மற்ற செட்டியார்களுக் கெதிரில் அந்தப் பழக்கத்தை ஆடம்

பரமாய் அநுஷ்டிப்பவராதலால் அந்த தாசிப் பெண் பார்க்க, தாம் பால் அருந்துவது ராமாநுஜ சம்பிரதாயத்திற்குப் பழுதானதென் றுணர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தார். அவருடைய அங்கவஸ்திரத்தில் சந்தனம் படுமோ வென்றஞ்சி தாசிப்பெண், அதை எடுத்து தூரத்தில் கொண்டு போய் வைத்துவிட்டாளாதலால், செட்டியாருக்கு ஒரு யுக்தி தோன்றியது. அவளுடைய இடுப்புப் பாவாடையைச் சிறிதளவு உயர்த்தித் தமது முகத்தை அவள் பார்க்காமல் திரை போட்டுப் பாலை அருந்தினார்.

பிறகு தனக்குயில் அவருக்கு ஸொகுஸாய்த் தாம்பூல தாரணம் செய்துவிட, செட்டியார் அவளைத் தொடலாமோ கூடாதோ என்று மீனமேஷம் பார்ப்பவர்போல மெதுவாய் அவளுடைய முதுகுப் பக்கத்தில் கையைக் கொடுத்து, அணைக்க எத்தனித்தபடி, "ஆகா! சாலா மஞ்சிகுணம், அபரஞ்சி பங்காரு, My Darling, கண்ணுட்டி, ரொம்ப நாளியா நிக்கறே; கட்டில்மேலே ஏறி உக்காரு" என்று அனுமதி கொடுத்தருள, பெண்ணாள் மிக பதவிசாக ஏறி அவரது தொந்திக்குப் பக்கமாய் உட்கார, செட்டியார், கெடவாத்திய வித்வான் உமயாள்புரம் சுந்தரமையர் பானையை வயிற்றில் வைத்து அழுத்தி கும்காரம் செய்வது போல் அவளைப் பிடித்து தொந்தியின்மேல் சார்த்திக் கொண்டு, வாஞ்சையாக முதுகைத் தடவிக்கொடுத்து "ஆஹா, பரமஸாது, சாலாமஞ்சி மாதிரி, அநுபவிஞ்சேவாரிகி பொகு பஸந்து, கண்ணுட்டி தனக்குயில் எனக்கு ரொம்பநாளா ஒரு ஸந்தேகம். ஒங்கிட்ட கேக்கலாமோ கூடாதோன்னு யோசனை பண்றேன்" என்றார்.

தனக்குயில்:—(மிக துடியாகவும் உத்சாகத்தோடும் கணீ ரென்று மறுமொழி கொடுத்தவளாய்) ஓ! அவசியம் கேக்கலாம்; நீங்க எனக்கு ஸ்வாமிகள்; எதை வேணுமானாலும் கேக்கலாம்; என்ன வேணுமானாலும் செய்யலாம்.

செட்டியார்:—(இரண்டு மூன்று தரம் கனைத்துக் கொண்டு) என்மேலே நீ ரொம்ப தாஸ்தி பிரியம் வச்சிருக் கியே, நீ எங்கிட்ட வந்து சேந்ததுக்குமின்னே, வேறே ஆசாமி யாருக்கிட்டனாச்சும் சம்சாரமா இந்தியா?

தனக்குயில்:—அடாடா, ராமாநுஜா, எதிராஜா (காது களை மூடிக்கொண்டு) பாவம், பாவம், இன்னமே தயவு பண்ணி ஸ்வாமிகள் இந்த மாதிரி கேக்கவாணாம். நானு ஒங்க கிட்ட வந்தத்துக்குமின்னே, ஒரே ஒரு தப்பு நடந்துபோச்சு அதனாலெதான் ஸ்வாமிகள் இப்படி கேக்கிறீங்க.

செட்டியார்:—(சடக்கென்று முகமாறுபாடும் ஏக்கமும் கொண்டவராய்) ஓ! அப்பிடியா, தப்பா நடந்து போச்சு! அந்தத் தப்பு வருஷக் கணக்குலே நடந்திச்சா? இல்லாமெப் போனா, நாளுக் கணக்கா? ஆசாமி ஆரு? ஸ்ரீவைஷ்ணவாளா? இல்லாமெப்போனா, பாஷாண்டியா?

தனக்:—(மறுபடி செவிகளை மூடிக்கொண்டு) அடாடா, கஷ்டம், கஷ்டம், ஸ்வாமிகள் எப்பிடி எப்பிடியோ கேக்கருங் களே. அந்த மாதிரி நினைப்பை யெல்லாம் எம்மனசிலே உண்டாக்கவாணாம். சுத்தமான மனசு அசுத்தமாப் போயிடும். அந்த மாதிரிப் பேச்சுப் பேசவாணாங்க. நானு மொதமொதக் கண்ணாலே பாத்தது ஸ்வாமிகளைத்தான். அப்பவே, எம் மனசுலே பிரியம் உண்டாயிப் போச்சு.

வேதனை சோதனையாச்சு. சாப்பாடு வேப்பங்காயாச்சு. ராப்பாடு குதிரைக் கொம்பாப் போச்சு. ஒடம்பெல்லாம் நெருப்பா எரியுது. அந்த அவஸ்தையிலே எங்கம்மா ளோடெ உபத்திரவமும்கூடச் சேந்துது. ஹைகோர்ட் சர்ஜியாம் ஒரு பாப்பான். அதிலும் குறுக்குப் பூச்சுக்காரன். அவன்கிட்ட என்னெ உடனும்னு அவ துடிச்சா துடிச்சா அப்பிடித் துடிச்சா. சர்ஜியுமாச்சு தேஞ்சு போன தொடைப்பக் கட்டையுமாச்சுன்னு நானு சொல்லி எங்கம்மாளெ ரொம்பத் திட்டிட்டேன். அப்ப நானு நெஜத் துலெ புத்தியறியவே இல்லீங்க. ஆனு பாக்கறத்துக்கு வயசு பதினாறுக்கு மேலே ஆனமாதிரி இந்துது. நானு அப்படி யெல்லாம் புடிவாதம் புடிச்சத்துனாலே எங்கம்மா என்னெ ஸ்வாமிகளிடம் அனுப்பிச்சா ; இல்லாமெப் போனு, நானு இந்நேரம் அந்த சர்ஜிப் பாப்பானுக்குக் கூத்தியாளா இருக் கணும்.

சேட்டியார்:—ஓ! அப்பிடியா, (ராமாநுஜா நீ தயா) அந்த சர்ஜி ஐயரு ஒங்க ஊட்டுக்கு எப்பனுச்சும் வந்தாரா? ஓங்கிட்டப் பேசினுரா ?

தனக்:—அந்தப் பாப்பான் மூஞ்சி பத்தி எரிஞ்சுச்சு. நானு பெருத்த ரோஷக்காரீங்கறது இந்தப் பட்டணத்துக் கெல்லாம் தெரியுமே. எங்கிட்ட எந்த சீமை ராஜா வந்து பேசினுக்கூட, காலாலே எட்டி மூஞ்சிலே ரெண்டு ஒதை உட்டு கையிலே தாம்பூலமும் குடுத்தனுப்பற ருஸ்தூம் கப தூராச்சே நானு. அப்ப எந்தக் கொம்பந்தான் எங்கிட்ட வந்து என்ன பண்ண முடியும். நானு ஸ்வாமிகளிடத்துக்கு வந்து ஒரு மாசம் மூணே முக்கா நாளு களிச்சுத்தானே நெஜத்துலெ பெரிய மனுசி ஆனேன்.

சேட்டி:—(முக மலர்ச்சியும் உள்ளப் பூரிப்பும் அடைந்தவராய் அவளை மேன்மேலும் தடவிக் கொடுத்து தொந்தியில் கெட வாத்தியம் வாசித்து) மஞ்சீதி, மஞ்சீதி, ராமாநுஜா, எதிராஜா, ம், இன்னம் என்ன ?

தனக் :—என்னுயிசுலெ நானு ஸ்வாமிகளைத் தவிர வேறே எந்தப் புருசனையும் மனசாலெகூட நெனைச்சதில்லெ. இன்னமே எப்பவும் இதே மாதிரித்தான் படிதாண்டாப் பத்தினியா இருக்கப் போறேன். ஸ்வாமிகள் என்னை உட்டுட்டாக்கூட, நானு ஒடனே வெசத்தைத் துன்னுட்டு ஒங்க காலடிலெயே உயிரே உட்டுடுவேன். வேணு பரிச்சை பாக்கிறிங்களா. வெசங்கூட வாங்கித் தயாரா வச்சிருக்கேன். எடுத்தாரட்டுமா ?

சேட்டி :—(ஆநந்த சாகரத்தில் கிடந்து மிதந்தவராய்) வாணும், வாணும், ஐயோ பாபம், நீ விஷம் திங்கவா நானு ஒன்னை இங்கே கொண்டாந்து இவ்வளவு பிரியமா வச்சிருக்கறது. நானு எப்பவும் ஒன்னை உடவேமாட்டேன். எனக்குப் பின்னாலெ ஒனக்கு சரியா ஒரு லெக்ஷ ரூபா எளுதி வைக்கப் போறேன். நீ கவலைப் படாதே கண்ணுட்டி. இப்ப நீ சொன்னத்துலெ முக்கியமான ஒரு சங்கேகந் தீந்துது. ஆனா, என்னைப் பத்தியே இன்னொரு முக்கியமான சந்தேகம் உண்டாகுது.

தனக் :—அதெயுந்தான் சொல்லுங்களேன். கேக்கலாம்.

சேட்டி :—அது ஒரே சந்தேகந்தான். ஆனா, அதுலெ மூணு பிரிவு இருக்குது?

தனக் :—ஸ்வாமிகள் ஏன் இப்பிடியெல்லாம் இல்லாத பொல்லாத சந்தேகத்தை யெல்லாம் மனசுக்குள்ளற ஒளிச்சு வச்சுக்கினு அவஸ்தைப் படணும். எல்லாம் நெல்லுக்குள்ளற அரிசி யிருக்கறுப்புலெ முடியப் போவுது. நீங்க சொல்லுங்க; நானு எல்லாத்தியும் ஒடைக்கறேன்.

செட்டி :—நானு அதிய வயசான கிழவனு, சிறு புள்ளையா, நானு பாக்கறத்துக்கு அளவா இருக்கேனு, விகாரமா இருக்கேனு, ஒனக்கு எங்கிட்டஆசை உண்டாகுதா வெறுப் புண்டாகுதா, இந்த மூணு சந்தேகமும் தீந்துபோனா நிம் மதியாப் போவும்.

தனக் :—ஆஹா! ஸ்வாமிகளுக்கு என்னென்ன சந் தேகமெல்லாம் உண்டாவுதுங்கறேன். இதெல்லாம் வாணும் உட்டுடுங்க. நாங்க தாசிங்கதான். ஆனா ஒரு மனிசருக்கு அடிமையானா, அவுங்க எப்பிடி இருக்காங்க, ஏதா இருக் காங்கன்னு நிமிந்துகூடப் பாக்க மாட்டோம். எங்க உசி ரையே அவுங்க கிட்ட ஒப்பிச்சுடுவோம். கடைசிவரையிலெயே உறுதியா இருந்திடுவோம். கட்டின புருஷரு இருக்கையிலெ திருட்டுத்தனமா இன்னொரு கையைப் பாக்கற அவிசாரில்லவா ஆளு வாட்டசாட்டமா இருக்காங்களானு தாரதம்மியம் பாத்து, உண்ட வூட்டுக்கு ரெண்டகம் பண்ணறது. நானு மத்தப் புருசரு எப்பிடி இருக்காங்கன்னு நிமிந்து பாத்தால்ல அந்தத் தொந்தரயெல்லாம். நானு ஸ்வாமிகளுக்கு அடியாளா அமுந்துட்டேன். வயசுப்புள்ளையும் நீங்கதான். மம்மதனும் நீங்கதான், எம்மனசுலெ பொங்கற ஆசையெல்லாம் ஒங்க ளுக்கே சொந்தம், நானு இப்ப எங்கெ இருக்கறுப்புலெ தெரிஞ்சிருக்கேன் தெரியுமா? [illegible]

விஷ்ணுக்குப் பக்கத்துலெ குந்திக்கினு இருக்கறேன். வேறெ பேச்சில்லே. எம்மனசுலெ பொங்கற ஆநந்தத்தை யும் பிரியத்தையும் ஆராவது அளக்க முடியுங்கிறீங்களா? முடியவே முடியாதுங்க. இந்த ஒலகத்தையெல்லாம் ஒரு மரக் காலா வச்சு அளந்தா, ஒரு சுமாரு நூறு கோடி, ஆயிரங் கோடி மரக்காலுக்கு மேலெயே போவும்.

செட்டி:—அடேயப்பா! அவ்வளவு பிரியமா! தங் யோஸ்மி! கிருதார்த்தனானேன். ராமாநுஜா, அந்தா நீதயா. சரி, ரொம்ப சந்தோஷமாச்சு. இன்னெக்கி நல்ல சத்விஷ யத்துலெ பொழுது போச்சு. ஈ தினம் ஸுதினமு; நேர மாவுது; கடல்கரைக்குப் போவலாமா?

தனக்:—(சந்தோஷமாகத் துள்ளியெழுந்து சிரித்தபடி) ஓ அயாம் ரெடி, மை லார்ட் (Oh, I am ready, My Lord) அடியாள் தயாராய்க் காத்திருக்கிறேன். பிரபு சித்தம் என் சட்டம்.

செட்டி:—ஓ! My Dear கண்ணுட்டி! நீ இங்கிலீஷ்கூட ரொம்ப ஜோராப் பேசுறியே! (உரத்த குரலில்) அடே போய்.

போயி:-(மெத்தைப்படியில் இருந்தபடி) ஆஜர் தேவரா.

செட்டி:—மோட்டார் தய்யார் ஜேய செப்பு.

போயி:—புத்தி. புத்தி.

—என்று மறுமொழி கூறியபடி போயி வீட்டிற்கு வெளி யில் போய், திண்ணையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த மோட்டார் ஓட்டி ரத்னவேலுவைத் தட்டியெழுப்பி, செட் டியாருடைய உத்தரவைத் தெரிவிக்க, அவன் எழுந்துபோய் மோட்டார் வண்டியில் உட்கார்ந்துகொண்டு புறப்படத் தயாராயிருந்தான்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு செட்டியாரும், தாசிக் குயிலும் ஜிலு ஜிலுவென்று ஜரிகை ஆடைகளும், வைர

ஆபரணங்களும் ஜ்வலிக்க வந்து மோட்டாரில் அமர்ந்தனர். செட்டியார் ஒரு காலை ஊன்றி, இன்னொரு காலை அசன்மேல் போட்டு, தமது உடம்பு முன் பக்கத்தில் குடைகவிழ்ந்துபோகாதபடி தமது சோட்டாத்தடியை ஊன்றி, கைகளால் அதை அழுத்திப் பிடித்துக்கொண்டார். பெண்மணி, கல்யாணப் பெண் மணையின்மேல் உட்காருவதுபோல, முகம் உடம்பு முதலியவற்றைக் கீழேசாய்த்து இரண்டு கைகளையும் கோத்து அடக்கமாக மடிமீது வைத்துக்கொண்டு பரம ஸாதுபோல வீற்றிருந்தாள்.

வண்டி சென்றபோது செட்டியார் மிகப் பெருமையாய் அப்புறம் இப்புறம் நோக்குவதும், தமது மார்பைப் பார்த்துக் கொள்வதும், வீதியில் போனவர்கள் தங்கள் இருவரையும் கவனித்து, அவ்வளவு அற்புதமான அழகுவாய்ந்த புதுச் சோபனப் பெண்ணைத் தாம் வைப்பாய் அடைந்ததைப்பற்றி, தமக்கு நற்சாக்ஷிப் பத்திரம் அளித்துவிட்டுப் போகிறார்களா இல்லையா என்பதை, அவர்களுடைய முகக்குறியால் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்போல கூர்மையான தமது விழிகளைத் திறந்து பாட்டைசாரிகளின் கண்கள் கலங்கும் படி செய்துகொண்டே இருக்க, அரை நாழிகை காலத்தில் மோட்டார் வண்டி கடற்கரையை அடைந்து, ஜன நடமாட்டம் இல்லாத ஒதுப்புரமான ஒரு பக்கத்தில், இரஸ்தாவின் ஒரு பக்கமாகக் கட்டப்பட்டிருந்த குறட்டின் ஓரமாகப் போய் நின்றது.

வண்டியோட்டி விரைவாகக் கீழே இறங்கி ஒரு பக்கமாக வந்து கதவைத் திறந்துவிட, செட்டியார் 'ராமாநுஜா,' 'எதிராஜா' என்ற சப்தங்களுடன் பகீரதப் பிரயத்தனம் செய்து தட்டித் தடுமாறிக் குறட்டின்மீதிறங்கி நின்று, தாசிப்பெண்ணுக்குக் கைலாகு கொடுத்து அவளை மிக பெருமையாக் இறக்கிவிடும் கருத்தோடு தமது கையை நீட்ட, அவள், "எனக்குத் தலை கொஞ்சம் கனமாயிருக்குது; கீளே எறங்கினு,

அதியமா நீரு கோத்துக்கும்; நானு இப்பிடியே மறவாக் குந்திக்கினு இருக்கறேனுங்க. ஸ்வாமிகள் போயி உலாவிப் புட்டு வாங்க" என்று குழலும் யாழுமாய்க் கொஞ்சி மறு மொழி கொடுத்தாள்.

சிறிதும் எதிர்பார்க்காத அந்தப் பெரிய ஏமாற்றத்தி னால், செட்டியாருடைய முகம் உடனே சூம்பிப் போயிற்று. அவருடைய குதூகலம் இருந்த இடம் தெரியாதபடி பறந்து போயிற்று; ஆனாலும், அவளை வற்புறுத்தவும் அவர் விரும்ப வில்லை; "சரி; நீ யில்லாமெ நானு மாத்தரம் அலெயண்டை போறத்துலெ ஸுகமில்லெ; நானும் இப்பிடியே குறட்டு மேலெயே அப்பிடி இப்பிடி ரெண்டு மூணு தரம் சக்கர் அடிக்கறேன்" என்று கூறிவிட்டு சோட்டாத்தடியை மிக கம்பீரமாய் ஊன்றி, தமது தொந்தியைத் தடவுகிறதும், காக்கை முகத்தைத் திருப்புவதுபோல் அப்புறம் இப்புறம் தமது முகத்தைத் திருப்புவதும், ஏவ், ஏவ் என்று அடித் தொண்டையிலிருந்து பலமாய் ஏப்பம் விடுவதுமாய், மூன்று குண்டுக்கற்களாலான வென்னீர் அடுப்பும் தவலையும் ஒன்றோ டொன்று முஷ்டியுத்தம் செய்து, முன்னும் பின்னும் கால் வாங்கி நடந்து போவதுபோல விசுக் விசுக்கென்று சுமார் ஐம்பது கஜதூரம் குறட்டிலேயே சென்றார். மோட்டார் வண்டியின் முன்பக்கத்தில் அதை ஓட்டும் ரத்னவேல் என்னும் யௌவனப் புருஷனும், பின் பக்கத் தில் தாசி இளநங்கையும் உட்கார்ந்திருந்தனர்.

அந்த யௌவனப் புருஷனுக்கு சுமார் இருபத்துநான்கு வயது நிரம்பி இருக்கலாம். பார்வைக்கு, அவனுடைய தேக அமைப்பும் அலங்காரமும் பெரிய சமஸ்தானாதிபதி யின் செல்வப் புதல்வன் என்ற எண்ணத்தை உண்டாக்கின. ஆனால் அவன் ஒரு குறவனுடைய இரவல்மகன். அவனுடைய பாட்டன் சிலவருஷ காலத்திற்குமுன் சென்னைக்குப் பக்கத்தி லுள்ள மாம்பலம் என்னும் ஊரில் பூனை, நரி முதலியவற்

றைக் குத்தித் தின்றுகொண்டு திரிந்தே காலங்கழித்தவன். அவனுடைய மனைவி பாம்பை வைத்துக்கொண்டு வீடு வீடாகச் சென்று, காட்டிக்காட்டி பிச்சை வாங்கியும், எச்சில் இலைகளில் இருந்த ஆகாரத்தை உண்டும் பிழைத்தவள். அவர்களுடைய மகனை பூஞ்சோலைக் குறவன் எப்படியோ இரண்டு கழுதைகளையும், இரண்டு மனைவிமார்களையும் சம்பாதித்துக்கொண்டு, வெளியூரிலிருந்து கருவேப்பிலை பறித்து கழுதைகளின்மேல் போட்டுக்கொண்டு ஒவ்வொரு நாளும் சென்னைக்கு வந்து இரண்டு ரூபாய்க்கு விற்பான், ஒன்றே கால் ரூபாயைச் செலவிட்டு மூன்று பேரும் குடித்துவிட்டு, ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டே நடந்து நான்கு மயில் தூரத்திலுள்ள தங்கள் ஊருக்கு மாலையில் போய்ச் சேருவார்கள். ஒவ்வொரு நாளும் தங்களுக்குக் கருவேப்பிலைக் கட்டுகள் கொண்டுவந்து கொடுத்த ஆளுக்கு நான்கணு கொடுத்துவிட்டு, மிகுதி எட்டணாவைத தங்கள் சாப்பாட்டுச் செலவுக்கு வைத்துக் கொள்வார்கள். அப்போது அவர்கள் நரித்தோல் பைகள், சுரைக்குடுக்கை, பாசிமணி அலங்காரங்கள் முதலியவற்றோடு காணப்பட்டார்கள். அந்தக் குறவனுக்கு எப்படியோ லக்ஷ்மீ கடாக்ஷம் பிறந்துவிட்டது. சென்னையில் சுமார் ஐம்பது மார்க்கட்டுகள் வரையில் ஏற்பட்டுப் போயின. குறவன் திருத்தணியண்டை ஒருமலை முழுதும் கருவேப்பிலை வனமாகவே இருப்பதை அறிந்து, அதை வருஷக் குத்தகைக்கு எடுத்து, அங்கு ஆள்களை வைத்து ரயில் மார்க்கமாக தினம் ஒரு 'வாகனம்' (Waggon) கருவேப்பிலை சென்னைக்கு வரும்படி ஏற்பாடு செய்தான்; அதிகாலையில் அவன் தன் மனைவிகளோடு ரயில்ஸ்டேஷனுக்குப் போவான். ஐம்பது மார்க்கட்டுகளிலும் சில்லரை வியாபாரம் செய்யும் கூடைக்காரிகள் நூற்றுக் கணக்கில் தயாராய்க் காத்திருப்பர். ஒவ்வொருத்தியும் ஒரு ரூபாய் முதல் அரை ரூபாய் வரையில் கையில் ரொக்கம் கொடுத்து சரக்கு முழுதையும் எடுத்துக்கொண்டு

போய்விடுவார்கள். சுமார் இரண்டு மணி சாவகாசத்திற்குள் பூஞ்சோலைக் குறவன் சுமார் ஐம்பது ரூபாய் பணத்தோடு வீடு திரும்புவான். அவனுடைய சகலமான செலவுகளும் நாள் ஒன்றுக்கு பத்து ரூபாய்க்குள்ளாகவே முடியும். மாதம் ஒன்றுக்கு குறைந்தபட்சம் ஆயிரம் ரூபாய் மிச்சப்படத் தொடங்கியது. அந்த வியாபாரத்தில் அவனுக்குப் போட்டியே கிடையாது. கடைசியில் ஒவ்வொருவரும் வாங்குவது ஒரு தம்பிடிக் கருவேப்பிலையே. அந்த வியாபாரத்தை பூஞ்சோலைக் குறவன் சுமார் இருபது வருஷ காலமாய் ஏகபோக உரிமையோடு செய்து, இப்போது பூஞ்சோலை செட்டியாராய் விளங்குகிறான். அவனுக்கு சுமார் இருபது கோபிகா ஸ்திரீகளும், சுமார் ஐம்பது குழந்தைகளும் ஏற்பட்டனர்; பத்து மெத்தை வீடுகளும் உண்டாகிவிட்டன. அவற்றிலிருந்து மாதம் ஒன்றுக்கு வரும் குடிக்கூலி மொத்தம் ரூபாய் ஆயிரம். வெளி கிராமங்களில் ஏராளமான நிலம் வாங்கிவிட்டான். அவனும் அவனுடைய மனைவிகளும் கூத்திகளும் எவ்வளவு தான் குடித்தாலும், மாளாச் செல்வமாக வந்து குவிகிறது. பூஞ்சோலைக்குறவன் அதன் பின்னர் பிரபல ஓட்டர் ஆனான். அவன் இப்போது மோட்டார் வண்டியில், பெரிய தலைப் பாகை, ஸர்ஜ்கோட், கையில் தங்கச் சங்கிலியுள்ள மணிக்கட்டுக் கெடிகாரம், கையில் தங்கக் காப்புகள், காதில் கடுக்கன்கள் முதலிய அலங்காரங்களோடு செல்கிறான். அதற்குமுன் இதர ஜாதியாரைக் கண்டால் 'தாஸனம் ஸாமீ!' என்று கூறி பயந்து நடுங்கி கைகளைக் கட்டிக்கொண்டு, சாக்கடையோரமாக நின்றே பேசும் சுபாவமுடையவன் இப்போது வீட்டில் சாய்மான நாற்காலியில் கால்களை நீட்டிவிட்டுப் படுத்தபடி கணக்குத் தனிக்கை செய்கிறான். அவனுடைய குமாஸ்தாவான ஓர் ஐயர் காலடியில் நின்று, அவன் கோபிப்பதற்கு மறுமொழி கூற அஞ்சிப் பல்லைக் காட்டிக்கொண்டு பயந்து நடுங்கி உத்தியோகத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றிக் கொள்ளுகிறார். ஐயர் இல்லாதபோது, பிறரிடம் பூஞ்சோலை செட்டி,

"இன்னுங்கறேன் வரவர இந்தப் பாப்பான் கொளுத்துப் பூட்டாங்கறேன். மாசம் பொறந்து தேதி அஞ்சாவுது; இன்னம் கொடக்கூலி பாதிக்கிமேலே வசூலாவல்லெ; மொதத் தேதியாளு, பாப்பான் 'ஆத்துக்குன்னு சோத்துக் கில்லெ, அம்மாளுக்குன்னு பொடவையில்லெ, புள்ளெக்கிப் பூணூல் கண்ணாலம் ஆவணும்னு' என்னென்னமோ பித்தலாட்டமெல்லாம் பண்ணி ரூவாயெ அமுக்கிக்கினு பூட்ருன். கொடக்கூலி எந்த அப்பன் பாட்டன் ஊட்டுப் பணங்கறது தெரியல்லே அந்தப் பாப்பார அறுதலுக்கு" என்று மிக ஆடம்பரமாகப் பேசுகிருன்.

அந்த மகா புண்ணியவானுக்கும் ஒரு கூத்தியாளுக்கும் பிறந்தவன் ரத்னவேலு என்னும் சிறுவன். அவன் பெரியவனுகி மோட்டார் ஓட்டி வேலே கற்றுக்கொண்டு, தான் உயர்வான செட்டியார் ஜாதியைச் சேர்ந்தவன் என்று கூறி, தொந்தி ரமணைய செட்டியாரிடம் மோட்டார் வேலே யில் அமர்ந்திருந்தான். பையன் மாநிறமாயிருந்தாலும் கட்டு மஸ்தாக மொழு மொழுவென்றிருப்பான். முகமும் அழகாயும், களேயோடு கூடியதாயும் இருக்கும். அவன் ஸில்க் ஷர்ட், வெள்ளேக்கடுக்கன்கள், தங்கக் காப்பு, தங்கச் சங்கிலி, மணிக்கட்டு கெடிகாரம், மோதிரங்கள் முதலிய அலங்காரங்களோ டிருப்பான். பிறருடன் பேசும்போதும், அவன் இடும்பாகவும், பெரிய மனித தோரணையாகவும் பேசுவான். செட்டியாருக்கெதிரில் அவன், தனக்குயில் இருந்த திக்கிலேயே திரும்ப மாட்டான். அவர் தூரப்போய் விட்டால், பின்பக்கம் திரும்பாமலும், ஒரு கையை வாயின் மேல் வைத்து உதடுகள் அசைவது தெரியாமல் மறைத்துக் கொண்டும் மெதுவாகப் பேசுவான். பெண்ணரசி கீழே குனிந்தபடியே அவனுக்கு மறுமொழி கொடுப்பாள்.

நாம் மேலே குறித்த தினத்தன்று செட்டியார் இறங்கிக் குறட்டோடு சுமார் ஐம்பது கஜதூரம் ஜோராய் நடந்து

போனாரல்லவா; அப்போது மோட்டார் வண்டியில், அடியில் வருமாறு சம்பாஷணை நடக்கத் தொடங்கியது :—

ரத்னவேல் :—(மிக உருக்கமான தழுதழுத்த குரலில் பேசத் தொடங்கி) கண்ணூ, இன்னம் எத்தினி நாளேக்கி நீ என்னெ இப்பிடி உசிரோடெ கொல்லப்போறே? ஒம் வைத்தியத்துலெ நானு வெகு சீக்கிரத்துலெ கத்தியாலெ குத்திக்கினு சாவத்தான் போறேன். நானு சொம்மா செத் துடுவேன்னு பாத்துக்கிடாதெ. மின்னாலெ ஒன்னெக் குத்திப் போட்டுட்டு அப்பாலெ நானும் அப்பிடியே சேஞ்சுக்கப் போறேன்.

தனக் :—(இளக்கமான பார்வையாய் அவனைப் பார்த்து நெடுமூச்செறிந்து) எனக்கும் அப்பிடியேதான் இருக்குது ராஜா. இந்தப் பித்துக்கொள்ளிச் செட்டி எப்ப பாத்தாலும் எளவு துடுத்த மணியமா இருக்கறான். ஊட்டுலெயா அந்தப் பேரயி காவக் காத்துக்கினே கெடக்கறான்; நானும் என் னென்னமோ தந்தரம் பண்ணிப் பாக்கறேன்; சமயம் வாய்க் கல்லே, இருக்கட்டும்; நானு ரொம்ப சீக்கிரத்துலெ என் னுச்சும் தோது பண்ணி ஒன்னை அளெச்சிக்கறேன்; கொஞ் சூண்டு பொறுத்துக்கொ ராஜா.

ரத்னவேல் :—என்ன ராஜாத்தி நீ எங்கிட்டவே ஜோக் உட்றியே. இந்தக் கிண்டிலெல்லாம் பண்ணாதெ தங்கம்; எங்கே, மூஞ்சியெக் கொஞ்சம் நிமித்து, ராமாநு ஜன் திரும்பறத்துக்குள்ளற ரெண்டே ரெண்டு கல்கண்டு முத்தம் தந்துடு—என்று கூறியபடி அவன் தனது முகத்தைப் பின்புறம் சடக்கென்று திருப்ப, தாசிப்பெண் அவனுடைய உடம்பின் மறைவில் நகர்ந்து உட்கார்ந்து கொண்டு, தனது முகத்தை சரேலென்று நிமிர்த்தி முன்பக்கம் நீட்டினாள். இருவரது முகங்களும் ஒன்றுபட்டன. அந்த நிலைமையில் அவர்கள் இரண்டு நிமிஷகாலம் இருக்க, உடனே தனக்குயில்,

“அடே, அடே, உடு உடு, ராமாநுஜன் திரும்பிட்டான். பாத்தான்னுக் குடிகெட்டுப்போவும்” என்று பதைப்போடு கூறித் தன்னை விடுவித்துக்கொள்ள முயன்றாள்.

உடனே ரத்னவேல் முன்பக்கம் திரும்பி தொந்திச் செட்டியார் என்ன செய்கிறார் என்று பார்த்து, அவர் தொப்பையைத் தடவிக்கொண்டே போய்க்கொண் டிருந்ததைக் கண்டு, மறுபடி சரேலென்று பின்புறம் திரும்பி, “இந்தத் திருட்டுத்தனம்தான் வாணுங்கறேன்; பூசை வேளேலெ கரடியை உட்டு ஓட்டருப்புலெ நல்ல சமயத்துலெ காரியத்தைக் கெடுத்துட்டியெ. நிமித்து தலெயெ.” என்று அன்பாக வற்புறுத்திக் கூறியபடி, தனது வலக்கரத்தை பின் பக்கம் விடுத்து அவளுடைய தாவணியைப் பிடித்து இழுக்கத் தொடங்கினன்.

அப்போது உண்மையிலேயே செட்டியார் திரும்பி வரத்தொடங்கி விட்டாராதலால், பெண்ணாள் துடியாய் அவனுடைய கையைப் பிடித்துத் தள்ளி, “அடெ; வந்துட்டான் செட்டி. கம்மிண்டிரு. ஒண்ணும் சொல்லாதே. செட்டிக்கு பாம்புக்காது. நாம்ப பேசறத்தெக் கண்டுக்கிவான். இந்தப் பக்கமே திரும்பாதே” என்று கூறி, முன்போல் ஒழுங்காய் உட்கார்ந்து கொண்டாள். குறவன், எதிரில் ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த கந்தைத் துணிச் சுருணையைக் கையில் எடுத்துக்கொண்டு எதிர்ப்பக்கத்தை மறைத்துக் கொண்டிருந்த கண்ணாடி அடைப்பின் அழுக்கை மிக அக்கரையாகத் துடைப்பவன்போலப் பாசாங்கு பண்ணத் தொடங்கினன்.

உலகத்தில் பலர் இதுபோலவே நடந்து கொள்ளுகிறார்கள். தாம் மாத்திரமே புத்திசாலிகள் என்றும், அயலார் வயோதிகராகவோ, விகாரமான தோற்றமுடையவராகவோ, அல்லது, அசட்டுக் காரியங்களைச் செய்பவர் போலவோ தோன்றுவதிலிருந்து, அவர்கள் பிறருடைய சாமர்த்தியத்தை

யும், திருட்டெண்ணங்களையும் அறிந்துகொள்ளத் திறமை யற்றவர்கள் என்று கருதி, தங்களுக்குள் குறும்பாகவும் திமிராகவும் பிறரை இளக்காரப்படுத்தியும் பேசிப்புரளிசெய்து கொண்டேயிருப்பது வழக்கம். எதிராளி வாயைத் திறக் காமலே இருந்து இவர்களுடைய இடுப்பை முறித்து, மகா விஷ்ணு பலிச்சக்கரவர்த்தியைப் பாதாளத்தில் அழுத்தியது போல், கர்வபங்கம் பண்ணும்போது, "ஓகோ! நம்முடைய உண்மையான யோக்கியதை இவ்வளவுதானா, நம்முடைய தறுதலைப் பேச்செல்லாம் எதற்காயிற்று; மற்றவருக்கும் இவ்வளவு புத்திசாலித் தனம் இருக்கிறதா" என்று எண்ணிக் கண்ணீர் விடுத்தழுது கலங்குவது சாதாரணமாக நடக்கும் விஷயம். "எறும்பும் தன் கையால் எண் சாண்" என்பதைப் பல பேதையர் உணர்கிறதே இல்லை.

இதுபோலவே, இருபிறப்புக் குறவனும், தாசிப்பெண் ணும் கருதி, செட்டியாரை இளக்காரமாக நினைத்து, அவருக் குத் தெரியாதபடி தாம் மிக சாமர்த்தியமாகக் காரியத்தை நடத்துவதாக நினைத்துக் கொண்டிருந்தனராளூலும், செட்டி யார் நிரம்பவும் கூர்மையான விவேகமுடையவராதலால், அவர் போய்க் கொண்டிருந்தபோது அடிக்கடி திரும்பிப் பார்த்து, இவர்கள் ஏதோ சம்சயமான காரியம் செய்ததாக சந்தேகங்கொண்டு, அதனாலேயே திரும்பி வந்தார்.

வந்தவர் சந்தேகத்திற்கு சிறிதும் இடங் கொடாமல் எவ்வித முகமாறுபாடுமின்றி வண்டியண்டை நெருங்கிவந்து, புன்னகை ததும்பிய முகத்தோடு தனக்குயிலை நோக்கினார். அவள் கீழே குனிந்தபடி தன் இடது கை விரல்களால் நெற்றிப் பொட்டுகளை அழுத்திவிட்டுக் கொண்டிருந்தாள். செட்டியார் அவளுக்கருகில் நெருங்கி, "தலைநோவு எப்பிடி இருக்குது? ஊட்டுக்குப் போவலாமா?" என்று அன்பொழுக வினவினார்.

அதைக் கேட்ட அந்தத் தளுக்கு சுந்தரி, "ஸ்வாமிகள் போனத்துக்கு அப்பாலே நோவு கொஞ்சம் படிமானந்தா

ஹுங்க;இன்னம் கொஞ்சநேரம் போனு முளுக்க குணமாயிடும். ஸ்வாமிகள் இன்னொருதாம் உலாவிட்டு வாங்க" என்ருள்.

செட்டியார், 'எவ்' என்று ஒரு தரம் அடித்தொண்டையால் எப்பம் விட்டு, "மஞ்சீதி" என்று கூறி, அவளுடைய அபிப்பிராயத்தை ஆமோதித்து, மறுபடி தடியை ஊன்றி மாம்ஸக் குன்றுகளைத் தூக்கமாட்டாதவராய் அரும்பாடுபட்டு அவைகளை மாறி மாறி முன்னும் பின்னுமாக நகர்த்தியபடி குதூகலமாக நடந்து செல்லலானுர். அவ்வாறு செட்டியார் சுமார் ஐம்பது கஜதூரம் சென்றிருப்பார். உடனே குறவன் மறுபடி துவக்கிக் கொண்டவனுய், "ஒளிஞ்சான் சனியன். அவன் ஊட்டுக்குப் போவணும்னு திரியும் சொன்னு, புடி குடுக்காதே. இருட்டினப்பாலெ போவலாம்னு சொல்லிடு. எங்கே, மொவத்தைத் தூக்கு. நீ என்ன சொல்றே முடிவா? நானும் பொறுத்துப் பொறுத்துப் பாத்துட்டேன். நீ ஜோக்குப் பண்ணிக்கினே போறே. அது இன்னமேப் பலிக்காது. ஒண்ணு நம்ப இஷ்டம் நெறைவேறணும்; அல்லாட்டி, ஒன்னெக் குத்திப் போட்டுட்டு நானும் குத்திக்கினு சாவணும். ரெண்டுலெ ஒண்ணு முடிவு. என்ன சொல்றே? (மறுபடி இரண்டு முகங்களும் ஒன்ருகச் சேருகின்றன) ஒன்னெ நானு உடமாட்டேன்; செட்டி வந்து என்ன பண்ருனே பண்ணட்டும்; நீ எங்க ஊட்டுக்கு வந்துடு; ஒனக்குச் சோறுபோட எனக்கு தெறமை உண்டு; இருந்திருந்து ஆளெப்பாத்துப் புடிச்சியே; சுத்தப்பொத்தப் பூசினிக்கா கணக்கா இருக்கருன்; அவனெக் கட்டிக்கினு எப்பிடித்தான் மாரடிக்கிறியோ! ஒன்னோடெ அந்துசு இப்பிடிப் பட்டதுங்கறது இந்தப் பித்துக் கொள்ளிக்கித் தெரியவாபோவுது; இருக்கட்டும், எனக்குள்ளற ஒரு சந்தேகம் உண்டாவுது; நானு ஒரு கேவி கேக்றேன்; நீ உள்ளத்தை உள்ளபடி சொல்லணும்; மறைச்சியோ பாத்துக்கொ; இந்தத் தொந்திச்செட்டி ஒங்கூட்டுக் கட்டுல்லெ வந்து குந்திக்குனு என்ன பண்ணுருன்? ஒனக்குக் காலுதானே புடிச்சுவுட்ருன்?

அவனெக் கையாலெ தொடப் புடிக்குதா ஒனக்கு? அவன் மூஞியெப் பாக்கச்செயெ, நம்ப கண்ணுரெண்டும் கலங்கித் தெறிச்சுப்போவுதெ; அவன் மொவத்தை நீ எப்பிடிப் பாக்கறே" என்றான்.

தனக் :—இதான் மின்னெப் பின்னெ யோசிக்காமெப் பேசற பேச்சு. பணம், சாப்பாடு, வீடு, வாசு, கட்டிலு, மெத்தை, நவை நட்டு, மோட்டாரு, வேலெக்காரரு எல்லாம் செட்டியாரோடெ ஒபயம். அதுலெ நமக்கென்ன கயிஷ்டம். அவனாலெ கடப்படாத சங்கதிக்கு அவனெ நாம்ப இன்ன பண்ணறது. அதுக்கு நீயாச்சுநானுச்சு; அதுனாலெ செட்டிக்கு ஒண்ணும் நயிஷ்டமே இல்லெ; நானு ஒங்கூட்டுக்கு வந்தா, நீ சம்பாறிக்கற சம்பளம நம்ப வாசனே சோப்புச் செலவுக்குப் பத்துமா! அதுவு மில்லாமெ, நானு ஒனக்கே சொந்தமா வத்துட்டா, நமக்குள்ளற இம்பிட்டு மோகம் உண்டாவுமா! அப்பாலெ, நீ ஆரோ, நானாரோன்னு போயிறும். நீ இன்னொரு கையெப் பாக்கக் களம்பிடுவே; எப்பவும் ஊராரு சொத்தெ அபகரிக்கறத்துலெதான் சொகம் அதியம்; அது தான் எப்பவும் தெகட்டாமெ நெலெச்சு நிக்கும்; நானு எப்பவும் செட்டிக்கிட்டவே இருக்கணும்; நீயும் நானும் ரகஸிய த்துலெ ஸந்தோசமா நடந்துக்கணும்; அதுதான் மனசுக்கு ரொம்பசொகம்; எப்பவும் சொந்தமா வச்சுக்கறவங்களுக்கு, சாப்பாடு போட்டு பணத்தெக் கொட்டிக் காக்கற பாடு தான் மிஞ்சும்; நாம்ப இப்ப செய்யறதே சரியான வேலெ; நீ அந்தப் பைத்திக்கார நெனெப்பெ யெல்லாம் உட்டுடு; குத்தறது, வெட்றதுங்கற பேச்செல்லாம் வாணும்; நானு ஒன்னோடெ ஈஷ்டத்துக்கு ஒத்துக்கமாட்டேன்னுசொன்னுல்லஅந்தப்பயமுறுத்தல்லாம்வோணும்;நாந் தான் நீ இளுக்கற இளுப்புக்கெல்லாம் வாறேனே. சமயம் பாத்தல்ல, தோது பண்ணணும்—என்று கூற, இருவரது முகங்களும் மறுபடி ஒன்றாகச் சேருகின்றன.

அப்போது செட்டியார் திருப்பிப் பார்த்து அப்படியே பிரமித்து ஒரு விநாடி நின்றபின் உரத்தகுரலில், "என்ன ரத்னவேல், அம்மா என்ன சொல்றுங்கோ, தலைநோவுக்கு மருந்து கேக்கறுங்களா? தலை நோவுக்கு மந்தரம் போட்டியா? நானு இதோ வந்துட்டேன்; வண்டியைத் திருப்பு; ஊட்டுக்குப் போவலாம்" என்றார்.

உடனே வண்டியோட்டி திடுக்கிட்டு முன் பக்கம் திரும்பிக்கொண்டான். தாசிப்பெண் சரேலென்று தன் முகத்தைக் கீழே கவிழ்த்துக்கொண்டு, "செட்டி பாத்துட்டாப் புலெ இருக்குது; சாக்கிர்தெ. 'ரோட்டுப்புளுதி எங்கண்ணுலெ உளுந்துட்டுது, நானு ஊதச் சொன்னே' ன்னு சொல்லு" என்று உடனே அவனுக்கு ஒரு யுக்தி சொல்லிக் கொடுத்துவிட்டுக் கண்களைப் போட்டுத் தேய்த்து நன்றாகக் கசக்கிவிட்டுக் கொண்டு கண்களை மூடிக்கொள்வதும் திறந்து கொள்வதுமாகப் பாசாங்கு செய்தபடி இருக்க, செட்டியார் ஜாம் ஜாமென்று நடந்து வண்டியண்டை வந்து நின்று கொண்டு, தமது கண்களை பயங்கரமாக விழித்து மோட்டார் ஓட்டியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தபடி, "என்ன, ரத்னவேல், அம்மாளுக்கு என்ன ஒணுமாம்? ஏதாச்சும் குடுத்தியா?" என்றார்.

அவருடைய பயங்கரமான விழிகளைப் பார்க்க மாட்டாமல் குறவன் கூச்சமும் திகிலும் கொண்டு தடுமாறி, "திடீருனு ஒரு சொயல் காத்தடிச்சிதுங்க. ரோட்டுப்புளுதி குபீருனு களம்பி அம்மா கண்ணுலெ உளுந்துட்டுதுங்க. தலெநோவு அதியமாப் போச்சுன்னுங்க; மண்ணு உறுத்தலெப் பொறுக்க மாட்டாமெ கயிஷ்டப் பட்டு ஊதச்சொன்னுங்க. பிம்பக்கம் திரும்பி தூர இருந்தாப்புலெ ஊதினேனுங்க. இப்ப கொஞ்சம் கொணாந்தானுங்க" என்றான்.

அதைக் கேட்ட செட்டியார் தனக்குயிலின் பக்கம் திரும்பினர். அவள் தன் முகத்தை நிமிர்த்தாமல் கீழே குனிந்தபடியே இருந்தாள். உடனே செட்டியார், “ஓ, அப்பிடியா! நல்ல வேலெ சேஞ்செ! நானு இன்னொருதரம் சக்கர் அடிச்சுட்டு வர்றேன். மறுபடி சொயல் காத்தடிக்கப் போவுது. அம்மாளெ பத்ரமாப் பாத்துக்கோ” என்று கூறிவிட்டு, மறுபடி திரும்பி குசாலாக நடக்கலானர். அவர் சுமார் ஐம்பது கஜதூரம் சென்றவுடன், குறப்பையன் பின்பக்கம் திரும்பி, “நீ பலே ஆசாமி. செட்டி கேட்டத்துக்கு சவ்வாப்புக் குடுக்கமாட்டாமெ நானு முளிச்சிருப்பேன்; நீ சொல்லிக் குடுத்த கதையெச் சொல்லி செட்டியெ ஒரு சணத்துலெ ஏமாத்திப்புட்டேன். எம்பிட்டுச்சுருக்கா நீ செட்டிக்கிப் பட்டுக்குல்லா போட்ற வித்தையெ எனக்குக் காட்டிக் குடுத்தெ! நீ சொல்லிக் குடுக்காமெ இருந்தா, நானு பெப்பேன்னு முளிச்சிருக்கணும். செட்டி உள் ரந்தரத்தைக் கண்டுக்கினு இருப்பான். நல்ல வேளெயாத் தப்பிச்சுக்கினம். நீயும் நானும் ஒண்ணுச் சேந்து இவனெ ஏமாத்தறத்துக்கு ஆரம்பிச்சா, இவானலெ இன்ன பண்ண முடியும். ஒரு நிமிசத்துலெ இவுனுக்கு நாம்ப பெரிய பட்டைநாமம் சாத்திப்புடலாம்” என்று கூறியபடியே பின்புறம் திரும்பி, பெண்ணுளின் அற்புத அழகினல் வசீகரிக்கப்பட்டு மறுபடியும் கையைப் பின்னல் கொடுத்து அவளுடைய முகத்தைப் பிடித்துத் தூக்கித் தன் வேலையைத் துவக்கிக்கொண்டான்.

பாதி தூரம் சென்ற செட்டியார் சடக்கென்று திரும்பிப் பார்த்து பலமாகக் கனைத்துக்கொண்டு, இரண்டொரு தரம் ஏப்பம் விட்டு, “ஆகா! மோசம்! மோசம்! பாத பூஜை பண்ணற பத்தினியம்மா செய்யறது சரியான காரியந்தான். நாயைக் குளிப்பாட்டி நடுவூட்டுலெ வச்சா, அது வாலெயாட்டிக்கினே மலந்திங்கப் போவுமல்லவா! தேவிடியா எங்கெயும் தேவிடியாளாத்தான் இருப்பா, சொந்தப் பொண்டாட்டி எப்பவும் சொந்தப் பொண்டாட்டிதான். பணத்தைக் கொட்டி

புத்தியெ வெலைக்கி வாங்கினேன்" என்று தமக்குத் தாமே பேசிக்கொண்டு கோபாவேசத்தோடு திரும்பி வரலானார். உடனே தனக்குயில் கீழே குனிந்திருந்தபடி தணிவான குரலில் பேசத் தொடங்கி, "செட்டி நல்லாப் பாத்துட்டாம் போலெ இருக்குது; 'பூருச மரத்துலெ இருந்து முசுக் கட்டை எறும்பு பத்துப் பதினஞ்சு பொத்துனு எந்தலெயிலெ உளந்து மூஞ்சிலெயும் முதுகிலெயும் ஓடிச்சு, வாயாலெ ஊதி, கையாலெ தட்டிவிட்டேன்னு சொல்லு" என்றாள்.

வண்டியண்டை வருவதற்குள், செட்டியார் தமது கோபாவேசத்தை அடக்கிக்கொண்டு சிரித்த முகத்தோடு மிக சாந்தமாக வந்து நின்று குறவனை நோக்கி, "மறுபடி தூசி கண்ணுலெ உளுந்திச்சா? ஒங்கையி அம்மாளோடெ முதுவுப் பக்கத்துலெகூடப் போச்சே; அங்கேகூட தூசி உளுந்திச்சா?" என்று அடித்தொண்டையால் பேசினார்.

குறவன்:—இல்லெ எசமானே. இந்த மொறை தூசி உளல்லெ; வேறே ஒரு பெரிய கயிஷ்டம் உண்டாயிப் போச்சு துங்க.

செட்டியார்:—ஆ! அப்பிடியா! கயிஷ்டமா உண்டாயிப்போச்சு! என்ன கயிஷ்டம்பா அது?

குறவன்:—மேலே பூருசமரத்துலெ எலெய்ங்கள்ளெ எறும்புங்க கூண்டு கட்டி யிந்திச்சாங் காட்டியும். இருந்தாப்புலெ இருந்து பத்துப் பதினஞ்சு செழுப்பெறும்புங்க ஒரே கும்பலா அம்மா தலெமேலே உளுந்து மூஞ்சிலெயும் பின் பக்கத்துலெயும் தாறுமாறு ஓடிச்சுங்க. கொஞ்ச நேரத்துலெ அம்மா தவிச்சுப்பூட்டாங்க. ஆவத்து சமயத்துலெ ஆராச்சும் பாவம்னு பாப்பாங்களா; அந்த சமயத்துலெ நீங்க ரொம்ப தூரத்துலெ இந்தீங்க; ஒங்களெ அளெச்சி, நீங்க வரமட்டும் காக்க முடியலெ. நானே சடக்குனு திரும்பி வாயாலே ஊதி, கையாலெ தட்டினேனுங்க. அம்மா

ளோடெ கண்ணெப் பாருங்க. ரெண்டு கண்ணுங் கலங்கிப் போயிருக்குதுங்க.

செட்டியார்:—மஞ்சீதி. சமயம் பாத்து நல்லா ஒபகாரம் பண்ணெ. ரத்னவேலு, நீ நல்ல பையன்; ஒனக்கு சம்பளம் இன்னொரு அஞ்சு ரூவா தாஸ்தி போட்டுக் குடுக்கப் போறேன்; நீ கொஞ்சம் கீளே எறங்கி இப்பிடி வா— என்றார்.

ரத்னவேல் தன் சம்பளத்தை செட்டியார் உயர்த்தப் போவதாகச் சொன்னதைக் கேட்டு மிகுந்த களிப்படைந்தவனாய், அவருடைய கருத்தை அறிந்துக் கொள்ளாமல் கீழே இறங்கி வந்து வணக்க ஒடுக்கமாய் அவருக்குப் பின்னால் விலகி நின்றான்.

உடனே செட்டியார் மிக பிரியமாக தாசிப் பெண்ணைப் பார்த்து, "என்ன, இன்னைக்கி நாம்ப பொறப்பட்ட வேளெ சரியாயில்லேப்போ லிருக்குதே. ஒனக்கு அபாயத்துக்குமேலே அபாயமா வருதே; எங்கே, கண்ணைக் காட்டு; கீளே எறங்கி இப்பிடி வெளிச்சத்துக்கு வா, நல்லாப் பாக்கலாம்" என்று வாஞ்சையோடு அழைக்க, தாசிப்பெண் இரண்டு கைகளாலும் கண்களைப் பொற்றிக்கொண்டு கீழே இறங்கி அவரண்டை நெருங்கி வந்தாள்.

செட்டியார் உடனே அவளுடைய தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு, இமைகளை விலக்கிக் கண்களை ஆராய்ச்சி செய்து பார்த்து, பெருத்த அபாயத்தைக் கண்டு நடுங்குகிறவர்போலத் தத்தளித்து, "அடாடா, கண்ணு ரெண்டும் ஒரே ரெத்த மயமா இருக்குதே; எறும்பு கடிச்சத்துலெ ஒதடுங்ககூட வீங்கிப் போச்சே! இது பொல்லாத விஷமாச்சே! இது நாயி கடி விஷத்தைவிடக் கெட்டதல்லவா. நம்ப கடையிலெ இதுக்கு ஒரு மருந்து இருக்குது; அதெப் போட்டா ஒரே நிமிஷத்துலெ இந்த விஷம் வாங்கிப்போவும். நீங்க ரெண்டு பேரும் கால்மணி நேரம் இப்பிடியே நில்

னுங்க; நானு இப்பிடியே கடைக்கிப் போயி, பத்து நிமிஷத் துலெ மருந்தோடெ வர்றேன்" என்று கூறியபடி சடக் கென்று ஏறி மோட்டார் ஓட்டியின் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு கதவுகளை மூடி, வண்டியை ஓட்ட ஆயத்தப்படுத் தியபடி அவர்கள் இருவரையும் பார்த்து, "கண்ணுட்டி, இந்த எடத்துலெ தனியாக இருக்கறத்தெப் பத்தி பயப்படாதே! உன் ஒடம்புலெ இருக்கற நகைகள்ளாம் வைரமல்ல. எல் லாம் ஜெர்மன் இமிடேஷன் சூது வைரங்கள். உன் மன உறுதியெப் பாத்து அப்பாலெ சீமைக்கமல நகைகள் வாங்க லாமின்னு நெனெச்சிருந்தேன். ஒட்டியாணம்கூட கில்ட்தான். இப்ப இருக்கும் நகைங்க எல்லாம் இருபத்தஞ்சு ரூவாகூடத் தாளாது; திருடன் கொண்டு போனுக்கூட ஒனக்கு அதிய நஷ்டமில்லெ; இதுவரையிலெ நானு ஒனக்காவ செலவு பண்ணது மொத்தமா ரூவா ஆயிரம் இருக்கும்; அதோடெ நானு ஒனக்கு நிதநிதம் காலு புடிச்சு உட்டது பைசாவுக்குப் பைசா லாபம் தேறும். கொறப் பையன் ஒன்னைக் கட்டி முத்தங் குடுத்ததும், அவுனுக்கு வேலை போனதும் சரியாப் போச்சு. நானு நேரே ஒன் ஜாகைக்கிப் போயி போயிலை யும் வேலைக்காரியையும் அனுப்பிச்சுட்டு, கதவைப் பூட்டிக்கினு நல்ல புத்தியோடெ ஊட்டுக்குப் போயிச் சேரப்போறேன், நீ வீணு அங்கே போயி அலையாதே. அப்பா ரத்னவேலு. இந்தபொண்ணு பாதபூஜை பண்ணறத்துலெ கெட்டிக்காரி; ஒனக்குப் பாதபூஜை பண்ண தாம்பாளம் கிம்பாளமெல்லாம் மின்னுலே வாங்கிக் குடுத்து, மோள தாளத்தோடெ ஒங்க ஊட்டுக்குக் கொண்டுபோ அப்பா. குட் பை, சாபியா (Good-bye, chaffeur), குட் பை, மை டார்லிங் பாதபூஜை (Good-bye, my darling பாதபூஜை)" என்று கூறியபடி வண்டியை முடுக்கிவிட்டுக் கொண்டு விசையாகப் போய் மறைந்து விட்டார்.

வடிக்கட்டின பைத்தியக்காரர்போ லிருந்த தொந்திச் செட்டியார் தாங்கள் மறைவாகச் செய்த காரியத்தைத் தெரி

மாக நீங்கள் கொள்ளும் சந்தேகங்களைப் பகுத்தறிவிற்கு ஒத்தபடி நான் விளக்க வேண்டாமா?

நான் இதற்கு முன் வேறு சில கிராமங்களுக்குப் போய்த் தாமஸித்திருந்த காலத்தில் என்னிடம் சிலர் சில கேள்விகள் கேட்டனர். "ஸ்வாமிகளுக்கு ஒரு விக்ஞாபனம். நாம் அம்பிகை யென்றும், ஈசுவரி என்றும் பெண் தெய்வங்களை வைத்துக்கொண் டிருக்கிறோம். பார்வதி சிவனை மணந்து கொள்வதற்காகத் தவம் செய்து, ஹிமவானுக்குப் புத்திரியாகப் பிறந்து, சிவனை யடைந்து சுப்பிரமணியக் கடவுளை உற்பத்தி செய்ததாகக் கந்தபுராணம் சொல்லுகிறதே. இந்த பிரம்மாண்டங்களுக் கெல்லாம் இறைவனான கடவுள் ஹிமய மலையின்மே லுள்ள கைலாசமென்னும் சிகரத்தில் இருக்கிறாரா? அவர் பார்வதி என்ற ஒரு ஸ்திரீயைக் கல்யாணம் செய்து கொண் டிருக்கிறாரா? மனிதர்களுள் ஸ்திரீ புருஷர் சம்போகம் செய்வதுபோலத் தெய்வங்களும் செய்கிறார்களா? மகா விஷ்ணு இலக்ஷ்மியை ஹிருதய கமலத்திலும், பிரம்மா சரஸ்வதியை முகத்திலும், சிவன் பார்வதியைத் தமது உடம்பின் பாதிபாகத்திலும் வைத்துக்கொண்டிருப்பதாக புராணங்கள் சொல்லுகின்றனவே! அவைகளின் அர்த்தமே விளங்கவில்லையே. அதுவன்றி, ஸ்மார்த்தர்களாகிய நாம் அம்பிகை, மாரியம்மன், சரஸ்வதி, காமரூபிணி, காமாக்ஷி, குந்தலாம்பாள் என்ற ஸ்திரீ தெய்வங்களைத் தனியாக வைத்து, அவைகளையே பிரதானமாக வணங்குகின்றோம். நம்முடைய குரு பீடங்களெல்லாம் காம பீடங்களா யிருக்கின்றன. வைஷ்ணவர்கள் இலக்ஷ்மி, தாயார், பிராட்டி, நாச்சியார் என்ற பெயர்களாலேயே ஸ்திரீ தெய்வத்தைக் குறிக்கிறார்கள்; அந்த தெய்வத்தைத் தனியாகவும் பிரதானமாகவும் பூஜிப்ப

தில்லை. அந்தப் பெயருடைய குருபீடமும் இல்லை. நாராயண னுக்குள் அடங்கியதாகவே அந்தப் பெண் தெய்வத்தை அமைத்திருக்கிறார்கள். அவர்கள் பரனுக்கு பக்தி செலுத்து கிறார்களேயன்றி பரைக்கு பக்தி செலுத்துவதில்லை. இதை யெல்லாம் ஸ்வாமிகள் தயை செய்து விளக்கவேண்டும்" என்று என்னிடம் ஒருவர் கேட்டார் நான் அதற்குச் சொன்ன உத்தரம் அடியில் வருமாறு :

இச்சந்தேகங்கள் நிரம்பவும் முக்கியமானவைகளே. இவைகள் உங்கள் மனதில் மாத்திரம் இப்போது உண் டானதில்லை தெய்வங்களைப்பற்றி சிந்தனைசெய்து பார்க் கும் ஒவ்வொரு மனிதனுக்கும் இவ்விதமான சந்தேகங்கள் உதிப்பது சகஜமே. பிற மதஸ்தர்கள்கூட, நாம் ஸ்திரீதெய் வங்களை வைத்துக்கொண் டிருப்பதைக் கண்டு, நம்மை தூஷிப்பதுண்டு. இதைப்பற்றி விஷ்ணு புராணத்தில் எழுதப்பட்டுள்ள சில வாக்கியங்களை நான் முதலில் உங்களுக் குச் சொல்லிவிட்டு, பிறகு மற்ற சந்தேகங்களை விளக்கு கிறேன்

"லோகமாதாவான பிராட்டியானவள் என்றைக்கும் ஸ்ரீவிஷ்ணுபகவானோடு பிரிவற்றவளாய் நித்யையாயிருக்கிறவ ளேயன்றி ஜனனாதிகளுள்ளவளன்று. எம்பெருமான் விபு வாய் எங்கும் நிறைந்து தம் சுபாவத்தை விடாமல் சத்ய ஞான ஆநந்தாதி சகல கல்யாண குணங்களோடும் விளங்குவதுபோல், பிராட்டியும் எங்கும் நிறைந்து சகல கல்யாண குணங்களோடும் விளங்குவாள். இப்படி சகல பூதங்களுக்கும் தாயும் தந்தையுமான அந்த திவ்ய தம்பதிகளுடைய மகா விபூதி வைபவத்தைச் சொல்லு கிறேன் ஒரு பதத்தின் பொருள் பெருமான், பொருளைத் தெரிவிக்கும் பதம் பிராட்டி ; அவள் நீதி, அவர் அந்த நீதி

யின் உபாயமான நயம்; அவள் புத்தி, அவர் அந்த புத்தியால் ஆகும் போதம், தருமமே ஸ்ரீமந்நாராயணன், தருமத்திற்கு சாதகமான சத்கிரியையே அவருடைய ஹிருதயமாகிய தாமரையில் வசிக்கும் இலக்ஷ்மி; சிருஷ்டிக்கிறவன் விஷ்ணு தேவன், அந்த சிருஷ்டியிலடங்கிய சக்தி, ஸ்ரீதேவி; அவள் பூமி, அந்த பூமியைத் தரிப்பவர் அந்த எம்பெருமான்; அந்த பகவான் சந்தோஷம், அந்த சந்தோஷத்தை உண்டாக்கும் சந்துஷ்டியே பிராட்டி; யக்யமே மாதவன், தக்ஷிணையாவது ஜெகன்மாதா; புரோடாசமானது ஜனார்த்தனன், ஆஜ்யாகுதியானது கமலை; பிராக்வம்சமென்பது மதுசூதனன், பத்தினிச்சாலை யென்பது ஸ்ரீதேவி; யூபஸ்தம்பம் என்பது ஸ்ரீஹரி, யாக சயனம் ஸ்ரீ லக்ஷ்மி; எம்பெருமானே தர்ப்பை, பிராட்டியே ஸமித்து; ஸாம வேதமானது பகவான், அதில் சேர்ந்த ஓங்காரமென்பது இலக்ஷ்மி; ஜெகத்பதியான வாஸுதேவன் அக்னி பகவான், இந்திரையானவள் ஸுவாஹாதேவி; ஸ்ரீ விஷ்ணு பகவானே சங்கரன், ஸ்ரீ மகா லக்ஷ்மியே கௌரி தேவி; கேசவனே சூரியன், அந்தச் சூரியனுடைய பிரபை கமலை; ஸ்ரீ விஷ்ணு தேவன் பிதுர்தேவதா ஸ்வரூபி, ஸ்ரீதேவி ஸ்வதா ஸ்வரூபி; ஜெகன்மாதாவே ஆகாசம், அதி விஸ்தாரமான அதன் பரப்பே விஷ்ணு; அந்த ஸ்ரீயப்பதியே சந்திரன், சந்திரனுடைய காந்தியாகிய நிலவு ஸ்ரீதேவி; ஸர்வகதனான ஸ்ரீ ஹரியே வாயு, மேகாதிகளைத் தரிக்கத்தக்க அந்தக் காற்றின் செய்கை திருமகள்; சமுத்திரம் கோவிந்தன், ஸ்ரீதேவி அந்த சமுத்திரத்தின் அலை முதலான விகுருதி; மதுசூதனனே தேவேந்திரன், இந்திரையே இந்திராணி; சக்கரதரனான பகவானே யமன், கமலாலயையே யமபத்தினியான தூமோரணை; ஸ்ரீதரனான தேவனே குபேரன், ஸ்ரீதேவியே அந்தக்குபேர

னுடைய செல்வம்; கேசவனே வருணன், இலக்ஷ்மியே வருண பத்னியான கௌரி; கோவிந்தனே தேவ சேனுபதியான ஸ்கந்தன், இந்திரையே தேவசேனே; கதாதரனே பிடிப்பு, அதற்குக் காரணமான சக்தியானது ஸ்ரீதேவி; நிமிஷ ஸ்வரூபம் நாராயணன்; காஷ்டையின் ஸ்வரூபம் இலக்ஷ்மி; முகூர்த்தம் ஸ்ரீவாஸுதேவன், அந்த முகூர்த்தத்தின் அவயவமான கலை ஸ்ரீ லோகமாதா; திருவிளக்கு ஸர்வேசுவரன், அதன் காந்தி லோகநாயகி; ஸ்ரீ மகா விஷ்ணு விருட்சம், ஸ்ரீ தேவி அதன் கொடி; சக்கரதரன் பகல், ஸ்ரீ காந்தை இராத்திரி; வரப்ரதனுன விஷ்ணுவே மணமகன், தாமரைக்காட்டில் வாசம் செய்பவளே மணமகள்; பகவான் நதஸ்வரூபன், ஸ்ரீதேவி நதி ஸ்வரூபை, புண்டரீகாக்ஷன் அரசருடைய கொடி, புண்டரீகத்தில் வாசம் செய்பவளே கொடியின் சீலை; நாராயணன் லோபம்; இலக்ஷ்மி ஆசை; கோவிந்தன் இராகம், ஸ்ரீதேவி அதன் காரணமாகிய காதல்; அநேக வாக்யங்களால் விளக்கிக்கொண்டே போவதைவிட அந்த திவ்ய தம்பதிகளின் லீலா விபூதியை சுருக்கத்தில் சொல்லி விடுகிறேன்: தேவதைகளுக்குள்ளும், மனிதர்களுக்குள்ளும், திரியக்குகளுக்குள்ளும, மற்றுமுண்டாகிய வஸ்துக்களுக்குள்ளும் புல்லிங்கமான பெயருடைய பதார்த்தங்களெல்லாம், ஷட்குண ஐசுவரிய ஸம்பன்னனுன ஸ்ரீ ஹரியே, ஸ்திரீ லிங்கமான பெயருடைய பதார்த்தங்களெல்லாம் ஸ்ரீ மகா லக்ஷ்மியே; இவ்விருவருக்கும் வேறான வஸ்து ஒன்றுமில்லை; எல்லாம் அவர்களால் வியாபிக்கப்பட்டு, அவர்களுடைய லீலா விபூதியாயிருக்கின்றன. எல்லாம் திவ்ய தம்பதிகளுடைய விபூதியாயிருந்தாலும், சில பொருள் எம்பெருமான் விபூதியாகவும், சில எம்பெருமாட்டி விபூதியாகவும்

நித்யத்தினுல் என்றறிய வேண்டும். விபூதி என்பது ஸர்வ விதத்திலும் அவர்களுடைய ஆளுகைக்கு உட்பட்ட வஸ்து; காரிய காரணுதி ரூபமாயிருக்கிற இந்த விபூதி அவ்விருவருடைய அநுக்கிரக ஆதீனத்தை அடிப்படையாக உடையது என்பது கருத்து.

—என்று விஷ்ணு புராணம் சொல்லுகிறது. ஆதி காலத்தில் ஆண் பெண் தெய்வங்களை ஏற்படுத்திய மகரிஷிகள் என்ன கருத்தோடு அப்படிச் செய்தார்கள் என்பது இதிலிருந்து நமக்கு ஒருவாறு தெரிகிறது. இன்னும் நாம் வானசாஸ்திரத்தை ஆராய்ந்து பார்த்தால், தெய்வங்களை ஆணுகவும், பெண்ணுகவும் எந்தக் காரணத்தினுல் பிரித்திருக்கிருர்கள் என்பது நன்கு விளங்கும். அவைகளை நான் இன்னொரு சமயத்தில் விளக்குகிறேன்.

நம்முடைய ஹிருதயம் தாமரை மலர்போன்ற வடிவமுடையதாகவும் சிவப்பாகவும் இருக்கிறதென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இந்த லீலா விபூதியிலடங்கிய சகலமான வஸ்துக்களும் பரமாத்மாவின் ஹிருதயத்திலிருந்து அவருடைய இச்சா மாத்திரமாய்த் தோன்றி எங்கும் எப்போதும் நிரந்தரமாயிருந்து வருகிறதாகையால் மகாலக்ஷ்மி நாராயணனுடைய மார்பிலுள்ள செந்தாமரை மலரில் வசிக்கிருள் என்று வேதங்கள் சொல்லுகின்றன. இலக்ஷ்மி என்பது 'இலக் கிழமி' என்ற சொல்லின் திரிவு. அதாவது, பகவானுடைய இல்லமாகிய அநந்தமான இந்த லீலா விபூதியின் கிழமி அல்லது சொந்தக்காரி என்பது அதன் கருத்து. சைவர்கள் விபூதி பூசுவது இந்த அநந்தமான லீலாவிபூதி அடியோடு எரிந்து சாம்பலாய்ப் போய்விட்டதாகவும், முடிவில் சிவன் மாத்திரம் தவம் செய்துகொண்டு

ஆண்டிபோல் இருப்பதாகவும் குறிக்கிறது. அதையே, நந்தன் சரித்திரமெழுதிய நம் கோபாலகிருஷ்ண பாரதி, "முப்பாழுந்தாண்டி அதற்கப்பாலேசென்றவர்க்கு இப்பார்வை கிடையாது, அப்பால் திருநடனம்" என்று பாடி இருக்கிறார். சர்வமும் பாழ் அல்லது சூன்யம் என்றும், முடிவில் ஆண்டிபோல் ஒருவர்தனியாய் இருக்கிறார்என்றும் கடவுளைக் கருதுவதே, பாழாண்டி அல்லது பாஷாண்டி மதம் என்று குறிக்கப் படுகிறது. அதன் கருத்து பாழும் ஆண்டியும் மிச்சம் என்பது. இந்த லீலாவிபூதி எப்பொதாவது எரிந்து சாம்பலாய்ப் போனதாக வேதங்கள் சொல்லுகின்றனவா. பிரளய காலத்தில்கூட, எல்லாம் ஜலமயமாய் நிறைந்து போவதாக அல்லவா பிரமாணங்கள் சொல்லுகின்றன. எதையாவது நாம் கொளுத்தி சாம்பலாக்கினால், அந்த சாம்பலுக்குள் சகலமான சத்துகளும் அப்படியே மறைந்திருக்கின்றன. அதை எருவாகப் போட்டால், மறுபடி சிருஷ்டிப் பொருள்கள் முன்னிலும் அதிக மும்முரமாய்க் கிளம்புகின்றன. தண்ணீர் நெருப்பினால் ஆவியாக மாறுகிறது; மறுபடி குளர்ச்சியினால் தண்ணீராகத் திரும்பி வந்து சேருகிறது. உலகத்தில் எதுவும் உருமாறுகிறதே யன்றி அழிகிறதே இல்லை யென்பதே மேல்நாட்டு சாஸ்திரக் கொள்கை. அதுவே வைஷ்ணவர்களின் கொள்கை. அப்படி இருக்க, ஒரு நாளும் நெருப்பினால் அழியாத இந்த லீலா விபூதி அழிந்து சாம்பலாய்ப் போவதாய்க் கருதுவது வேதத்தி லுள்ள பரமாத்மாவும், வைஷ்ணவ தெய்வமுமாகிய நாராயணனுடைய அமைப்புக்கு முற்றிலும் விரோதமான கொள்கை ஆகையால், நாராயணனோடும், வைஷ்ணவர்களோடும் சாம்பலை சம்பந்தப் படுத்தினால், அது எவ்வளவுதூரம் பொருந்து மென்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்.

—என்று நமது மன்மதபீட மகாயோகீசுவரர் சொல்லிக் கொண்டே வந்த காலத்தில், அவர் இருந்த இடத்தில் ஓர் ஆச்சரிய சம்பவம் நேர்ந்தது. இந்தப் பிரஸங்கத் தொடக்கத்தில் அவர் ஒரு பெரிய பீடத்தின்மேல் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் பேசிக்கொண்டே இருக்க இருக்க, அந்தப் பீடம் பூமிக்குமேல் உயர்ந்து, பூமியில் படாமல் அலாக்காய் நிற்பதுபோலக் காணப்பட்டது. அவர் பேசி முடித்த காலத்தில் அந்தப் பீடம் பூமிக்கு ஒரு முழ உயரத்திற்குமேல் அந்தரத்தில் நிற்பதுபோலக் காணப்பட்டது. அந்தப் பீடம் பூமியில் படவே இல்லை. ஆனால் யோகீசுவரர் அதற்கு மேலேயே உட்கார்ந்துகொண் டிருந்தார்.

எதிரில் உட்கார்ந்திருந்த ஜனங்கள் எல்லோரும் அதையே கவனித்து, பிரமைகொண்டு பேச்சு மூச்சற்று ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தன ராதலால், அவர்களுடைய கவனம் யோகீசுவரருடைய உபந்யாசத்தில் சிறிதும் செல்லவே இல்லை. ஸ்வாமிகள் வாயுஸ்தம்பனம் செய்து பிரம்மாண்டமான பீடத்தோடு மேலே உயர்ந்து நின்ற தெய்விகக் காட்சியும், பிரத்தியக்ஷ தேவிகளின் காட்சியும் ஒன்று கூடி, அங்கிருந்த பக்த கோடிகளின் ஐம்புலன்களையும் அறிவையும் மயக்கி, அடியோடு கொள்ளைகொண்டுவிட்டன வாதலால், எல்லோரும் கற்சிலைகள்போல வியப்பே வடிவாய் உட்கார்ந்திருந்தனர்.



# மதிப்புரை

**மன்மத விஜயம் : செய்யூர் ஸ்ரீமதி எஸ். சாரநாயகி அம்மாள் எழுதியது விலை அணா 4.**

நாவல் உலகிற்குப் புதிய ஆசிரியையான இவ்வம்மை முதன் முதலாக எழுதியுள்ள இப்பெயர் கொண்ட நாவல் நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இது இவ்வம்மையின் முதல் முயற்சியாக விருந்தும் கற்பனாசக்தி இவருக்கு விசேஷமாக யிருந்து வருகிற தென்பது கதையை இவர் ஜோடித்திருக்கும் போக்கிலிருந்து தெரியவருவதுடன் காலக் கிரமத்தில் இவர் அந்த உலகில் ஒரு முக்கிய ஸ்தானத்தைப் பெறக்கூடுமென்ற நம்பிக்கையையும் ஏற்படுத்தக்கூடியதாக இருக்கிறது. திருப்பரங் குன்றம் ஜமீன் தாரரின் புத்திரிகளாக உதித்த இரு பெண்மணிகள் தங்களுடைய உயர்பிறப்பை அறியாமலே வாழ்வை நடத்தி வருகையில் ஏற்பட்ட இன்னல்கள் பலவும் அவர்கள் கற்பின் விசேஷத்தாலும் சகோதரி வாஞ்சையாலும் நிவர்த்தியாகி, முடிவில் அவ்விருவரும் தங்கள் தங்கள் காதலர்களையே மணாளராக அடைந்த வரலாறு வெகு அழகாக விவரிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாசிரியையைத் தமிழ் உலகிற்கு அறிமுகம் செய்துவைப்பான் வேண்டி இந்நாவல் நூறு பக்கங்களுடையதாயினும் அசல் கிரயமாகிய அணா நான்கே இதற்கு விலையாக வைக்கப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்திற்கு 5 அணா தபால் ஸ்டாம்புகள் அனுப்பி இதன் பிரதியொன்றைப் பெறலாம்.

—சுதேசமித்திரன் 20-5-33

## அத்தியாயம்—5

### தோந்திச் செட்டியின் அந்திய லீலை

"மன நோய்க்கு மருந்துமுண்டோ?" என்று ஜனங்கள் பொதுவாகக் கூறுவதுண்டு. அதை நாம் ஆழ்ந்து கவனித்து ஆராய்ந்து பார்ப்போமானால், மனதைப் பற்றிய எல்லா நோய்களுக்கும் இது அவ்வளவாகப் பொருந்த வில்லை யென்பது விளங்கும். மனதைப் பீடிக்கக் கூடிய பிணிகள் பலவகையானவை. ஒருவன் தரித்திரப் பிணிக்கு ஆளாகி, பொருளீட்ட வகைபறியாது, வேதனையிற் பட்டு உழல்கிறான். அவனுக்கு எவ்வகையிலேனும் திடீரென்று பொருள் வருமானால், ஒரு நொடியில், அவனுடைய மனப் பிணி விலகிப்போகிறது; அவன் மகிழ்ச்சி யடைகிறான். ஒருவன் ஓர் அழகிய ஸ்திரீயைக் கண்டு விரகநோய் கொண்டு ஊண், துயில் முதலியவின்றி இரவு பகல் காமத்தீயினால் வெதுப்பப்பட்டு உருகித் தவித்து இளைத்து உருக்குலைந்து கிடந்து உழல்கிறான். அவனுக்கு அந்த ஸ்திரீயின் இணக்கம் ஏற்படுமானால், அவனுடைய உயிரைப் பருகிய காமப் பெரும் பேய் ஓரே நொடியில் ஓடிப்போகிறது. இதைக் கருதியே நமது தெய்வப் புலமை திருவள்ளுவ நாயனார்,

> "இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒரு நோக்கு
> நோய் நோக்கு; ஒன்று அந்நோய் மருந்து"

என்று திருவாய் மலர்ந்தருளினார். பெண்மக்களின் மருண்ட பார்வை ஆண்மக்களது மனதைக் கவர்ந்து, விரக

தாபத்தைக் கிளப்பி விட்டு, எமனைப்போல அவர்களது உயிரைப் பருகுகிறது. அவ்வாறு ஒருவனது மனதில் காமத்தீயைப் பற்றவைத்த ஒரு குறித்த ஸ்திரீயை அவன் அடையாவிடில், அந்தப் பிணியே அவனுக்குக் காலாந்தகனாக முடிகிறது. அந்த ஸ்திரீ தானும் அவன்மீது காதல் கொண்டிருப்பதாகவோ, அல்லது, அவனுடைய விருப்பத்திற்கு இணங்குவதாகவோ, தனது கண் சாடையால் ஒரு குறிப்புக் காட்டுவாளானால், அந்த ஒரு பார்வையே அமிர்த சஞ்சீவி போல் அவனுடைய உயிரை ஒரே நொடியில் மீட்கிறது. வேறு எதற்கும் தீராத அவனுடைய விரக வேதனைத் தீ இருந்த இடந்தெரியாமல் உடனே பறந்து போகிறது. அவன் இன்பசாகரத்தில் கிடந்து மிதக்க வாரம்பிக்கிறான். ஆகவே, "பெண்மக்களின் கண்களில் இரண்டு விதமான பார்வைகள் இருக்கின்றன; ஒன்று நோயை உண்டாக்கும் பார்வை; இன்னொரு பார்வை அந்த நோயைத் தீர்க்கும் மருந்து" என்றார் நமது பொய்யாமொழிப்புலவர்.

நாம் மேலே குறித்த தரித்திரக் கொடுமை, காம நோய் ஆகிய இரண்டும் மனப்பிணிகளே யானாலும், முக்கியமாக அவை தேக பாதைகளையே அடுத்து நிற்பவை. ஆகவே, மேற்படி தேகபாதைகள் தீருவதற்கான சாதனம் கிடைத்தவுடன், அம்மனப்பிணிகள் விலகிப் போகின்றன.

ஆகவே, நாம் இவைகளை விட்டு, மனதை மாத்திரம் பாதிக்கக் கூடிய ஒரு பிணியை எடுத்துக் கொள்வோம். ஒருவன் நம்மை அக்கிரமமாக தூஷிப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அது சம்பந்தமாக,

"தீயினாற் சுட்ட புண் உள்ளாறும், ஆறாதே
நாவினாற் சுட்டவடு"

என்கிறார் நம் திருவள்ளுவ நாயனார். "ஒருவன் நம்மைத் தீயினால் சுட்டால், அந்தப் புண்ணும், அதனால் ஏற்பட்ட கோபமும் சீக்கிரத்தில் ஆறிப் போகின்றன. சில சந்தர்ப்பங்களில், அந்தப் புண் ஆறுவதற்கு சில தினங்கள் பிடித்தாலுங்கூட, மனதிலுண்டான ஆத்திரம், அதற்கு முன்பாகவே ஆறிப்போகிறது. ஆனால், ஒருவர் நம்மை வாயினால் சுட்ட வடுமாத்திரம் மனதை விட்டு ஒரு நாளும் மாறாது" என்பது இதன் பொதுப்படையான கருத்து. ஆனால், இது எல்லோர் விஷயத்திலும் ஒரு தன்மையாய் இருப்பதில்லை. இவ்வித நோய்க்குக் காலப்போக்கு ஒருவித மருந்தென்று நாம் கூறலாம். ஒருவர் தூற்றுவது சிலருக்கு உறைக்கிறதே இல்லை; சிலர் அதை சொற்ப காலத்தில் மறந்து விடுகின்றனர்; வேறு சிலர் அதைத் தம் ஆயுள்காலம் முடிய வைத்துப் பாராட்டிக்கொண்டே இருக்கின்றனர். ஆயினும், அதைப் பற்றி ஆரம்பத்தில் உண்டான வீராவேசம் கடைசி வரையில் ஒரே நிலைமையில் இராமல் தணிந்துகொண்டே போகிறது.

இதேபோல, ஒருவரால் ஏற்படும் மானக்கேடு சிலரை அவ்வளவாக பாதிக்கிறதில்லை யானாலும், மானியும் பயந்தவராயுமிருக்கும் சிலருக்கு அது எமனாகவே முடிகிறது. நமது தொந்தி ரமணைய செட்டியாருடைய சுபாவம் மிக விசித்திரமானது. இரகஸியத்தில், அவருக்கு எவ்வளவு பண நஷ்டமோ, தூஷணையோ, மானக்கேடோ, அடி உதைகளோ நேர்ந்தாலும், அவர் அவ்வளவாக வருந்தமாட்டார். தமது சுயஜாதி மனிதர்களுக்கெதிரில், ஏதேனும் சொற்ப மானக்கேடு நேர்ந்தால்கூட, அது அவரை மும்முரமாக பாதிக்கும்; அவரது முகம், தொட்டால் சுருங்கி இலைபோல, வாட்டமடைந்து வீழ்ந்துவிடும். அந்த நினைவே அவருடைய மனதில் எப்போதும் இருந்து, அவரது கவனத்தை முற்றிலும்கவர்ந்து

கொண்டிருக்கும். அவர் பிறரது முகத்தைப் பார்க்க வெட்கித் தமது முகத்தை வேறு பக்கத்தில் திருப்பிக் கொள்வார். அவ்வித சுபாவமுடைய ரமணைய செட்டியார் தம்மை, ரத்ன வேலும் தாசிப் பெண்ணும் சுத்த அசடனென்று கருதித் தந்திரமாய் ஏமாற்றிய செய்கையைக் கண்டு எவ்வளவு மன வேதனையும் கிலேசமும் அடைந்திருப்பா ரென்பது கூறுமலே விளங்கும்; அந்த அவமானம் ஆயிரம் வாள்களால் அறுப்பது போல, அவரது மனதை அறுத்ததாகையால், அவர் பெரிதும் ஏக்கமும், ஏமாற்றமும் அடைந்து குன்றிப்போய் சித்த ஸ்வா தீன மிழந்தவர்போ லாகிவிட்டார்.

அந்தச் செய்தி தமது ஜாதியினர்க் கெல்லாம் பரவிப் போனது போலவும், அவர்கள் தம்மைப் பார்த்துக் கை கொட்டி ஏளனம் செய்து இழிவு படுத்துவது போலவும், தம்மைப் பற்றிப் புரளி செய்வது போலவும் உணர்ந்திருந்த சமயத்தில், இரவு முழுதும் தம் வீட்டில் கற்கள் வந்து விழவே, அவருடைய நிலைமை முன்னிலும் பன்மடங்கு கேவல மாகிவிட்டது. அவற்றிற்கு சிகரம் வைத்ததுபோல, ஒவ்வொருநாட் காலையிலும் கழிப்புக் கழித்த வஸ்துக்களும், உடைபட்ட மலச் சட்டிகளும் காணப்பட்டது அவர் சகிக்கக் கூடிய வரம்பை மீறிய விபரீதமான மானக்கேடாகத் தோன்றியது. அவருடைய வீடிருந்த வீதிமுழுதிலும், தன வந்தர்களான கோமுட்டிச் செட்டிமார்களே குடியிருந்தன ராதலால், தமது இரகஸியங்களும், தமக்கு நேரிட்ட மானக் கேடுகளும் எல்லோருக்கும் தெரிந்துபோயிருக்குமென்று அவர் கருதினராதலால், அவர் தமது வீட்டை விட்டு வெளி யில் வரவோ, எவரையும் பார்க்கவோ விரும்பாமல், வேதனை யிலாழ்ந்து வீட்டிற்குள்ளேயே படுத்திருந்தார். உண்மையி

லேயே, அந்த வரலாறு முழுதும் எல்லோருக்கும் பரவிப் போயிற்று. பெரும்பாலும் கோமுட்டிச் செட்டிகள் எந்த விஷயத்திலும் மிக ஜாக்கிரதையாக நடந்துகொள்ளும் சுபாவ முடையவர்கள். "ஊரார் சங்கதி நமக்கெதற்கு" என்று மிக விரக்தியாகப் பேசி, பிறர் விஷயங்களில் தலையிட மனமில்லாதவர் போல நடிப்பரானாலும், ஒருவருக் கொருவர் கண் சிமிட்டி சமிக்ஞை காட்டிக்கொண்டு, இரகஸியங்களை யெல்லாம் அறிந்து மனதிற்குள் பத்திரமாக சேமித்து வைத்துக்கொள்ளுவர்; எந்த விஷயத்திலும் அகப்பட்டுக் கொள்ள மாட்டார்கள்; எந்தப் பொறுப்பையும் தம்மீது போட்டுக்கொள்ள மாட்டார்கள்; தங்களுக்கு இன்னார் சொன்னார்கள் என்று பிறரைக் காட்டியும் கொடுக்கமாட்டார் கள்; ஜவ்வாதில் மயிர் வாங்குவது போல நடந்து கொள் வார்கள். நோகாமல் அடிப்பதென்பது அவர்களுக்கே பெரும்பாலும் பொருந்தும். கோமுட்டி, கோவிலில் பால் வார்த்த கதை எல்லோருக்கும் தெரிந்ததொன்றாகை யால், அவர்களுள் பெரும்பாலோர் எதிலும் பொறுப்பை வகிக் காமல் தந்திரமாக எத்தும் சுபாவமுடையவர்க ளென்னும் அந்தக் கதையின் படிப்பினையை நாம் அதிகமாக விஸ்தரிப் பதனவசியம்.

பிறருடைய காரியங்களை கவனிக்காதவர் போலவே இருந்து, கபடமாக எல்லாவிஷயங்களையும் தெரிந்துகொண்டு, பின் பக்கத்தில் குரங்குச் சேஷ்டை காட்டுவதில் நமது ரமணைய செட்டியார் முதல் தாம்பூலம் பெற்றவராதலால், தம் இனத்தார் எல்லோரும், தம்மைப்போலவே இருப்பார்க ளென்று அவர் யூகித்துத் தம் மனத்தையும், உடம்பையும் அலட்டித் தம்மை நரகவேதனையி லாழ்த்திக்கொண்டு எப்

போதும் சயனத்திலேயே இருந்தார். வெளியுலகத்தில் ஆக வேண்டிய காரியங்களைப் பார்த்துவிட்டு, அப்போதைக் கப் போது அவரிடம் வந்த அவருடைய பிரதம மந்திரியான ராம கிருஷ்ணன், வீதியிலிருந்த செட்டிமார்களும், அவர்களைச் சேர்ந்த மற்றவர்களும் தன்னை உற்று உற்றுப் பார்த்து, ஒரு வருக்கொருவர் புரளியாகக் கண்சிமிட்டிக் கொண்டதாக ஒவ்வொரு தடவையும் செட்டியாரிடம் தெரிவித்தாறுதலால், அது கடுமையான நேர்வாள மாத்திரைபோல வேலை செய் யத் தொடங்கியது. அவருடைய மனவேதனையும், தேக அவஸ்தையும் சகிக்க இயலாதபடி உச்ச நிலையை அடைந்து விட்டன. அவர் திகில் கொண்டு குன்றி இளைத்து உரு மாறிப் போனார். எத்தனை நாளைய பட்டினிக்கும், வியாதிக் கும் தளர்வு கொடுக்காத அவருடைய இறுகிய தொந்தியும், பிரஷ்டபாக மலைகளும் முற்றிலும் தொய்வடைந்து உடம்பை விட்டு அதிக தூரம் பிரயாணம் போகத் தலைப்பட்டன. சாப்பாடு அவருக்கு வேப்பங்காய்போ லாகிவிட்டது; இரவில் அவர் இமைகளை மூடுவதே இல்லை. அவருடைய மனமோ கட்டுக்கடங்காமல் கொந்தளித்தபடி இருந்தது.

ராமகிருஷ்ணன் அவரிடம் வந்தபோதெல்லாம் அவருக் குப் பல வகையான உபசரணைகள் செய்து அநுதாப மொழி கள் கூறி, அவரைத் தேற்ற முயலுவான். அவ்வாறு அவன் அவருடன் ஒரு நாள் சம்பாஷித்ததை நாம் கவனிப்போம் (அவர்கள் தம் தம் ஜாதி சம்பிரதாயத் தமிழில் சம்பாஷித்த னராஹலும், அதை நாம் சரியான தமிழ் நடையில் எழுது கிறோம்.)

ராமகிருஷ்ணன் :—என்ன போங்கள், நேற்றும் இன் றும் நான் இந்தப் பட்டணம் பூராவையும் சுற்றிப் பார்த்து

விட்டேன். அந்தக் குறப்பயலும் என் கண்ணில் படவில்லை; அந்தப் பட்டி முண்டையும் என் கண்ணில் படவில்லை. அவனுக்கு என்மேல் இருக்கும் ஆத்திரத்தில், என்னை அவன் அவசியம் அடித்தாலும் அடிப்பான். இருந்தாலும், நீங்களும் அம்மாளும் இருக்கும் கேவல நிலைமையைப் பார்க்க, என் உயிர் போனாலும் போகிறதென்ற எண்ணம் உண்டாகி விட்டது. எப்பாடுபட்டாவது அவனைக் கண்டு பிடித்து, அவன் காலைப் பிடித்துக்கொண்டாவது கெஞ்சிக் கூத்தாடி, அவன் செய்யும் காரியங்களை யெல்லாம் நிறுத்தும் படி கேட்டுக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தோடு என்னால் ஆனவரையில் முயற்சி செய்தேன். அவன் அவள் இரண்டு பேரும் எங்கேயோ போய்விட்டார்கள்.

செட்டியார் :—அவனுடைய வீட்டில் விசாரிக்க வில்லையா? எங்கிருந்தாலும் சாப்பாட்டுக்கு அவன் வீட்டிற்குத்தானே போகவேண்டும்.

ரா. கிருஷ்ணன் :—முதலில் நான் அவனுடைய வீட்டிற்குத்தான் போனேன். சில தினங்களாய் அவன் சாப்பாட்டிற்குக்கூட வீட்டிற்கு வரவில்லையாம்; திருக்கழுக் குன்றத்துக்குப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனானாம்.

செட்டியார் :—அவன் அங்கே போயிருக்கையில் இந்த ஊர் முழுதும் தேடினால், எங்கிருந்து ஆகப்படுவான். அந்தத் தேவடியாளையும் அழைத்துக்கொண்டு தமாஷாய் அங்கே போயிருப்பான்.

ரா. கிருஷ்ணன் :—அப்படியானால், இங்கே நடக்கும் அக்கிரமங்களை யெல்லாம் செய்வது அவனல்லவா?

செட்டியார்:—வேறே ஆள்களை ஏவியிருப்பான். அவர்கள் செய்வார்கள்.

ரா. கிருஷ்ணன் :—அவன் எங்கேயும் போயிருக்க மாட்டான். எங்கேயாவது போகவேண்டுமானால், அவன் திருக்கழுக் குன்றத்துக்குப் போவதாக வீட்டில் பொய் சொல்லிவிட்டுப் போவது வழக்கமென்று என்னிடம் பல சந்தர்ப்பங்களில் சொல்லி இருக்கிறான். அவனுடைய தகப்பன் பெரிய லுத்தன். அவன் பெரிய பணக்காரனாயிருந் தாலும் ஒரு தம்பிடிக்காக ஒன்பது நாள் மன்றாடுவான். அவனுடைய வீட்டில் எல்லாம் கணக்கு. வீட்டிலுள்ள ஒவ்வொருவரும் சம்பாதிப்பதில் சாப்பாட்டுக்காக இன் னின்னார் இவ்வளவு பணம் கொடுக்க வேண்டு மென்று அவன் கண்டிப்புச் செய்திருக்கிறான். அதன்படி கொடுக்கா விட்டால், வீட்டில் எவருக்கும் சோறு கிடைக்காது. அவரவ ருடைய மற்ற செலவுகளுக்கு அவரவர்களே தேடிக்கொள்ள வேண்டும். ரத்னவேல் இந்தத் தேவடியாளை வீட்டிற்குக் கொண்டுபோனால், அவளை அவனுடைய அப்பன் பிடித்துக் கொள்வான்; மகனை உதைத்து ஓட்டிவிடுவான். அதற்கு அவள் இணங்காவிட்டால், அவளுக்கு ஒரு வயிறுகூட சோறு போட மாட்டான்; அவளை உடனே வெளியில் துறத்திவிட்டு மறு வேலை பார்ப்பான். அதையெல்லாம் உத்தேசித்து ரத்னவேல் அவளை இந்த ஊரிலேயே எங்கேயோ எவருக்கும் தெரியாத படி மறைவாக வைத்துத் தானும் மறைந்துகொண் டிருக் கிறான். நான் வேறு சில மனிதரிடம் கேட்டுப் பார்த்ததில், கல்களைப் போடுவதும், பாவைகளை வைப்பதும், அவனே நேரில் செய்பவையல்ல வென்கிறார்கள். மந்திரவாதி யாரை யாவது அவன் ஏவி யிருக்கவேண்டு மென்றும், இவைகள்

யக்ஷிணி, குறளி முதலிய துர்த்தேவதைகள் செய்யும் வேலைகள் என்றும் சொல்லுகிறார்கள்.

செட்டியார் :—எனக்கு அதிலெல்லாம் அவ்வளவு நம்பிக்கை இல்லை. குறளியாவது, யக்ஷிணியாவது, அதெல்லாம் சுத்தப் பைத்தியக்கார சங்கதி. உடுக்கடிக்கிற பூசாரி, விபூதி மந்திரிப்போர் முதலிய ஆஷாடபூதிகள் இந்த மாதிரியெல்லாம் வேஷம்போட்டு மூடஜனங்களை எமாற்றிப் பணம் பறிக்கும் வழியே யன்றி வேறல்ல. துர்த்தேவதைகள் இருப்பதாக நினைப்பதே சுத்தத் தப்பு. அவை காற்றைப் போல் நம் கண்களுக்குத் தெரியாமல் அரூபியாயிருப்பதாகவே வைத்துக்கொண்டாலும், அவை மனிதன் ஜெபிக்கும் மணிமந்திரத்திற்குப் பயந்து, இவனுக்கு அடிமையாய், இவன் சொல்வதுபோல் செய்யுமென்று நினைப்பது போன்ற அஞ்ஞான இருள் வேறு இல்லவே இல்லை. மனிதனுடைய "ஹாம், ஹீம், ஹூம்," என்ற ஓசைகளைக் கண்டு துர்த்தேவதைகள் ஏன் பயப்படவேண்டுமென்பது தெரியவில்லை. ஒருவன் தங்களை அடிமைப் படுத்த இப்படி ஜெபம் செய்கிறான் என்பது அவைகளுக்குத் தெரியாதா? அப்போதே இவனுடைய செவிட்டில் பளீரென்று ஓர் அடிகொடுத்து இவனைக் கொல்ல அவைகளுக்கு அறிவிராதோ?

ரா. கிருஷ்ணன் :—அநேகர் பேய் கொண்டு ஆடுகிறார்கள்; பிதற்றுகிறார்கள்; பூசாரிகள் வந்து உடுக்கடித்தால் தலையைச் சுழற்றிச் சுழற்றி ஆடுகிறார்கள். சில தினங்களில் பேய் ஓடிப்போகிறதே; அதெல்லாம் பொய்யா?

செட்டியார் ;—பேய், பிசாசு முதலியவை அநேகமாய் ஸ்திரீகளைத்தான் பிடிக்கின்றன. பிராம்மணர் முதலிய மேல் வகுப்பு ஸ்திரீகளை அவை பிடிக்கின்றனவா பார்த்

தாயா? வெயிலில் தாறுமாருய் அலேந்து கடுமையாக உழைப்பவரும், எண்ணெய் ஸ்நானம், புஷ்டியான ஆகாரம் முதலிய சௌகரியங்கள் அற்றவருமான ஏழை ஸ்திரீகளே பேய் கொண்டு ஆடுகின்றனர். அவர்களுடைய இரத்தம் கொதிப்படைந்து கெட்டுப்போகிறது; அது மூளேயில் ஏறி சரியான படி வேலே செய்வதில்லே. அதனுல், அவர்கள் சித்தஸ்வாதீன மற்று தாறுமாருகப் பிதற்றத் தொடங்குகிருர்கள். பூசாரிகள் இரண்டு வேளேகளிலும் வேப்பிலே போட்ட குளிர்ச்சியான நீரில் அவர்கள் ஸ்நானம் பண்ணச் செய்கிருர்கள்; அதனுல் இரத்தத்தின் சூடு தணிந்து சுத்தமடைகிறது. அவர்களே உட்கார வைத்து, உடுக்கை தாளப்படி தட்டினுல், அந்த அதிர்ச்சி செவிகளில் தாக்கித் தாக்கி நரம்புகளே அதே தாளகதியில் ஊக்கி விடுகின்றது; தலே தானுய் ஆட ஆரம்பிக்கிறது. அப்படி ஆட ஆட, அந்த உழைப்பினுல் சுவாசம் அதிகப்பட்டு, நல்ல காற்று ஏராளமாய் உள்ளேபோய் இரத்தத்தை சுத்தப் படுத்தி, இரத்த ஓட்டத்தை ஒழுங்குப் படுத்தி தலேக்கு ஏற்றி விடுகிறது. இரத்தம் மூளேக்குள் பரவப் பரவ, அறிவு சிறுகச் சிறுகத் திரும்புகிறது. அப்படியே தொடர்ச்சியாக சுமார் ஒரு மாதகாலம் செய்து, இரத்தத்தை சுத்தப்படுத்தி, அதன் ஓட்டத்தை ஒழுங்குப்படுத்திவிட்டால், பேய் போன இடம் தெரியாமல் பறந்து போகிறது. உடுக்கடித்துப் பேயோட்டுவது மிகத் திறமையான ஒரு வைத்திய சிகிச்சையேயன்றி, பேய், பிசாசு என்னும் துர்த்தேவதைகளுக்கு அங்கு வேலேயே இல்லே. அவ்வித தேவதைகள் உலகில் இல்லவே இல்லே; இருந்தாலும், அவை மனிதருக்கு அடங்கி நடவா.

ரா. கிருஷ்ணன்:—சரி; எப்படியாவது வைத்துக் கொள்வோம். பைத்தியக்காரன் கிழிப்பது கோவணத்திற்

காகிறது. நீங்கள் சொல்வதைக் கேட்கவே, பூசாரிகளுக்கு உத்யோகம் போய்விடப் போகிறதே என்று நான் பயந்தேன். அவர்களுக்கு கண்ணியமான ஸ்தானமே கிடைத்தது; உடுக்கை சும்மா தட்டுவதை விட, ஏதாவது, காத்தாயி, வீராயி என்று ஏதோ தெய்வத்தின் பெயரைச் சொல்லித் தட்டுகிறான். நீங்கள் சொன்னதில், பேய் பிசாசுகளுக்கும், காத்தாயி வீராயிகளுக்கும் உத்தியோகம் போய்விட்டது.

செட்டியார் :—நீர் ஒரு விஷயத்தை கவனித்த தில்லையா ?

ரா. கிருஷ்ணன் :—எதை ?

செட்டியார் :—சில தருக்கர் வீட்டுத் திண்ணைகளில் உபாத்தியாயர் உட்கார்ந்து கொண்டு, குழந்தைகளுக்குப் பாடம் கற்றுக் கொடுக்கும்போது, அக் குழந்தைகள் தலையை முன்னும் பின்னுமாய் ஆட்டிக்கொண்டே படிக் கும். அது எதற்காகத் தெரியுமா ? சிறிய குழந்தை களுக்கு இரத்த ஓட்டம் மிருதுவாக நடைபெறும். படிக்கும் போது மூளையில் இரத்த ஓட்டம் நன்றாக ஏற்படும்படி அதைச் செய்கிறார்கள். அப்படி ஆடாமல் ஒரே நிலையில் இருந்து படித்தால், குழந்தைகள் மிக சீக்கிரத்தில் அலுத்து சோர்வடைந்து போவது நிச்சயம். தலையை ஆட்டிக் கொண்டே படித்தால், களைப்பின்றி எவ்வளவு நேர மானாலும் படிக்கலாம். இந்த ஏற்பாடும், பூசாரிகள் பேயோட்டும் ஏற்பாடும் இரண்டும் ஒரே கருத்தை அடக்கி யவை.

ரா. கிருஷ்ணன் :—ஆம், வாஸ்தவந்தான். நான்கூட ஓரிடத்தில் அந்த மாதிரி பாடம் சொல்லிக் கொடுக்கப்பட்ட தைப் பார்த்திருக்கிறேன்.

செட்டியார் :—பேய் பிசாசு ஓட்டுதல், பில்லி சூனியம் வைத்தல் என்பனவையெல்லாம் வெறும் தந்திரங்களேயன்றி மந்திரத்தினுல் ஆகிறவையல்ல. நம் வீட்டில் நடக்கும் காரியங்களையெல்லாம் ஆள்களே நேரில் செய்கிருர்கள்.

ரா. கிருஷ்ணன் :—அப்படியானுல், இதைப் பற்றி போலீஸாருக்குத் தெரிவித்து, ஜெவான்கள் வந்து காத்திருந்து ஆள்களைப் பிடிக்கும்படி செய்வோமே.

செட்டியார் :—அதனுல் வேறு ஏதாவது உபத்திரவம் உண்டாகுமோ என்னவோ; போலீஸ்காரர்கள் வந்திருந்து, ரத்னவேலுவின் ஆள்களைப் பிடிந்துக்கொண்டு போய் தண்டித்தால், அவனுடைய ஆத்திரம் அதிகப்படும். அவன் நமக்கு வேறு ஏதாவது கெடுதல் செய்ய முயற்சிப்பான்.

ரா. கிருஷ்ணன் :—நாம் பயந்துகொண்டு சும்மாயிருந்தாலும், இது நடந்துகொண்டேதான் போகும். போலீஸாரை நாம் வரவழைத்ததுபோல் காட்டிக்கொள்ள வேண்டாம். அவர்களே தெரிந்துகொண்டு வந்தார்கள் என்று நான் எல்லோருக்கும் சொல்லிவிடுகிறேன்.

செட்டியார் :—சரி ; அப்படிச் செய்யும்—என்ருர்.

உடனே ராமகிருஷ்ணன் புறப்பட்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் ஸப்-இன்ஸ்பெக்டர் அகோரம் ஐயரைக் கண்டு சங்கதியை மிக விநயமாகத் தெரிவிக்க, அவர் வியப்போடு வாயைப் பிளந்து கொண்டு ஏற இறங்கப் பார்த்து. "செட்டியாருக்குப் பகைவன் எவனுவது இருக்கிருனே?" என்ருர்.

ரா. கிருஷ்ணன் :—செட்டியார் ரத்னவேல் என்னும் ஒருவனை மோட்டார் ஓட்டி வேலையில் வைத்துக்கொண்

டிருந்தார் ; அவனுடைய நடத்தை சரியாயில்லை யென்று சில தினங்களுக்குமுன் அவனை வேலையிலிருந்து விலக்கிவிட்டார். அந்த ஆத்திரத்தை வைத்துக்கொண்டு, ஒரு வேளை, அவன் இப்படிச் செய்தாலும் செய்யலாம்.

அகோரம் ஐயர் :—என்ன ஐயா, இது கேழ்வரகில் நெய் ஒழுகுகிறதென்னும் கதைபோ லிருக்கிறதே. வேலையி லிருந்து தள்ளிவிட்டால், அதனாலேயே அந்த வேலைக்காரன் இவ்வளவு மூர்க்கமாக நடந்து கொள்ளுவானா? அதைத் தவிர, வேறு அதிகப்படியான உள்மர்மம் ஏதாவது இருக்க வேண்டும். நான் பார்த்த வரையில் எவளாவது குச்சுக்காரி, தட்டுவாணி முதலியவர்கள் எந்த வீட்டில் இருக்கிறார்களோ, அங்கே தான், துஷ்டர்கள் கல்களை எறிவார்கள். ஏனென்றால், அவ்விபசாரிகள் சிலருக்கு இணங்கி, சிலருக்கு இணங்காமல் இருப்பார்கள். அதனால் ஆத்திரமும் பொறாமையும் கொண்டு சிலர் கல்களை எறிவார்கள். செட்டியாருக்கு யௌவனப் பிராயமுடைய பெண்கள் இருக்கிறார்களா ?

ரா. கிருஷ்ணன் :—செட்டியாருக்கு இரண்டு ஆண் குழந்தைகளே இருக்கிறார்கள் ; பெண்கள் இல்லை.

அகோரம் ஐயர் :—செட்டியாருடைய சம்சாரத்துக்கு எவ்வளவு வயதிருக்கும்?

ரா. கிருஷ்ணன் :—இருபத்தைந்து, முப்பது இருக்கலாம்.

அகோரம் ஐயர் :— அந்த அம்மாளுடைய மாதிரி எப்படியோ ?

ரா. கிருஷ்ணன் :—நல்ல மாதிரியான அம்மாள் தான்.

அகோரம் ஐயர் :—செட்டியாருடைய மோட்டாரை எங்கே நிறுத்துகிறது வழக்கம்?

ரா. கிருஷ்ணன் :—செட்டியாருடைய வீட்டின் முன் பக்கத்தில் ஒரு லாயம் இருக்கிறது; அதற்குள் நிறுத்துவது வழக்கம்.

அகோரம் ஐயர் :—செட்டியார் தம் வீட்டண்டை இல்லாத சமயங்களில் அந்த மோட்டார் ஓட்டி, அங்கே போவதுண்டா?

ரா. கிருஷ்ணன் :—போவதுண்டு; ஆனால் வீட்டிற்குள் போகவேண்டிய அலுவல் அவனுக்கு எதுவுமில்லை.

அகோரம் ஐயர் :—செட்டியார் தம் சம்சாரத்தை மோட்டாரில் வைத்து அழைத்துக் கொண்டு எங்கேயாவது போகிறதுண்டா?

ரா. கிருஷ்ணன் :—இல்லை.

அகோரம் ஐயர் :—அம்மாள் மாத்திரம் தனிமையில் மோட்டாரில் உட்கார்ந்து எங்கேயாவது போவதுண்டா?

ரா. கிருஷ்ணன் :—அதுவுமில்லை.

அகோரம் ஐயர் :—மோட்டார் ஓட்டி செட்டியாரம்மாளுடன் பேசுவதுண்டா?

ரா. கிருஷ்ணன் :—அவன் அம்மாளுடன பேச வேண்டிய சந்தர்ப்பம் அதிகமாய் நேர்ந்திருக்காது.

அகோரம் ஐயர் :—அந்த அம்மாளை அவன் பார்த்திருப்பானே அதுவுமில்லையோ?

ரா. கிருஷ்ணன் :—பார்த்திருப்பான்.

அகோரம் ஐயர் :—உமக்கும் அந்த ரத்னவேலுக்கும் சிநேகமா, விரோதமா?

ரா. கிருஷ்ணன் :—இரண்டுமில்லை. சாதாரணமாக நடந்து கொள்ளுவோம்.

அகோரம் ஐயர் :—நீர் செட்டியார் வீட்டிற்குள் அதிகமாகப் போய்ப் பழகுவதுண்டா?

ரா. கிருஷ்ணன் :—உண்டு.

அகோரம் ஐயர் :—செட்டியார் அந்த மோட்டார் ஓட்டியை அவனுடைய நடத்தைப் பிசகிற்காகத் தள்ளினாரென்றீரா? அவன் வேலையை விட்டுப்போன தினம் வரையில் அவனுக்குச் சேரவேண்டிய சம்பளத்தை செட்டியார் கொடுத்து விட்டாரா?

ரா. கிருஷ்ணன் :—அவனை திடீரென்று நிறுத்திவிட்டார். அவனுக்கு சம்பளம் கொஞ்சம் சேரவேண்டியது செட்டியாரிடம் நிற்கிறது. அவன் வந்து கேட்டால் செட்டியார் கொடுத்து விடுவார். அவன் வரவில்லை.

அகோரம் ஐயர் :—செட்டியார் அவனை திடீரென்று நிறுத்தவேண்டிய காரணமென்ன?

ரா. கிருஷ்ணன் :—அவன் செய்யத் தகாத காரியம் எதையோ செய்தானென்று அவர் நிறுத்தி விட்டாராம்.

அகோரம் ஐயர் :—'நிறுத்தி விட்டாராம்' என்றால், செட்டியார் நிறுத்தியபோது நீர் இல்லையா?

ரா. கிருஷ்ணன் :—நான் இல்லை.

அகோரம் ஐயர் :—'செய்யத் தகாத காரியம்' என்கிறீரே; அது இன்னதென்பதை எங்களுக்குத் தெரிவிக்கலாமல்லவா?

ரா. கிருஷ்ணன் :—உங்களுக்குத் தெரிவிக்கக் கூடாத விஷயம் எதுவுமில்லை. ஆனால் அவர்களுக்குள் நடந்த தகரார் இன்னதென்பது எனக்கு அவ்வளவு நன்றாகத் தெரியாது. அவர் எனக்கு எஜமான்; நான் அவரிடம் அதிகமாய்த் தகவல்களைக் கேட்கவில்லை.

அகோரம் ஐயர் :—இதற்கென்று புகார் சொல்லிக்கொள்ள வருகிறவர் இது சம்பந்தமான விவரங்களை யெல்லாம் நன்றாகத் தெரிந்துகொண்டு வரவேண்டாமா ! நீர் போய் செட்டியாரையே அனுப்பும். எங்களுடைய அரிய பொழுதை அநாவசியமான சச்சரவுகளில் செலவிட நாங்கள் தயாராயில்லை. ரத்னவேல் இப்படியெல்லாம் செய்வதாக நீங்கள் சும்மா சொல்வது போதாது. அவன் இப்படிச் செய்ய வேண்டிய உள் கருத்தென்ன வென்பது நிச்சயமாகத் தெரியாத வரையில், நாங்கள் கண்ட இடத்திற்கெல்லாம் ஓடிவர இயலாது. நீர் போய் செட்டியாரையே வரச்சொல்லும்.

ரா. கிருஷ்ணன் :—இந்தப் பெரிய அவமானத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சியினால், செட்டியாருடைய உடம்பு சரியான நிலைமையில் இல்லை. அவர் படுக்கையை விட்டு எழுந்து வர முடியாத நிலைமையில் இருக்கிறார். அந்த வண்டியோட்டியின் துர்நடத்தையைக் கண்டு அவர் கடற்கரையிலேயே அவனை விலக்கிவிட்டார். அந்த ஆத்திரத்தை வைத்துக் கொண்டு அவன் இப்படி யெல்லாம் செய்கிறானென்று செட்டியார் சந்தேகிக்கிறார். அவனை செட்டியார் நீக்கியபின் நானும் அவனும் ஒரு தடவை சந்தித்தோம். அவனுடன் நான் பேசி, நடந்ததுஎன்னவென்று கேட்டேன். செட்டியார் ஒரு தாசிப்பெண்ணை வைத்துக்கொண் டிருந்தார். தினம் மாலையில் செட்டியார் அந்தத் தேவடியாளுடன் மோட்டாரில்

உட்கார்ந்து கடற்கரைக்குப் போவது வழக்கம். ரத்னவேல் முன்னலிருந்து வண்டியை ஓட்டிக்கொண்டு போவான். ஒரு நாள் அப்படி மூன்று பேரும் போனார்களாம். கடற் கரையில் குறட்டோரமாக வண்டி நிறுத்தப்பட்டதாம். தாசிப்பெண் தனக்குத் தலைவலி யென்று சொல்லி விட்டு, வண்டியிலேயே இருந்தாளாம். செட்டியார் இறங்கி குறட்டில் உலாவினராம். அப்போது தனிமையில் வண்டியி லிருந்த ரத்னவேலும் தாசிப்பெண்ணும் ஏதோ சம்சயமான காரியம் செய்தார்களென்று செட்டியார் சந்தேகங்கொண்டு இரண்டு பேரையும் தந்திரமாய் அங்கேயே இறக்கிவிட்டு தாமே வண்டியை ஓட்டிக்கொண்டு வீட்டுக்கு வந்து விட்டாராம். இந்த வரலாற்றை அவன் என்னிடம் தெரி தான்.

அகோரம் ஐயர் :—ஓஹோ! அப்படிச் சொல்லும் கதையை. இதில் பெண்பிள்ளை சம்பந்தம் இருக்கவேண்டு மென்று எனக்கு அப்போது முதல் சம்சயம் உண்டாயிற்று. நான் அநியாயமாக செட்டியாருடைய சம்சாரத்தைப்பற்றி பலவிதமாக சந்தேகம் கொண்டேன். ரத்னவேலுக்கு செட்டியார் அம்மாள்மேல் கண்ணேட்டம் ஏற்பட்டிருக்கலா மென்றும், ஒருவேளை, அந்த அம்மாளுடைய கிருபா கடாக்ஷமும் அவனுக்கு உண்டாயிருக்கலாமென்றும், அதில் ஒருவேளை நீரும் சம்பந்தப்பட்டு, அவனுக்கு செட்டியார் தாம்பூலம் கொடுக்கச் செய்திருப்பீரென்றும் நான் நினைத் தேன். இப்போது நிஜம் விளங்கிவிட்டது. சரி; அந்த வண்டி யோட்டி, உண்மையிலேயே, அந்த தாசிப் பெண்ணினிடம் தவருக நடந்துகொண் டிருப்பான? அல்லது, செட்டியார் தவருன சம்சயத்தினல் அவர்களை விலக்கினரா?

ரா. கிருஷ்ணன் :—தான் தவருக நடந்து கொள்ளவே இல்லையென்று அவன் ஆயிரம் சத்தியம் செய்கிருன். சுழல் காற்றடித்ததாம். அவளுடைய கண்களில் தூசி விழுந்ததாம். அவன் ஊதிவிட்டானும். அதைக் கண்டு செட்டியார் தவருக

சந்தேகங் கொண்டாராம். இந்த மாதிரி அவன் என்னென்னவோ சொல்லுகிறான்.

அகோரம் ஐயர் :—அதன் பிறகு அந்த தாசியை அவன் அழைத்துக் கொண்டுபோய் தன் வசத்தில் வைத்துக் கொண்டானுமோ ?

ரா; கிருஷ்ணன்:—அவள் தன்னுடைய தாய் வீட்டிற்குப் போவதாகச் சொன்னாளென்றும், அவன் அவளைக் கடற்கரையிலேயே விட்டுவிட்டுப் போனதாகவும் சொன்னான்.

அகோரம் ஐயர் :—அவன் இப்போது எங்கே இருக்கிறான் தெரியுமா ?

ரா. கிருஷ்ணன் :—தெரியவில்லை.

அகோரம் ஐயர் :—உங்கள் பிரியாது நிரம்பவும் சுவாரஸ்யமாய் இருக்கிறது. செட்டியார் வீட்டில் எவனோ, கற்களை எறிந்து வேறு பல அக்கிரமங்களைச் செய்கிறானென்கிறீர் ; அவன் ரத்னவேலா யிருக்க வேண்டுமென்கிறீர் ; ஆனால், அவன் இருக்குமிடம் உங்களுக்குத் தெரியாதென்கிறீர். இந்தப் பட்டணம் முழுதிலும் இருக்கும் ஜெவான்கள் எல்லோரும் வந்து இரவு பகல் செட்டியார் விட்டண்டை யிருந்து ஆளைக் கண்டுபிடிக்க முயன்றாலும்கூட, இது சாத்தியமான வேலை என்று நான் நினைக்கவில்லை. இந்த விஷயத்தில் நாங்கள் எந்த உதவியையும் செய்ய முடியாது. நீங்களே பல ஆள்களைக் காவல் போட்டு, குற்றவாளிகளைக் கையும் மெய்யுமாகப் பிடித்து சாட்சிகளோடு கொண்டுவந்தால், நாங்கள் இந்த வழக்கை ஏற்றுக்கொண்டு மேல்நடவடிக்கை நடத்துவோம். ஆனால், உங்களுக்காக நான் ஒரு காரியம் செய்கிறேன். இரவில் அந்தத் தெருவில் பெட்ரோல் வரும் ஜெவான்கள் அங்கு கொஞ்ச நேரமிருந்து, இதை கவனிக்கச் செய்கிறேன். அவ்வளவே நான் செய்யக் கூடியது. நீர் போகலாம். —என்றார்.

ராமகிருஷ்ணன், "சரி; நான் உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறேன். பிரயாசை கொடுத்ததற்கு மன்னிக்க வேண்டும். நமஸ்காரம் அண்ணு" என்று கூறி வந்தனம் செய்து விட்டு வெளியில் வந்தான்.

வந்தவன் போலீஸ் ஸ்டேஷனை விட்டு சுமார் ஐம்பது கஜதூரம் போயிருப்பான். அவனுக்குப் பின்னுல், "ஸாமீ, ஸாமீ, கொஞ்சம் நில்லுங்கோ" என்று யாரோ கூப்பிட்டதைக் கேட்டு ராமகிருஷ்ணன் திரும்பிப் பார்த்தான். ஹெட் கான்ஸ்டேபில் ஒருவர் சந்தோஷப் புன்னகையால் மலர்ந்த முகத்தோடு வந்ததைக் கண்டு ராமகிருஷ்ணன் நின்ருன். அந்தப் போலீஸ்காரருக்கு தாடி இருந்ததிலிருந்து, அவர் துருக்க ஜாதியார் என்பது தெரிந்தது.

அவ்வாறு வந்த அமீர்ஹான் சாயப்புவைப் பார்த்து ராமகிருஷ்ணன், "என்ன சங்கதி சாயப்பு?" என்ருன்.

அமீர்ஹான் :—(புன்னகை செய்தபடி) எல்லாம் ஸந்தோஷ சங்கதி தானுங்கொ. நீங்கொ எதைப்பத்தியும் ஓசனை பண்ணவானும். அதை நாம்ப சரிப்படுத்தருங்கொ.

ரா. கிருஷ்ணன் :—என்ன சாயப்பு, உங்கள் ஸப்-இன்ஸ்பெக்டர்தான் பிடி கொடுக்கவில்லையே.

அமீர்ஹான் :—அவுரு ஒங்ககிட்ட அப்பிடித்தான் பேஸ்வாரு. போலீஸ்காரரு தாங்க செய்யப்போறத்தை மின்னுலெ சொல்லிடுவாங்களா. சொல்லிட்டா அது எதிராளிக்குத் தெரிஞ்சு போவாதா? இந்த ஸப்-இன்ஸ்பெக்டர் ஐயரு இருக்கருரே, ஆஹா, நல்ல ருஸ்தூம் இன்னுலும் இவருக்கே தவும்; ஆளை ஒரு பாக்கடிக்கற நேரத்துலே கண்டு புடிச்சிடுவாரு. இவுருக்கு சீக்கிரத்திலெ டிப்ட்டி கம்மிஷனர்வேலை ஆயிடுமின்னு எல்லாரும் சொல்லிக்கிறுங்க. ஆனு கொஞ்சம் பெரிய குடும்பஸ்தரு. ஊட்டுலெ கும்பல் தாஸ்தி. வர சம்பளம் பத்தல்லெ. அதனுலே, யாராச்சும் மறவா என்னுச்சும் குடுத்தா, கண்டும் காணுமையும் வாங்கி ஜேபிலே போட்டுக்குவாரு. ஆனு அந்த மனஸு இருக்

குது பாருங்கோ. அது தங்கமின்னாலுந் தங்கத்தானுங்கோ. ஒருத்தருக்கிட்ட கைநீட்டி ஒரு துரும்பை வாங்கினாக்கூட அதுக்காவ உசிரை உட்டுடுவாரு. எப்பிடியாச்சும் தன்னாலெ ஏண்ட சகாயத்தைப் பண்ணிப்புட்டுத்தான் குந்துவாரு. அப் பேர்ப்பட்ட நல்ல ஐயரு. ஒங்ககிட்ட அப்பிடிச் சொல்லி யனுப்பிச்சாரா; ஒடனே என்னைக் கூப்பிட்டு, "அமீர்ஹான், நீதான் களவுக்கேத்த கோமுட்டி. பொளுது விடியறத்துக் குள்ளற, ஜாலும் பண்ணற ஆளுங்களெப் புடிச்சாரணும்" இன்னு காய்தாப் பண்ணிப்புட்டாரு. ஒங்கிளுக்கு இன்னமே கவலேயே வாணாங்கோ. எல்லாத்துக்கும் நானாச்சு.

ரா. கிருஷ்ணன் :—சரி; சந்தோஷம். நான் செட்டியா ரிடம் சங்கதியைச் சொல்லி உங்களுக்கு ஏதாவது மரி யாதை செய்ய ஏற்பாடு பண்ணுகிறேன்.

அமீர்ஹான் :—பிஸ்மில்லாஹ்; ஸந்தோஷமாச்சு. அப் பிடியே செய்யுங்கோ. அதிருக்கட்டும்; அந்த செட்டியாருக்கு என்ன யாபாரமுங்கொ?

ரா. கிருஷ்ணன்:—பழ வியாபாரம். ஏன், உங்களுக்குப் பழம் ஏதாவது வேண்டுமா?

அமீர்ஹான் :—பிஸ்மில்லாஹ்; நம்பிளுக்குப் பளம் ஒடம் புக்கு ஒத்துக்காதுங்க. ஆனா, நீங்க நல்ல பளமாக்குடுத்தா, பெரிய தொரைக்கிக் கொஞ்சம் அனுப்பலாம்; ஸப்-இன்ஸ் பெக்டருக்குக் கொஞ்சம் குடுக்கலாம். இதுலெ, பெரிய தொரைகூட ஒங்கிளுக்கு அநுகூலம் பண்ணுவாங்கோ; பிஸ் மில்லாஹ்.

ரா. கிருஷ்ணன் :—சரி; என்னோடு வாரும்; பழம் தருகிறேன்.

—என்று கூறி ஹெட்கான்ஸ்டேபிலை பழக்கிடங்கிற்கு அழைத்துப் போய் சுமார் 15 ரூபாய் பெறத்தக்க முதல்தர மல்கோவா முதலிய பழங்களை நான்கு கூடைகளில் வைத்து,

நான்கு கூலியாள்களின் தலையில் வைத்து, ஆள்களின் கூலிக்காக ஒரு ரூபாய் பணத்தையும் ஹெட்கான்ஸ்டேபிலிடம் கொடுத்தனுப்பினான்.

போகுமுன் அமீர்ஹான், "ஸாமீ, வேறே யாராச்சும் போலீஸ்காரன் வந்து, பொய் சொல்லி ஒங்களை ஏமாத்தப் பாப்பான். ஸப்-இன்ஸ்பெக்டருக்கு நாம்ப ஒருத்தருதான் அந்திரியமானவங்கொ. மத்தவங்க கிட்ட நீங்கொ எந்த சங்கதியெயும் சொல்லவாணாங்கோ. சொன்னா, ஒங்க அலுவலெல்லாம் கெட்டுப் போவும்" என்று கூறி, தரை வரையில் குனிந்து நிமிர்ந்து சலாம் வைத்துவிட்டு, பழக்கூடைகளோடு நேராகத் தமது வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தார். அவர் கூறிய வரலாறில் ஒரு சொல்கூட உண்மையே யல்ல. கள்ளனைக் குள்ளன் பாய்வது என்னும் நியாயப்படி நடந்த இடைத்தட்டுக் கொள்ளையென்றே இதை நாம் மதிக்கவேண்டும். ராமகிருஷ்ணன் பழக்கடையிலிருந்து நேராக செட்டியாருடைய வீட்டிற்குச் சென்று, போலீஸார் தமக்கு உதவி செய்வதாய் ஒப்புக்கொண் டிருக்கிறார்களென்று கூறி அவருக்கு தைரிய முண்டாக்கினான்.

அன்றைய இரவில் கற்கள் வீழ்வதையும், மறுநாட் காலையில் மற்ற வஸ்துக்கள் வீட்டின் வாசலில் வைக்கப்படுவதையும் போலீஸார் தடுத்துவிடுவார்களென்று செட்டியாரும், அவரது மனையாளும் ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். அவர்களுக்கு சிறிது மனத்துணிவு ஏற்பட்டதாகையால் இருவரும் சொற்ப ஆகாரம் உண்டு வழக்கப்படி தம் தம் சயனத்தை அடைந்தனர்.

மற்றைய நாட்களில் வீழ்ந்ததைவிட அன்று கற்கள் அதிகமாக வீழ்ந்தன. இரவு சரியாக 12 மணிக்கு அமீர்ஹானும், இன்னொரு ஜெவானும் பெட்ரோல் வந்து, செட்டியாருடைய வீட்டின் வெளிக்கதவைத் தட்டி, அதைத் திறக்கச் செய்து உள்ளே நுழைந்து வீடு முழுதும் சுற்றிப் பார்த்து,

ஒரு மணி காலம் அங்கே தங்கி இருந்தனர். அப்போது கல் ஒன்றுகூட விழவில்லை. அப்போது அமீர்ஹான், "எங்கே, ஒரு கல்லுகூட விளல்லியே, நீங்கொ சொம்மா காப்ரா பண்றுங்களே. நீங்கொ நிம்மதியாப் படுத்துத் தூங்குங்கொ. கல்லு உளல்லேன்னு நெனெச்சிக்கிங்கோ; அது உளாது" என்று தைரியமொழி கூறி, அவர்கள் பொய் சொன்னது போலவும், அவர்கள் சுத்த முட்டாள்கள் போல வும் காட்டிவிட்டு தமது சகாவோடு வெளியில் போய்ச் சேர்ந்தார்.

அதற்கு அரை நாழிகை காலத்திற்குப் பிறகு கற்கள் மழை பொழிவதுபோல விழத் தொடங்கின. மறுநாட் காலை யில் வழக்கப்படி எல்லா வரிசைகளும் வந்து சேர்ந்திருந் தன. அமீர்ஹான் அன்று காலை எட்டு மணி சுமாருக்கு பழக்கடைக்குப் போய், சூரத்தனமாகத் தமது முண்டாவில் தட்டி, கம்பீரமாக மீசையில் கை போட்டு, "நின்னு போச்சு ஸாமீ, என்னெ யாருன்னு பாத்தீங்க. நாம்ப நவாப் ஜடபுட ஜங் பகதூர் தர்பார்லெ மந்திரி வேலை பாத்த வம்மிஷத்தைச் சேந்தவங்கொ. நம்பளெக் கண்டா ஓடாத பேய்கூட ஓடிப் போவும், ஸாமீ. நம்பளெ நீங்கொ மறக்கக்கூடாது" என்றார்.

ராமகிருஷ்ணன் :—வழக்கப்படியே எல்லாம் விழுந்தன வாமே.

அமீர்ஹான் :—(கோபத்தோடு) அவுங்க பொய்ச் சொல் றுங்கோ. நாம்பளும் எல்நூல்த்தி அஞ்சும் ராத்திரி பன் னண்டு மணி மொத ஒரு மணி வரையிலெ செட்டியாரு ஊட்லெ இந்தாங்கொ. ஒரு கல்லுக்கூட உளல்லெ. அவுங்க நம்பளெ ஏமாத்தப் பாக்கறுங்கொ. அந்தப்பாச்சா நம்பகிட்ட பலிக்காது. நாணயமா நடந்துக்கிணு, நாம்ப கொயங்தெப் புள்ளெ மாதிரி நடந்துக்குவோம். கொஞ்சம் தண்டாப் பண்ணு, ஜூத்தியெக் களட்டி சரியா மரியாதெ பண்ணிப் புட்டுத்தான் உடுவோம்—என்று கூறி மிக ஆத்திரத்தோடு தமது கால் செருப்பைத் தொட்டுக் காட்டினார். அதைக்

கண்ட ராமகிருஷ்ணனுக்கு அஸ்தியில் ஜுரம் காணத் தொடங்கியது. உடனே அவன் நயமாகப் பேசத் தொடங்கி, “சரி, அவர்கள் பொய் சொல்லி இருக்கலாம். அதை விட்டு விடுங்கள். நேற்று அனுப்பிய மாதிரி உங்களுக்குக் கொஞ்சம் பழங்கள் அனுப்பட்டுமா?

அமீர்ஹான் :—(முகத்தை சுளித்துங்கொண்டு) நம்பிளிக்கிப் பளம் வாணும் ஸாமீ; நீங்கொ நேத்துச் சொன்ன மாதிரி ஏதாச்சும் மரியாதெ பண்ணு வாங்கிக்கறுங்கொ. இல்லாமெப்போனு, ஒங்க மரியாதெ ஒங்களோடெ, நம்ப மரியாதெ நம்பளோடெ—என்றார்.

முதல் நாள் மாலையில் ராமகிருஷ்ணனும் செட்டியாரும் பேசிக்கொண்டிருந்த சமயத்தில், போலீஸார் சகாயம் செய்தால், அவர்களுக்கு 50 ரூபாய் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் முடிவு கட்டியிருந்தார்கள். சாயப்பு அதட்டியதைக் கண்டு பயந்த ராமகிருஷ்ணன் செட்டியாருக்குத் தான் ஏதேனும் சமாதானம் சொல்லிக்கொள்ளலாமென்று நினைத்து 50 ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து மடித்து மறைவாக சாயப்புவின் கையில் சொருக, அவர் “பிஸ்மில்லாஹ்” என்று கடவுளை தியானம் செய்தபடி அதைப் பிரித்துப் பார்த்து சந்தோஷமடைந்து, “அச்சா, ஸந்தோஷமாச்சு. இது நம்பிளுக்குன்னு நெனெக்காதீங்க. இது ஸப்-இன்ஸ்பெக்டர் எஜமாங் கிட்ட போய்ச் சேரணும். சரி; நம்பிளிக்கி நேரமாச்சி. இன்னைக்கி ராவுலெயும் வந்து பாக்கறுங்கொ. ஸலாம்; சரி; நேத்து நீங்க குடுத்த பளத்துலெ நம்ப புள்ளெ குட்டிங்களுக்கு ஒண்ணுகூட வல்லேங்கொ. மல்கோபா, தில்பஸந் எல்லாம் கொஞ்சம் தயவ்பண்ணுங்கொ” என்றார்.

ராமகிருஷ்ணன் அன்றைய தினமும் ஒரு கூடை பழங்களை ஆளின் தலையில் வைத்தனுப்பினன். சாயப்பு பழங்களையும் பணத்தையும் அபகரித்துக்கொண்டு நேராக வீடு போய்ச் சேர்ந்து, அன்றைக்குப் பெருத்த பண்டிகை கொண்டாடினர்.

அன்றைய தினம் இரவிலும் பன்னிரண்டு மணிக்கு அமீர்ஹானும் இன்னொருவனும் செட்டியார் வீட்டிற்கு வந்து ஒரு மணி காலம் தங்கி யிருந்தனர். அவர்கள் இருந்தவரை யில் அன்றும் கற்கள் விழவில்லை. மற்ற காலங்களில், முதல் நாளில் நடந்ததுபோலவே, மண்டகப்படி நிறை வேறியது.

நான்கு தினங்கள் வரையில் நிலைமை அதே மாதிரி இருந்தது. அமீர்ஹான் தாம் எல்லாவற்றையும் அடியோடு நிறுத்திவிட்டதாகவே அழுத்தி அழுத்திச் சொல்லித் தமது சூரத்தனத்தை விளம்பரப்படுத்திக் கொண்டார். அவர் வந்த காலத்தைத் தவிர மற்ற வேளைகளில் வழக்கம்போலவே மரி யாதைகள்நிறைவேறின என்றுசிலர் கூறினராஞலும், சாயப்பு அதை ஒப்புக்கொள்ளாமல் அவர்கள்மேல் கோபங்கொண்டு அவர்களை அடிக்கத் தமது கால் செருப்பைக் கழற்றஆரம்பித் தார். ஆகவே, எவரும் அவரை மறுத்துப் பேசத் துணியா மல், அவர் சொன்னதற்கெல்லாம், "ஆமாமா, ஆமாமா" என்று உடுக்குத் தட்டினர்.

சாயப்பு அவர்கள் சொன்னதையே ஆதாரமாக வைத் துக்கொண்டு மறுபடி தமக்கு சன்மான மளிக்கவேண்டு மென்று அடிகோலி ராமகிருஷ்ணனிடம் நிஷ்டூரமாகப் பேச லானர். அவன் அவரைப் பார்த்து, "சாயப்பு, எங்களுக்கு நீங்கள் ஓர் உதவி செய்யவேண்டும். இன்றிரவு நீங்கள் ரஜா வாங்கிக்கொண்டு உடுப்புகளில்லாமல் தனியாக மாலையிலேயே வந்து பொழுது விடிகிறவரையில் இருங்கள்; நாளையகாலையில் உங்களுக்கு அன்றையதினம் செய்ததுபோல மறுபடி மரி யாதை செய்தனுப்புகிறேன்" என்றான்.

அமீர்ஹான் அதற்கு இணங்கி அதுபோலவே ரஜா பெற்றுக்கொண்டு, மாலையிலேயே தமது போஜனத்தை முடித்துக்கொண்டு போலீஸ் உடுப்பின்றி சாதாரண சாயப் புவாக செட்டியாருடைய வீட்டிற்கு வந்து சேர்ந்து, "இன்னெக்கிப் பாருங்கோ. ஒரு கல்லுக்கூட உளுவாது,

உளுந்திச்சின்னு,நாம்ப ஒங்கிளிக்கி குலாம் ஆயிப்போறுங்கொ. நீங்கொ படுத்து நிம்மதியா தூங்குங்கொ" என்று கூறி ஆடம்பரம் செய்ய, செட்டியார் முதலியோர் சிறிது தைரியமும் மனஅமைதியு மடைந்து படுத்துத் தூங்க ஆரம்பித்தனர்.

மணி சுமார் பத்தாயிற்று. மலைப்பிஞ்சுகள் வந்திறங்கத் தொடங்கின. தெருக் கூத்தில் பிள்ளையார், கட்டியக்காரன், ராஜா, மந்திரி முதலிய வேஷங்கள் ஒன்றன் பின்னொன்றாக வருவதுபோல பெரும் பெரும் கற்கள் வந்து மேன்மாடத்திலும், முற்றத்திலும் தடார் தடாரென்று விழத் தொடங்கவே, எல்லோரும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டனர். செட்டியார், ராமகிருஷ்ணன் முதலியோர் அமீர் ஹுஸான் சாயப்புவின் முகத்தைப் பார்க்கின்றனர். சாயப்பு இடது கையைத் தமது தாடிக்குள் கொடுத்து, அதன் சிக்கை விலக்கிவிட்டபடி, "நீங்கொ காப்ராப் படவாணாம். போயிப் படுங்கொ. இத்தான் நல்லது. ஆளெ இதோ பாக்கடிக்கற நேரத்துலெ நாம்ப புடிச்சுக் குடுக்கறுங்கொ" என்று மிகத் துடியாக மறுமொழி கூறிவிட்டு, மேன்மாடப் படிகளில் போய் எட்டி எட்டிப் பார்ப்பதும், கற்கள் வந்து விழுவதை கவனித்து, அவை எந்த திக்கிலிருந்து வருகின்றன வென்பதை யூகிக்க முயல்வதும், கீழே இறங்கிவந்து, செட்டியார் முதலியோரைப் பார்த்து பெருத்த சந்தோஷ சங்கதி கொண்டுவந்திருப்பவர்போலக் காட்டிக்கொண்டு, "இதோ ஆளு அம்பிட்டுக்கினும் பாருங்கொ. இன்னம் அஞ்சு நிம்மிசத்துலெ அவன் குடுமீலெ கைபோட்டு இங்கே கொண்டாந்து உட்றுங்கொ பாருங்கொ." என்று கூறுவதுமாக நடிக்க, கற்கள் ஜெர்மன் குண்டுகள் போல பயங்கரமான ஓசையோடு வந்து வீழ்ந்தபடியே இருந்தன. கற்கள் முற்றத்திலும், மொட்டை மெத்தையிலுமே வீழ்ந்தமையால், உள்ளே இருந்தவர்மீது அவை படுமென்ற அச்ச முண்டாக வில்லை யானாலும், அவை எல்லோருடைய மனதிலும் பெருத்த திகிலையும், கலவரத்தையும் உண்டாக்கிக் கலகலக்க அடித்து, அவமா

ணத்தினலும், அச்சத்தினலும் சதாகாலமும் கலங்கிச் சோர்வுற்று ஓய்ந்து கிடக்கும்படி செய்தன.

கற்கள் ஓய்வின்றி விழுந்துகொண்டே இருக்க, அமீர் ஹான் சாயப்பு சமாதானம் சொல்லிச் சொல்லி அலுத்துப் போனர். அவருடைய சவுடால் சொற்களாகிய கைச்சரக்கு முழுதும் தீர்ந்துபோய்விட்டது. ஆகவே, அதற்குமேல் அவருக்கு கோபமும், வீராவேசமும் உண்டாகத் தொடங்கின. கற்கள் வந்து வீழ்ந்த காலத்தில் எவரேனும் சாயப்புவினுடைய முகத்தைப் பார்த்தால், உடனே அது தூபம் போட்டதுபோ லாய்விடும். அவர் தமது கண்களை பயங்கரமாக விழித்துக்கொண்டு துருக்கு பாஷையில் தாறுமாருக வையத் தொடங்கி விடுவார். அவர் கற்களை எறிகிறவனை வைதாரா, அல்லது, செட்டியார் முதலியோர் தம்மை உபத்திரவப் படுத்துகிறதைப் பற்றி அவர்களை வைதாரா என்பதை நிச்சயிக்க இயலாது. அதைப் பற்றி அவரிடம் கேட்கவும் எவருக்கும் துணிவு ஏற்படவில்லை. கற்கள் வீழ்ந்ததைப் பார்க்கிலும், அமீர்ஹானுடைய வசைமொழிகளும், அவருடைய பயங்கரமான பார்வையும் அங்கிருந்தோர் எல்லோரையும் அதிகமாக நடுக்குவித்தன. ஆகவே, அமீர் ஹான் தம்முடைய வீட்டை விட்டுப் போவது போதுமென்ற எண்ணம் செட்டியார் முதலியோருக்கு உண்டாகி விட்டது.

தம்மை அபாரமாய் அலட்டிக்கொண்டு அவர் அங்குமிங்கும் போய்க் குறிப்புகள் பார்த்து முடிவில் ராமகிருஷ்ணனண்டை வந்து, "ஸாமி, கல் போட்ற ஆளு இருக்கற ஊட்டெ நாம்ப பாத்துட்டோம். நாம்ப கொஞ்சூண்டு வெளியே போயி இதோ அஞ்சு நிம்மிஸத்துலெ ஆளெப் புடிச்சுக்கினு வாராங்கொ. தெருக் கதவெத் தாப்பாளு போட்டுக்குங்கொ" என்று கூறினர்.

உடனே ராமகிருஷ்ணன் அவரோடு முன் பக்கத்திற்குப் போய் வாசற் கதவைத் திறந்துவிட, அவர், "நீங்கொ கத

வைப் போட்டுக்கினு இப்பிடியே இருங்கோ; இதோ ஒரு சண நேரத்துலெ ஆளைக் கொண்டாராங்கோ" என்று கூறியபடி வெளியில் போய்விட்டார்.

ராமகிருஷ்ணன் கதவை மூடித் தாளிட்டுவிட்டு நடைத் திண்ணையில் படுத்தான். படுத்தவன் தூங்காமல் விழித்துக் கொண்டே இருக்கவேண்டுமென்று நினைத்து மனதை திடப்படுத்தி ஊக்கிக்கொண்டே இருந்தானுனாலும், சுமார் அரை நாழிகை ஆவதற்குள், அவன் கடுமையான துயிலில் ஆழ்ந்து போனான். அமீர் ஹான் போனவர் போனவரே யானார். பொழுது விடிந்தவுடன் திடுக்கிட்டு விழித்துக் கொண்ட ராமகிருஷ்ணன் மிகுந்த திகில் கொண்டு தவிக்க லானான். தான் தூங்கின சமயத்தில் ஒருகால் அமீர்ஹான் சாயப்பு வந்து கதவைத் தட்டிப் பார்த்துவிட்டு, கோபித்துக் கொண்டு போயிருப்பாரோ வென்றும், அவர் மறுபடி வந்து தன்னை எவ்விதம் திட்டுவாரோ என்றும் நினைத்து மனக்கலக்க மடைந்தவனாகக் கதவைத் திறந்துகொண்டு வெளியில் வர, வழக்கம்போல் எல்லா வஸ்துக்களும் ஆஜ ராய் வந்திருந்தன.

அவன் தனது காலைக்கடமைகளை முடித்துக் கொண்டு மணிக் கணக்கின்படி பழக்கடைக்குப் போய் வியாபாரத்தை நடத்தி, சுமார் பதினொரு மணிக்குக் கடையை மூட உத் தேசித்த சமயத்தில், "ஸலாம் ஸாமீ," என்ற ஓசை உண்டா யிற்று. அந்தக் குரலோசை அவனுடைய மனதில் சுருக் கென்று தைத்தது. உடம்பு திடீரென்று தூக்கிப் போட்டது. அவன் உடனே நிமிர்ந்து பார்த்து, அமீர்ஹான் ஹெட்கான்ஸ் டேபில் உடையில் மிக முறுக்காக வந்து நின்றதைக் கண்டு பிரதி ஸலாம் வைத்தான். தான் கதவைத் திறக்கவில்லை யென்று சாயப்பு கோபங்கொண்டு தன் மீது புலி போலப் பாய்ந்து தனக்கு ஜவுத்தி மரியாதை நடத்தி வைப்பாரோ என்ற பெருந்திகில் எழுந்து அவனுடைய முகத்தில் அசடு வழியச் செய்தது. அவருடைய வாயிலிருந்து எவ்விதமான

சொல் வரப்போகிறதோ என்று மிக ஆவலோடு எதிர்பார்த்த படி, "வாருங்கள் சாயப்பு. இப்படி உட்காருங்கள்" என்று மிக விநயமாகக் கூறி உபசரித்தான். உடனே அமீர்ஹான், "ஸாமீ, சங்கதி இன்னதுன்னு புரிஞ்சுப் போச்சு துங்க. நேத்து ராவுமுளுதும் நாம்ப தூங்கவே இல்லெ ஸாமீ. ஒங்க ளெப்பத்தி நாம்ப அலெஞ்ச அலெச்சலு அல்லாஹுத்தாலாவுக் குத்தான் தெரியணுங்கொ. நாம்ப திரியும் வராமெ ஊட்டுக் குப் போயிட்டதாக நெனெச்சிருப்பீங்கொ. நாம்ப மேலான வங்க வவுத்துலெ பொறந்தவங்கொ. நம்பிளுக்குபொய்யி கிய்யி சூதுவாது பேசத் தெரியாதுங்கொ. நாம்ப கண்டத்தெ எஜ மாங்கிட்ட வந்து சொல்லிப்புட்டுப் போவணும்னு வந்தாங் கொ" என்றார்.

அதைக் கேட்கவே ராமகிருஷ்ணனைப் பிடித்து உலுக் கிய திகிலாகிய பெரும்பேய் விலகியது. அவர் முதல்நா ளிரவில் செட்டியாருடைய வீட்டிலிருந்து போனவர் மறு படி வரவில்லையென்பது தெரியவே, அவனுக்கு ஒரு வித துணிவும் ஊக்கமும் பிறந்தன. அவன், "விடியற்காலையில் வழக்கம்போலவே எல்லா வஸ்துக்களும் வாசலில் வந்து விழுந்திருந்தன. அதையும் நீங்கள் நேரில் பார்த்திருந்தால் உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டிருக்கும்" என்றான்.

அமீர்ஹான் ஆத்திரத்தோடு, "அதையெல்லாம் நாம்ப பாக்கலேன்னு நெனெக்கிறீங்களா? அம்பிட்டு யூகம் இல்லா மலா இருவத்தேளு வருசமா நாம்ப இந்தப் போலீசிலெ இருந்து பளமுந்தின்னு கொட்டையும் போட்டாங்கொ. நாம்ப இந்த ஹோட்டுவேலெயிலே நாலு கோரு வாங்கினவங்க ஸாமீ; என்னமோ இந்த சாயப்பு நம்ப கடைவாசல்லெ வந்து பளத்துக்காவத் தொண்ணுந்து நிக்கிறுங்கோன்னு எண்ணிக் காதிங்க; நாம்ப ஒரு பேஸ் சொல்லிப்புட்டா, அதெக் கடைசி வரையிலெ நெறைவேத்திட்டுத்தான் மத்த வேலெ செய்யற வங்க; நீங்களும் அதே மாதிரி ஒங்க சொல்லெ நெறவேத் தணும் ஸாமீ" என்றார்.

ராமகிருஷ்ணன், அவருடைய கருத்து இன்னதென்பதைத் தெரிந்துகொள்ள மாட்டாமல் விழிக்க, அதை சுலபத்தில் உணர்ந்து கொண்ட சாயப்பு, "என்ன நீங்கொ நேத்துச் சொன்னதை இதுக்குள்ளற மறந்தூட்டீங்களா? ஒரு ராவு ரஜா வாங்கிக்கினு, செட்டி வூட்டுலெ வந்து இருந்தா, அதுக்கு ஏதோ மரியாதெ பண்ணறேன்னு ஸாமிச் சொன்னுங்களே. அதை மறந்து பூட்டீங்களா?" என்றார்.

ராமகிருஷ்ணன், "அதை நான் மறப்பேனா! மறக்கவே இல்லை; அதை நான் அவசியம் நிறைவேற்றுகிறேன். நீங்கள் நேற்று இரவெல்லாம் அலைந்து நிஜத்தைத் தெரிந்துகொண்டதாகச் சொன்னீர்களே; அந்த சங்கதியைச் சொல்லவில்லையே" என்றான். அமீர்ஹான், "என்னுங்கொ ஸாமீ, அதைச் சொல்லாமெப் போவேனு; நம்பிளிக்கி புத்தியில்லென்னுபாத்துக்கினீங்களா! நாம்ப உப்புப் போட்டுச் சோறு திங்கல்லெ. ஒரு அப்பங்கிட்ட ஒரு காஸ் வாங்கினா அவனுக்கு நாம்ப ஏதாச்சும் ஸகாயம் பண்ண வாணுமா!" என்று கூறி, தணிவான குரலில் ராமகிருஷ்ணனுடைய காதண்டை போய்ப் பேசத்தொடங்கி, "ஸாமி, செட்டியாரு வூட்டுலெ இந்த மாதிரி வேலை செய்யறது மனிஸரல்லாங்கொ. இதே மாதிரி எத்தினியோஎடத்துலெ நடந்திருக்குது. அதெநாம்ப கண்ணுலெ பாத்திருக்காங்கொ. மனிசருக்குப் பக்கத்துலெ கல்லு வந்து உளும். ஆனா, கல்லு மனிசருமேலே படாது. அதுனலெ மனிசருக்குத் தொந்தரவே உண்டாவாது. இது ஜின் தேவதையோடெ கோளாறுங்கொ. வேறே எதுவுமில்லீங்க. அவஞ் சொன்னான், இவஞ் சொன்னான்னு கண்டவங்களை யெல்லாம் கேக்க வாணுங்கொ. நாம்ப நம்ப குர்ஆன் சாக்கியாச் சொல்றுங்கொ. இது ஜின் தேவதை செய்யற வேலையே கண்டி வேறில்லீங்கோ. இது தமிழரு மந்தரத்துக் கெல்லாம் அசையாதுங்கொ. நம்ப பறச்சேறிக் கடை மசூதிலே நம்பளவங்க ஒரு பெரியவரு இருக்கறுங்கொ. அவுங்களை மக்கான் ஸாப்னு கூப்பிடுவாங்கொ. அவுருகிட்ட போனா, முடி கவுறு மந்திரிச்சு ஸமாதிலெ வச்சு

பாத்யா ஓதிக் குடுப்பாங்கொ. அதெ செட்டியாரு, செட்டி யாரம்மா எல்லாரும் கையிலெ கட்டிக்கணும். கட்டிக்கினு, அந்த ஜின் தேவதை ஓடனே இந்த ஊரைவுட்டே ஓடிப் போவும்; கல்லும் உளாது; வேறெ எதுவும் நடக்காது. இதெ நீங்கொ செட்டியாருக் கிட்டச் சொல்லி அவசியம் செய் யுங்கொ. என்ன நாம்ப சொன்னது தெரிஞ்சுதுங்களா?" என்றார்.

அதைக் கேட்ட ராமகிருஷ்ணன் மிகப் பாடுபட்டுத் தனது சிரிப்பை அடக்கிக் கொண்டு, "ஐயா, சாயப்பு, நீங்கள் சொன்னபடி, ஏதோ ஒரு தேவதையின் கோளாறி ஞல்தான் இதுநடக்கிறதென்று நான் சந்தேகங்கொண்டேதா னிருந்தேன். அதையே நீங்களும் சொல்லுகிறீர்கள். நிரம்பவும் சந்தோஷ மாயிற்று. நம் இருவருடைய மனதும் ஒத்துப் போய்விட்டது. ஆனால் இந்தச் செட்டியார் ஒரு பைத்தியக்கார மனிதர். அவர் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்று பிடிவாதம் பிடிக்கும் சுபாவமுடை யவர். அவருக்கு பேய், பிசாசு, ஜின்தேவதை முதலியவை களில் நம்பிக்கையே கிடையாது. இதே மாதிரி நான் அவ ரிடம் சொன்னபோது அவர் என் சொல்லை அசட்டை செய்து, என்னைப் பைத்தியக்கார ஞக்கிப் பேசியதன்றி, மனிதர் நேரில் இருந்தே இவைகளை நடத்துகிறார்களென் பது நிச்சயமென்று சொல்லி, அதற்குமேல், என்னை போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பினார். நீங்கள் இப்போது பிரஸ்தாபித்த ஜின்தேவதையைப்பற்றி நான் அவரிடம் பேசி ஞல், அவருக்கு என்மேல் கோபம்வரும். உங்களுக்கு இதற்கு முன் கொடுத்த 50 ரூபாய் தண்டமென்று சொல்லி என் னைத் திட்டுவார். இனிமேல் ஒன்றும் கொடுக்கவேண்டா மென்பார். பிறகு என்பாடு திண்டாட்டமாகிவிடும், என் கையில் ஒரு பைஸாகூட இல்லை. செட்டியாருடைய பணத்தை அவருடைய உத்தரவில்லாமல் நான் எடுத்துக் கொடுத்தால், அது திருட்டுக் குற்றமாக முடியும். செட்டியார் வம்புக்கார

மனிதர்; என்னோடு விடாமல் உங்களையும் சந்தியில் இழுத்து விடுவார். நீங்கள் தயவுபண்ணி எனக்கு ஒரு சின்ன உதவி செய்யவேண்டும். அது உங்களுக்கு ஒரு பெரிய பிரயாசை யல்ல. நீங்கள் செட்டியார் வீட்டிற்கு ஒரே ஒரு நடை தான் நடக்கவேண்டும். எனக்காக, நீங்கள் அதைப் பொருட் படுத்த மாட்டீர்களென்று நினைக்கிறேன்." என்றான்.

அமீர்ஹூசன் வியப்பும் மலைப்பும் ஏமாற்றமும் அடைந்த முகத் தோற்றத்தோடு அவனை நோக்கி, "என்ன, சொல் லுங்கொ" என்று ஈனஸ்வரமாகக் கேட்டார்.

ராமகிருஷ்ணன், "வேறொன்றுமில்லை. நீங்கள் நேராக செட்டியாரிடம் போங்கள், இரவு முழுதும் அலைந்து, பல ரிடம் விசாரித்து உண்மையைக் கண்டுபிடித்து விட்டதாகச் சொல்லுங்கள். என்னவென்று அவர் கேட்பார். அந்த மோட்டார் ஓட்டி இவைகளைச் செய்யவில்லை யென்பது நிச் சயமாகத் தெரிந்து போய் விட்டதென்றும், அதே வீதியி லுள்ள சில செட்டியார்கள் இவருக்கு சொத்து அதிக மாகச் சேர்ந்திருப்பதைக் கண்டு பொறாமை கொண்டு இவரை ஒழித்துவிட வேண்டுமென்று கருதி இப்படிச் செய்கிறார்க ளென்றும், நாலா பக்கங்களிலு முள்ள வீடுகளில் ஆள்கள் மறைந்திருந்து கற்களை எறிகிறார்களென் றும் சொல்லுங்கள். 'நான் இறந்து போவதில் தெருவா ருக்கு என்ன அநுகூலம்' என்று செட்டியார் கேட்பார். அவருடைய குழந்தைகள் இரண்டும் மைனரா யிருப்பதால், அவர் இறந்து போகுமுன் உயில் எழுதி வைப்பாராதலால், மைனர்களுடைய சொத்தைப் பாதுகாத்து, உயிலின் நிபந் தனைகளை நிறைவேற்றி வைக்கும்படி அந்த வீதியிலுள்ள முக்கியஸ்தர்களில் இரண்டு மூன்று பேரை செட்டியார் நிய மிப்பாராதலால், மைனர்களுடைய சொத்தைப் பலவகை களில் அபகரிக்கலாமென்ற திருட்டெண்ணத்தோடு, சிலர் கட்டுப்பாடாகத் தங்களுக்குள் ஏற்பாடு செய்துகொண்டு செட்டியார் இறந்துபோகும் வழியைச் செய்கிறார்கள் என்

றும், அவரைக் கொல்ல, இதைத் தவிர வேறு பல ரகஸிய ஏற்பாடுகளையும் செய்துகொண் டிருக்கிறார்க ளென்றும், இதை நிறுத்துவது மிக பிரயாசையான காரியமென்றும் நீங் கள் செட்டியாரிடம் சொல்லுங்கள். இவ்வளவே நீங்கள் செய்யவேண்டிய வேலை. இந்த மாதிரி நீங்கள் செட்டியா ரிடம் சொல்லிவிட்டு உடனே நேரில் இங்கே வாருங்கள். நான் உங்களுக்குச் சொன்னபடி 50 ரூபாயோடு இன்னொரு ஐந்து ரூபாய் சேர்த்து 55 ரூபாயாக உடனேகொடுக்கிறேன். பழங்களும் தருகிறேன். நீங்கள் சந்தோஷமாக வீட்டிற்குப் போகலாம்" என்றான்.

அதைக் கேட்ட அமீர்ஹான் சந்தோஷமாகப் புன்னகை செய்து, ராமகிருஷ்ணனுடைய கைகளைப் பிடித்துக் குலுக்கி, "அச்சா பொம்மன். நாம்ப எத்தினியோ பாப்பா ரெப் பாத்திருக்காங்கொ. நீங்கொ வயசிலெ சின்னவங்களா இந்தாலும், ஒங்கிளிக்கி பாரி புத்தி இருக்குதுங்கொ. இதோ நாம்ப போயி நீங்க சொன்னுப்லெ செட்டியாருக்கிட்ட சொல்லிப்புட்டு அஞ்சு நிம்மிஸத்துலெ வர்றுங்கோ. அது வரையிலெ நீங்கொ எங்கெயும் போயிட வாணுங்கோ" என்றார்.

ராமகிருஷ்ணன், "உங்களுக்கு சந்தேகமானல் நான் ரூபாயை எடுத்துக்கொண்டு கதவைப் பூட்டிவிட்டு உங்க ளோடு கூடவே வந்து, பக்கத்து வீட்டுத் திண்ணையில் இருக் கிறேன். நீங்கள் செட்டியாரிடம் போய் சொல்லிவிட்டு நானிருக்கும் இடத்திற்கு வாருங்கள். நான் உடனே பணத் தைத் தருகிறேன். பழங்களை நாளையதினம் வந்து வாங்கிக் கொள்ளுங்கள்" என்றான்.

அமீர்ஹான் சந்தோஷத்தோடு அந்த ஏற்பாட்டிற்கு இணங்கினர். ராமகிருஷ்ணன்பணத்தை எடுத்து வைத்துக் கொண்டு பழக்கிடங்கை மூடிப் பூட்டிவிட்டு அமீர்ஹானு டன் புறப்பட்டு செட்டியாருடைய வீட்டிற்கு வந்து சேர்ந் தான். வந்தவன் அண்டை வீட்டின் திண்ணையில் உட்

கார்ந்துகொண்டு, அமீர்ஹானை செட்டியாருடைய வீட்டிற்குள் அனுப்பினன்.

செட்டியார் மேன்மாடத்தி லிருந்தாராதலால், அமீர் ஹான், "செட்டியார் ஐயா, செட்டியார் ஐயா" என்று உரக்க அழைத்துக்கொண்டு படிகளின் வழியாக மேலே ஏறிப் போன காலத்தில் ராமகிருஷ்ணன் விரைவாக செட்டியாருடைய வீட்டின் அடிப்பாகத்திற்குள் நுழைந்து அங்கிருந்த தனது தாயிடம் அவசரமாகச் சில வார்த்தைகள் சொல்லிவிட்டு முன் பக்கம் வந்து, மெத்தைப் படிக்கட்டின் மேல் ஏறி மறைந்து நின்று, அமீர்ஹான் செட்டியாரிடம் என்ன சொன்னு னென்பதை கவனித்துக் கேட்கத் தொடங்கினன்.

அமீர்ஹான் செட்டியாரிடம் மிக ஆடம்பரமாகப் பேசி, தாமும், போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டரும், சுமார் ஐம்பது ஜெவான்களும் முதல் நாள் இரவு முழுதும் அலைந்து திரிந்து அரும்பாடுபட்டு உண்மையைக் கண்டுபிடித்துவிட்டதாகப் பீடிகை போட்டு, ராமகிருஷ்ணன் சொல்லிக் கொடுத்தபடி சங்கதிகளை, சிறிது தணிவான குரலில், கூறி செட்டியாருக்கு முதல்தரமான நேர்வாள மாத்திரையைக் கொடுத்துவிட்டுத் தாம்போவதாகக் கூறி ஸலாம் செய்துவிட்டுத் திரும்ப, அது வரையில் ஒளிந்திருந்து விஷயங்களை நன்ருகக் கேட்டுக் கொண்டிருந்த ராமகிருஷ்ணன் விரல்களை ஊன்றி சிறிதும் ஓசையின்றி மிக விசையாகக் கீழே இறங்கி ஓட்டமாக ஓடி, அண்டைவீட்டுத் திண்ணையை யடைந்து, ஒன்றையு மறியாத பரமஸாதுபோல வீற்றிருக்க, அடுத்த நிமிஷம் அமீர்ஹான் சந்தோஷத்தினுல் மலர்ந்த முகத்தோடு அங்கே வந்து, அவனுடைய விருப்பத்தின்படி தாம் காரியத்தை நிறைவேற்றி விட்டதாக முக அசைப்பு, கண் ஜாடை முதலியவற்ருல் தெரிவிக்க, ராமகிருஷ்ணன் வாயைத் திறவாமல் 55 ரூபாய் நோட்டுகளை அவருடைய கையில் வைத்து, மிக நயமாகக் குனிந்து ஒரு ஸலாமும் செய்தான்.

அமீர்ஹான் மௌனம் சாதித்தபடி நோட்டுகளை எண்ணிப் பார்த்துத் தமது சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு இரகஸியமான குரலில், "பளத்துக்கு நாளைக் காலெயிலெ வாறுங்கோ. பிஸ்மில்லாஹ். ஸாமீ, போய்வா ருங்கோ. அலைக்கும் ஸலாம்" என்று தழுதழுத்த குரலில் கூறி மிக வணக்கமாகக் குனிந்து தரையைத் தொட்டு நிமிர்ந்து ஸலாம் வைத்து அவ்விடத்தை விட்டு மெதுவாக நழுவிவிட்டார்.

உடனே ராமகிருஷ்ணன் அவ்விடத்தை விட்டுப் புறப் பட்டுத் தனது ஜாகைக்குப் போய்த் தனது ஸ்நானத்தை முடித்துக்கொண்டு செட்டியார் வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

செட்டியாருடைய வீட்டில் கற்கள் விழத்தொடங்கிய நாள் முதல் நாச்சியாரம்மாளுடைய தேக நிலைமையும் மிகப் பரிதாபகரமா யிருந்ததாகையால், அம்மணியம்மாள் தனது சொந்த ஜாகைக்குப் போகாமல் அங்கேயே இருந்து விட் டாள். அந்த வீட்டிலேயே தனியான ஓர் அறையில் அவளும் ராமகிருஷ்ணனும் தமது போஜன காரியத்தை நடத்திக் கொண்டு எப்போதும் அங்கேயே இருந்து வந்தனர்.

செட்டியாரம்மாள் தனது இளங் குழந்தைகள் இரண் டையும் கவனிக்க இயலாதவளாய் சித்த ஸ்வாதீன மற்ற வள்போ லிருந்து வந்தாளாதலால், அம்மணியம்மாள் செட்டி யாரம்மாளுக்கும், அவளுடைய குழந்தைகளுக்கும் ஆக வேண்டிய சகலமான காரியங்களையும் நிமிஷக் கணக்கில் செய்து, சொந்தத் தாயினும் பன் மடங்கு அதிக அக்கறை யாகவும் கனிகரமாகவும் நடந்து, கண்ணை இமைகள் காப் பதுபோலப் பாதுகாத்து வந்தாளாதலால், அம்மணியம்மாள் எழுந்திரென்றால், செட்டியாரம்மாள் எழுந்திருப்பாள்; உட்காரென்றால் உட்காருவாள்; எந்தக் காரியமானாலும், அம்மணியம்மாளுடைய யோசனையைக் கேட்டு அதன்படியே நடந்து கொள்வாள்.

செட்டியார் ஒரே படுக்கையாகப் படுத்துவிட்டதைக் காண, தன் புருஷர் இறந்துபோய் விடுவாரோ என்ற பெருத்த கவலையும், அதற்குமேல் தான் யாருடைய பாது காப்பில் இருக்கிறது என்கிற திகிலும் உண்டாகிவிட்டன. அந்த நிலைமையில், அம்மணியம்மாளும், ராமகிருஷ்ணனும் பரம மித்திரர்களாய் அன்பே வடிவெடுத்ததுபோல் நடந்து கொண்டதைக் காண, தன் புருஷர் இறந்துபோனாலும்கூட, தான் தனது கடைசிக் காலம்வரையில் அம்மணியம்மாளை யும், ராமகிருஷ்ணனையும் விட்டுவிடக் கூடாது என்ற மன உறுதி ஏற்பட்டுக்கொண்டே வந்தது. அமீர்ஹான், செட்டி யாரிடம் செய்தி சொல்ல மேன்மாடத்திற்குப் போன காலத்தில் ராமகிருஷ்ணன் தன் தாயிடம் சில வார்த் தைகள் சொல்லிவிட்டுப் போனதாகக் குறித்தோமல்லவா. அவன் எதைப்பற்றி அவ்வாறு பேசினான் என்ற ஐயம் வாசகர்களுக்கு உண்டாவது சகஜமே. அவள் உடனே செட்டியாரம்மாளை அழைத்துக்கொண்டு, பின் பக்கத்துப் படி வழியாக மேலே ஏறி, அங்கு நடந்த சம்பாஷணையை செட்டியாரம்மாள் கேட்கும்படி செய்து அழைத்துக்கொண்டு வருமாறு கூறிவிட்டு அவன் சென்றான். அது போலவே அவர்கள் இருவரும் மேலே சென்று சம்பாஷணையின் கருத்தைத் தெரிந்துகொண்டு கீழே இறங்கி வந்தனர்.

அந்த வீதியி லிருந்த தமது சுயஜாதி மனிதர் தன் புரு ஷரைக் கொன்றுவிட்டு, தங்கள் சொத்து முழுதையும் அப கரித்துக்கொள்ள உத்தேசித்திருக்கிறார்கள் என்ற செய்தி நாச்சியாரம்மாளுக்குப் பெருத்த இடிபோலவே இருந்தது. அவளுடைய மனதும், உடம்பும் அடியோடு தளர்ந்து வீழ்ந்து போயின. அவள் நடைப்பிணம்போ லாய் அம்மணி யம்மாளுடைய கைக்குழந்தைபோல மாறிவிட்டாள். அம்மணி யம்மாள் தனது ஆக்லாதத்தை அடக்க மாட்டாதவளாய், நாச்சியாரம்மாளைப் பார்த்து, "சங்கதியைக் கேட்டீர்களா? 'கிடந்ததெல்லாம் கிடக்கட்டும் கிழவனைத் தூக்கி மணையில் வை' என்று பழமொழி சொல்லுவார்கள். அதுபோல, உங்

கள் எஜமானர் ஆயிரம் பாடுபட்டு சொத்தைத் தேடு கிறது. அவரோடு பிணைப்பட்ட மனைவியாகிய நீங்கள் மலைபோல இருக்கிறீர்கள். ராம லக்ஷ்மணர்போல் இரண்டு குழந்தைகள் இருக்கிறார்கள். நீங்கள் மூன்று பேரும் வாயில் விரலை வைத்துக்கொண்டு போகிறது. ஊரிலிருக் கும் நடுவீதி நாராயணர்கள் உங்கள் சொத்தை யெல் லாம் குந்தினைப்போல் அடித்துக்கொண்டு போகிறதா! இது நல்ல நியாயமா யிருக்கிறது. அம்மா, நீங்கள் செட்டியா ரிடம் பேசுங்கள். அவருடைய உயிருக்கு ஹானி ஏற்படவே போகிறதில்லை. அவர் பயந்து உயில் எழுதிவைக்க எத்த னித்தால், சொந்த மனிதர் யாரையும் நிர்வாகஸ்தராக நிய மிக்க வேண்டாமென்று சொல்லுங்கள். அவர் யாரையும் நியமிக்காமல் செய்யுங்கள். நியமித்தால், பிறகு நீங்களும் குழந்தைகளும் அநியாயமாகப் பராரி ஆகிவிடுவீர்கள்" என்று கூறி உருவேற்றிக்கொண்டே இருக்கத் தொடங்கி னாள். அமீர்ஹான் சொன்ன செய்தி உண்மையாயிருக்கலா மென்று செட்டியாரும் நம்பிவிட்டாராதலால், அவருக்கும் அபாரமான திகிலும், கலவரமும், கோபாவேசமும் உண்டாகி விட்டன. அந்த வீதியிலிருந்த சுயஜாதி மனிதர்கள் துராசை கொண்டு அப்படியும் செய்வார்களா என்ற வியப் பும், அத்தனை பேர்கள் சேர்ந்து தம்மைக் கொல்ல எத்தனிக் கையில் தாம் எப்படித் தப்புவது என்ற பீதியும் உண்டாகி விட்டனவாதலால், இரண்டு மூன்று தினங்களில் செட்டியா ரது நிலைமை சம்சயமானதாகி விட்டது. மேலும் சில தினங் களில் அவர் இறந்துவிடுவார் என்று பிறர் நினைப்பதற்குரிய குறிகள் ஏற்பட்டுப் போயின.

ராமகிருஷ்ணன் அநேகமாய் எப்போதும் அவருக்குப் பக்கத்தில் இருந்து அவரைப் பாதுகாத்து வந்தானாயினும், அவன் இல்லாத சமயங்களில் நாச்சியாரம்மாள் மேன்மாடத் திற்குப் போய் அவரைக் கட்டிக்கொண்டு கண்ணீர் சொரிந்து அழுது புலம்பி, தங்கள் சுயஜாதி மனிதர்களுடைய சதியா லோசனையைப்பற்றிப் பிரஸ்தாபித்து அவர்கள் யாரையும்

கிட்டச் சேர்க்க வேண்டாமென்று கூறிக் கெஞ்சி மன்றாடி விட்டு வந்து சேருவாள்.

அந்த நிலைமையில் கற்கள் வீழ்வது முதலிய தினப்படி மண்டகப்படி நடந்துகொண்டே போனதாகையால், செட்டியார் அந்தப் பேரபாயத்திலிருந்து தப்ப வகையறியாதவராய்க் கிடந்து தத்தளித்தார்.

அந்த சமயத்தில் ராமகிருஷ்ணன் செட்டியாருக்குப் பக்கத்திலேயே சதாகாலமும் இருந்து, அவரைத் தூக்கி உட்காரவைப்பது, வாயில்கஞ்சியைவார்ப்பது, உடம்பை சுத்தி செய்து விடுவது, படுக்கைகளை மாற்றுவது, அவரைப் படுக்க வைப்பது முதலிய சகலமான காரியங்களையும் செய்து, அடிக்கடி அவரைப் பார்த்துக் கண்ணீர் விடுத்து, "ஐயோ, மலை போல இருந்த உடம்பு துரும்புபோ லாய்விட்டதே; பார்க்க, சகிக்க வில்லையே. உங்கள் ஜீவதசைக்குப் பிறகு எங்களை யெல்லாம் இவ்வளவு பட்சமாக யார் காப்பாற்றப் போகிறார்கள். எஜமானியம்மாளும் குழந்தைகளும் உங்களை விட்டு எப்படித்தான் இருப்பார்களோ? சொந்தக்காரர்கள் எல்லோரும் இப்படி சதி செய்கிறார்களே! அவர்கள் சொத்துகளை யெல்லாம் அபகரித்துக் கொண்டால்கூட, அக்கரை இல்லை. நானும் என் தாயாரும் வீடு வீடாய்ப் பிச்சை யெடுத்தாவது எஜமானியம்மாளையும் குழந்தைகளையும் நாங்கள் கடைசி வரையில் மானமாக வைத்துக் காப்பாற்றி விடுவோம். ஆனால், அவர்கள் உங்களை நினைத்து அழுதழுது உருகுவார்களே. அதற்கு நாங்கள் எவ்விதமான பரிகாரத்தைத் தேடுவோம்" என்று மிக உருக்கமாகக் கூறி, செட்டியாரைப் பிடித்தணைத்துக்கொண்டு கண்ணீர் விடுத்துத் தேம்பித் தேம்பி அழுதான்.

அவனுடைய ஆழ்ந்த அன்பையும் மன உறுதியையும் கண்டு செட்டியாரும் கண்கலக்க மடைந்து தவித்தவராய், அதற்கு என்ன மறுமொழி சொல்வதென்பதை அறியாமல் மௌனமாயிருந்தார். உடனே ராமகிருஷ்ணன், "எனக்கு

ஒரு யுக்தி தோன்றுகிறது. அப்படி நாம் செய்தா லென்ன" என்றான்.

செட்டியார், "என்ன யுக்தி?" என்றார்.

ராமகிருஷ்ணன், "நாம் இந்த வீட்டிலேயே இருக்கிற வரையில் இந்த அவகேடு நீங்கப்போகிறதில்லை. வேறே பேட்டையில் மறைவாக இருக்கும் ஒரு வீட்டை வாடகைக்குப் பேசிக்கொண்டு இரகஸியமாய் இரவில் நாமெல்லோரும் அங்கே போய் விடுவோம், இங்கே போயியை மாத்திரம் வாசலில் இருக்கச் செய்து முன் கதவை அவன் எப்போதும் சும்மா சாத்தி வைத்திருக்கச் செய்வோம். நாம் உள்ளே இருப்பதாக எல்லோரும் நினைத்துக் கொண்டே இருக்கட்டும். நான் அடிக்கடி இங்கே வந்து பார்த்துவிட்டு வருகிறேன். அங்கே நீங்களெல்லோரும் எவ்வித அபாயமும் இன்றி யிருக்கலாம்" என்றான்.

அதைக் கேட்ட செட்டியார் சிறிது காலம் யோசனையிலாழ்ந்திருந்து, "அது சரிப்படாது. இங்கே வீட்டின் அடியில் இரும்புப் பெட்டியைப் புதைத்து அதில் சகலமான சொத்துகளையும் வைத்திருக்கிறேன். அவைகளை அவ்வளவு சுலபத்தில் நாம் எடுத்துக்கொண்டு போக முடியாது. எடுத்துக் கொண்டு போனாலும் புது இடத்தில் இவ்வளவு பந்தோபஸ்து இராது. நாம் உயிரை விட்டாலும் இங்கேதான் விட வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட ராமகிருஷ்ணன் முகவாட்ட மடைந்து சிறிது சோர்ந்திருந்த பின், "அப்படியானால், நாம் இன்னொரு காரியமாவது செய்வோமே. உங்கள் உடம்பு இளைத்துத் துரும்புபோ லாகிவிட்டது. எனக்குத் தெரிந்த பிரபல டாக்டர் ஒருவர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருக்கிறார். அவர் மங்களூர் பிராம்மணர்; வெள்ளைக்காரர் போல மீசை, தொப்பி முதலிய வைத்துக் கொண்டிருப்பார். ஆனால் வைத்தியம் செய்வதில் இப்போது ஜெனரல் ஆஸ்பத்திரியில் அவருக்கு நிகரானவர் வேறு எவரும் இல்லை. அவர் ஒரு

பார்லீ லேடியைக் கல்யாணம் செய்துகொண் டிருக்கிறார். அவளும் டாக்டர் பரீட்சையில் தேறியவள். அவருக்குப் பகலெல்லாம் ஜெனரல் ஆஸ்பத்திரியில் வேலை சரியாயிருக்கும். மாலையில்தான் அவர் வெளியில் வைத்தியம் செய்வார்; அவரை அழைத்து வந்து உங்களுடைய உடம்பைக் காட்டி, ஏதாவது மருந்து கொடுக்கச் செய்வோம். உடம்பின் பலஹீனம் நீங்கும்படி மருந்து கொடுத்தால், நீங்கள் தேறிப்போவீர்கள். இதையாவது அவசியம் நீங்கள் செய்ய வேண்டும்." என்றான்.

செட்டியார், "அதை வேண்டுமானால் செய்யலாம். இன்று மாலையில் வரச்சொல்லும்" என்றார். ராமகிருஷ்ணன் உடனே எழுந்து வெளியில் போய் சுமார் ஒருமணி காலம் கழித்துத் திரும்பி வந்து, "நான் அவரைப் பார்த்து சங்கதியைச் சொன்னேன். அவர் இன்று மாலை சரியாக ஏழுமணிக்கு வருவதாகச் சொன்னார்; அதற்கு முன் வந்து நினைப்பூட்டச் சொன்னார். அவரிடம் உள்ள ஒரு விசேஷ குணம் என்னவென்றால் அவருக்கு நல்ல கைராசி உண்டு. அவர் வெறும் ஜலத்தைக் கொடுத்தால் கூட, தீராத நோயெல்லாம் தீருகிறதாம். அதுவும் நோயாளி தக்க பெரிய மனிதராயிருந்தால், இராத்திரி முழுதும் நோயாளியின் பக்கத்திலேயே இருந்து, மணிக்கணக்கின்படி மருந்து கொடுத்து, ஆகவேண்டிய உபசரணைகளைச் செய்ய, தம்முடைய சம்சாரத்தை இரவு முழுதும் இருக்கச் செய்கிறார்; அதற்காகப் பணம் கேட்பதில்லை. அந்தப் பெண் எப்படி இருக்கிறாள் தெரியுமோ. கந்தர்வப் பெண் என்பது அவளுக்கே தகும். உடம்பு தந்தத்தில் கடைந்தெடுத்ததுபோ லிருக்கிறது. வயது சுமார் பதினெட்டிருக்கும். அவள் சிரித்த முகத்தோடு நோயாளிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து செய்யும் உபசரணையை நாம் இன்னதிதா னென்று சொல்லமுடியாது" என்றான்.

அந்த வரலாற்றைக் கேட்டு செட்டியார் மிகுந்த சந்தோஷமடைந்தார். அன்று மாலை ஆறு மணிக்கு ராமகிருஷ்

ணன் டாக்டரை அழைத்து வரப் புறப்பட்டான். புறப் பட்டவன் செட்டியாரை நோக்கி, "அவர் சின்ன மோட்டார் வண்டி வைத்திருக்கிறார். அதில் இரண்டு பேர்தான் உட்கார லாம். அவரும் அவருடைய மனைவியும் வருவார்கள். அவரு டைய வீடு இதோ பக்கத்துத் தெருவில்தான் இருக்கிறது. நான் நடந்து வரப்போகிறேன். ஆகையால் அவர்கள் எனக்கு முன் இங்கே வருவார்கள். வந்தால் மேலே அழைத்து வரும்படி போயி யிடம் சொல்லிவிட்டுப் போகிறேன். இரண்டு பேரையும் நாற்காலிகளில் உட்கார வைத்து மரியாதையாக நடத்துங்கள். அவர் சொல்வதை நன்றாகக் கேட்டுக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

சரியாய் ஏழு மணி ஆன சமயத்தில் காவற்காரன் டாக் டரையும் அவருடைய மனைவியையும் அழைத்துக்கொண்டு மேலேவந்து சேர்ந்தான். டாக்டர் வெள்ளைக்காரர் போலவே காணப்பட்டார். அவருக்கு வயது இருபத்தைந்திற்குள் ளாகவே இருக்கும். தலையில் பார்ஸீ தொப்பி, ஸர்ஜ் கோட், நிஜார், பூட்ஸ் முதலிய அலங்காரங்களுடன் இருந்தார். அவ ருடைய முகத்தில் மேல் உதட்டின் நடுவில் மாத்திரம் இரு புறங்களிலும் வெட்டப்பட்ட புது நாகரிக மீசை காணப்பட் டது. அவர் கண்களில் ஸ்பிரிங் கண்ணாடி யணிந்திருந்தார் அவர் தம்முடைய யௌவன மனைவியின் வலது கையைத். தமது இடது கையில் கோத்துக்கொண்டிருந்தபடியே மேலே வந்தார். அவள் தத்ரூபம் வெள்ளைக்காரிபோல தொப்பி, பூட்ஸ், மார்பில் தணிவாயிருந்த ஜாக்கெட், பார்ஸீ தாவணி, கழுத்தில் முத்துமாலை, மெல்லிய தங்கச் சங்கிலி முதலிய அலங்காரங்களுடன் காணப்பட்டாள். அவளும் தங்க விளிம் புள்ள கண்ணாடியை மூக்கில் அணிந்திருந்தாள். அவளுடைய ஆடையாபரணங்கள் சொற்பமாகவே இருந்தனவானாலும், அவளுடைய இயற்கை வனப்பும், தளதளப்பும், யௌவனச் செழுமையும், அங்கங்களின் கணக்கான உருட்சி திரட்சியும், தந்த நிறமும், முகவசீகரமும், முத்துக்கள்போ லிருந்த பற்க ளின் அழகும் ஒன்று கூடி, காண்போர் மனதை ஒரே நொடி

யில் கவர்ந்து மயக்கத்தக்கவையா யிருந்தன. முக்கியமாய் அவளுடைய மார்பழகே காண்போர் உயிரைப் பருகத்தக்க சாதனமாய் அமைந்திருந்தது. மெருகு கொடுக்கப்பட்ட தந் தம்போ லிருந்த கழுத்தின் கீழ்ப்பாகம், ஸ்தன்னியம் வரை யில் நன்ருகத் திறந்துவிடப் பட்டிருந்ததாகையால், கீழ்ப் பாகத்தின் மேன்பாடு கண்கொள்ளாக் கவர்ச்சி வாய்ந்ததா யிருந்ததென்பது நிதரிசனமாக விளங்கியது.

இயற்கையிலேயே ஸ்திரீசபல முடைய செட்டியார் தமது துர்ப்பலமான நிலைமையிலும் அந்தப் பெண்ணின் முகத்தையும், மார்பையும், மற்ற அங்கங்களையும் சரேலென்று இரண்டு மூன்று தடவை பார்த்த பிறகு டாக்டருக்கு உப சார மொழிகள் கூறி, இருவரும் உட்கார்ந்து கொள்ளும்படி இரண்டு நாற்காலிகளைக் காட்டினர். ஆனல் அவர்கள் உட் காரவுமில்லை; செட்டியாரை அவ்வளவாய் இலட்சியம் செய்ததாகக் காட்டிக் கொள்ளவு மில்லை.

டாக்டர் உடனே தமது ரப்பர் குழாயை எடுத்து காது களில் மாட்டிக்கொண்டு, செட்டியாருடைய ஹிருதயத்தின் நிலைமையைப் பரிசோதிக்கத் தொடங்கினர். அவ்வாறு சிறிது நேரம் சோதித்த பின் அவர் செட்டியாருடைய கண் ணிமைகளைப் பார்த்தார்; நாவை நீட்டச்செய்து பார்த்தார். உடனே டாக்டருடைய முகம் சந்தோஷமற்றதாக மாறிப் போயிற்று. அவர் இங்கிலீஷிலும் கொச்சையான தமிழி லும் மணிப்பிரவாளமாகப் பேசினர். அவருடைய வாயிலிரு ந்து வார்த்தைகள் வருவதே மிக அரிதாயிருந்தது. முடிவாக அவர் செட்டியாரைப் பார்த்து, "சரி; நான் ராமகிருஷ்ணனை என் ஜாகையில் நிறுத்திவிட்டு வந்திருக்கிறேன்; அவரிடம் மருந்து கொடுத்தனுப்புகிறேன்." என்ருர்.

செட்டியார், "இப்போது உடம்பின் நிலைமை எப்படி இருக்கிறது?" என்ருர். டாக்டர், "இந்த நிலைமையில் இன்னம் 48 மணிக்குள் ஹிருதய ஓட்டம் நின்று போய் விடும். அதுவரையில் நான் எதையும் நிச்சயமாகச் சொல்ல

முடியாது. ஆனால் நான் மருந்து கொடுத்துப் பார்க்கிறேன். அதில் பிழைத்தால், உண்டு. இல்லையானால், இல்லை தான். அதிருக்கட்டும். நீங்கள் உயில் ஏதாவது எழுத வேண்டுமானால் நாளைக்கு எழுதிவிடுங்கள். அதற்குமேல் உயிர் நில்லாது. என் மருந்தில், உயிர் திரும்பினால், உயிலை ரத்து செய்து கொள்ளலாம்" என்று கூறிவிட்டுத் தமது மனையாளுடன் வெளியில் போய்விட்டார்.

அதன்பிறகு அரைமணி காலம் கழிந்தது. ராமகிருஷ்ணன் மருந்து முதலிய உபகரணங்களோடு வந்து சேர்ந்தான். வந்தவன் செட்டியார் முற்றிலும் தளர்ந்து ஏக்கமாகப் படித்திருந்ததைக் கண்டு, முகவாட்டமும், கண்கலக்கமும் அடைந்து, "நல்ல வேளை நாம், இப்போதாவது டாக்டரை வரவழைத்தோம். இன்றும் நாளையும் நாம் பேசாமலிருந்தால், மறு நாள், இந்த வீடு விசனத்தில் ஆழ்ந்துபோகும். இதோ டாக்டர் சில உபகரணங்களை அனுப்பி இருக்கிறார். ரப்பரினால் செய்த காதுமூடிகள் சிலவற்றைக் கொடுத்திருக்கிறார். நீங்களும் அம்மாளும் இவைகளைக் காதுகளில் சொருகிக் கொண்டே இரவில் படுத்திருந்தால் கற்கள் விழும் ஓசை உங்களுக்குக் கேட்கவே கேட்காது. அந்த ஓசை தாக்கித் தாக்கியே, ஹிருதயம் பலஹீன மடைந்துபோ யிருக்கிறதாம். இவைகளைக் காதுகளில் போட்டுக்கொண்டே படுத்திருந்தால் ஓசையே கேட்காது. அதுவுமன்றி, உங்களுக்கு ஒரு மணிக்கு ஒரு தரம் மருந்து கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டுமாம். அதற்கு, இன்னம் அரை மணியில் அவருடைய மனைவியே வருவாள்; வந்து இரவு முழுதும் உங்களுக்குப் பக்கத்திலேயே இருப்பாள். காலையில் வீட்டின் வாசலில் வஸ்துக்கள் விழுவதை வேலைக்காரி உங்களிடம் சொல்லக்கூடாது. அதைப் பற்றி நீங்களும் உங்கள் மனதை அலட்டிக் கொள்ளக்கூடாது. இவ்வளவே, அவர் இப்போது சொன்னது" என்று கூறினான்.

அதைக்கேட்டு செட்டியார் சிறிதளவு திருப்தியடைந்தா

ராலும், தாம் இறந்து போகப் போகிறோம் என்ற எண்ணம் அவருடைய மனத்தைப் பெருத்த பேய் போலப் பிடித்துக் கொண்டது. மறு நாள் தாம் எப்படியும் ஓர் உயில் எழுதி அதை ரிஜிஸ்டர் செய்து வைத்துக்கொள்ளவேண்டும் என்ற நினைவு தலையெடுத்து நின்றது. அவர் ராமகிருஷ்ண னிடம் அதிகமாய்ப் பேசாமல் சோர்ந்து படுத்திருந்தார். அதற்குமுன் சொற்பமாய் இறங்கிய பால் கஞ்சியும் அன்று இறங்காமல் குமட்டலை உண்டாக்கியது. ஆகவே, அவர் சுத்த உபவாசமாகப் படுத்துவிட்டார்.

சரியாக ஒன்பது மணிக்கு டாக்டருடைய மனைவி, கையில் ஒரு சிறிய தோல் பெட்டியுடன், டக்டிக்கென்று நடந்து கொண்டு மேலே வந்து சேர்ந்தாள்.

அப்போது அங்கிருந்த ராமகிருஷ்ணன் அவளை வரவேற்க அவள் பேசாமடந்தைபோல் எவரோடும் பேசாமல், கொச்சைத்தமிழில் தந்திபாஷையில் பேசியபடி ரப்பர் மூடிகளை எடுத்து செட்டியாருடைய இரண்டு காதுகளிலும் பொருத்தி, தான் கொண்டுவந்திருந்த திராவகத்தில் அரை அவுன்ஸ்அளவு செட்டியாருக்குக் கொடுத்துக் குடிக்கச் செய்துவிட்டு, ஒரு நாற்காலியை இழுத்து செட்டியாருடைய படுக்கையண்டை போட்டு அதில் உட்கார்ந்து கொண்டாள்.

மிச்சமாயிந்த இரண்டு ரப்பர் மூடிகளை செட்டியார் அம்மாளுக்குக் கொடுத்துவிட்டுப் படுத்துக் கொள்ளும்படி அவள் ராமகிருஷ்ணனிடம் கூற, அவன் அவ்வாறே செய்தான். சிறிது நேரத்திற் கெல்லாம் செட்டியார் மயக்கத்தில் ஆழ்ந்து போனார். ராமகிருஷ்ணன் கீழே சென்று ரப்பர் மூடிகளை செட்டியாரம்மாளுடைய காதுகளில்மாட்டி தன் தாயாருடன் படுக்கச்செய்து விட்டு, மேலே வந்து ஒரு பக்கத்தில் படுத்துக்கொண்டான். அன்றைய இரவிலும் கற்கள் வழக்கம் போல வீழ்ந்தனவாலும், அவற்றின் ஓசை செட்டியாரையோ, செட்டியாரம்மாளையோ பாதிக்கவில்லை. மறுநாள்

காலையில் தெருவில் வரிசைகள் வந்ததாகவேலைக்காரி அவர்களிடம் சொல்லவுமில்லை. பார்வதிலேடி இரவு முழுதும் விழித்திருந்து மணிக்கணக்கின்படி செட்டியாருக்கு மருந்து கொடுத்து காலையில் புறப்பட்டுப் போய் விட்டாள்.

காலையில் விழித்துக் கொண்டெழுந்த செட்டியார் சிறிது முகத் தெளிவடைந்தவராகக் காணப் பட்டார். அவர் சரியாகத் தூங்கிப் பல தினங்க ளாகிவிட்டனவாதலால், அன்றிரவு முழுதும் நன்றாகத் தூங்கி எழுந்தது முகத்தின் விகாரக்களையை மாற்றியது. ஆனால், ஆகாரமின்மையால், துர்ப்பலம் அதிகமாயிருந்தது.

அன்றைய தினம் அவருக்கு ஆகாரம் கொடுக்கவந்த நாச்சியாரம்மாள் அவர் 48 மணிக்குமேல் உயிருடனிருக்க மாட்டரென்று டாக்டர் சொன்ன விஷயத்தைப் பற்றிப் பேசி அவரைக் கட்டிக்கொண் டழுது, "ஐயோ, நீங்கள் போனபின், நாங்கள் எப்படி இருப்போம். தெருவார் பணத்தைக் கொள்ளை யடிப்பதற்காக நம் குழந்தைகளைக் கொன்றாலும் கொன்று விடுவார்களே. உங்களுக்கு முன் என் பிராணனும் போய் விடுவது நிச்சயம். நீங்கள் இன்று உயில் எழுதி ரிஜிஸ்டர் செய்து விடுங்கள். நாம் இருவரும் நாளையதினம் இறந்து போய்விடப் போகிறோம். நம்முடைய ஐயரும், அவருடைய தாயாரும் குழந்தைகளை போஷிப்பதென்றும், அவர்கள் மேஜர் ஆகிறவரையில் சொத்துக்களைக் காப்பாற்றி அவர்களிடம் ஒப்புவிக்கிறதென்றும் எழுதிவிடுங்கள்" என்று தேம்பித் தேம்பி அழுது கூறிக் கெஞ்சி மன்றாடினாள்.

செட்டியார், "நீ பயப்படாதே. டாக்டர் கெட்டிக்காரர். நேற்றிரவில் அவர் செய்த சிகிச்சையில் என் உடம்பு கொஞ்சம் தெளிவடைந்திருக்கிறது. இன்னம் சில தினங்கள் இப்படியே செய்தால், என் உடம்பு தேறிப் போகும். நான் பழைய மாதிரி ஆய் விடுவேன். ஆனாலும், முன் ஜாக்கிரதைக்

காக இன்று நான் உயில் எழுதி, சப்-ரிஜிஸ்டிராரை இங்கேயே வரவழைத்து அதை ரிஜிஸ்டர் செய்து வைக்கிறேன். குழந்தைகளுக்கு நீயே போஷகியாயிருக்கும் படி எழுதுகிறேன். ராமகிருஷ்ண ஐயரை மாத்திரம் அதில் சேர்க்கிறேன். அவர் நம்முடைய சொத்துக்களை நிர்வகித்து, உனக்குஉத்தரவாதியாக நடந்துகொண்டு பிள்ளைகள் மேஜர் ஆனவுடன் எல்லாப் பொறுப்பையும் அவர்களிடம் ஒப்புவிக்கும்படி நிபந்தனைகள் எழுதுகிறேன். அவர் ஒருவருடைய உதவியே உனக்குப் போதுமானது" என்றார்.

அதுபோலவே அன்றைய தினம் ஓர் உயில் தயாரிக்கப்பட்டது. அவருடைய சொத்துகள், சுமார் மூன்று லக்ஷம் ரூபாய் தேறியது. மைனர்கள் மேஜர்களாகும் வரையில் நாச்சியாரம்மாள் போஷகியாய் இருந்து சொத்துகளை வைத்துக்கொண்டு நிர்வகிப்பதென்றும், ராமகிருஷ்ணன் அவளுக்கு உத்தரவாதியாயிருந்து சகலமானபொறுப்பையும் கவனிப்பதென்றும், அவள் இறந்து போனால், ராமகிருஷ்ணனே முக்கிய போஷகனும் நிர்வாகஸ்தனுமாகிறதென்றும் கண்டு உயில் தயாரிக்கப்பட்டது. பிரத்தியேகக் கட்டணம் பெற்று ஸப்-ரிஜிஸ்டிரார் அங்கேயே வந்து அதை ரிஜிஸ்டர் செய்து விட்டுப் போக, உயில் இரும்புப் பெட்டிக்குப் போய்ச் சேர்ந்தது.

அன்றைய பகலில் டாக்டர் சில மருந்துகளை அனுப்பினாராதலால் அதை உட்கொண்டதில், செட்டியாருக்கு நல்ல பசி உண்டாயிற்று. அவர் சிறிதளவு சாதம் முதலிய வஸ்துக்களை உண்டார்.

அன்றைய தினம் இரவில், முதல் நாளிரவில் வந்தது போல, பார்வீலேடி வந்து சேர்ந்தாள். அன்று அவள் வாசனை ஸெண்டுகளைத் தடவிக்கொண்டு மிக வசீகரமான அலங்காரங்களோடு வந்திருந்தாள். வந்தவள் செட்டியாரைக் கூச்சமின்றித் தொட்டு, அவருடைய செவிகளில் ரப்பர் மூடி

களை வைத்துவிட்டு, மருந்தையும் வாயில் விடுத்து விழுங்கச் செய்து, அவருக்குப் பக்க மாகவே கட்டிலிற் கருகில் உட்கார்ந்து கொண்டாள். முதல்நா ளிரவில் படுத்துக் கொண்டது போல மற்றவர்களும் தம்தம் இடத்தில் சா ணித்துக் கொண்டனர். அன்றையதினம் செட்டியார் நித்தி ரையில் ஆழவில்லை. அவர் புரண்டு புரண்டு படுத்து, அடிக் கடி பார்வதீ லேடியைக் கபட்டுப் பார்வையாகப் பார்த்த படியே பொழுதைப் போக்கினர். அவள் தன் பையில் முதல் தரமான ஆரஞ்சு, சீமை இலந்தை, மல்கோவா முதலிய பழங்களைக் கொணர்ந்திருந்தாள். செட்டியாருக்கு மருந்து கொடுத்த பின்னர் அவைகளையும் கொடுக்கும்படி டாக்டர் உத்தரவு செய்திருப்பதாகக் கூறி பழங்களை உரித்து சிறுகச் சிறுக அவருடைய வாயில் போட்டபடி கட்டிலின் மேலேயே ஏறி அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண் டாள். அவர் வேதனைப் பட்டுப் புரண்டு புரண்டு படுத்த காலங்களில் அவள் அவருடைய கால்களைத் தூக்கித் தனது மடிமீது வைத்துக்கொண்டு மிருதுவாகப் பிடித்து வருடி விடுவதும், அப்புறம் இப்புறம் சாய்வதுபோல அவருடைய உடம்பின்மேல் தன் மார்பு உராயும்படி செய்வதுமாக வீற்றிருந்தாள்.

அன்றையதினம் செட்டியாருக்குக் கொடுக்கப்பட்ட மருந்து, தூக்கமுண்டாக்காமல் காமவிகாரத்தைக் கிளப்பி விடத் தக்க மருந்தாகையால், மணிக் கணக்கின்படி அதைக் குடிக்கக் குடிக்க, செட்டியாருடைய உடம்பு வெறி கொண்ட வனுடைய நிலைமையை அடைந்து விட்டது. அவளுடைய உடம்பில் பூசப்பட்டிருந்த வாசனை ஸெண்டுகளும் அவரு டைய மோகாவேசத்தைக் கிளப்பி விட்டபடி இருந்தன. அந்த நிலைமையில் அவள் தனது வசீகரமான அங்கங்கள் அவர்மீது உராயும்படி செய்து அவரை அணைத்தபடி உட் கார்ந்திருந்தது, அவரைப் பரவசப்படுத்தி அவருடைய சர் வாங்கமும் பாகாயுருகும்படி செய்தது; அதோடு அவள்

மல்கோவா மாம்பழம், சீமை இலந்தை முதலியவற்றையும் உள்ளே செலுத்தியபடி இருந்தாள்.

அந்த நிலைமையில், இந்த உலகையே துறந்த ஒருயோகீசுவரரா யிருந்தால் கூட, அவருடைய மனம் சபலித்திருக்கு மென்பது நிச்சயம். அப்படி இருக்க, இயற்கையிலேயே சிற்றின்ப லீலா விநோதரான செட்டியார் என்ன செய்திருப்பார் என்பதை நாம் விவரிக்கவே வேண்டியதில்லை.

அந்தப் பெண் இங்கிலீஷ் வார்த்தைகள் கலந்த கொச்சைத் தமிழில் கொஞ்சிக் கொஞ்சிப் பேசி, சிறிதும் கிலேசம், நாணம், பயிர்ப்பு முதலியவின்றி கேவலம் ஒரு பரத்தை போலத் தமக்கருகில் உட்கார்ந்திருக்கவே, செட்டியார் தமது துர்ப்பலமான நிலைமையை அடியோடு மறந்து போனார்.

48 மணியில் தாம் இறந்து போவோமென்ற எண்ணமும் அவருக்கு ஒரு மூலையில் இருந்தது. ஆகவே, இறந்து போகுமுன், தாம் அந்த தெய்விக அழகுவாய்ந்த பார்ஸீ லேடியின் சேர்க்கையைப் பெற்று இறந்தால், அது ஒரு திருப்தியென்று அவர் தமக்குள் கருதினார். அந்த சமயத்தில அவள் ஆயிரம் ரூபாய் கேட்பதாயிருந்தாலும் கொடுக்கத் தயாராயிருந்தார். ஆனால் தமது கருத்தை எப்படி அவளிடம் வெளியிடுவதென்றும், வெளியிட்டாலும் அவள் தமது துர்ப்பல நிலைமையில், அதற்கு இணங்குவாளோ வென்றும் அவர் எண்ணமிட்டு, ஊமையன் பாட விரும்புவது போல அவளுடைய முகத்தைப் பார்த்துப் பார்த்து அசட்டு விழி விழித்தார். அவள் மேன்மேலும் அவருடைய உடம்பு படபடப்பையும் ஆவேசத்தையும்அடைந்து கட்டுவிட்டு இளகிப் போகும்படியான காரியங்களைச் செய்தபடி வீற்றிருந்தாளேயன்றி, அவருடைய கருத்தை சிறிதும் அறிந்துகொள்ளாதவள் போலவும், தான் தனது வைத்தியக் கடமையையே செய்துகொண்டிருப்பவள் போலவும் நடித்தாள்.

அந்த இரவு முழுதும் இருவரும் விழித்து கொண்டிருந்தனர். செட்டியாருடைய உடம்பு தண்ணீராய் உருகி ஓடிக்கொண்டிருந்தது. அவருடைய மனக் கொந்தளிப்பு கட்டிலடங்காததாகவே இருந்தது. விடியற்காலம் வரையில் அவரை ஏமாற்றி அதீதமான கவர்ச்சியினாலேயே சித்திர வதை செய்து அவரை உயிரோடு கொன்று கொண்டிருந்த பார்வதீ லேடி அவருடைய உடம்பில் திடீரென்று ஒருவித மாறுபாடு உண்டானதைக் கண்டு, மெதுவான குரலில் அவரை அழைக்கத் தொடங்கினாள். அவர் கிணற்றிலிருந்து பேசுகிறவர்போல், "என்ன?" என்றார். அவள் அவருடைய முகத்தண்டை தனது முகத்தைக் கொண்டுபோய், "நான் யார் தெரிகிறதா? நான் உங்கள் தாசி தனக்குயில். எறும்புக் கடிக்கு மருந்து கொண்டு வருவதாகச் சொல்லி விட்டு வந்து நீங்கள் ஏமாற்றினாலும், நான் உங்களை மறக்காமல் உங்கள் கடைசிக்காலம் வரையில் மருந்து கொடுத்தேன். நான் போய் வருகிறேன். சௌக்கியமாகத் தூங்குங்கள்" என்றாள்.

செட்டியார் திடுக்கிட்டு "ஆ!" என்று வியப்புக் கூச்சலிட்டார். அதற்குமேல் பேச அவரால் இயலவில்லை. அவருடைய விழிகள் அசையாமல் ஒளி மழுங்கி அப்படியே நின்று போயின. அவள் அவருடைய உடம்பைப் பிடித்து அசைத்துப் பார்த்தாள். அது மரக்கட்டைபோல உணர்வற்றதாகத் தோன்றியது. அதுவே சமயமென்றுணர்ந்த போலிப் பார்வதீ மடந்தை மெதுவாய் அவ்விடத்தை விட்டு எழுந்து கீழே போய் வாசற் கதவைத் திறந்துகொண்டு, தனக்காக ஆயத்தமாகக் காத்திருந்த மோட்டார் வண்டியில் ஏறிக்கொண்டு அந்தரத்யானமாகிவிட்டாள்.



# அத்தியாயம்—6

## மன்மத பீடர்-மதிமோச விளக்கம்

மன்மதபீட மகா யோகீசுவரர் வாயுஸ்தம்பனம் செய்து தமது பீடத்தோடு பூமியை விட்டு மேலே உயர்ந்து அந்தரத்தில் இருந்தபடி பக்த கோடிகளுக்குப் பிரசங்கம் புரிந்தாரென்றும், அந்த அதிமாநுஷ விசித்திரச் செய்கையைக் கண்டு எல்லோரும் திகைத்து ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தனரென்றும் நாம் நான்காவது அத்தியாயத்தின் முடிவில் கூறினோமல்லவா. அதற்கு மேலும் ஒரு நாழிகை காலம் வரையில் யோகீசுவரர் தமது உபந்நியாசத்தை நடத்தி, எல்லோரையும் ஆசீர்வதிக்க, அன்றைய கூட்டம் அதோடு கலைந்தது. யோகீசுவரர், ஸ்வர்ணம்பாள் முதலியோர் வீற்றிருந்த இடங்களுக்கு முன்னர் உடனே திரை போடப்பட்டு விட்டதாகையால், பீடத்தோடு அந்தரத்தில் இருந்த யோகீசுவரர் மறுபடி எவ்விதம் தரைக்கு வந்தாரென்பது எவருக்கும் தெரியாமல் போயிற்று. அந்த அத்யாச்சரியகரமான சம்பவம் நிகழ்ந்ததற்குப் பின்னர் யோகீசுவரரது பெருமை முன்னிலும் அதிகமாகப் பரவிப் போயிற்று. அவர் சாதாரண மனிதரே அன்றென்றும், தெய்வத்தின் அவதாரமே யென்றும் எல்லா ஜனங்களும் வாயோயாமல் கூறி அவரைப் பற்றிப் புகழ்ந்தபடியே இருந்தனர். எவ்விதமான திறமையும் அற்ற முழு மூட சிகாமணி யொருவர் மடாதிபதி ஸ்தானத்தில் இருந்தாலும், அவரிருக்கும் இடத்தில் இலவசமாகக் கிடைக்கும்

அன்றாட போஜனத்தைக் கருதி, அங்கு வந்துகூடும் ஜனங்களெல்லோரும் அந்த மடாதிபதியை ஸ்வாமி, ஸ்வாமி, என்று அபாரமாகத் தூக்கிவைத்துப் பெருமைப் படுத்துவது சர்வ சாதாரணமாய் இப்போதும் நடக்கும் காரியம்.

அங்ஙனமிருக்க, வாக்கு வன்மையோடு பிரசங்கம் புரிந்து, அதிமாநுஷ அற்புதங்களை நிகழ்த்திக் காட்டிய நம் மன்மதபீட மகா யோகீசுவரரைப் பாமர ஜனங்கள் புகழ்வதும், அவருக்கு தெய்விகத்தன்மையை உண்டாக்குவதும் ஆச்சரியமான காரியங்களாகுமா? அந்த ஊரில் யோகீசுவரர் அதற்குமேல் சுமார் இரண்டு மாத காலம் வரையில் தங்கியிருந்தாராதலால், அங்கு வந்து கூடிய ஜனக்கும்பல் நாளைக்கு நாள் அபாரமாகப் பெருகிப் போய் மகாமகக் கூட்டமோ வென்ற ஐயத்தை உண்டாக்கியது. ஒவ்வொரு நாளைய பகலிலும் யோகீசுவரர் ஒவ்வொரு புதிய பெண் குழந்தையை வைத்து ஆடம்பரமாகப் பூஜை நடத்தி, இரவில் விஸ்தாரமான சொற்பொழிவுகள் நிகழ்த்தி, புதிய புதிய அதிமாநுஷ விசித்திரங்களைச் செய்து காட்டி, மகா ஜனங்களைப் பரவசப்படுத்தினர்.

ஒவ்வொரு பகலிலும் பூஜிக்கப்பட்ட பெண் குழந்தையும் அதன் தாயும் முதல் நாளிரவில் பூஜை மண்டபத்திற்குப் பக்கத்திலிருந்த கூடத்தில் புனிதமாகப்படுக்க வேண்டுமென்ற நியதி ஏற்பட்டுப் போயிருந்த தாகையால், ஸ்வர்ணும்பாளுக்கு அர்த்த ராத்திரியில் அம்பாள் பிரசன்னமானதுபோல், ஒவ்வொரு தாய்க்கும் பிரசன்னமாய்க் குளிரக் கடாக்ஷித்தாளாதலால், அவர்களெல்லோருக்கும் ஸ்வர்ணும்பாளுக்கு ஏற்பட்டது போலவே சித்தப் பிரமை உண்டாகிவிடவே, அவர்கள் எல்லோரும் எப்போதும் அம்

பாளை நேரில் பார்த்தவர்களாய் வாய் ஓயாமல் ஸ்தோத்தி ரம் செய்து தேவிபக்தியில் லயித்துப் போய் உலகை மறந் தவர்களா யிருந்தனர். ஆனல் யோகீசுவரர் மேற்படி ஸ்திரீ கள் ஒவ்வொருத்திக்கும் செய்த மாந்திரிக சிகிச்சையினுல் ஒவ்வொருத்தியும் சுமார் பதினைந்து தினங்களில் தனது சுய உணர்வை யடைந்து தேறிவந்தாள்.

அந்த இரண்டு மாத காலத்திற்குள் யோகீசுவரருக் குப் பல துளி பெருவெள்ளம் என்பது போல் இரண்டு லக்ஷம் ரூபாய்க்குமேல் பாத காணிக்கை வந்து சேர்ந்தது. அவ்வளவும் உடனுக்குடன் கணக்கிடப்பட்டு இரகஸி யத்தில் மதராஸ் பாங்கிக்கிப் போய்ச் சேர்ந்தபடி இருந்தது.

அந்த நீண்டகாலத்தில் விஷ்ணுபுரம் கிராமத்தில் நடந்த பிராம்மண போஜனத்தினுல் மடிந்துபோன அரிசி, பருப்பு, காய்கறி முதலிய வஸ்துக்களுக்கு நாம் மொத்தக் கணக்கெடுத்தால், அது பெரிய மலையாகவும், குருக்ஷேத் திரப்போரில் இருதிறச் சேனைகளுக்கும் செலவான மொத் தம் ஒரு கடுகாகவும் தோன்றும். மன்மதபீட மகா யோகி களின் தெய்விக சக்தியே அவ்வளவிற்கும் காரணமாகமுடிந் தது. இரண்டாவது மாதமுடிவில் அவர் அவ்விடத்தைவிட் டுப் புறப்பட்டுப் போய்விடப் போகிறுர் என்ற வதந்தி ஏற் படத்தொடங்கவே,அதுவரை தினம் தினம் வடைபாயசம் சித்திரான்னங்களுடன் வயிருர போஜனம் செய்த மகா ஜனங்களும், மாலை வேளைகளில் அவரது உபந்யாசங்களைக் கேட்டு ஆநந்தித்தவர்களும் ஏக்கமும், விசனமும்அடைந்து அதே பேச்சாகப் பேசி ஒருவரிடத் தொருவர் அங்கலாய்த் துக்கொள்ளத் தொடங்கினர். யோகீசுவரர் எங்கே போனு

னும் தாங்களும் அங்கே போவது இகபரம் இரண்டிற்கும் ஸார்த்தகமான தென்று தீர்மானித்தனர் பலர். "யோகீசுவராள் இவ்வளவு சீக்கிரத்தில் அடியேங்களை விட்டுப் போகக் கூடா" தென்று துணிந்து ஸ்வாமிகளிடம் விக்ஞாபனம் செய்து கொண்டனர் அநேகர். சிலர் கண்ணீர் விடுத்துக் கதறியழுதனர்.

கடைசி இரவில் ஸ்வாமிகள் பரம ஸூக்ஷ்மமான சில வேதாந்த தத்துவங்களை வெளியிடப் போகிறார்களென்றும், இன்னும், பெரிய பண்ணை ஐயரவாளுடைய குடும்ப சம்பந்த இரகஸியங்கள் சிலவற்றைத் தெரிவிக்கப் போகிறார்களென்றும் அறிந்து பல்லாயிரக் கணக்கில் ஜனங்கள் வந்து கூடிப் போயினர்.

அன்றையதினம் மாலையில் யோகீசுவரருடைய பூஜை மண்டபம் மகா விஷ்ணுவின் பரம பதம்போல் ஜ்வலித்தது. ஸ்வாமிகள் மெருகு கொடுக்கப்பெற்ற தங்கம்போல் மின்னிய திவ்ய தேஜஸோடு பீடத்தில் அமர்ந்து எதிரிலிருந்த மகா ஜனங்களை அருள் வழிய நோக்கித் திருவாய் மலர்ந்தருளத் தொடங்கினர் :—

ஆஸ்திக சிகாமணிகளே! இந்த இரண்டு மாதகாலமாக நாம் ஒவ்வொரு மாலையிலும் இங்கு கூடிப் பலவகையான பாரமார்த்திக விஷயங்களைப் பற்றிப் பேசி சந்தோஷமடைந்து, நமது மனம் தூய்மையான விஷயங்களில் சிறிது காலமாயினும் லயித்திருக்கும்படியாகச் செய்து அவப்பொழுதைத் தவப்பொழுதாகச் செய்தோம். இன்றோடு அதற்கு நாம் முற்றுப்புள்ளி வைக்கப் போகிறோம். நாளைய தினம் மாலையில் நானெங்கோ நீங்களெங்கே வென்ற நிலைமை ஏற்படப்போகிறது. இன்னம் சில தினங்கள்

கழியுமானால் இங்கு நாம் ஒன்றுகூடி இருந்ததும், ஆநந்த மாக ஸல்லாபித்ததும் கனவுபோல் மாறிவிடுமென்பது நிச்சயம். சில வருஷங்களாய் விடிலோ, அதன் பிறகு நாம் ஒருவரை யொருவர் சந்தித்தால் கூட, அடையாளம் கண்டு கொள்வது துர்லபமாகிவிடும். இம்மையின் சம்பந் தங்கள் யாவும் இவ்விதம் முடிபவைகளே. நமது குடும்ப வாழ்க்கையும் இத்தன்மையதே ;

"தந்தை தாய் தமர் தாரம் மகவெனும் இவையெலாம்
சந்தையிற் கூட்டம் ; இதிலோ
சந்தேக மில்லை ; மணிமாட மாளிகை மேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோர் இந்த்ரஜாலக் கோலம்
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்த மனமாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனையிலாத கனவே."

என்று தாயுமானவர் இம்மை வாழ்க்கையை மிக அழகாக வர்ணித்திருக்கிறார். நமக்கும் இவ்வுலக வாழ்க்கைக்கும் உள்ள சம்பந்தம் மாத்திரமே இப்படி இருக்கிறதோ என்றால், நமது உடம்பிற்கும் ஆன்மாவிற்கும் உள்ள நட்பும் இது போன்றதே :

"குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

என்கிறார் திருவள்ளுவ நாயனார். முதலில் முட்டையோடு ஒன்றுபட்டிருக்கும் பறவைக் குஞ்சு வளர்ந்து உரு வடைந்த பிறகு முட்டையை விட்டு விலகிப் போகும் தன்மையைப் போன்றதே நம் உடம்பிற்கும் ஆன்மாவிற்கும் உள்ள சம்பந்தம். எனவே, நேற்று இருந்தவர் இன்று

இல்லை என்பதே இந்த உலக வாழ்க்கையின் இலக்ஷணமா யிருப்பதுபற்றி,

> "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
> பெருமை உடைத்திவ் வுலகு"

என்றார் திருவள்ளுவ நாயனார். "இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திடமில்லையே" என்கிறார் தாயுமானவர். இவ்வித அநித்திய வாழ்வான இந்த மானிட வாழ்க்கைக்கு ஏற்பட்டுள்ள துன்பங்களும், பிணிகளும், பகைமைகளும், வேதனைகளும் கணக்கிலடங்கக் கூடியவை களோ!

> "அன்ன விசாரம் அதுவே விசாரம்; அது ஒழிந்தால்,
> சொன்ன விசாரம் தொலையா விசாரம்; நல்தோகையரைப்
> பன்ன விசாரம் பல்கால் விசாரம்; இப்பாவி நெஞ்சுக்
> கென்ன விசாரம் வைத்தாய் இறைவாகச்சிஏகம்பனே"

என்று பட்டினத்தடிகள் பாடியுள்ளபடி வயிற்று வேதனை, தமக்கெனப் பொருள்தேடும் அவா, அழகான ஸ்திரீகளை யடையும் வேட்கை ஆகிய மூன்று அவஸ்தைகளும் மனிதன் முதல் பூச்சி புழுக்கள் முதலிய சகலமான ஜீவர்களையும் ஓயாமல் இயக்கிப் பம்பரம்போல் சுழற்றி வைக்கும் சக்திகளாயிருக்கின்றன. இவற்றில் வயிற்று வேதனையே அடிப்படையானது. பசி என்பது உலகில் இல்லாமல் போகுமானால், ஜீவன்களின் இயக்கம் பெரும்பாலும் ஒடுங்கிப்போ மென்பது நிச்சயம். அடிக்கடி மரங்களும், பயிர்ச்செடிகளும் தோன்றித் தோன்றி ஏராளமான தானியங்களையும் காய்கனி வர்க்கங்களையும் சொரிய வேண்டிய அவசியம் இல்லாமற்போகும். காலக்கிரமப்படி மழை, பனி, வெயில் முதலியவை உண்டாகி பயிர் பச்சைகளை போஷிக்க

வேண்டிய அவசியம் ஏற்படாது. ருதுக்களும், ருதுக்களை உண்டாக்கும் நவக் கிரகங்களும், அவைகளின் சஞ்சாரங் களும் அநாவசியமாகிவிடும். இரவு பகல் முதலிய வேறு பாடுகள் உண்டாவதும் போய்விடும். இந்த பிரம்மாண்டத் தின் நிலையே அடியோடு மாறிப் புதிதாய்விடும்; ஆகையால் இந்தப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி, திதி, சங்காரத்தின் சூட்ச மம் வயிற்றில் அடங்கிப்போ யிருக்கிறது. ஆகவே,

> "ஒரு நாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்,
> இரு நாளைக் கேலென்றால் ஏலாய் ஒருநாளும்
> என்னோ வறியா இடும்பைகூர் என்வயிறே
> உன்னோடு வாழ்த லரிது."

என்று நம் முன்னோர் கண்டெழுதி வைத்திருக்கின்றனர். என்றும் தீராத இந்த வயிற்றுப் பிணியைத் தீர்ப்பதற்காக மனிதர் பூமியையும், பொருள்களையும், கால் நடைகளையும் ஏராளமாகத் தேடித் தமதென்று வைத்துக் கொள்ளுகின் றனர். அப்படி இருந்தும் அவர்களது ஆசை தீருகிறது மில்லை; மனம் அமைதியடைகிறது மில்லை.

> "மக்கள் சுற்றத் தாசை மறக்கேனே யென்குதே
> திக்கரசா மாசையது தீரேனே யென்குதே
>
> காமக் குரோதங் கடக்கேனே யென்குதே
> நாமேயரசென்று நாடோறு மெண்ணுதே
>
> அச்சமாங்கார மடங்கேனே யென்குதே
> கைச்சு மின்னு மானங் கழலேனே யென்குதே
>
> நீர்க்குமிழியா முடலை நித்தியமா யெண்ணுதே
> ஆர்க்கு முயராசை யழியேனே யென்குதே.
>
> கண்ணுக்குக் கண்ணெதிரே கட்டையில் வேகக்கண்டும்
> எண்ணுந்திரமா யிருப்போமென் றெண்ணுதே

நரகக் குழியுமின்னு நான் புசிப்பே னென்குதே
உரகப்படத் தல்குல் உனைக்கெடுப்பே னென்குதே

குரும்பை முலையும் குடிகெடுப்பே னென்குதே
அரும்பு விழியும் என்தன் ஆவியுண்பே னென்குதே

மாதர் உருக்கொண்டு மறலிவஞ்ச மெண்ணுதே
ஆதரவு மற்றின் கரக்காயுருகிறண்டா

அன்னவிசாரமது அற்றவிடங் கிட்டாதோ
சொன்ன விசாரந் தொலைந்த விடங் கிட்டாதோ

உலகவிசாரம் ஒழிந்த விடங் கிட்டாதோ
மலக்குழியின் மின்னார் வசியாதுங்கிடாதோ.

காதல் தனியேனோ கண்டு மகிழேனோ
சாதல் தவிரேனோ சங்கடந்தான் தீரேனோ

என்று பட்டினத்தடிகள் புலம்பிக் கதறுகிறார். இவ்வித மாக ஏற்படும் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை முதலியவற்றினால் மனிதர்களுக்குள் காமக்குரோத லோப மதமாற்சரியம் ஆகிய பலவகையான உணர்ச்சிகள் பெருகு கின்றன. இவைகளால் ஏற்படும் வேண்டுதல் வேண்டாமை காரணமாய் உலகம் எக்காலத்திலும் ஒரே குளறுபிடி மயமாகயிருந்து வருகிறது. நெருங்கிய உறவினர்களும், நண்பர்களும் ஒருவரையொருவர் பகைத்து விஷமென வெறுக்கத் தொடங்குகின்றனர். பல ஆண்டுகள் ஒன்று யிருந்து பழகி, ஏராளமான குழந்தைகளைப் பெற்று நன்மை தீமைகளை ஒருமிக்க அநுபவிக்கும் குடும்பத்தலைவனும், தலைவியும் சில குடும்பங்களில் எப்போதும் எலியும் பூனை யும் போல இருந்தே தமது வியவகாரங்களை நடத்திக் கொண்டு போகின்றனர். தன் மனையாளை உயிருக்கு யிராய் மதித்து, தன் ஆசாபாசங்களை யெல்லாம் ஒருங்கே

அவள் மீது வைத்துள்ள புருஷன், அவள் அன்னிய புருஷனைப் பார்த்துப் புன்னகை செய்தால், சிறிதும் தயை தாக்ஷண்யமின்றி அவளைக் கொன்று போட்டுவிடுகிறான். அது போலவே, தன் புருஷன் வேறொரு ஸ்திரீயை நாடுகிறான் என்பதைக் கண்டால் அவனுடைய மனையாள் கிணற்றில் விழுந்தோ, விஷயத்தைத் தின்றோ உயிரை மாய்த்துக் கொள்ளுகிறாள். தகப்பனும் பிள்ளையும் பகைத்து ஒருவர் முகத்தில் மற்றவர் விழிக்காமலும், ஒருவரோடு மற்றவர் பேசாமலும் இருந்தே காலத்தைக் கழிக்கின்றனர். ஒரு தாய் வயிற்றில் பிறந்த அண்ணன் தம்பிமார்கள் அற்ப காரணத்தைக்கொண்டு ஒருவரையொருவர் பகைத்து, அடித்துக் கொள்ளுகிறார்கள்; அல்லது, ஒருவர்மேலொருவர் வழக்குத்தொடுத்து பிரிவீ கவுன்சில் வரையில் சளைக்காமல் போய் வழக்காடித் திரும்புகிறார்கள். ஒரு ராமாயண சாஸ்திரியாருடைய பிள்ளைகள் சண்டையிட்டுப் பங்கு பிரித்துக்கொண்ட கதையை நம் பெரியோர் சொல்வதுண்டு. அதை நீங்கள் கேட்டிருப்பீர்களோ மாட்டீர்களோ; அதை நான் இந்த சந்தர்ப்பத்தில் இங்கு இரண்டொரு வார்த்தையில் குறிப்பிடுவது பொருத்தமாயிருக்குமென்று கருதுகிறேன். திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த துறையூர் என்ற ஓர் ஊரில் சாஸ்திரியார் ஒருவர் இருந்தார். பரம்பரையாய் அவருடைய முன்னோர்கள் வால்மீகி ராமாயண காலக்ஷேபம் செய்து பணம் சம்பாதித்து ஜீவித்துவந்தவர்கள். மேலே குறிக்கப்பட்ட சாஸ்திரியார் வால்மீகி ராமாயணப் பிரசங்கம் செய்ததோடு ஹரிகதை காலக்ஷேபங்களும் செய்யப் பழக்கிக் கொண்டிருந்தார். அவர் இரட்டை நாடி உடம்பைப் பெற்றவராயிருந்ததன்றி, நெய் முதலிய மஸ்தான

வஸ்துக்களை அதிகமாய் உபயோகிப்பவர். ஆகையால், அவர் வாயைத் திறந்து பேசவோ, அல்லது, பாடவோ ஆரம்பித்தால், சோடாமுதலிய புட்டிகளை உடைத்துத் தப்பான பக்கமாகத் திருப்பி எவரேனும் சாப்பிட்டால், உள்ளே இருக்கும் குண்டு வந்து வந்து விழுந்து வழியை அடைத்துக்கொள்வதை நாம் பார்க்கிறோமல்லவா; அது போல, அவருடைய தொண்டையில் கொழுப்பு அடைத்துக்கொள்ளும்; குரல் பல தினிசாகப் பேசும். அவருக்கு சங்கீதப் பயிர்ச்சியும் அவ்வளவாக இல்லையாகையால், அவர் சுலோகங்களைப் பாட ஆரம்பித்தால், ஒரே அபசுர மயமாயிருக்கும்; இராகங்களின் உருப்படியே இன்னதென்பது எவருக்கும் புலப்படாது. ஒவ்வொரு சுலோகத்தையும் சொல்லி முடித்தவுடன் அடித்தொண்டையால் ராக ஆலாபனை செய்து, ௱ககளையை முஷ்டி செய்துகொண்டு ஏந்திரத்தில் மாவறைப்பது போல முன்னால் சக்கரமாகச் சுற்றிக்கொண்டே 'நே நே நே நே' என்ற எழுத்தையே போட்டு மர்த்தனம் செய்து 'ஹரே தாசரதே' என்று முடிப்பார். குறும்புக்காரர்கள் பலர் அவருக்கு 'செக்கு பாகவதர்' என்ற திருநாமத்தைச் சூட்டிவிட்டனர். அதுவன்றி அவர் சுலோகங்களுக்கு அர்த்தம் சொல்லும் போது, "அந்த ராமமூர்த்தி உண்டே, அந்த லக்ஷ்மணப் பெருமானுண்டே, அந்த ஸீதா தேவியுண்டே, அந்த மாருதியுண்டே" என்று உண்டே உண்டே, என்ற சொல்லை அடிக்கடி உபயோகிப்பாராதலால், அவரை 'உண்டை பாகவதர்' என்றும் குறிப்பார்கள். அவருடைய குடும்பத்தின் மூலதனம் பனை ஓலையில் எழுதப்பெற்றதும், தலைமுறை தலைமுறையா யிருந்து வந்ததுமான வால்மீகி ராமாயணம் ஒன்றே. அதைச் சேர்த்துக் கட்டினால், சரியாய் ஓராள்

தூக்கக் கூடியசுமை யிருக்கும். அந்தப் பனை ஓலைச் சுவடியை அந்தக் குடும்பத்தார் பொன்னேபோல் போற்றி, அடிக்கடி ஒவ்வொரு ஏட்டிற்கும் மஞ்சள் பூசி, சாம்பிராணிப் புகை ஏற்றி தங்கள் உயிருக்குயிராய் அதை வைத்துக் காப்பாற்றி வந்தனர். அதன் காரணம் பிரத்தியக்ஷமாகத் தெரியக் கூடியதே. அது அந்தப் பெரிய குடும்பத்திற்குத் தலை முறை தலைமுறையாக சகலமான சம்பத்தையும் கொடுத்து ரக்ஷித்து வந்த மாத்திரைக்கோலாயிருந்து வந்தது. ஆனால் இப்போது அச்சியந்திரம் வந்த பிறகு ராமாயணப் புஸ்தகங்கள் பல்லாயிரக் கணக்கில் சொற்பகாலத்தில் உற்பத்தியாகத் தக்கசாதனம் ஏற்பட்டுவிட்டது. ராமாயண சாஸ்திரிகளையோ, பனை ஓலைகளையோ சீந்துவாரில்லை. அநாதிகாலமாய் நம் நாட்டுப் பனை மரங்கள் கீழ்மக்களுக்குக் கள்ளைக் குடங் குடமாய்க் கொடுத்து உதவியதுபோல, மேன்மக்களுக்குத் தன் ஓலையைக் கொடுத்து கலைக்ஞானம் அழியாமல் நிலைத்திருக்கும்படியான சாதனமாய் இருந்து வந்திருக்கிறது. நாம் எவைகளை மிக இழிவாகவும், கேவலமாகவும் மதிக்கிறோமோ அவை சிலவற்றில் நம் ஜீவாதாரமே அடங்கி இருக்கிறது. நாம் பள்ளரென்றும், பறையரென்றும் எவர்களை இழிவுபடுத்தி மிக தூரத்தில் ஓட்டுகிறோமோ அவர்கள் வருஷம் முழுதும் பட்டபாடே நமக்கு அரிசியாகவும் தானியங்களாகவும் காய்கறியாகவும் வந்து நம்மை வேளைக்கு வேளை போஷித்துக் காப்பாற்றுகின்றன. நம்முடைய மல மூத்திரங்களைக் காண நாமே அருவருப்படைகிறோம். மிக சந்தோஷமாகவும் அசங்கியமென்றுணராமலும் கைகொண்டு அவற்றை விலக்கி, அதனாலேயே இழிவையும் அசுசியையும் அடைந்துள்ள தோட்டிகளைக் கண்டால் நாம் “நாயே”

என்றும் " கழுதை " என்று வைது சீறி விழுகிறோம். நாம் மிகப் புனிதமாக வைத்து காப்பாற்றும் நமது கோவில்களைக் கட்டவும், சிலைகளை வார்க்கவும், இன்னம் இவைபோன்ற முரட்டு வேலைகளைச்செய்யவும், குடிகாரர்களுடைய தயவையே நாம் நாடவேண்டியதாகிறது. நாம் நமது தென்னைமரத்தை கவனித்தால் அதன் பாளையிலிருந்து கள் உற்பத்தியாகிறது. அதே பாளையில் உற்பத்தியாகும் தேங்காயை நாம் மிகப் பரிசுத்தமானதென்று கருதி தெய்வத்திற்கு நிவேதனம் செய்து நாமும் உண்கிறோம். இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் நாம் முரணாகவே நடந்துகொள்ளுகிறோம். சர்வக்ஞரும், சர்வ வல்லமையுடையவருமான கடவுள் மூடத்தனமாகவோ, அநாவசியமாகவோ எதையும் படைத்திருக்கமாட்டார். ஆனால், நாம் சிற்றறிவுபடைந்தவர்களாகையால், நமக்கு உண்மை விளங்குகிறதில்லை. நம் வெறுப்பு விலக்குகளை நாம் அதீதமாகப் பாராட்டி, நமக்குப் பரம ஸுகிர்தர்களா யமைந்திருப்போரை அன்பாகவும், நன்றியறிதலோடும் நடத்தாமல் கொடிய பகைவர்களாய்க் கருதுகிறோம். கள்ளைக் கொடுக்கும் பனைமரத்தின் ஓலைகளில்லாதிருக்குமானால், நம் வேதங்கள், புராணங்கள், சாஸ்திரங்கள் முதலியவை எப்படி நமக்குக் கிடைத்திருக்கும். கள்ளை உற்பத்தி செய்கிறதே என்று நினைத்து நம் முன்னோர் பனைமரங்களை யெல்லாம் வெட்டித்தள்ளி அதன் விதை அற்றுப்போம்படி நிர்மூலமாக்கினார்களா? இல்லையல்லவா. நலம் எங்கிருந்தாலும் அதைக் கொள்ளவேண்டும், அதிலுள்ள கெடுதலை நாம் அவ்வளவாகப் பாராட்டுதல் கூடாது, எல்லாவற்றையும்சமரஸமாக நடத்தவேண்டும் என்பதே நம் முன்னோரின் கொள்கைகள். உழைப்பினால் அயர்ந்து வருந்தும் எளிய ஜனங்களை போதையி லாழ்த்தி

மகிழ்வித்து அவர்களது தசைகளைக் காத்ததுபோல, அதன் ஓலை கலைஞரை விக்ஞான போதத்தி லாழ்ந்தி அவர்களது ஆன்மாவைப் பரம்பொருளோடு ஐக்கியப்படுத்தி ஆநந்தத் தாலாட்ட முக்கியக் கருவியாயிருந்து வந்திருக்கிறது. முக்கியமாய் நம் செக்கு பாகவதர்போன்ற மகான்களுக்கு பனை ஓலைகளே சங்க நிதி பதும நிதியாயிருந்து வந்திருக்கிற தானுலும் வெள்ளைக்காரர் வருகையினுல், பனை மரங்களின் மகிமை மூங்கில் முதலியவற்றிற்கு மாற்றப்பட்டுப் போயி ருக்கிறது. காலக்கிரமத்தில் இனி என்னென்ன மாறுதல் கள் ஏற்படுமோ தெரியவில்லை. இனி நாம் நம் செக்குபாக வதருடைய குடும்ப விசேஷங்களை கவனிப்போம். அவ ருக்கு கடோத்கஜனும், பீமசேனனுமாய் ஏழு புத்திரர்கள் பிறந்திருந்தார்கள். எல்லோரும் ஆஜாநுபாகுவாய் வளர்ந்த செழிப்பான தேகத்தோடு கூடியவர்கள். பழைய சாதத்தை, பாறைபாறையாய் இறுகியிருப்பதும்,ஏடு விலக்கப்படாதது மான எருமைத்தயிரால் இளக்கி, எரித்த பழைய சாம் பாரை வழித்துணை சேர்த்துக்கொண்டு பூர்த்தியாக இழுப் பதிலும், குளிர்ச்சியாகவும் வசதியாகவும் இருக்கும் திண்ணைகளாகப் பார்த்துப் படுத்துக் குறட்டை விட்டுப் பகல் முழுதும் தூங்குவதிலும் அவர்கள் அசகாய சூரர் களாயிருந்தனர்.

செக்கு பாகவதருடைய மனையாட்டியான அன்ன பூரணியம்மாள் உத்தம குணம் வாய்ந்த பதிவிரதை; அதா வது, அசட்டிற்கு முதல் தாம்பூலம் பெறத் தகுதியுடைய வளும், தனக்கென்று சுய அறிவு, சுயேச்சை, சுயாதீனம் முதலியவை இன்றி, முற்றிலும் பராதீனமாயிருப்பவளும், இராப்பகல் எப்போதும் எவ்வித பலனையும் எதிர்பாராமல் உழைப்பதைத் தவிர வேறு சுகம் எதையும் காணுதவளும்,

புருஷன் முதலிய சகலமான சொந்த ஜனங்களுக்கும் கேவலம் அடிமைபோலிருந்து ஒவ்வொருவருடைய மனமும் கோணுமல் நடந்து கொள்ளுபவளும், திட்டுகளோ, அடிகளோ, உதைகளோ கிடைத்தால், வாயைத் திறவாமல் பயபக்தி விநயத்தோடு பெற்றுக்கொண்டு முன்னிலும் அதிக சிரத்தையோடு தன் வேலைகளைச் செய்பவளும், பசியோ பட்டினியோ, பிணியோ, வேறு எவ்வித வேதனையோ, எதையும் பொறுமையோடு சகித்துக்கொண்டு எவரையும் நோகாமல், நியாயத்தைக்கூட எடுத்துச் சொல்லாமல் இருப்பவளும், அடிபெற்றால் அழ அறியாமல் இருப்பவள் எவளோ அவளே நம் நாட்டில் உத்தமகுணம் வாய்ந்த புண்ணியவதி என்று பெரும்பாலும் குறிக்கப்படுவது வழக்கம், அவ்விதமான குணங்களெல்லாம் அன்னபூரணியம்மாளிடம் சம்பூர்ணமாக நிறைந்திருந்தன. செக்கு பாகவதரும் அவருடைய புத்திரர்களும் வெளியுலகத்தில் பிள்ளைப்பூச்சிகள் போல் பரம ஸாதுவாக நடந்துகொள்வார்கள். ஆனால் வீட்டில் அவர்கள் நடந்துகொள்ளும் விதமோ சொல்லத் தரமல்ல. மாறி மாறி ஒவ்வொருவரும் எந்தக் காரியத்தைக் கருதியாகிலும், அன்னபூரணியம்மாளை வதைத்து, வைது, அதட்டி தேள்கள் போல் கொட்டிக்கொண்டே இருப்பார்கள்; அவ்வளவையும் வாஞ்சையோடு பொறுத்துக் கொண்டு, சதாகாலமும் அவர்கள் ஒவ்வொருவருடைய சுக சௌகரியங்களையும் மிக அக்கரையாக கவனித்து அடிக்கடி அவர்களை உண்பித்துக் கொழுக்க வைத்துக் கொண்டே போவாள். அப்படி இருந்த காலத்தில் ஒரு நாள் செக்கு பாகவதர் மார்படைப்பினுல் திடீரென்று அநாயாச மரணமாய் இறந்து போய்விட்டார். புத்திரசிகாமணிகள் தந்தை இறந்துபோன

தைப்பற்றிய விசனத்தையும், பிரேதத்தை எடுக்க வேண்டு மென்ற நினைவையும் ஒருபுறத்தில் ஒதுக்கி வைத்துவிட்டு சொத்துக்களைப் பங்கு பிரித்துக் கொள்வதைப் பற்றி ஒரு வரோடொருவர் சச்சரவு செய்யத் தொடங்கி விட்டனர். முக்கியமாக வால்மீகி ராமாயணச் சுவடியும், தங்கள் தாயா ரும் யாருக்குச் சொந்தமாகிறது என்பதைப் பற்றிய தக ராறே தீர்க்கமுடியாததாய்ப் பெருத்த அமர்க்களத்திலும் அடிதடியிலும் கொண்டுபோய்விட்டது. பெரிய ஒரு ராஜ் யத்தின் வார்சுரிமையைப் பற்றி ஏற்படும் யுத்தம், அல்லது, பாரதப்போர் எவ்விதம் இருந்திருக்கும் என்பதை அவர்க ளுடைய சண்டை நிதரிசனமாகக் காட்டியது. செக்கு பாகவதருடைய பிரேதம் ஸ்மசானத்திற்குப் போய்ச் சேரப் போகிறதா என்று ஊர் ஜனங்கள் எல்லோரும் நினைத்துக் கவலைப் படும் படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. தெருவிலிருந்த அயல் வீட்டாருடைய வற்புறுத்தலினால் செக்குபாகவதருடைய சவத்திற்குத் தகனபாக்கியம் கிட்டியது. அதன் பிறகு அந்தப் போர் மிகவும் பயங்கரமானதாக முடிந்தது. தமயன் தம்பி என்ற முறைமையையோ மரியாதையையோ இலட்சியம் செய்யாமல் ஒருவரையொருவர் தாறுமாறாக வைவதும், மூவர், நால்வர் ஒன்றாகப் பிணைந்து, ஒருவர் குடுமியை மற்றவர் பிடித்துக்கொண்டு அடிகளையும் குத்துகளை யும் தாராளமாக வழங்குவதும், உலக்கை, அம்மிக்குழவி, கடப்பாறை முதலிய ஆயுதங்களை எடுத்து வைத்துக் கொண்டு அவற்றால் அடிக்கப்போவதாக பயமுறுத்து வதும், அதைக்கண்டு அவர்களுடைய தாய் மார்பிலும் வாயி லும் லபோ லபோவென்று அடித்துக்கொண்டுஐயோ,அப்பா வென்று பயங்கரமாய் அலறி அவர்களைப் பிரித்துவிடவும்,

சமாதானப் படுத்தவும் முயல்வதுமே, அந்த நாடகத்தின் காட்சிகளாய் மாறி மாறி அடிக்கடி நடந்தன. அவர்களுடைய வீடு பூதபிசாசங்களின் வாசஸ்தலமாய்க் காணப்பட்டதே யன்றி, பரம ஸாதுக்களான சாஸ்திரிகளின் கிரகமாகவே தோன்றவில்லை. அந்த சச்சரவு சிறிது ஓய்வதும் மறுபடி மறுபடி ஆரம்பமாவதுமாய் மாதக்கணக்கில் நீடித்து நடந்தது. இடையிடையில் அன்னபூரணியம்மாள் தனது புத்திரர்களைப் பார்த்து நிரம்பவும் பரிதாபகரமான குரலில் கெஞ்சி, "அப்பா குழந்தைகளா! ஏன் இப்படி ஒவ்வொருவரும் பிடிவாதம் பிடிக்கிறீர்கள்! நம்மிடம் இருக்கும் ராமாயணம் ஒன்றே ஒன்று. அதுவே ஏழுபேருக்கும் வேண்டுமென்றால், அது எப்படி நிறைவேறும்! புத்தியில்லாமல் நீங்கள் இப்படிச் சண்டைபோடுவதில் என்ன பலன் ஏற்படப்போகிறது? சண்டையை விட்டுவிடுங்கள். ராமாயணத்தில் ஏழு காண்டங்களிருக்கின்றன. மூத்தவன் முதல் காண்டத்தை வைத்துக்கொண்டு அப்பாவைப்போலப் பணம் சம்பாதித்து, குடும்ப சவரக்ஷணையை கவனிக்கட்டும். முதலாவது காண்டம் முடிந்தவுடன், இரண்டாவது பையன் இரண்டாவது காண்டத்தை அதே ஜனங்களுக்கு வியாக்கியானம் செய்யட்டும். இந்த விதமாக தலைக்கு ஒரு காண்டமாய் நீங்கள் ஏழுபேரும் ராமாயண காலக்ஷேபத்தை நடத்திக் குடும்ப சவரக்ஷணையை கவனியுங்கள். பகல் வேளைகளில் தலைக்கு ஒவ்வொரு காண்டமாக வைத்துக்கொண்டு எழுதி ஒவ்வொரு பிரதி தயார்ப் படுத்திக்கொள்ளுங்கள். இப்படி நீங்கள் செய்தால், குடும்ப காலக்ஷேபம், எவ்வித இடைஞ்சலோ, அசௌகரியமோ இல்லாமல் நடந்துகொண்டு போகும். ராமாயணப் பிரசங்கம் செய்யும் திறமை உங்கள்

எல்லோருக்கும் உண்டாகிவிடும். கொஞ்சகாலத்தில் ராமாயணச் சுவடி ஏழு பிரதிகள் தயாராகிவிடும். அதன் பிறகு நீங்கள் தலைக்கு ஒரு பிரதி எடுத்துக்கொண்டு, இஷ்டமானால், பிரிந்துபோகலாம். உங்கள் தகராறு தீரு வதற்கு இதுதான் வழி. இப்படியே செய்யுங்களப்பா' என்று சொல்லிக் கெஞ்சி மன்றாடினாள்.

தாய் செய்த இந்தப் பிரேரணையைப் பெரும்பாலோர் ஏற்றுக்கொண்டனர். ஆனால், தாயின் செல்லக் குழந்தை யான கடைக்குட்டிப்பையன், 'சரி; அப்படியே செய்யலாம்; ஆனால் இப்போது ஒரு பிரதி இருக்கிறது; இன்னும் ஆறு பிரதிகள்தான் தயாராகவேண்டும் ; இப்போதிருப்பதை நான் எடுத்துக்கொள்ளுகிறேன்; என் அண்ணுக்கள் ஆறு பேரும் தலைக்கொன்றாய் ஆறு பிரதிகள் எழுதி எடுத்துக் கொள்ளட்டும்' என்று கொஞ்சலாகச் சொல்லிவைத் தான். மற்றவர் ஒவ்வொருவரும் அதையே பிடித்துக் கொண்டு, 'அப்பாவினுடைய பிரதியை நான்தான் எடுத் துக்கொள்வேன் ; மற்ற அறுவரும் பிரதிகள் எழுதிக் கொள்ளட்டும்' என்று அந்தப் பல்லவியையே பாடிப் பிடிவாதம் பிடிக்கத்தொடங்கி விட்டனர். மறுபடியும் நிலைமை எக்கச்செக்க மடைந்துவிட்டது. வசைகளும், அடி உதைகளும் கூச்சல்களும் பெருகிப்போயின. அந்தக்காட்சி பல தினங்கள் வரையில் நீடித்திருந் தது. பிறகு சிறிதளவு ஓய்வு ஏற்பட்ட காலத்தில், ஒருவர் ஒரு புதிய பிரேரணையைத் தீர்மானத்திற்குக் கொணர்ந்து, 'இந்தக் குளறலெல்லாம் வேண்டாம். ராமா யணத்தில் ஏழு காண்டங்கள் இருக்கின்றன. தலைக்கு ஒரு காண்டம் என்று பங்கு பிரித்து எடுத்துக்கொண்டு நாம்

பிரிந்துபோய்விடுவோம். அதுவே சுலபமானவழி' என்றார். அந்த யுக்தி ஒரு நிமிஷகாலம் திருப்திகரமானதாகத் தோன்றியதானாலும், அடுத்த நிமிஷம் அதற்கும் பெருத்த ஓர் இடைஞ்சல் குறுக்கிட்டது. ஏனென்றால், ஒவ்வொரு வரும், முதலாவது காண்டந்தான் தமக்கு வேண்டுமென்று போராடிப் பிடிவாதம் பிடிக்க வாரம்பித்தனர். எனவே, அந்தப் பிரேரணை எவ்வளவு தீவிரமாக எழுந்ததோ, அவ் வளவு தீவிரமாகவே புகைந்துபோய்விட்டது. கடைசிப் புதல்வர் இன்னொரு புதிய யுக்தியைக் கண்டுபிடித்து அதைப் பிரஸ்தாபித்தார். அதாவது, 'ராமாயணச்சுவடி யில் கோக்கப்பட்டிருந்த கயிற்றை விலக்கிவிட்டு, ஏடுகளை யெல்லாம் கீழதுமேலதாய்ப் புரட்டி, எல்லாக் காண்டங் களின் ஏடுகளையும், எவ்வித வரிசைக் கிரமுமில்லாமல் பிசரி, ஏடுகளை எண்ணி மொத்தம் கண்டுபிடித்து, காய்கறி களைக் கூறுபோடுவதுபோல ஏழு பங்குகளாய்ப் பிரித்து திருவுளச் சீட்டுப்போட்டு தலைக்கு ஒரு கூறாய் எடுத்துக் கொள்ளுகிறது. எல்லாருக்கும் எல்லாக் காண்டங்களிலிருந் தும் ஏடுகள் கிடைக்கும்' என்பது அவருடைய யுக்தி. இதை மற்றவர் அனைவரும் மிக அழுத்தமாக ஆக்ஷேபித் தனர். ஏனென்றால் இந்த ஏற்பாட்டில் ஏடுகள் மாத்திரம் ஒவ்வொருவருக்கும் சம எண்ணிக்கையாகக் கிடைக்கு மன்றி, அவற்றில் உள்ள விஷயம் எல்லோருக்கும் ஒரே மாதிரியா யிராதல்லவா. ஆகையால் இது நியாயமான பாகப் பிரிவினை ஆகாது என்று எல்லோரும் ஆக்ஷேபித் தனர். அப்போது கடைசிப் புத்திரர் தமது பிரேரணைக்கே அடியில்வரும் திருத்தப் பிரேரணை ஒன்று கொண்டுவந் தார். அதாவது, முதலிலிருந்து ஒவ்வொரு ஏடாய் எடுத்து, அதை ஏழு சம துண்டுகளாய் வெட்டுகிறது.

உடனே திருவுளச் சீட்டுப்போட்டு தலைக்கொரு துண்டா கக் கொடுத்துவிடுகிறது. இப்படி ஒவ்வோர் ஏட்டிற்கும் செய்துகொண்டே போனால், முதலிலிருந்து கடைசி வரையிலுள்ள ஒவ்வோர் ஏட்டிலும் ஒவ்வொருவருக்கும் ஏழிலொருபாகம் கிடைப்பது நிச்சயம் என்பது கடைசிப் புத்திரருடைய அபிப்பிராயம். அதைக்கேட்டு மற்றவர் எல்லோரும் கைகொட்டிச் சிரித்துப் புரளிசெய்து, 'ஆகா, பிரகஸ்பதி பகவானப்பா இவர். இதற்கு முந்திய பிரேரணைக்கும் இதற்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது! அதற்குள்ள ஆக்ஷேபனை இதற்கும் உண்டு' என்று சொல்லி அதை ஓட்டுக்கு விட மறுத்துவிட்டனர். அப்படி எல்லோரும் தம்மைப் புரளி செய்ததைக் கண்டவுடன் கடைக் குட்டிக்கி மூர்க்க வெறி கிளம்பி சகிக்க முடியாத படி பெருகிப்போயிற்று. அவர் மிக ஆவேசமாகவும் அழுத்தமாகவும் பேசவாரம்பித்து, 'சரி; அப்படியானால் இன்னொரு காரியம் செய்வோம். அதைச் செய்தால், ஒவ்வொருவருக்கும் சமமான பங்கு கிடைக்கும். ஒவ்வொரு கூறும் அளவிலும் ஒரே மாதிரியாயிருக்கும். அதோடு விஷயமும் ஒன்றாகவே இருக்கும். எல்லா ஏடுகளுக்கும் நெருப்பை வைத்துக் கொளுத்தி விபூதியாக்குகிறது. அந்த ராமாயண ஸார விபூதியை நன்றாகப் பிசைந்து கலந்து ஏழு சமபாகமாகப் பிரித்து திருவுளச் சீட்டுப் போட்டு தலைக்கு ஒரு பங்காய் எடுத்துக் கொள்ளுகிறது. இப்படிச் செய்வதில் நிறை, விஷயம் இரண்டும் எல்லோருக்கும் சரியாகவே இருக்கும். அவனுக்கு ஒரு காண்டம் கிடைத்தது, இவனுக்கு வேறொரு காண்டம் கிடைத்தது என்ற ஆக்ஷேபணைக்கே இடமில்லாமல் போகும்' என்றார். அதைக்கேட்ட மற்ற எல்லோரும் தமது ஆங்காரத்தையும்,

பொறுமையையும் சகிக்கமாட்டாமல், 'சரி, அப்படியே செய்துவிடுவோம். இது முதல்தரமான யோசனை' என்று சொன்னார்கள். இந்தத் தீர்மானம் ஏகமனதாக எல்லோராலும் நிறைவேற்றப் பட்டது. மிச்சமிருக்கும் இன்னொரு சொத்தாகிய தங்கள் தாயை எப்படிப் பங்கு போடுவது என்ற விஷயத்தைப் பற்றி அடுத்தாற்போல் விவாதிக்கத் தொடங்கினர். ஒவ்வொருவரும், 'அம்மாள் என்னோடு தான் இருக்கவேண்டும்' என்று கூச்சலிட்டதன்றி அப்போதே தாயாரை வளைத்துக்கொண்டு, 'என்னோடு வந்துவிடு, என்னோடு வந்துவிடு' என்று மூலைக்கொருவராய்ப் பிடித்து இழுக்கத் தொடங்கவே, அன்னபூரணியம்மாள் பாடு திண்டாட்டமாகிவிட்டது.

புத்திரர்கள் தன்மீது வைத்திருந்த அபாரமான பிரியத்தில் தன் கைகளிரண்டையும் பிய்த்து விடுவார்களோ வென்ற எண்ணமுண்டாகிவிட்டது. அம்மாள் மாறி மாறி சிரிப்பதும் வேதனைப் படுவதுமாய், 'அப்பா குழந்தைகளே. உங்கள் ஒவ்வொருவருக்கும் என் மேல் கொள்ளைப் பிரியம். ஒவ்வொருவருக்கும் நான் இல்லாவிட்டால், ஒரு காரியமும் நடக்காது. என்னை ஒரு நிமிஷம் வையாமலும் அதட்டாமலும் இருந்தால், உங்கள் ஒவ்வொருவருக்கும் வயிறு வெடித்துப் போகும். எனக்கு இருப்பது ஓர் உடம்பு தான். ஏழு உடம்புகள் இல்லை. ஆகையால் யாராவது ஒருவரோடு இருக்க முடியுமே யன்றி ஒரே காலத்தில் எல்லாரோடும் இருக்க முடியாது. ஒரு நாளைக்கு அல்லது, மாசத்திற்கு, ஒருவரிடம் இருப்பது என்ற ஏற்பாட்டை நீங்கள் ஒப்புக்கொள்ள மாட்டீர்கள். மூலைக்கொருவராய் என்னை இழுக்கிற இழுப்பில் என் கைகள் பிய்ந்து விடும்போ லிருக்கின்றன. என்

உயிர் போய்விட்டால், **நான்** ஒருவருக்கும் உபயோகமில்லாமல் போய்விடுவேன். ஆனால், தீராத உங்கள் தகராறு ஒரே முடிவாகத் தீர்ந்துபோகும். என் உயிரோ அவ்வளவு சுலபத்தில் போகக்கூடியதாயில்லை. நீங்கள் என் உடம்பைக் கத்தியால் வெட்டி, கண்டதுண்டமாக்கி, காய்கறிகளை நறுக்கிக் குவிப்பதுபோலக் குவித்து, தராசில் வைத்து நிறுத்து ஏழு சமபாகங்களாக்கி தலைக்கொன்றாக நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். ஆனால், ஏழு கூறுகளும் சம நிறையாக இருக்குமேயன்றி, ஒவ்வொன்றிலும் இருக்கும் துணுக்குகள் உடம்பின் வெவ்வேறு பாகத்துத் துணுக்குகளாயிருப்பது நிச்சயம். அது பட்சபாதமற்ற பாகப்பிரிவினை ஆகாது. ஆகையால், நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள். ராமாயணச் சுவடிக்கு நெருப்பு வைத்துக் கொளுத்தி விபூதியாக்க வேண்டுமென்று நீங்கள் தீர்மானித்தீர்களல்லவா. அதோடு என்னையும் சேர்த்து வைத்து, வீட்டிலுள்ள மற்ற சாமான்கள், கட்டை முட்டைகள், இந்த வீடு ஆகியவற்றையும் சேர்த்து ஒருமிக்க நெருப்பு வைத்துக் கொளுத்தி சகல சொத்துகளையும் விபூதியாக்கி, ஒன்றாகக் கலந்து பாகம் பிரித்துக் கொள்ளுங்கள். அப்போது எல்லாத் தகராறுகளும் ஒரே வழியாகத் தீர்ந்து போகும். அதன் பிறகு உங்களுக்குள் எதைப் பற்றியும் சண்டையோ, மனஸ்தாபமோ ஏற்படாது. இதைத் தவிர வேறு மார்க்கமில்லை. இதை உடனே நிறைவேற்றி வையுங்கள். தாமதிக்கவேண்டாம்' என்றாள். அதன் பிறகு இந்த விசித்திரமான பாகப்பிரிவினை எப்படித்தான் முடிந்தது என்பது நமக்குத் தெரியாது. இந்த வரலாற்றை நமக்குச் சொன்ன நம் பெரியோர்கள் அதற்கு மேற்பட்ட முடிவைத் தெரிவிக்காமல் விட்டுவிட்டார்கள். ஆகையால்

நாம் அதை அறியக்கூடவில்லை. இதைப்போலவே உலகத்தில் அநேகமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் தீர்க்கமுடியாத வியவகாரங்கள் எத்தனையோ கிளம்பிக்கொண்டே இருக்கின்றன. அவற்றைத் தீர்த்துவைக்க, எல்லாம் வல்ல கடவுளுக்கே விருப்பமில்லாமல், விட்டுவைத்திருக்கையில், கேவலம் அற்ப அறிவும், சொற்ப நோக்கமுமுடைய மனிதராகிய நாம் எப்படி இவைகளைத் தீர்த்துவைக்கப்போகிறோம். நெருங்கிய உறவினர்களான தாய், தந்தை, ஓரே வயிற்றிலுதித்த சகோதர சகோதரிகள் ஆகியோருக்குள்ளாகவே இவ்விதமான தகராறுகளும் அடி வசைகளும் ஏற்படுமானால், அன்னியர் ஒருவருக்கொருவர் சண்டை சச்சரவுகள் நடத்துவதைப்பற்றி நாம் சந்தேகிக்கவும் வேண்டுமோ? மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை முதலியவற்றாலேற்படும் சச்சரவுகளோ அநந்தம். அதோடு ஜாதிமதச்சண்டைகளோ சொல்லத்தரமன்று. இவைகளைத் தீர்த்துவைக்கக்கூடியது வேதாந்த தத்துவமே என்று கருதி விசிஷ்டாத்வைதமென்றும், அத்வைத மென்றும் பலவகைப்பட்ட கொள்கைகளை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அவற்றால் சண்டை சச்சரவுகள் அதிகரித்தனவே யன்றி குறைந்தபாடில்லை. நம் தேசத்திலுள்ள சுதந்திரச் சண்டைகளும் ஜாதிமதச்சண்டைகளும் போதாவென்று இப்போது கிறிஸ்தவர், துருக்கர் முதலிய இதர ஜாதி மதத்தினருடைய சண்டை சச்சரவுகளும் வந்து சேர்ந்துகொண் டிருக்கின்றன. கடவுள் எல்லோருக்கும் தந்தை யென்றும், சகலமான ஜீவர்களும் அவருடைய குழந்தைகள், அதாவது சகோதர சகோதரிகள் என்றும் நாம் கருதவேண்டும்; பிறருடைய பொருளை நாம் அபகரித்தல் கூடாது, எல்லோரிடமும் அன்பாயிருக்கவேண்டும், கடவுளிடம்கூட நாம் எதை

யும் எதிர்பார்க்காமல் பக்தி செலுத்தவேண்டும், அவரு டைய பாதார விந்தத்தில் எப்போதும் சேவை செய்து கொண்டிருப்பதைத் தவிர வேறு எதைப்பற்றிய ஆசையும் நம் மனதில் உண்டாகவேண்டாமென்று கடவுளிடம் வேண்ட வேண்டுமென்றும், இவை போன்ற எண்ணிறந்த அருமையான தத்துவங்களை யெல்லாம் விசிஷ்டாத்வைதம் போதிக்கிறது. ஆனால், இவைகளை எல்லோரும் அநுஷ் டிக்கும்படி செய்து காரியத்தில் நடத்திவைப்ப தெப்படி? நாம் மேலே விவரித்த பாகப் பிரிவினையில், ஒரே வயிற்றில் உதித்த சகோதரர்கள் நடந்துகொண்ட மாதிரியை கவ னிப்போமானால், ஒருவருக்கொருவர் சம்பந்தமற்ற இதர மனிதர்களும், ஒருவரை யொருவர் வதைக்கும் துஷ்டர் களும் சகோதரத்வம் பாராட்டுவரென்று நாம் எப்படி எதிர் பார்க்கமுடியும். கடவுள் எல்லோருக்கும் பிதாவென்றும் நாமெல்லோரும் சகோதரர்களென்றும் கிறிஸ்தவர் முதலிய இதர மதஸ்தர்களும்கூட புஸ்தகத்தில் தத்துவங்களை எழு திவைத்துக்கொண்டுதா னிருக்கிறார்கள். அது அநுபவத் திற்கு வந்த கொள்கையாயிருந்தால் அவர்களுடைய முன் னோர்கள் தங்கள் நாட்டைவிட்டு சேனைகளோடு இந்த நாட் டிற்கு வந்து நம்முன்னோர்களோடு ஏன் சண்டை செய்தார் கள்; இந்த நாட்டை ஏன் கைப்பற்றிக்கொண்டு நம் எல்லோரையும் ஓட்டாண்டி யாக்கினார்கள்? இதிலிருந்து அவர்களுடைய ஏகசகோதரத்வம் வெறும் ஏட்டுச்சுரைக்கா யென்பது நிதரிசனமாகத் தெரிகிறது. நாம் நம்முடைய நாட்டைத் திறமையாக ஆள சக்தியற்று குழந்தைபோல் இருக்கிறோமென்றும், தாங்கள் சகலமான விஷயங்களிலும் முன்னேற்றமும் நாகரிக முதிர்ச்சியும் அடைந்திருப்பவர்க ளென்றும், அதனால் நம்முடைய குழந்தைப்பருவம் நீங்கு

கிற வரையில், தாங்கள் நமக்கு போஷகர்களாயிருந்து எல்லாவற்றையும் நிர்வகிப்பதாக வெள்ளைக்காரர்களாகிய ஏக சகோதரத்வக் கிறிஸ்தவர்கள் ஒரு சமாதானம் சொல்வதுண்டு. இங்கிலாந்து தேசத்தையே நாம் உதாரணமாக எடுத்துக்கொண்டு பேசுவோம். அங்கிருப்பவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியான புத்திசாலித்தனமுடைய மேதாவிகளல்லர். எல்லோரும் ஷேக்ஸ்பியரா ? எல்லோரும் மில்ட்டனா ? எல்லோரும் கிளாட்ஸ்டனா ? எல்லோரும் லாய்டு ஜார்ஜா ? எல்லோரும் பால்ட்வினா ? அங்கும் நம்மைப்போல் இளித்தவாயர்களும், அசடுகளும், பைத்தியங்களும் திறமையற்றவர்களும் ஏராளமாய் நிறைந்து இருக்கிறார்கள். அங்கு வருஷம் பிரதி கோடிக்கணக்கில் ஏற்படும் விவாக விடுதலைத் தீர்மானங்களை கவனித்தால், தம்தம் மனைவியை அடக்கியாளும் திறமையற்ற நபுன்சகர்களே பெரும்பாலோராய் இருப்பதும் நிதரிசனமாகத் தெரிகிறது. அங்கு மேதாவியாயிருப்போர் ஏமாளிகளாயிருக்கும் இத்தகைய மனிதர்களுடைய சொத்து சுதந்திரங்கள் முதலியவைகளை ஏன் அபகரித்து திறமையாய் அநுபவித்து வழிகாட்டியாய் நடந்துக்கொள்ளக்கூடாது? அசடனோ, மூடனோ, பைத்தியக்காரனோ, திறமையற்றவனோ, நபுன்சகனோ, எவனாயிருந்தாலும் அவனவன் தன்தன் திறமைக்குத் தக்கபடி தன் தன் சொத்து சுதந்திரங்களை அநுபவித்தாளப் பூர்த்தியான உரிமை உடையவனாய் விடப்பட்டிருக்கிறானேயன்றி, நம் குழந்தைப் பருவம் நீங்குகிறவரையில் நம்மை போஷிப்பதுபோல, வெள்ளை மேதாவிகள் தம் நாட்டிலுள்ள திறமையற்ற குழந்தைகளுடைய சொத்து சுதந்திரங்களை பலவந்தமாய் அபகரித்து ஆண்டநுபவிக்கவில்லையே. அதன் காரணமென்னவென்று அவர்களிடம் நாம் கேட்டால், நமக்கு சமா

தானம் சொல்லப்போகிறார்களா? சொல்லமாட்டார்க ளென்பது நிச்சயம். ஆகையால் அவர்களுடைய ஏக சகோ தரத்வம், காரியத்தில் தங்கள் நாட்டாரோடு நிற்பதே யன்றி நம் நாட்டில் அநுபவத்திற்கு வாரதது. அத்வைதி கள் சொல்லுவது இன்னம் விசித்திரமானது. நாமும் தெ ய்வமும் ஒன்று என்றும், இந்தப் பிரபஞ்சமெல்லாம் வெ றும் பொய்த் தோற்றமென்றும் நாம் நினைத்துக்கொண்டால், ஆசாபாசங்களெல்லாம் விலகிவிடுமாம். உலகத்திலுள்ள சண்டை சச்சரவுகள் சங்கடங்களெல்லாம் உடனே இல்லா மல் போய்விடுமாம். கடவுளின் ஸ்வரூபம் இன்னதென்ப தும், அது என்ன கருத்தோடு இந்த லீலாவிபூதியை உற் பத்திசெய்து நடத்திவருகிறதென்பதும் நமக்குத் தெரியா வென்றும், அவைகளை நாம் ஒருநாளும் அறியமுடியாதெ ன்றும் வேதங்கள் சொல்லுகின்றன. அதுவன்றி, நம்மு டைய ஜீவான்மா என்ன ரூபமாய், எங்கிருக்கிறது, அதன் சுயயோக்கியதை என்ன, அது என்ன வஸ்துவினாலானது என்ற விஷயங்கள் திட்டமாய் எவருக்கும் விளங்கவில்லை. அப்படியிருக்க, வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத பரம் பொருளும், ஜீவாத்துமாக்களும் ஒன்றே என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்ல என்ன ஆதாரமிருக்கிறது. நம்மால் அறியக்கூடாத இரண்டு வஸ்துக்களின் தன்மையைப் பற் றித் துணிந்து நாம் பேசுவதெப்படி? உலகத்தின் ஆசாபா சங்களும் சங்கடங்களும் ஒழிய, இது ஒரு யுக்தியாகவைத் துக் கொண்டால், இந்த அத்வைதத்தினால் நாம்கோரிய காரி யம் நிறைவேறுமா? இந்த மருந்துவியாதியைவிட அதிகமான கெடுதலை உண்டாக்கக்கூடியதாகவல்லவா இருக்கிறது. எல் லோரும் தெய்வங்களே என்றால், யார் செய்வது தவறு, யார் செய்வது சரியானது, யாரை யார் கண்டிப்பது என்ற

நிர்ணயங்களே இல்லாமல் போவதும், தர்ம அதர்மங்களுக்கும் நன்மை தீமைகளுக்கும், பாபபுண்ணியங்களுக்கும் வித்தியாசம் இல்லாமல் போவதும் நிச்சயம். எல்லா ஜீவர்களும் தெய்வங்களென்றும், பிரபஞ்சம் வெறும் பொய்த் தோற்றமென்றும் கருதுவதே மோக்ஷமென்றால், நாம் கைலாசம், வைகுண்டம் முதலிய இடங்களுக்குப் போக வேண்டுமென்று பாடுபடுவதில் அர்த்தமே இல்லை. நாம் கடவுளை நினைத்து பக்தி, பஜனை முதலியவைகளைச் செய்வதே அவசியமில்லை. நாமே கடவுளாதலால், கடவுளின் ஒருபாகம் இன்னொருபாகத்தை நினைத்துஏன்ஸ்தோத்திரம் செய்வது, அதனால் அடையக்கூடிய பலன் என்ன? இந்தக் கொள்கை, நானே தெய்வமென்று ஒவ்வொருவனும் மமதைகொண்டு தன்னரசாய் நடந்துக்கொள்வதில் கொண்டுபோய் விடக்கூடியது. முற்காலத்தில் இருந்த இராவணன், இரணியன் முதலிய அசுரர்களுடைய கொள்கை இதுவே. இதில் இன்னொரு விநோதம் என்னவென்றால், இந்தப் பிரபஞ்சத்தின் ஆசாபாசங்களையும் சங்கடங்களையும் ஒழிப்பதற்காக, இந்த லீலா விபூதி பொய்த் தோற்றமென்றும், இதையெல்லாம் நீத்து பஸ்மமாக்க ஒரு கடவுள் இருப்பதாகவும் சொல்லுவதோடு அதற்கு அறிகுறியாக் விபூதிபூசிக் கொள்ளுகிறார்கள்; அப்படிப் பூசிக்கொண்டு, இந்தஉலகத்தில் நமது சகல காமங்களையும் பூர்த்திசெய்து வைக்கும் ஸ்திரீ தெய்வமான காமாக்ஷி என்னும் சரஸ்வதி தெய்வத்தைப் பிரதானமாகப் பூஜிக்கிறார்கள். இந்த அத்வைத பீடத்தை உண்டாக்கிய ஆதிசங்கரரே காமகோடி என்னும் தெய்வ பீடத்தைப் பிரதானமாக ஸ்தாபித்தாரென்றால், அவருடைய பொய்த்தோற்றப் பிரபஞ்சத்திற்கு அர்த்தமென்ன வென்பது நமக்கு விளங்கவில்லை. அவர்

கள் விபூதியைப் பட்டை பட்டையாகப் பூசிக்கொண்டு காமாக்ஷியைப் பூஜை செய்கிறார்கள். அப்படிப் பூசுவது காமாக்ஷியால் ஏற்படக்கூடிய இம்மையின் சுகபோகங்களை யும், காமாக்ஷியையும் எரித்து சாம்பலாக்கிவிட்டதாகக் காட்டுகிறது. அந்தக் கோலத்தோடு காமாக்ஷியின் அருளை நாடுவதென்பது ஒன்றுக் கொன்று நேர் விரோதமான செய்கை யென்பது நிதரிசனமாகத் தெரிகிறது. உலகைப் பொய்த் தோற்றமாகக் கருதி விலக்கவேண்டுமென்ற கொள்கையை ஸ்தாபித்தவரே உலகின் சுகபோகங்களை ஏராளமாகத் தரக்கூடிய காமாக்ஷியென்னும் சுக்கிரனாகிய அசுரகுருவைப் பிரதான தெய்வமாக வைத்துப் பூஜை செய்தாரென்றால், அந்த அத்வைதத்தை அநுபவத்திற்குக் கொண்டுவர முடியாத காரியம் எதுவோ அதை அவரே செய்து வைத்திருக்கிறார் என்றே சொல்லவேண்டியதா கிறது. இதில் இன்னொரு முக்கியமான விஷயம் அடங்கி இருக்கிறது. நம் ஜீவன், பஞ்ச பூதங்களாலான பூத உடம் போடு சேர்ந்து பிறப்பதும், இம்மைச் சுகங்களை அநுப வித்து விட்டு இறப்பதும், மறுபடி புதிய தேகமெடுத்து ஜனிப்பதும் மாறி மாறி வந்து கொண்டே இருக்கிறதென் றும், இதினின்று விடுபட்டு, பூத உடம்பின் சம்பந்தமற்று ஜீவன் கடவுளிடம் போய்ச் சேருவதல்லவா மோக்ஷம். அத்வைதிகள் என்ன செய்கிறார்கள் என்றால், இந்த உலகத்தின் சுகபோகங்களைத் தரும் காமாக்ஷி அல்லது சரஸ்வதி என்று சொல்லப்படும் சுக்கிரனை முக்கியமாய் வணங்கி, சகலமான சுகபோகங்களையும் தாமே கோருகிறார் கள். அதோடு சிவனைப் பூஜை செய்தால், அவர் கடைசிக் காலத்தில் பூத உடம்பை முடிவாக எரித்து விட்டு இந்த ஜீவனைத் தம்மோடு சேர்த்துக் கொள்வார் என்று கருது

கிறார்கள். ஆனால் அந்தச் சிவனும் இந்தச் சீவனும் ஒன்று என்றும் சொல்லுகிறார்கள். சீவனுடைய பாதிபாகம் அம்பிகை என்கிறார்கள். சிவனையும் அம்பிகையையும் பூஜை செய்வது கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்பது போலல்லவா முடிகிறது. இம்மைச் சுகங்களை ஏராளமாகக் கொடுக்கும்படி அம்பிகையைக் கேட்டு, அவற்றினின்று விடுவித்து மோக்ஷ பதவியைக் கொடு என்று சிவனைக் கேட்பது ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறதல்லவா. அதுவன்றி மோக்ஷமென்பது சிவனோடு ஒன்றாய்ப் போவ தென்றால், அது இந்த ஜீவனும் அம்பிகைக்குப் புருஷனாகும் நிலைமையல்லவா. இந்தக் கொள்கை எவ்வளவு விகாரமாகத் தோன்றுகிறது பார்த்தீர்களா; ஆனால் விசிஷ்டாத்வைதிக னின் கொள்கை இதுவல்ல! நாம் உலக சுகங்களை நமதிச்சை ப்படி அநுபவித்துக்கொண் டிருந்தால், நமக்கு ஒரு நாளும் விடுதலை ஏற்படாது, நாம் கேட்கிறோமே யென்று கருதி கடவுள் உடனே நமக்கு மோக்ஷத்தைக் கொடுத்து விட மாட்டார், பஞ்சபூதத்தாலாகும் உடம்புகள் அதனதன்சட்ட திட்டங்களின்படி காரியங்களைச் செய்வதற்குக் கடவுளே எதிரிடையாக நடந்துகொள்ளமாட்டார்; நாம் நமது நடத் தையால் பஞ்ச பூதங்களின் பற்றைப் படிப்படியாக விலக்கிக் கொண்டு இந்தப்பிறப்பாகிய சக்கரத்திலிருந்துவெளிப் பட்டு பரமாத்மாவிடம்போக யோக்கியதையுடையவர்களாக நம்மைச்செய்து கொள்ளவேண்டும். நம் ஆசாபாசங்களை அடக்குவதற்கு அடிப்படையாக நாம் சாத்விகத் தன்மை யை உண்டாக்கிக் கொள்ளவேண்டும். அதற்கு அநு குணமாக இந்த தேகத்தையே சாத்விக ஆகாரங்களை உண்பதால் அடியோடு மாற்றிவிடவேண்டும். அதிலே தான் மோக்ஷத்தின் திறவுகோல் அடங்கி இருக்கிறது

என்பது விசிஷ்டாத்வைதிகளின் கொள்கை. அதுதான் வேதமதம் அல்லது வைதிகமதம்.

தேசிகருடைய பிரபந்தம் பதார்த்த குணசிந்தா மணி முதலியவற்றில் சாத்விக, ராஜஸ, தாமஸ பதார்த் தங்கள் இன்னின்னவை என்று முன்னோர் நிர்ணயித்திருக் கிறார்கள். அவைகளில் சாத்விககுணமுடைய பதார்த்தங் களை வரம்பழியாது உண்டுவந்தால், மனிதர்களுடைய தே கம் புனிதமடையும்; அவர்கள் அதீதமான ஆசாபாசங்களி னால் தூண்டப்படாமல் பரிசுத்தமான வழிகளைக் கடைப் பிடிப்பார்கள்; கடவுளிடம் மனம் திரும்புவதற்கு அது அநுகுணமான சாதனமாகும்; சுத்தமான ஆகாராதிகளால் தேகம் நன்னிலைமை யடையும்; அறிவு தெளிவு பெறும்; அக்ஞானத்தால் ஏற்படும் ஆசாபாசங்களில் அறிவு செல் லாது, பாரமார்த்திக வழியில் செல்ல அதுவே அடிப்படை யான நிலைமை. அத்வைதிகளின் நூலாகிய கைவல்லிய நவ நீதம் என்பதிலிருந்து நான் இங்கு ஒரு பாவை குறிப்பிடு கிறேன்.

"அறுசுவையி குணங் குற்றம் அசுத்தம் சுத்தம்
அபத்தியம் பத்தியமென வுணர்ந்திடாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத்தீப்போற்
போகங்கள் புசிப்பவன் மாயோகியாகும்
சிறிதுவலிது கடின தன்னியங்கள் நன்மை
தீமைகள் சேரினும் படிகச்செயல்போற் சித்தம்
வெறிதிருக்குமவனே மாத்தியாகியாவன் விரதம்
இம்மூன்றுள்ளவரே வின்னோரே."

இதன் கருத்தையும் சொல்லுகிறேன். 'அறுவகை ரசங்க ளின் குணகுணங்களைச் சுத்த அசுத்தங்கள் பத்திய

அபத்தியங்கள் என உணவை ஆராய்ந்து பாராமல் சாந்தத்தோடும் நேரிட்டதைக் காட்டுத் தீப்போலப் போகங்களை அனுபவிப்பவன் மாயோகியாம்; அற்பமும் மகத்துவமானவைகளும் தன்னுடையதும், பிறருடையதுமானவைகளும் புண்ணிய பாவங்களும், ஆகிய இவைகள் அடைந்தாலும் பட்டிகத்தின் தன்மையைப் போலச் சித்தமானது பற்றின்றி நிற்பவனே மாத்தியாகியாவான். இம்மூன்று விரதங்களும் உடையவர்களே முத்தியை உடைய சீவன் முக்தர்கள்' என்பது இந்தப் பாடலின் அர்த்தமாம். இதில் மோக்ஷத்திற்கு வழி எவ்வளவு சுலபமாகக் காட்டப்பட்டிருக்கிறது, பார்த்தீர்களா! சுத்தம், அசுத்தம், குண குணம் முதலிய எதையும் பாராமல் எது அகப்படுகிறதோ அதைத் தின்பவர்கள் தான் மோக்ஷத்திற்கு உரியவராம். இதை எந்த அநுமானத்தின் மேல் கண்டு பிடித்தார்கள் என்பது தான் நமக்கு விளங்கவில்லை. இது உண்மையானல், நம்முடைய காக்கைகளெல்லாம் சீவன் முக்தர்களென்று நாம் நிச்சயமாய்ச் சொல்லலாம். அவைகள் ஒவ்வொன்றுக்கும் மோக்ஷம் சித்திப்பது நிச்சயம். ஏனென்றால், அவைகள் எது அகப்படுகிறதோ அதை ஆசையோடு தின்கிறது. பன்றிகள் கூட மலத்தையும் சில குறிப்பிட்ட வஸ்துக்களையும் மாத்திரம் தின்னுகின்றனவேயன்றி, மற்ற எதையும் தின்பதில்லை. 'புலி பசித்தாலும் புல் தின்கிறதில்லை' யென்ற பழமொழி சர்வசாதாரணமானது. இதுபோல ஒவ்வொரு ஜீவ ஜெந்துவுக்கும் உவப்பான ஆகாரங்கள் இன்னின்னவை என்ற நிர்ணயம் இயற்கையிலேயே ஏற்பட்டுத் தொன்று தொட்டு அநுஷ்டானத்தில் இருந்து வருகின்றன. அததற்கு ஏற்பட்ட ஆகாரத்தை தின்னுமல் அசுத்தங்களைத் தின்றால், தேகாரோக்கியம் குலைந்து

போவதும், நோய், மரணம் முதலியவை சம்பவிப்பதும் பிரத்தியக்ஷமாகக் கண்ணெதிரில் நிகழ்பவை. நாம் சாந்தமாகவும் மனோதிடத்தோடும் விஷத்தைப் புசித்தால், அது நம்மைக் கொல்லாமல் விடுமா? ஊமத்தங்காயைத் தின்று கொண்டே வந்தால், பைத்தியம் உண்டாகாமல் இருக்குமா? பாதம் பருப்பு, நெய், தயிர், பால் முதலியவற்றையே உண்பவன் சிற்றின்ப சுகத்தில் நாட்டங் கொள்ளாமல் இருப்பது சாத்தியமா? ஒவ்வொரு பதார்த்தமும் அதனதன் குணத்திற்குத் தக்கபடி தேகத்தில் மாறுதலை உண்டாக்காமல் போகுமா? மனிதன் முழு மனதோடும் ஒரு கெட்ட வஸ்துவை உண்கிறானென்று வைத்துக் கொள்வோம். அது தொண்டையை விட்டுக் கீழே இறங்கும் வரையிலே தான், அவனுடைய மனதின் அதிகாரம் செல்லுமன்றி அதன் பிறகு அது உடம்பில் செய்யும் மாறுதலை அவன் தடுப்பதெப்படி? இப்படி சுத்த அசுத்தம் நல்லது கெட்டது பாராமல் தின்று வியாதியை உண்டாக்கிக் கொண்டால் மனத்தெளிவு கெட்டுப் போகுமென்பதை நாம் சொல்லவும் வேண்டுமா? துர்க்குணம் படைத்தவனை வயிற்றுவலிக்காரன் என்று சாதாரணமாய்க் குறிக்கிறோமல்லவா? ஆகையால், கெடுதலான ஆகாரத்தினால் மனிதனுடைய அறிவு, குணம், நடத்தை முதலிய எல்லாம் அவசியம் மாறுபடுமென்பது பிரத்தியக்ஷத்தில் காணப்பட்ட அனுபவம். அதையநுசரித்தே வைத்திய சாஸ்திரங்களும், மருந்துகளும் உலகம் முழுதிலும் கணக்கிலடங்காமல் ஏற்பட்டிருக்கின்றன. உலகத்தின் கட்டுப்பாடுகளை மீறி, அநாவசியமாகத் தன் உடம்மை வதைத்து, வீண் அவஸ்தைகளை உண்டாக்கிக்கொண்டால் அதனால் நீடித்த வியாதியோ, அல்லது, மரணமோ விளையுமேயன்றி மோக்ஷம்

எப்படி சித்திக்கும் என்பதுதான் விளங்கவில்லை. ஆகார விஷயங்களில் மிருகங்கள், பூச்சி புழுக்கள்கூடத் தங்கள் பகுத்தறிவை உபயோகித்து அதனதன் நிலைமைக்கும் உடம்பின் கூறுக்கும் உகந்த ஆகாரங்களை உண்டு தன்தன் தேக நன்னிலைமையைக் காத்துக்கொள்ளுகின்றன. மனிதன் மோக்ஷமடையவேண்டுமானால்,பூச்சி புழுக்களைவிடக் கேவலமாய் நடந்து, நிர்ணயங்களைக் கடந்து, அகப்பட்டதைத் தின்று, இந்த அற்புதமான சரீரத்தைப் பாழாக்கிச் சீர்குலைய அடித்துக்கொள்ளவேண்டுமென்பது பகுத்தறிவை திருப்தி செய்யத்தக்க விஷயமாய்ப் படவில்லை. நமது ஆசாபாசங்களையும் துர்மோகங்களையும் விலக்கவேண்டுமானால், அதற்கு சாத்விக பதார்த்தங்களே தக்க உபகாரணங்களன்றி மலத்தையும் அழுக்கையும் துர்க்குணங்களைப் பெருக்கும் வஸ்துக்களையும் மனம்வைத்து உபயோகிப்பது நாம் கோரிய பலனைத் தருமோ! கடவுள் இந்தப் பிரபஞ்சத்தில் ஒன்றுக்கொன்று வேறுபட்ட கோடாநுகோடி ஜீவஜெந்துக்களைப் படைத்து அததற்குத் தகுந்த, கணக்கிலடங்கா ஆகாராதிகளைப் படைத்திருக்கின்றார். நாம் பூமியில் நெல்லை விதைக்கிறோம்; ஏராளமாக நெல் விளைகிறது. புளியங்கொட்டையை நடுகிறோம். மரம் முளைத்து புளியம்பழங்களை வருஷாவருஷம் அபரிமிதமாகச் சொரிகிறது. கரும்பை நடுகிறோம். அதிலிருந்து பொதிபொதியாக நாம் வெல்லாம் பெறுகிறோம். மிளகாய்ச் செடியை நட்டால், மிளகாய்கள் வந்து குவிந்துபோகின்றன. இப்படி நமக்குத் தேவையான பற்பல குணவேறுபாடுகளுள்ள எண்ணிறந்த வஸ்துக்கள் நமக்கு சுலபத்தில் கிடைக்கின்றன. இத்தனை வகையான வஸ்துக்களும் நமக்கு ஒரே வயலிலிருந்து உண்டாகின்றன. ஆனால் நாம் அந்த வயலை

எவ்வளவு ஆழம் தோண்டிப்பார்த்தாலும்,மணல், களிமண், கல் முதலியவற்றைத் தவிர வேறு எதுவும் காணப்படவில்லை. மணல் முதலியவற்றை நம் வாயில்போட்டு மென்றால் நமக்கு எவ்விதமான சுவையும் உண்டாவதில்லை. அவைகளைச் சுவைப்பதும் வேதனையாயிருக்கிறது. ஆனால் நமக்கு உண்டாகும் விளைபொருள்கள் ஏராளமாயிருப்பதிலிருந்து, எல்லாம் மண்ணிலிருந்தே பிரித்தெடுக்கப்பட்டிருக்கின்றனவென்பது பிரதியக்ஷயமாகத் தெரிகிறது. ஓரே தினிசான வஸ்துவைப் பிரித்தெடுத்து அடிக்கடி நமக்கு உதவும்பொருட்டு ஒவ்வொரு விதையிலும் சாசுவதமாக பிரம்மரந்திரம் அமைந்திருக்கிறது. அதை கிரமப்படி பூமியில் நட்டுத் தண்ணீர் பாய்ச்சினால், அதற்குள் மறைந்துள்ள பிரம்மரந்திரம் தனக்குத்தானே வேலை செய்யத்தொடங்கி செடி கொடி மரங்களாய் மாறி தன்னைப்போன்ற ஏராளமான பிரம்மரந்திரங்களை மறுபடி உண்டாக்கி வைத்துவிட்டு அழிந்து போகிறது. ஜீவஜெந்துக்கள் தம் தமக்குத் தேவையானவைகளை உபயோகித்துத் தமது தேகத்தை போஷித்துக்கொள்ளுகின்றது. மறுபடி அதே பொருளை உற்பத்தி செய்யத் தேவையான பிரம்மரந்திரங்கள் மிஞ்சி நிற்கின்றன. காலில் மிதிபட்டு லக்ஷக்கணக்கில் கண்ட இடங்களிலெல்லாம் கிடக்கும் புளியங்கொட்டைகளில் ஒன்றை எடுத்து நாம் பூமியில் நட்டுத் தண்ணீர் வார்த்தால், அது சில வருஷங்களில் பிரம்மாண்டமான மரமாகி, ஒவ்வொரு வருஷத்திலும் லக்ஷக்கணக்கில் பழங்களைக் கொடுத்தபடி நீண்டகாலம் உயிரோடிருந்து மடிந்துபோகிறது. மரத்தின் ஒவ்வொரு பாகமும் நமக்கு ஒவ்வொரு விதத்தில் பயன்படுகிறது. அதிலிருந்து உண்டாகும் ஒவ்வொரு விதையிலும் தாய் விதைக்கு இருந்தது போன்ற பிரம்மரந்திரம்

அமைந்திருக்கிறது. புளியங்கொட்டையை நட்டால், அதிலிருந்து கரும்பு முளைப்பதில்லை ; அதன் பழங்களில் புளிப்பை தவிர வேறு சுவை இருப்பதில்லை. இப்படி ஒவ்வொரு புளியங்கொட்டையும் முளைப்பது முதல் மரமாகிப் பலவருஷகாலம் இருந்து அழியும் வரையில் ஒரே விதமாக நடந்துகொள்ளுகிறது; ஒரேவிதமான சத்துக்களையும், வஸ்துக்களையும் பூமியிலிருந்து கிரகித்து நமக்கு உதவி விட்டுப்போகிறது. இது ஓர் இலாகா. இந்த ஓர் இலாகாவில் இந்த உலகம் முழுதிலும் ஏற்படும் மொத்தக் கொட்டைகள் எத்தனை என்று கணக்கிட்டுச் சொல்லமுடியுமா ? இதைப்போல எத்தனையோ வகை வகையான குணவேறுபாடுகளைப் பிரித்துதவும் வேறு வேறு தினிசு விதைகள் கோடாநுகோடியாய் உலகில் இருக்கின்றன. ஆற்று மணலை எண்ணுவது எவ்வளவு சுலபமானதோ அதுபோன்றதே இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனை தினிசு விதைகள் இருக்கின்றனவென்று கணக்கெடுப்பதும். இப்படி நிரம்பிக் கிடக்கும் விதைகள் ஒவ்வொன்றுக்குள்ளும் கடவுள் ஒளிந்துகொண்டிருந்து அதற்கு ஏற்படும் மாறுபாடுகளையும், அதன் வேலைகளையும் நடத்திவைக்கிறாரா ? இல்லை. இப்போது நமக்கெதிரில் கடிகாரங்களைத் தயாரித்து விசைகளை வைத்து விடுகிறார்கள். மயிர்போலிருக்கும் ஒரு விசை காற்றினலசைகிறது. அதிலிருந்து சக்கரங்கள் ஒன்றை யொன்று கணக்குப்படி நகர்த்திக்கொண்டே போய் முடிவில் முள்களை அசைக்கின்றன. அவ்வாறு விசைகள் பல வருஷங்கள் வரையில் தாமாகவே அதனதன் வேலையை ஒழுங்காகச் செய்துகொண்டே இருக்கின்றன. இதைப்போல, இந்த உலகைப் படைத்த சிருஷ்டி கர்த்தா ஒவ்வொன்றிலும் விசைகளை வைத்து, அதது

சாசுவதமாகத் தன்தன் வேலையைச் செய்யும்படி தந்திரம் செய்திருக்கிறார். அதையே நாம் பிரம்மரந்திரம் என்று சொல்லுகிறோம். நமது மண்ணுலகில் மறைந்து கிடக்கும் விதைகளாகிய பிரம்மரந்திரங்கள் இத்தனை என்று நாம் மனதால் பாவிக்கவும் முடியாது; நம் எண்ணிக்கையிலும் அது அடங்காது. ஒவ்வொரு ஜீவஜெந்துவும் அதனதன் சாமர்த்தியத்திற்கும், வல்லமைக்கும், உழைப்பிற்கும் தக்கபடி எதை எப்படி வேண்டுமானாலும் தயாரித்து உபயோகித்துக் கொண்டு போகட்டும் என்று பிரம்மா சுயேச்சை யளித்திருக்கிறா ரென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. யார் எந்த வஸ்துவைத் தின்கிறார்கள், என்பதையாவது எவ்வளவு தின்கிறார்கள் என்பதையாவது சிருஷ்டிகர்த்தா கவனிக்கவேண்டுமென்ற அவசியமாவது, அதன் கணக்கை எடுத்து, அதற்குத் தக்கபடி ஜீவர்களை தண்டிக்கவோ, புகழவோ வேண்டுமென்ற நியதியாவது இருக்குமானால், ஒவ்வொரு வஸ்துவும் தானாகவே தன்னைப் பெருகிக்கொள்ளும் சூட்சுமத்தை அவர் வைத்துவிட்டு எதிலும் படாமல் தூர விலகி இருக்கமாட்டார்.

நாம் இங்கு ஒரு முக்கியமான விஷயத்தை கவனிக்க வேண்டும். பிரம்மரந்திரங்களாகிய விதைகளில் ஒவ்வொரு வகை விதையும் அதனதன் நீர்வளம் நிலவளத்திற்குத் தக்கபடி குணத்தில் வேறுபடுகிறது. நெல்விதையில் எத்தனையோ வகையான விதைகள் இருக்கின்றன. பூமியின் செழுமை, தண்ணீரின் மிகுதி, இதர வசதிகள் ஆகியவற்றால் நெல் விதைகள் பாதிக்கப்படுகின்றன. நீர்வளம் மிகுதியாயுடைய தஞ்சை ஜில்லாவில் உற்பத்தியாகும் அரிசி சுலபத்தில் ஜீரணமாகத் தக்கதாயும், மிருதுத் தன்மையுடையதாயுமிருக்கிறது. மலைநாடாகிய நெல்லூரில் உற்பத்தியா

கும் அரிசி அழுத்தமாகவும், சுலபத்தில் ஜீரணமாகாததா யும் இருக்கிறது. ஓர் ஊரில் உண்டாகும் மாம்பழம் தேனும் பாகுமாயிருக்கிறது ; இன்னேரிடத்திலிருப்பது புளிப்பும் காறலுமாயிருக்கிறது. பூமிக்குள் புற்றுகளில் மறைந்திருக்கும் பாம்புகளை நாம் கவனித்தால், அவைக ளும் இந்த சிருஷ்டியில் பெரிய உபகாரத்தைச் செய்கின் றனவென்பது விளங்கும். பூமிக்குள் புளிப்பு, தித்திப்பு உப்பு, உவர்ப்பு, கைப்பு, காரம் முதலிய சுவைகளின் ஸத்து நிறைந்து கிடப்பது போல விஷமும் நிறைந்திருக்கிறது. பாம்புகள் பூமிக்குள்ளிருந்தபடி மண்ணிலுள்ள விஷத் தை இழுத்து நமக்காக அதை சுத்தமாக்கும் பிரம்ம ரந்தி ரங்களாக அமைந்திருக்கின்றன. தண்ணீரிலும் விஷம் இருக்கிறதாகையால் அதை இழுப்பதற்கு தண்ணீர்ப் பாம்புகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனல் விஷம் மண்ணில் அதிகமாகவும், தண்ணீரில் சொற்பமாகவும் இருக்கிற தாகையால், தண்ணீர்ப் பாம்பின் கடியினல் மரணம் உண்டாகிறதில்லை. பிரம்ம ரந்திரங்களாகிய பீஜங்கள் பொதுவாக ஒரேமாதிரி வேலை செய்யும்படி சிருஷ்டிக்கப் ப்ட்டிருக்கின்றன வானலும், அண்டை அயலிலுள்ள சௌகரியங்களினலோ இடையூறுகளினலோ, அவற்றின் போக்கும் குணமும் வித்தியாசப்பட்டுப் போகின்றன. ஒரு ரயிலை சமமாக இருக்கும் பாதையில் விட்டால் அசைவின்றி வேகமாய்ப் போகிறது. மலைமேல் ஏறும் ரயில் பாதையில் அதே ரயிலை விட்டால் அதன் வேகம் குறைந்துபோகிறது. தண்டவாளத்தின் மேல் தண்ணீர் வெள்ளம் வந்து விட்டால், வழியை விட்டு

நகர்ந்து கீழே விழுந்து விடுகிறது. அதுபோல ஒவ்வொரு பீஜமும் அதனதன் காரியத்தை தானுகவே செய்கையில் ஏற்படும் துணைக்கருவிகளின் வித்தியாசத்தால் மாறுபட்டு வேறுபட்ட பலாபலன்களை உண்டாக்குகின்றன. அரிசியைத்தின்றுகொண்டே இருப்பவன் அதை விட்டு வைக்கோலைத் தின்று சமாளித்துக்கொள்ளுவதாக வைத்துக் கொள்ளுவோம். அவனுடைய உடம்பின் மனிதத்தோற்றம் அதனுல் உடனே மாருதாயினும், உடம்பின் உறுதி அதன் குணம் முதலியவை காலக்கிரமத்தில் மாறிப்போதுவ நிச்சயம். தசை முதலியவை இறுக இறுக மூளையும் கெட்டிப்பட்டு, அதன் வேகம் குறைந்து மந்தித்துப்போம். அவன் மனிதனுடைய இயற்கையிலிருந்து மாட்டினுடைய இயற்கையை யடைவது நிச்சயம். அவனுடைய வடிவம் மாடுபோல் மாறிவிடாதென்பதை நான் சொல்ல வேண்டுவதில்லை. ஆனுல் அவனுடைய நடவடிக்கைகளும், குணமும் மிருகத்தன்மையை அடையு மென்பது பிரத்தியக்ஷத்தில் நிரூபிக்கக்கூடிய விஷயம். அந்த குணம் அவன் மண்டையோடு ஒழிகிறதா? இல்லை, மற்ற மாஞ்செடி கொடிகளுக்கு எப்படி விதைகளாகிய பிரம்மரந்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ, அதேபோல, மனித வர்க்கத்திற்கும் பீஜங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மனிதவர்க்கம் எப்படிப் பெருகுகிறதென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. புருஷனுடைய இந்திரியத்தில் ஒரு துளியும் ஸ்திரீயின் இந்திரியத்தில் ஒரு துளியும் சேர்ந்து ஸ்திரீயின்

கர்ப்பப் பைக்குள் ஒன்றுபட்டு வளர்ந்து சிசுவாகமாறி வெளிப்படுகிறது. அப்படி உற்பத்தியாகும் குழந்தையின் வடிவம் சில சமயங்களில் தகப்பனுருடைய வடிவத்தைப் போலவே இருக்கிறது; சில சமயங்களில் தாயாரின் வடிவத்தைப் போலவே இருக்கிறது. சில சமயங்களில் இரண்டையும் காட்டுவதாய் இருக்கிறது. தகப்பனாரிடமிருந்து தாயின் கர்ப்பப்பையில் போய்ச்சேர்ந்தது ஒரு துளி இந்திரியமே. இந்திரியம் ஜலரூபமா யிருப்பது. தந்தையின் வடிவம் உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் எப்படி இருக்கிறதோ அப்படியே குழந்தையின் வடிவமும் அமைகிறது. உடம்பின் வெளித் தோற்றம் மாத்திரமா குழந்தைக்கு உண்டாகிறது? தந்தை செவிடா:யிருந்தால், குழந்தையின் காதிலும் காலக்கிரமத்தில் ஊனம் ஏற்படுகிறது. தந்தைக்கு வயிற்றுவலி இருந்தால், பிள்ளைக்கும் கால கிரமத்தில் அது உண்டாகிறது. இப்படி தந்தையின் உடம்பின் வெளிப்பாகம், உள்பாகம் ஆகிய இரண்டும் எவ்வெவ்வித இலக்ஷணங்களோடு, அல்லது ஊனங்களோடு அமைந் திருக்கின்றனவோ, அவ்வித இலக்ஷணங்களோ ஊனங்களோ குழந்தைக்கும் இருக்கின்றன. அதோடு தாயின் வடிவத்தன்மையும் சேருவதால் சிற்சில சமயங்களில் சில அம்சங்கள் மாறுபட்டுத்தோன்றுகின்றன. அதுவன்றி, தகப்பனுடைய குணம், அறிவு, ஒழுக்க முதலியவைகளும் அநேகமாய்ப் பிள்ளையிடம் காணப்படுகின்றன. அதுவன்றி, 'மூத்ததுமோழை இளையது காளை' என்பது சர்வசாதாரணமான பழமொழி. தாயும் தகப்

பனும் உலக அநுபவம், வியவகார ஞானம், புத்திநுட்பம் முதலியவை இல்லாதவர்களாயிருக்கும் யௌவனப்பிராயத்தில் பிறக்கும் மூத்த குழந்தை அவர்களுடைய குணங்களைப்பெறுகிறது; அவர்கள் புத்திசாலிகளான பிறகு பிறக்கும் இளைய குழந்தைகள் அவர்களைப்போலவே புத்தி நுட்பமுடையவர்களா யிருக்கிறன. இவற்றினல் நாம் சில முக்கியமான விஷயங்களை யூகித்துக் கொள்ள வேண்டியவர்களாகிறோம். நாம் மிக இழிவாகக் கருதும் மனிதருடைய பீஜத்திற்குள் ஓர் அற்புதமான பிரம்மரந்திரம் அமைக்கப்பட்டிருக்கிறது. அது போட்டோப்படம பிடிக்கும் எந்திரம் போல் வேலை செய்கிறது. அந்த பீஜத்தில் உற்பத்தியாகும் விந்துவின் ஒவ்வோர் துளியிலும் அந்த போட்டோ எந்திரம் வேலை செய்து மனிதனுடைய தேகத்தின் உள்புறத்திலும், வெளிப்புறத்திலும் அமைப்பு, குணம் நடவடிக்கை முதலிய வற்றில் என்னென்ன மாறுதல் ஏற்படுகிறதோ, அது அப்படியே ஒவ்வொரு துளி விந்துவிலும் பதியும்படியும், மறுபடி, ஸ்திரீயின் கர்ப்பப்பைக்குப் போன அந்த நகல் வந்து அப்படியே உருவ மடைந்து அசலின் வடிவம் குணம் முதலிய வற்றையே தத்ரூபம் காட்டும்படி செய்கிறது. மனிதனுடைய விந்துத் துளியில் அவனுடைய சர்வாங்கங்களின் வடிவம் முதலியவை பதிவது மாத்திரமா? அப்போது ஆகாயத்திலுள்ள நவக்கிரகங்கள், நக்ஷத்திரங்கள் ஆகியவற்றின் இருப்பிடங்கள், உச்ச நீசத் தன்மைகள், குணுகுணங்கள் முதலிய

வைகளும் மனிதனுடைய ஒவ்வொரு துளி விந்துவிலும் பதிந்து போகிறதாகையால், அந்தத்துளி கருவாகும் காலத்தில் உள்ள கிரகநிலை தசா புக்திகள் தாய் தந்தையரின் வடிவங்கள் அவர்கள் அது வரையில் செய்த காரியங்களாகிய கர்மங்களின் மொத்த ஸாரம், ஆசாபாச வேகம் அல்லது வாசனை ஆகிய யாவும் ஒவ்வொரு துளி விந்துவிலும் ஒட்டிக் கொண்டிருக்கும்படி மனித பீஜத்தில் அமைக்கப் பட்டுள்ள போட்டோ எந்திரமாகிய பிரம்மரந்தரம் செய்கிறது. ஒருவனுக்குப் பல குழந்தைகள் பிறந்தால் அந்தந்தக் காலம் வரையில் உள்ள மொத்த ஸாரம் அந்தந்தப் பிள்ளையிடம் பிரதிபலிக்கிறது. மனிதன் இறக்கும் போது கடைசி வரையில் ஏற்பட்ட கர்ம பலாபலன் அவனுடைய பீஜத்தில் ஏற்பட்டுக் கொண்டே வருகிறது. அது கண்ணிற்குத் தென்படாத சூட்சும ரூபமுள்ள எந்திரமாதலால், மனிதன் இறந்தபின் அவனைக் கொளுத்தினாலும், அல்லது புதைத்தாலும், அவனுடைய உடம்பிலுள்ள பஞ்ச பூதங்கள் பிரிந்துபோய் விடும்போது அந்த சூட்சுமமான ரந்திரம் தனித்து நின்று அதன் பூர்வ கன்மம், பூர்வ ஆசாபாசங்கள் முதலியவற்றிற்குத் தக்கபடி புதிய உடம்பைப் பெறுகிறது. இப்படி ஜீவர்கள் பூத உடம்போடு சம்பந்தப்பட்டு பிரம்மரந்தர மாகிய சூட்சுமத்தினால் கர்ம பலாபலன்களைத் திறட்டிக் கொண்டு பிறப்பு இறப்பாகிய சக்கரத்தில் சுற்றிச்சுற்றி வந்து கொண்டிருக்கிறது என்பது நமக்குப் பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது.

இப்படி மனிதன் இறப்பு பிறப்பாகிய சக்கரத்தில் அகப்பட்டு, பஞ்ச பூதங்களின் விலங்குகளில் சிக்குண்டு, விடுபடும் மார்க்க மறியாது இந்த உலகத்திலேயே கிடந்து உழலுகிறான். இந்தக் கொடிய சிறையிலிருந்து விடுபடு வதற்கு, வேதாந்திகளாகிய வைஷ்ணவர்கள் வைதிக மதமே உண்மையான சாதனமென்று கண்டுபிடித்து மிக வைராக்கியத்துடன் அதைக் கடைப்பிடித்து வருகின்றார்கள்—என்று மன்மதபீட மகா யோகீசுவரர் கூறி மேலும் பேச முயன்ற காலத்தில், எதிரில் உட்கார்ந்திருந்தவரும், விபூதி ருத்ராக்ஷம் முதலிய சின்னங்களைத் தரித்திருந்தவருமான ஸ்மார்த்த ஜாதிக் கிழவர் ஒருவர் மிகப் பணிவான குரலில் பேசத் தொடங்கி, "ஸ்வாமிகளுக்கு ஒரு சிறிய விக்ஞாபனம். அநுமதி தயவு பண்ண வேண்டும்" என்றார்.

**யோகீசுவரர்**:—எதைப் பற்றிக் கேட்க வேண்டுமானாலும் கேட்கலாம். எனக்குத் தெரிந்தவரையில் சமாதானம் சொல்லுகிறேன். அல்லது, நான் சொன்னதில் தவறு ஏதாவது இருந்தால் நான் என்னையே திருத்திக் கொள்ளத் தடையில்லை. பகுத்தறிவுக்கு ஒத்த உண்மை எது என்பதை ஆராயவேண்டுமென்பதே என் முக்கியநோக்கமன்றி, ஜாதி மதப்போராட்டத்தைக் கிளப்ப வேண்டுமென்பது என் எண்ணமல்ல. அன்னிய மதத்தினர் நம்மையும் நமது கொள்கைகளையும் தூஷித்து இழிவு படுத்துகிறார்கள். ஆகையால் நாம் நமக்குள் உள்ள வேறுபாடுகளை நீக்கி சமரஸத்தன்மையை உண்டாக்கிக் கொள்ள வேண்டிய தவசியம். அதுவுமன்றி, மற்ற மதத்தார்களுக்கும் நமக்கும் கூட ஒற்றுமை உண்டாக்கிக் கொள்ளவும் நாம் முயலவேண்டும். ஒவ்வொரு மதத்தினரின் முன்னோர்கள் தெய்வங்களை எவ்வித உள்

கருத்தோடு அமைத்திருக்கிறார்கள் என்பதை நாம் நன்றாக ஆராய்ந்து பார்ப்போமானால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் பொருத்தமானதாகவே இருக்கு மென்பதில் ஐயமில்லை. ஆனாலும் எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்க்கும்போது, சிலவற்றில் சில அருமையான விஷயங்கள் காணப்படலாம். கூசாமல் அவைகளை ஏற்றுக்கொள்வதே விவேகிகளுக்கழகு. உதாரணமாக நாம் நம்முடைய போக்கு வரத்து சாதன விஷயத்தை எடுத்துக் கொள்வோம். ஆதி காலத்தில் ஜனங்கள் ஓர் ஊரிலிருந்து இன்னோர் ஊருக்குப் போக வேண்டுமானால், அது எவ்வளவு தூரமானாலும், காலால் நடந்தே போனார்கள்; அல்லது கட்டை வண்டிகளில் போனார்கள். காலக்கிரமத்தில் குதிரை வண்டிகள், பீட்டன் வண்டிகள், மோட்டார் வண்டிகள், ரயில் வண்டிகள், டிராம் வண்டிகள், ரிக்ஷாக்கள், கப்பல்கள், ஆகாய விமானங்கள் ஆகியவை தோன்றத் தோன்ற, பழைய சாதனங்களை விட்டுப் புதியவைகளை உபயோகிக்கிறார்கள். முன் காலங்களில் கால் நடையாகவும், கட்டை வண்டியிலும் ஏறிப் பல மாதகாலம் பிரயாணம் செய்து காசி ராமேசுவரம் போனவர்கள் இப்போது ரயிலிலும், மோட்டாரிலும் போகிறார்கள். **பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல—கால வகையினாலே** என்ற நீதிப்படி, மதியூகம் முதிர, முதிர, புதிய கொள்கைகளும், புதிய பழக்க வழக்கங்களும் தோன்றுகின்றன. எவைகள் உசிதமாகத் தோன்றுகின்றனவோ அவைகளை நாம் ஏற்றுக் கொள்ளுகிறோம். அதுபோல, நாம் மத விஷயத்திலும் எல்லாக் கொள்கைகளையும் சமரஸத்தன்மையாக ஆராய்ந்து பார்த்து உசிதா உசிதங்களைத் தெரிந்துகொள்ள முயல்வது குற்றமாகாது. நாம் கொள்கைகளின் குறை குணங்களை

ஆராய்கிறோ மென்று நினைத்துக் கொள்ள வேண்டுமே யன்றி பிற மதஸ்தரை தூஷிப்பதாகவோ, இழிவு படுத்துவதாகவோ கருதுவது சரியல்ல. நம் புராணங்களில் சில சமரஸமாகவும், சில பிற மத தூஷணை செய்வனவாகவும் இருக்கின்றன. சில தினங்களுக்கு முன் நான் ஸ்ரீ மஹாஸ்காந்த புராண வசனம் என்ற ஒரு புஸ்தகத்தைப் படித்தேன். அதில் 6-வது அத்தியாயத்தில் பிரமன் முதலிய தேவர்கள் அசுரர்களுடைய தொல்லையைப் பொறுக்க மாட்டாமல் நாராயணனிடம் ஓடி முறையிட்டதாகச் சொல்லப் பட்டிருக்கும் இடத்தில், அவர் சொன்னதாக எழுதப்பட்டிருக்கும் மறுமொழியை இங்கு நான் குறிப்பிடுகிறேன். அந்த வேடிக்கையைப் பாருங்கள். "ஹே பிரம்மேந்திரரே! நீங்கள் இருவரும் இத்தேவர்களுடன் என்னிடம் வந்த காரணம் என்ன? யான் இப்போது என்ன செய்ய வேண்டும்? யானே அருவருக்கத்தக்க ஊமைக் கோட்டானைப் போல், இப்போது தினமும் மேருமலையின் குகையைச் சேர்ந்து, பயமில்லாது நித்திரை செய்து வருகிறேன். இவ்விடத்தில் சொப்பனத்தில் சூரனைக் கண்டு பயந்து உலக முழுவதிலும் ஓடிச் சுற்றி விழிப்படைந்த பின், மேருமலையில் இருப்பது தெரிந்து பயமற்றவனானேன். சூரன் என்னும் சொல் என் செவியிற்பட்ட அளவில் என் மனம் நடுக்கம் கொள்கிறது. இம்மேரு மலையோ நம்மைக் காப்பதன் பொருட்டு கருணாநிதியாகிய காலகண்டரால் அருள் செய்யப்பட்டது" என்று திருவாய் மலர்ந்தருளும் போது, முனிவரர்கள் சூத முனிவரை நோக்கி, "முனிவரரே, மேரு மலையைப் பெரிய அசுரர்களும் வருவதற் கிடமில்லாதபடி தேவர்களுக்கு ஆதரவாகும் வண்ணம் பரமேஸ்வரர் அருள் செய்த விதம் என்ன?" என்றனர். அதற்கு சூத முனிவர்

மறு மொழி சொன்னதாக மேலும் ஏதேதோ தகவல்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. வைஷ்ணவ தெய்வமாகிய நாராயணரை தூஷிக்க வேண்டுமென்ற கருத்தோடு கந்த புராணத்தில் இம்மாதிரி எவரோ ஒரு சைவர் எழுதி வைத்திருக்கிறார் என்பதை நான் சொல்ல வேண்டுவதில்லை. இப்படி எழுதியவருக்கு நாராயணன், சிவன், பிரமன், இந்திரன், விஷ்ணு என்னும் பெயர்களின் கருத்தே இன்னதென்பது தெரியாதென்று நாம் கருத வேண்டும். நம் தெய்வங்களெல்லாம் வான சாஸ்திர ஆராய்ச்சியினால் ஏற்பட்டவை. அவை முக்கியமாய் லக்னங்கள், கிரகங்கள், நக்ஷத்திரங்கள் ஆகியவற்றைக் குறிக்கின்றன. அந்த உண்மையை அறியாதவர்கள், தெய்வங்கள் வெவ்வேறு உலகங்களில் நம்மைப் போன்ற வடிவங்களோடிருப்பவை என்று கருதி பொய்க் கதைகளை எழுதிப் புராணங்களில் சேர்த்திருக்கின்றனர். ஆகையால் நாம் பொய்களை விலக்கி, உண்மையைக் கண்டு பிடித்தால், சமரச உணர்ச்சியும் சகோதரத் தன்மையும் தாமாகவே ஏற்படும். மதச் சண்டைகள் ஒழிவதற்கு நாம் அங்குரார்ப்பணம் செய்ததுபோ லாகும். அதைக் கருதியே நான் விஷயங்களை எடுத்து உங்களுக்கு விளக்கிக் காட்டத் தொடங்கினேன். யாருக்கு எவ்விதமான சந்தேகமோ, ஆக்ஷேபணையோ உண்டானால், அதை தாராளமாக வெளியிடலாம். என்னால் கூடுமான வரையில் நான் சமாதானம் சொல்ல முயற்சிக்கிறேன். அல்லது, மற்றவர் சொல்வது நியாயமானதாயிருந்தால், அதை நான் ஏற்றுக் கொள்ளத் தடையில்லை. கிருஷ்ண பரமாத்மா கீதையில் "சகலமும் என் வடிவமே. யார் என்னை எந்த விதமாக பாவித்துப் பூஜை செய்தாலும் அது என்னையே சேரும்" என்று திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார். வேதத்தின் ஒரு

பாகமாகிய நாராயண சூக்தம், "நாயகனும், எல்லா ஆத்மாக்களுக்கும் ஈசுவரனும், ஜனன மரண மில்லாமல் சாசுவதமாயிருப்பவனும், சிவனென்று குறிக்கப்பட்டவனும், அடைந்தவர்களை நழுவ விடாதவனும், எல்லாவற்றையும்விட பிரதானமாக அறியத் தக்கவனும், எல்லாவற்றிற்கும் முடிவான அந்தராத்மாவும், எல்லாவற்றிற்கும் புகலிடமானவனும் நாராயணனே" என்று சொல்லுகிறது. பகவத்கீதையும், நாராயண சூக்தமும் வைஷ்ணவ நூல்கள். அவை (கந்தபுராணம் போல்) இதரர் தெய்வத்தை தூஷிக்காமல் சிவனை கௌரதையாகவே கொண்டாடுகின்றன. ஆனாலும் வைஷ்ணவர்கள் சிவனைப் பிரதான தெய்வமாக வைத்துப் பூஜிக்காமல் நாராயணனை வைத்துப் பூஜிக்க வேண்டிய காரண மென்னவென்றால், அதற்கு சரியான முகாந்தர மிருக்கிறது. அதைப்பற்றி நாம் இன்னொரு சந்தர்ப்பத்தில் விஸ்தாரமாக ஆராய்ச்சி செய்வது நலமானது. பரமாத்மா என்ன வடிவமாக இருக்கிறது என்பதையும், அதன் கருத்து இன்னதென்பதையும் நாம் ஒரு நாளும் அறிய இயலாது என்று வேதம், விஷ்ணு புராணம் முதலியவை சொல்லுகின்றன. அவையும் வைஷ்ணவர்களுடைய நூல்களே. அப்படி இருந்தும் நாராயணனே பரமாத்மா என்று பிடிவாதமாக அவர்கள் ஏன் சொல்லுகிறார்கள் என்பதைப்பற்றியும் நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். விதண்டாவாதத்திற்காக ஒருவர் அடியில் வருமாறு கேட்கலாம். "இந்தப் பிரபஞ்சம் முழுதும் என்னுடைய வடிவமே, யார் என்ன விதமாக பாவித்துப் பூஜை செய்தாலும் அது என்னையே சேரும்" என்று கிருஷ்ண பரமாத்மா சொல்லி இருக்கிறாரே! அப்படியானால், நம்முடைய மலமும் கிருஷ்ண பரமாத்மாவின் வடிவந்தானே. அதை வைத்துப் பூஜை செய்

தாலும், அதுவும் பரமாத்மாவுக்கு உகந்ததுதானே?" என்று கேட்கலாம். உண்மையான பக்தியோடு மனிதன் எதை வைத்துப் பூஜை செய்தாலும் அதைக் கடவுள் அங்கீக ரிக்கத்தான் வேண்டும். ஆனாலும், உலக ரீதியை அநுச ரித்து நாம் உசிதா உசிதம் கண்டு எதையும் செய்வதே விவேகத்திற் கடுத்தது. நாம் இப்போது ஒருவரோடொரு வர் பேசும்போது, ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்து ஏன் பேசவேண்டும். முகம் மாத்திரந்தானா மனிதன். உடம்பு, கைகால்கள் முதலியவை மனிதனுடைய அங்கங்களல்லவா. ஏன் நான் உங்களுடைய முதுகைப் பார்த்துப் பேசக் கூடாது. நீங்கள் ஏன் என்னுடைய காலைப் பார்த்து மறு மொழி சொல்லக் கூடாது. அப்படிப் பேசினாலும் அது நம் செவிகளில் படுமல்லவா? அப்படி இருக்க, ஏன் நாமெல் லோரும் முகத்தைப் பார்த்தே சம்பாஷிக்கிறோம். இதன் காரணத்தை நீங்கள் யாராவது திருப்திகரமாய் விளக்க முடி யுமா? இது போலவே, இந்த அகண்டாகாரமான பிர பஞ்சம் முழுதும் பரமாத்மாவின் வடிவமேயானாலும், பர மாத்மாவின் ஞானமும் அருளொளியும் சில இடங்களில் அதிகமாய்ப் பிரகாசிக்கின்றன வென்று, நம் முன்னோர்கள் கண்டுபிடித்து அந்த இடத்தில் கடவுளை வணங்குவது நல் லதென்று ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். இப்படிப் பல வகுப்பார் செய்ததில், அவரவர்களுக்கு யுக்தமாகத் தோன்றியதெதுவோ அதை வைத்துக்கொண்டிருக்கிறார் கள். நாம் நம்முடைய பள்ளிக்கூடப் பாட புஸ்தகங்களில் குருடர் யானையைத் தொட்டுப்பார்த்த கதையைப் படித்தி ருக்கிறோமல்லவா? யானை ஒன்றேயானாலும், காதைத் தொ ட்டவன், யானை முறம் போலிருக்கிற தென்றான், காலைத் தொட்டவன், யானை செக்குலக்கை போலிருக்கிற தென்

ருன், முகத்தைத் தொட்டவன் வேறுமாதிரியாக நினைத் தான். இப்படி யானை குருடன் ஒவ்வொருவனுக்கும் ஒவ் வொரு விதமாகப் பட்டது போல, இந்த அகண்டாகாரமான பிரபஞ்சமாகிய எல்லையற்ற மதயானைக்குள் மறைந்திருக்கும் பரமாத்மாவின் முகம் எங்கிருக்கிறதென்பதைப்பற்றியே பல மதஸ்தர்களும் ஒருவருக் கொருவர் சச்சரவு செய்து வந்தி ருக்கின்றனர். அந்த வேலையை நாம் நியாய புத்தியோடும், பகைமை, வெறுப்பு முதலிய துர்க்குணங்களின்றியும் செய்து சரியான முடிவிற்கு வந்தால், அப்போது நாம் உலகத்திற்கு உண்மையான பேருதவி செய்த புண்யாத்மா ஆவோம். அந்த ஒரே கருத்தை வைத்துக் கொண்டே நான் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டது. ஆகையால், என்னிடம் ஏதோ விஷயத்தைப்பற்றி விக்ஞாபனம் செய்துகொள்ள வேண்டு மென்ற பெரியவர் தம் மனதில் இருப்பதை துணிந்து வெளி யிடலாம். அது இன்னதென்பதைத் தெரிந்துகொள்ள நானும் ஆவலுடையவனாகவே இருக்கிறேன்.

கிழவர்:— ஸ்வாமிகள் சொல்வதெல்லாம் நியாய மாகவே இருக்கிறதானாலும், ஒரே ஒரு விஷயத்தில் எனக்கு சந்தேகமேற்பட்டது. அதைக் கேட்கலாமென்று நினைத் தேன்.

யோகீசுவரர்:— ஓ, அவசியம் கேட்கலாம்.

கிழவர்:— வேறொன்றுமில்லை. சற்று முன்னால் ஸ்வாமி கள், "வேதாந்திகளாகிய வைஷ்ணவர்கள் வைதிக மதமே உண்மையான சாதனமென்று......கடைப்பிடித்து வருகிறார் கள்" என்று சொன்னதிலிருந்து சில சந்தேகங்கள் உண்டா

கின்றன. சைவர்கள் வேதாந்திகளா இல்லையா, நம்மைப்போன்ற ஸ்மார்த்தர்கள் வேதாந்திகளா இல்லையா, வைஷ்ணவர்களுடைய மதம் ஒன்று மாத்திரந்தான் வைதிக மதமா, நம்முடைய மதம் வைதிக மதமல்லவா என்ற பல சம்சயங்கள் உதிக்கின்றன. இவைகளை தயவுசெய்து விளக்கவேண்டும்.

யோகீசுவரர்:— 'சைவர்' என்ற சொல்லின் அர்த்தமென்ன?

கிழவர்:— சிவனை வழிபடுவோர் சைவர்.

யோகீசுவரர்:— அதாவது சிவனே முடிவான தெய்வம் என்று கருதுகிறவர்கள் சைவர்களோ?

கிழவர்:— ஆம்.

யோகீசுவரர்:— 'வேதாந்தம்' என்ற பதத்திற்கு அர்த்தமென்ன?

கிழவர்:—தாங்கள் தான் சொல்ல வேண்டும்.

யோகீசுவரர்:— வேதாந்தம் என்பது வேதா + அந்தம் என்ற சொற்களால் ஆனது. 'வேதா' என்றால் ப்ரம்மம்; 'அந்தம்' என்றால் முடிவு. அதாவது ப்ரம்மமே முடிவான தெய்வம் என்ற அர்த்தம் ஏற்படுகிறது. ப்ரம்மமே முடிவான தெய்வமென்று ஆதியில் ஏற்படுத்தியவர்களும், அதை அநுஷ்டானத்தில் வைத்திருப்பவர்களும், வைஷ்ணவர்களே. எதனுடைய ஆக்ஞையினால் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் நடைபெறுகின்றனவோ அதுவே

'ப்ரம்மம்' என்று வேதங்கள் சொல்லுகின்றன. அதாவது, சகல விதமான சக்திகளுக்கும், காரியங்களுக்கும் மூலாதாரமாயிருப்பது எதுவோ, அது ப்ரம்ம மென்றும், நாராயணனென்றும் குறிக்கப்படுகிறது. சைவர்கள் சிவனே முடிவான தெய்வம் என்கிறார்கள். அது அழிக்கும் தொழில் ஒன்றை மாத்திரம் செய்வதாகையால், அது மேலே சொன்ன ப்ரம்மத்தின் ஒரு சிறிய அம்சம். அதுவன்றி இந்தப் பிரபஞ்சம் அழியும்போதுதான், அந்த அம்சம் தலையெடுக்கும். இந்தப் பிரபஞ்சம் அழியுமென்ற நிச்சயமும் இல்லை; அழிந்தாலும், அது ஜலத்தில் கலந்திருந்து மறுபடியும் உற்பத்தியாகிவிடு மென்று புராணங்கள் சொல்லுகின்றன. நிரந்தரமாயிருப்பது காத்தல் தொழில் ஒன்றே என்பது, இந்தப் பிரபஞ்சம் எப்போதும் நிலைத்திருப்பதிலிருந்து பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. ப்ரம்மத்தினிடம் அழிக்கும் அம்சம் பெரும்பாகமா யிருக்குமானால், இந்தப் பிரபஞ்சம் எப்போதும் சாம்பலாயிருக்கு மன்றி இப்போதுள்ள நிலைமையில் நிலைத்திராது. ஆகையால் என்றும் சிரஞ்சீவியாயும் பெரும்பாகமாயு மிருப்பது காத்தல் தொழிலே. இவ்விடத்தில் திருவள்ளுவருடைய பாடல் ஒன்று நினைவிற்கு வருகிறது:

> "குணம் நாடி, குற்றமும் நாடி, அவற்றுள்
> மிகை நாடி, மிக்க கொளல்."

என்கிறார் திருவள்ளுவர். அதாவது ஒருவரிடம் அமைந்துள்ள குணதிசயங்களில், எது பெரும்பாகமாக இருக்கிறதோ அதையே அந்த மனிதனுடைய குணமாய் எடுத்துக்கொள்ள வேண்டு மென்கிறார். இது தெய்வத்தின் விஷயத்திலும் ஒரு விதத்தில் பொருந்தும். ஆகவே, வேதங்கள், "தத் விஷ்ணோப் பரமம் பதம்" என்று சொல்லி யிருக்

கின்றன. ஆனல் சைவர்கள் பரம பதத்திற் கதிபதி சிவனே என்கிருர்கள்; தங்களுக்கும் ஆதாரம் வேதாந்தமே என்கிருர்கள். ஆனல் வேதாந்தம் என்ற சொல் ப்ரம்மம்தான் முடிவானது என்ற அர்த்தத்தைக் கொடுக்கிறது. நம்முடைய தேகத்திற்குள் அமைந்துள்ள சீவனே, அல்லது, சீவாத்மாவோ எங்கே யிருக்கிறது, என்ன நிலைமையிலிருக்கிறது, அது எந்த ஆதாரத்தினல் இயங்குகிறது என்பதே நமக்குத் தெரியவில்லை. அப்படி இருக்க, இந்த ப்ரம்மாண்டத்திற்கு ஆதாரபூதமான பரம்பொருள் எப்படி இருக்கிருர், அவர் என்ன செய்து கொண்டிருக்கிருர் என்பதை நாம் எப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும். அதைக் காண்பவர் திரும்பி வந்து நமக்குச் சொல்லுவதுமில்லை; அப்படிச் சொன்னலும் அதை யாரும் நம்பமாட்டார்கள். ஆகவே, பரம்பொருளை நாம் ஒரு விதமாக மனதால் பாவித்துக்கொண்டு பக்தி செலுத்துவோம். எப்படி யென்ருல், அவர் அற்புதமான தேஜஸ் வாய்ந்தவர், சகலமான கல்யாண குணங்களும் நிரம்பப் பெற்றவர், துர்க்குணங்களற்றவர், பரம தயாளு, சகலமான ஐசுவர்யங்களுக்கும் சொந்தக்காரர், சர்வக்ஞர், துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்பவர், அவர் உலக வியவகாரங்களில் சம்பந்தப்படாமல் நிரதிசய ஆநந்தத்தில் இருப்பவர்; சூரியர், சந்திரர் முதலிய நித்ய சூரிகள் அவருக்கு நிரந்தரமாக சேவை செய்து இந்த உலக காரியத்தை நடத்துகின்றனர், என்று நாம் அநுமானத்தினல் ஒரு தெய்வத்தை சிருஷ்டித்து அதனிடம் பக்தி செலுத்துவோம். கடவுளுக்கு ரூபமிருக்கிறதோ இல்லையோ என்பது நமக்கு நிச்சயமாகத் தெரியாதானலும் அவர் ஒரு வடிவத்தோடு ஓரிடத்தில் இருப்தாக நாம் நினைத்தாலன்றி, நாம் மோக்ஷத்திற்குப் போவதென்பதற்கு அர்த்தமில்லாமல் போகுமாதலால், அப்படி

நாம் பாவிக்க வேண்டும். அவர் ரூபமில்லாதவர் என்றால், அவ ருக்கு ஒரு குறித்த இருப்பிடமும் இல்லாமல் போகும். நாம் முடிவில் போய்ச் சேரவேண்டிய இடமும் இல்லாமல் போய் விடும். ஆகையால், எல்லாவற்றிலும் உத்கிருஷ்டமான ஓர் இடத்தில், சகல நற்குணங்களும் வாய்ந்தவராய்க் கடவுள் இருக்கிறார் என்று நாம் நினைத்து நம் மனத்தைத் திருப்பினா லன்றி, அது ஒருமுகப்பட்டு நிலைத்து நிற்காது. ஆகையால் பரம்பொருளுக்கு ஓர் இடமிருப்பதாயும், வடிவ மிருப்பதா யும் கருதி நாம் வழிபடவேண்டும். கடவுளை ஆண்டி என்றும், கோர ரூபமுடையவ ரென்றும், நிர்வாணமாயிருந்து பே யோடு ஆடுபவரென்றும், இன்னம் பலவாறு பயங்கரமாகவும் விகாரமாகவும் பாவிக்க எவ்வித ஆதாரமுமில்லை. அப்படி நினைப்பதால் பிரத்தியேகமான அநுகூலம் எதுவும் ஏற்படுவ தாகவும் தெரியவில்லை. அப்பேர்ப்பட்டவரிடம் நாம் முடிவா கப் போவதை விட, இந்த லீலாவிபூதியிலிருப்பதே மே லென்று தோன்று மாதலால், அது நம் மனதில் கடவுள் பக்தி சரியானபடி ஏற்படாமல் தடைசெய்யக் கூடியதா யிருக்கும். நம் மனதாலும் வாக்காலும் பாவிக்க முடியாதபடி அமைந்துள்ள இந்த அற்புதக் களஞ்சியமான எல்லையற்ற லீலாவிபூதியை வேண்டுமென்றே கடவுள் சிருஷ்டித்து நிரந் தரமாய் வைத்திருக்க, இது அழிந்து பஸ்மமாய்ப் போக வேண்டுமென்றும், நாம் கடவுளோடு ஒன்றாகப் போய்ச் சேர்ந்து கடவுளாகிவிடவேண்டு மென்றும் கருதி அதற் காகக் கடவுளை வணங்குவது, அவருடைய கருத்திற்கு முற் றிலும் மாறானது, மகா பாபகரமானது. இந்த உலகத்தில் சாத்விகமான ஆகாராதிகளை உண்டு, நம்மை நிர்ணயத்தில் நிறுத்தி, பிறருடைய பொருளை அபகரிக்காமல், அக்கிரமக் காரியங்களைச் செய்யாமல் எல்லோரையும் நம்மைப்போலவே

மதித்து வாஞ்சையாக நடந்து, சதாகாலமும் கடவுளுக்கு பக்தி செய்து சுத்த சாத்விக நெறியில் நின்று, உலக காரியங்களில் ஒட்டியும் ஒட்டாமலும் இருந்து, எவ்விதமான பலனையும் எதிர்பாராமல் நமது கடமைகளைக் கடவுளின் ஆக்ஞையென்று செய்துகொண்டே போனால், இம்மையிலும் நாம் சுகமடைவோம்; மறுமைக்கும் அது நல்ல வழி காட்டும். இந்த லீலாவிபூதியிலிருப்பதும் துன்பகரமாகத் தோன்றாது. இது எரிந்து பஸ்மமாய்ப் போகவேண்டுமென்று நினைக்கவேண்டிய அவசியம் ஏற்படாது. அப்படி இதுவரையில் கோடாநுகோடி பக்தர்கள் நினைத்து வேண்டியும் இந்த லீலாவிபூதி அழியாமல் அப்படியே இருந்து வருகிறது. பஸ்மமாவதென்பது, ஒவ்வொரு ஜீவனும் பிறப்பு இறப்பாகிய சக்கரத்தில் கிடந்து சுழல்வதிலிருந்து விடுவித்து மோக்ஷ பதவியைக் கொடுப்பதைக் குறிப்பதாக வைத்துக்கொண்டாலும் கூட, கடவுள் இச்சைப்பட்டால் சத்பாத்திரனான ஒரு ஜீவனை இந்த லீலாவிபூதியிலிருந்து தம்மிடம் அழைத்துக்கொள்ள அவர் அதிகமான பிரயாசை எடுத்துக்கொள்ளவும் வேண்டியதில்லை; இந்த ஜீவனோடு கூடிய பூத உடம்பு சூக்ஷ்ம உடம்பு முதலியவற்றை சாம்பலாய் எரித்து, சாம்பலை இங்கே போட்டுவிட்டு அவனை அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்பதுமில்லை. பஞ்ச பூதங்களும், சூக்ஷ்ம உடம்பும் கடவுளின் ஆக்ஞைப்படி நடப்பனவாதலால், அவை ஒரு குறித்த ஜீவனை விட்டு விலகிப் போகவேண்டுமென்று அவர் நினைப்பாரானால் காரியம் உடனே அதுபோலவே நிறைவேறிப்போம். ஆகையால் ஜீவன் தன்னுடைய நல்ல நடத்தையினாலும், லீலாவிபூதியின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பதனாலும் கடவுளுடைய கிருபைக்குப் பாத்திரனாவதே சுலபமான வழியன்றி,

"உம்முடைய சட்டதிட்டங்களை யெல்லாம் அசட்டை செய்து சாம்பலாக்கிவிட்டு என்னை உம்மோடு சேர்த்துக் கொள்ளும். இங்கே இருக்க எனக்கு இஷ்டமில்லை. நான் எல் லாக் கட்டுப்பாடுகளையும் மீறி எதை வேண்டுமானாலும் தின் பேன். நானும் நீரும் ஒன்று என்பதை நான் தெரிந்து கொண்டேன். அதுவே போதுமானது. உமக்கு நான் பக்தி பண்ணுவது அநாவசியம்" என்று கல்லுளிபோல் பிடிவாதம் பிடித்தால், அவனுக்குக் கடவுளின் அருள் ஏற் படுமென்று நாம் நினைக்க ஆதாரமில்லை. அவன் இம்மையி லும் வீண் வேதனைகளையும் அல்லல்களையும் தனக்குத் தானே உண்டாக்கிக்கொண்டு மறுமையையும் கெடுத்துக் கொண்டவனாவான் என்பது போன்ற கொள்கைகளையே வைஷ்ணவர்கள் அநுசரிக்கிறார்கள். சாத்விகமாயிருந்து சன் மார்க்க நெறிகளைக் கடைப்பிடித்து, இம்மையின் வேட்கை களைக் குறைத்து, பாரமார்த்திக நாட்டத்தையே பெரும் பாலாய்க்கொண்டு வைதிகர்களாயிருந்து இம்மை வாழ்க்கை யை நடத்துவதே புருஷார்த்தம், அதுவே நாம் மோக்ஷ மடையப் போதுமான சாதனம், மோக்ஷமடைய அதை விட நாம் அதிகமான முயற்சி எதையும் செய்ய வேண்டுவ தில்லை, இந்த உலகத்தையும், இதன் தர்மங்களையும் துறந்து, கசமாலங்களைத் தின்றுகொண்டு பாழாண்டியாய் அலையவேண்டுவதில்லை. இந்த லீலாவிபூதியை எரித்து பஸ் மமாக்கி நம்மைத் தன்னோடு ஐக்கியமாக்கிக் கொள்ளும்படி கடவுளிடம் பைத்தியக்காரத்தனமாகக் கேட்டுக்கொண்டே, இந்த உலக சுகசாதனங்களை நாடி முரண்பாடாக நடக்க வேண்டியதில்லை. மனோவாக்கு காயம் ஆகியவற்றைப் பண்படுத்தி, திரிகரண சுத்தியாக நடந்து, இந்த உலக வியவ காரங்களைக் கடவுள் இட்ட கட்டளையாகச் செய்து, உள்ள

நிலைமையில் திருப்தியடைந்து, "உலகத்தோடொட்ட ஒழு கல், பல கற்றும், கல்லார் அறிவிலாதார்" என்ற நீதியைக் கவனித்து, பிரபஞ்சப் போக்கை எதிர்க்காமல் அதற்கு அடங்கி நடந்து, இம்மையில் உடம்பும், மறுமையில் ஆசா பாச கவனமுமாக இருந்து, கேவலமான பூச்சி புழுக்களுக் குக்கூட நம்மால் துன்பம் நேராதபடி ஒழுகி, எவ்வுயிரும் தம்முயிர்போல் மதித்து நடப்பதே வைதிக மதம். அதே வேதத்தில் குறிப்பிடப்பட்ட புருஷார்த்தம். அதுவே வைஷ்ணவ மதம். நாம் இந்தப் பிரபஞ்சத்திலேயே இருந் தாலும், இதை விட்டு மோக்ஷலோகத்தை யடைந்தாலும், எப்போதும் கடவுளுக்குத் தொண்டு செய்வதே நமக்கு முடிவான கதி, அதுவே நமக்குப் பேரின்பம் பயப்பது என்ற மனவுறுதியை நாம் கடைப்பிடிக்க வேண்டும்.

"பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திரலோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே"

என்ற வைஷ்ணவப் பாடலின் கருத்தை கவனியுங்கள். "எனக்கு தேவேந்திர பதவி கிடைத்தால் கூட, அதில் எனக்கு ஆசை ஏற்படாது, உன் நாமத்தை ஸ்மரிப்பதி லுண்டாகும் ஆநந்தத்தைத் தவிர எனக்கு வேறு எதுவும் தேவையில்லை" என்கிறார் இதைப் பாடிய ஆழ்வார். எவ் விதமான பலனையும் நாடாமல், பக்தியின் இன்ப மொன் றையே கருதி கடவுளை பஜிக்க வேண்டும் என்பது இதன் கருத்து. வேதங்களும் கீதையும் நிஷ்காம்யமாக நாம் கட வுளை ஆராதிக்கவேண்டு மென்கின்றன. காமகோடி, கா மாக்ஷி முதலிய அசுர தெய்வங்களையே பிரதானமாக வைத்து வணங்கி, இகலோக சுகங்களை நாடுகிறவர்கள் நிஷ்

காம்யமாகப் பூஜை செய்கிறவர்கள் அல்லர்; அவர்கள் செய்வது வேதங்களின் ஆக்ஞைக்கு விரோதமான காரியமாகையால், அப்படிச் செய்பவர்கள் வேதங்களுக்குப் புறம்பானவர்கள். ஆகவே, அவர்கள் வைதிகர்கள் ஆக மாட்டார்கள். அவர்களுடைய மதம் வைதிக மதமே அல்ல. லோகமாதாவை நாம் தாயாரென்றும், பிராட்டி யென்றும், நாச்சியார் என்றும், இலக்ஷ்மி என்றும் கம்பீரமான பதங்களால் குறிக்க வேண்டுமே யன்றி, நம் காமம் முதலியவற்றைத் தீர்த்து வைப்பவளாகக் கருதுவது இழிவான மனப்பான்மையைக் காட்டுகிறது. தாய்க்குக் குழந்தையின் தேவை இன்னதென்பது நன்ருகத் தெரியும். குழந்தையிடம் அன்பாயிருக்க வேண்டுமென்று தாய்க்கு நினைப்பூட்ட வேண்டியதே இல்லை. லோகமாதா நமக்கு இம்மையிலும் தாய், மறுமையிலும் தாய் என்று கருதுவதே சரியான கொள்கை. இம்மையில் நமது காமங்களைப் பூர்த்தி செய்பவளென்றும், மறுமையில் நம் மனைவி யென்றும் லோகமாதாவை நினைப்பது பாபகரமான நினைவு. "அம்பிகை" என்ற பெயர் அன்பு, ஈகை என்னும் சொற்களால் ஆனது. கடவுளுடைய அன்பையும் ஈகையையும் ஒரு பெண்ணுருவமாக்கி அதையே பிரதான தெய்வமாக வைத்து வணங்குவதும் காம்யத்தையே கருதியதாகிறது. வானசாஸ்திரப்படி சுக்கிரனுகிய பெண் தெய்வம் கால புருஷனுடைய முன்கையாகக் கருதப்படுகிறது. இப்படிக் கையை மாத்திரம் வைத்து வணங்குவோர் சகல போகங்களையும் கொடுக்கும் அசுர குருவை வணங்குகிறவர்கள். அது காம்யமான பூஜை. கடவுளுடைய பாதங்களை சிரமேல் வைத்து வணங்குவோர் அவருடைய பாதாரவிந்தத்தினடியில் நிரந்தரமாய்க் கிடப்பதைக் கோரும்

நிஷ்காம்ய பக்தர்கள். அசுர குருவின் பக்தர் ஒருவர் சில வருஷங்களுக்கு முன் சென்னையிலிருந்து இறந்து போனார். அவர், நான் மேலே குறித்த "பச்சைமா மலைபோல் மேனி" என்ற பாடலுக்கு ஒரு புது மாதிரியான அர்த்தம் சொன்னார். அவர் இட்டலி சாப்பிடுவதில் பெரிய நிபுணர். நாம், ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத், ஸர்வம் ப்ரம்மமயம் ஜகத் என்று கருதுகிறோம். அவர் ஸர்வம் இட்டலிமயம் ஜகத் என்று கருதுகிறவர். இந்தப் பிரபஞ்சமே விஷ்ணுவினுடைய தேகமாதலால், அவரைப் பச்சைமா மலைபோல் மேனி, பவளவாய், கமலச் செங்கண் என்று வர்ணித்தார் ஆழ்வார். நம் இட்டலி நிபுணர் அதற்கு என்ன அர்த்தம் செய்தார் தெரியுமா? பச்சைமா=பச்சரிசி மாவால், மலைபோல் மேனி=மலைபோல் குண்டு குண்டாயிருக்கும்படி இட்டலி செய்து, பவளவாய் கமலச் செங்கண்=நமது உதடுகள் பவளம் போலவும், கண்கள் தாமரைப் புஷ்பம் போலவும் சிவந்து போம்படி செய்யும் காரமான மிளகாய்ப் பொடியோடு எப்போதும் சாப்பிடும் ருசியை எனக்குத் தரவேண்டும், அச்சுதா, இந்திர பதவிகூட அதற்கு நிகராகாது என்று அவர் அர்த்தம் செய்தார். அவருடைய புத்தி எதை நாடுகிறது பாருங்கள். இந்த உலகத்திலுள்ள இன்பம் சிற்றின்ப மென்றும், மேலுலகத்து இன்பம் பேரின்ப மென்றும் சிலர் ஒரு சாக்கைச் சொல்லி, "ஐயோ இது வேண்டாம் அப்பனே" என்று சிவனிடம் முறையிடுகிறார்கள்; சகல போகங்களையும் தரும் காமாக்ஷியையே சதாகாலமும் பிரதானமாய் வணங்குகிறார்கள். அந்தக் காமாக்ஷி அதே சிவனுடைய ஒரு பாகமென்றால், நாம் சிவனோடு ஐக்கியமானாலும், அந்தக் காமாக்ஷியின் சிற்றின்பங்கள் அங்கேயும் பக்கத்திலேயே ஒட்டிக்கொண்டி

உயிரென்றும், பிரம்மாவை அதன் உடல், அல்லது, ஸ்வரூப மென்றும் கருதுவதுண்டு. பிரம்மாவென்பது பரம், நாராயணனென்பது அபரம். நாராயணன் திருப்பாற்கடலில் ஆதிசேஷனாகிய படுக்கையின்மீது ஆநந்தமாய் சயனித்திருப்பது போலவும், அவருடைய நாபியிலிருந்து ஒரு தாமரைக்கொடி வருவதுபோலவும், அதன் நுனியிலுள்ள தாமரைப் புஷ்பத்தில் சதுர்முகப் பிரம்மா வீற்றிருப்பது போலவும் வைஷ்ணவர்கள் கருதி, கடவுளையும் இந்தப் பிரபஞ்சத்தையும், இதிலடங்கிய ஜீவன்களையும் ஒரே வடிவத்தில் காட்டி அதையே தெய்வமாக வைத்துப் பூஜிக்கின்றனர். திருப்பாற்கடல் என்பதை சிலர் வெறும் பாலே நிறைந்த கடல் என்று அர்த்தம் செய்வதுண்டு. அது தவறு. வெள்ளைக்காரர்கள் இந்த பூலோகம் முழுதையும் சுற்றிப் பார்த்துவிட்டவர்களாதலாலும், எங்கும் உப்புத் தண்ணீரும் பனிக்கட்டியுமே இருப்பதைக் கண்டவர்களாதலாலும், நாராயணன் திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருக்கிறாரென்ற விஷயத்தைப்பற்றிப் புரளி செய்து, நம் முன்னோரை முட்டாள்களாக்குவதுண்டு. நம்மவர்களோ அதன் கருத்தை அறிய மாட்டாமல் தாறுமாறாய்ப் பிதற்றுவதுண்டு. நன்றாய்ப் படித்துப் பட்டங்கள் பெற்ற மேதாவிகளும், புராணீகர்களும்கூட இதன் கருத்தை நன்றாய் விளக்கமாட்டாமல் வாயில் வந்ததை உளறி வைப்பது வழக்கம். ஒரு கடல் முழுதும் பாலாகவே இருக்கவேண்டுமானால், அதற்கு எத்தனை பசுமாடுகள் வேண்டும், அத்தனை பசுமாடுகள் அகப்பட்டாலும், பால் கெடாமல் இருக்குமா, மனிதனே எவ்வளவோ ஸொகுஸான ஸயனங்களில் படுக்கையில், எல்லாவற்றையும் இச்சா மாத்திரத்தில் சிருஷ்டிக்கும் பரம்பொருளுக்கு ஒரு நல்ல படுக்கை கிடைக்கவில்

லையா, பாலின்மேல் யாராவது படுப்பதுண்டா, சர்வக் ஞான பரம்பொருள் பாலின்மேல் படுப்பாரா என்பன போன்ற சந்தேகங்கள் நமக்கே உண்டாகின்றனவே ; நம் மைக்காட்டிலும் சிறந்த அறிவாளிகளாயிருந்த நம்முன் னோருடைய மனத்தில் இவ்வித சந்தேகங்கள் உண்டா யிருக்காவோ? அவசியம் உண்டாயிருக்குமென்றே எண்ண வேண்டும். எனவே, பால் என்பதை நாம் பசுமாடு முதலிய வற்றின் மடியிலிருந்து உண்டாகும் பால் என்று கருதுவது கூடாது. ஆண் வகுப்பாரை ஆண்பாலென்றும், பெண் வகுப்பாரைப் பெண்பாலென்றும் நாம் குறிக்கும்போது, பால் என்பது வேறு அர்த்தத்தைக் கொடுக்கவில்லையா? ஞானப்பால் என்று குறிக்குமிடத்தில், பால் என்பது வேறு வஸ்துவைக் குறிக்கிறதென்பது பிரத்தியக்ஷமாகத் தெரி கிறது. வெள்ளையர்கள் பனைமரத்தை **பால் மர (Palmyra)** என்று குறிக்கிறார்கள். இந்த இடத்தில், கள் பாலாகக் கரு தப்படுகிறது. நம்மவர் பாரமார்த்திக ஞானத்தைக் கடவுள் நமக்குப்புகட்டும் பால் என்றுநினைத்தால், வெள்ளைக்காரர்கள் கள்ளைப் பாலாகக் கருதுகிறார்கள். ஆனால், இவ்விரண்டும் பசு முதலியவற்றின் மடிகளிலிருந் துண்டாகும் பாலல்ல வென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. இந்தப்பிரபஞ்சத் தில் அடங்கிய சகலமான செல்வமும், இந்தப் பிரபஞ்சமும் பரம்பொருளின் அருளினால் உற்பத்தியாகி ஜீவித்திருக்கின் றனவல்லவா. அந்த அருள் கடல்போல் நிறைந்து பரவி இருப்பதாகவும், அந்தக் கடலிலிருந்து தாமரைப் புஷ்பம் போல் இந்தப் பிரபஞ்சம் முளைத்திருப்பதாகவும் கருதி அதைத் திருப்பாற்கடல் என்று குறிப்பிடுகிறார்கள். அந்தப் பாலாகிய திருவருள் நம் கண்ணிற்குத் தெரியாதது. குழந்தை தாயின் கர்ப்பப்பையில் இருக்கும்போது, அதன்

தொப்புள் ஒரு குழாயின்மூலம் தாயின் உடம்போடு சேர்க்கப்பட்டிருக்கிறது. குழந்தைக்கு வேண்டிய ஜீவரஸம் தாயின் உடம்பிலிருந்து அந்தக் குழாயின்மூலம் குழந்தையின் உடம்பிற்குப் போகிறதல்லவா. அதுபோல, திருப்பாற்கடலின் நடுவில் பரமாத்மாவாகிய நாராயணன் சயனித்திருப்பதாகவும், அவருடைய தொப்புளிலிருந்து கிளம்பும் தாமரைக் கொடியின் வழியாக திருப்பால் வந்து இந்தப்பிரபஞ்சமாகிய தாமரைப் புஷ்பத்தையும், அதன் உள்ளீடாகிய பிரம்மாவையும் சவரக்ஷிப்பதாகவும்வைஷ்ணவர்கள் மிகஅழகாய் உருவகப்படுத்தி இருக்கிறார்கள். நாராயணன் ஆதிசேஷனாகிய படுக்கையின்மீது சயனித்திருக்கிறார் என்பதற்கும் சிலர் விகாரமாக அர்த்தம் செய்கிறார்கள். பாலின்மீது படுப்பதைவிட பாம்பின்மீது படுப்பது, பதின்மடங்கு அதிக அசங்கியமானதென்பதை நான் சொல்ல வேண்டியதில்லையாதலால், ஆதிசேஷன் என்பதற்கும், நாம் சரியான அர்த்தம் செய்துகொள்ள வேண்டும். நாம் இவ்வுலகில் எதைப் பாம்பென்று கருதுகிறோமோ அதுவல்ல ஆதிசேஷன். சேஷன் என்றால் அடிமை; சேஷி என்றால் எஜமான். ஜீவாத்மாக்கள் எல்லோரும் பரமாத்மாவாகிய கடவுளுக்கு நிரந்தரமான அடிமைகள் என்று கருதுவது வைஷ்ணவர்களின் விசிஷ்டாத்வைதம். அதுவுமன்றி ஒவ்வொரு ஜீவாத்மாவும் மோக்ஷமடைந்த பிறகும் பிரத்யேகமான வடிவத்தோடிருப்பது என்பதும் அவர்களுடைய கொள்கை. அத்வைதிகளான ஸ்மார்த்தர்கள் அப்படிக் கருதுவதில்லை. நம்முடைய ஜீவாத்மாக்களெல்லாம் கடவுளின் ஒரு பாகமாதலால், பொய்த்தோற்றமாகிய இந்த பூதவுடம்பைக் கடவுள் எரித்து பஸ்மமாக்கியவுடன், நம் ஜீவாத்மாபரம்பொருளோடு இரண்டறக் கலந்து விடுகிறது என்று ஸ்மார்த்தர்கள் கருதுகிறார்

கள். ஆகையால், அவர்களுக்கு சேஷன்,சேஷி என்ற வித்யாசம் கிடையாது. அவர்களுடைய கடவுள் எப்போதும் பஸ்மத்தோடு கூடிய ஏகாங்கி. இவ்விடத்தில் சிலர் இன்னொரு கேள்வி கேட்கலாம். இந்தப் பிரபஞ்சமே பொய்த் தோற்றமென்றால், பொய்த்தோற்றம் எரிந்து பஸ்மமாகிறதென்பதற்கு அர்த்தமென்னவென்று சிலர் கேட்கலாம். அதை அவர்கள் அத்வைதிகளிடத்தில்தான் கேட்க வேண்டும். அவர்களுடைய மோக்ஷ லோகத்தில், தனிப்பட்ட ஜீவாத்மாக்களே இல்லை. ஆனால், ஜீவாத்மாக்களுக்கு பதில் பஸ்மம் என்ற வஸ்துவொன்று கடவுளுக்குத் துணையாக நிற்கிறது. அப்போதும் இரண்டு உருப்படிகள் மிஞ்சுகின்றன. ஆனால் அவர்கள் பஸ்மத்தையும், பொய்த்தோற்றமாகிய பிரபஞ்சத்தையும் கணக்கில் சேர்ப்பதில்லை. இங்கிலீஷ்காரர்கள்கூட **Body, Life and Soul** என்று பிரிக்கிறார்கள்; அதாவது, உடல், ஜீவன், ஜீவாத்மா என்று மூன்று பாகங்களாக்குகிறார்கள். அத்வைதிகளுக்கு தனிப்பட்ட ஜீவாத்மா (**Soul**) கிடையாது. உடல், ஜீவன் என்று இரண்டாகவே அவர்கள் கருதுகிறார்கள். உடல் பொய்த் தோற்றம். நம்முடைய உயிராகிய ஜீவன் அகண்டாகாரமாகிய பெரிய உயிராகிய சிவனில் இரண்டறக் கலந்து போகிறதென்பதே அவர்களுடைய மோக்ஷம். வைஷ்ணவர்கள் அப்படி நினைப்பதில்லை. உடம்பு, ஜீவன் (உயிர்), ஜீவாத்மா, பரமாத்மா என்று பிரிக்கிறார்கள். ஒவ்வொரு மனிதருக்குள்ளும் ஒவ்வொரு தனிப்பட்ட ஜீவாத்மா இருந்தாலன்றி அதனதன் கர்மபலன்களையும், பாப புண்ணியங்களையும் அதது அநுபவிக்கின்றதென்பதற்கு அர்த்தமில்லாமல் போகும். பூத உடம்போடு சேர்ந்து இறப்பு பிறப்பாகிய சாகரத்தில் சுழன்று கர்மபலன்களை அநுபவித்துக்

கொண்டிருக்கும் ஜீவாத்மாக்கள் பிரம்மாவிற்குள் இருப்பவை; இதிலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தவை ஆதிசேஷ கோஷ்டியில் கலந்து பரமாத்மாவாகிய நாராயணனுக்கு சதாகாலமும் தொண்டு செய்பவை. எனவே, ஆதிசேஷனென்பது இன்னதென்பது நமக்கு இப்போது சுலபத்தில் விளங்கும். ஆதிகாலம் முதல் இந்த பூலோகத்தில் ஜனித்த ராஜ ரிஷிகளும், யதீந்திரர்களும், இன்னும் பலவகைப்பட்ட புண்ணியாத்மாக்களும் கணக்கிலடங்காமல் பரமபதத்திற்குப் போய்ச் சேர்ந்துகொண்டே இருக்கிறார்கள். அப்படிப் போகும் சத்பாத்திரக் கோஷ்டியார் பாம்பு செல்வதுபோல நீளமாய்ப் போய்ச் சேர்ந்துகொண்டே இருப்பதால், அப்படி ஆதிகாலம் முதல் பரமபதம் போய்ச் சேர்ந்துகொண்டிருப்போர் ஆதிசேஷன் என்று குறிக்கப்படுகிறார்கள். அவர்களுள் ஒருவர்கூட அழியாமல் எல்லோரும் நிரந்தரமாயிருந்து பரம்பொருளுக்கு சதாகாலமும் தொண்டு செய்கிறார்கள் என்பதே வைஷ்ணவர்களின் கொள்கை.

> "**சென்றால் குடையாம், இருந்தால் சிங்காசனமாம்,**
> **நின்றால் மரவடியாம், நீள்கடலுள்—என்றும்**
> **புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்**
> **அணையாம் திருமாற் கரவு**"

என்று ஆழ்வாரொருவர் ஆதிசேஷன் பரம்பொருளுக்குச் செய்யும் தொண்டுகளை யூகத்தினால் ஒருவிதமாக விளக்கியிருக்கிறார். 'அகம் ப்ரம்மாஸ்மி' என்பது வேத வாக்கியம். அதாவது நான் ப்ரம்மா என்பது அதன் பொருள். இதை வைத்துக்கொண்டு அத்வைதிகள் 'நான்' என்பதும் பரமாத்மாவும் ஒன்றென்றும், கடைசியில் இந்த 'நான்' பரமாத்மாவோடு இரண்டறக் கலந்து போகிறதென்றும்

சொல்லி வாதாடுகிறார்கள். பிரம்மாவென்பது ஸத்யம், ஞானம், அநந்தம் என்று விளக்கப்பட்டதும், பரமாத்மா வின் சரீரமெனக் கருதப்படுவதுமான பாகமாதலால், 'நான்' என்பது நிரந்தரமான சரீர பாகமேயன்றி, பரமாத் மாவோடு ஒருநாளும் இரண்டறக் கலந்து போவதல்ல. 'நான்' என்பது இந்த பிரம்மாண்டமாகிய தாமரைப்பூவி லிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தால், ஆதிசேஷ ளுகிய பக்த கோஷ்டிகளோடு சேர்ந்து பரமாத்மாவாகிய நாராயணனுக்கு நிரந்தரமாகத் தொண்டுகள்செய்து, அவன் அநுபவிக்கும் நிரதிசயாநந்தத்தைத் தானும்அநுபவிக்கிறது. ஆதிசேஷன் ஆயிரம் பணமுடிகளையுடையவன் என்பது, ஜீவாத்மாக்கள் தமது தனித்தன்மையை இழக்காமல் ஏராள மாக இருந்துகொண்டு பரமாத்மாவுக்கு நித்ய ஸேவை செய்கிறார்கள் என்பதைக் காட்டும் குறிப்பு. இவற்றி லிருந்து அத்வைதிகளாகிய ஸ்மார்த்தர்களுக்கு சேஷன், சேஷி என்னும் பாகுபாடு இல்லையென்பது ஸ்பஷ்டமாக விளங்குகிறது. ஆதாவது, பரமாத்மா ஆண்டான் (ஆண்ட வன்), ஜீவாத்மாவாகிய நாம் அடிமை என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. பானை உடைந்தவுடன், அதற் குள்ளிருக்கும் காற்று, எங்கும் நிறைந்துள்ள காற்றோடு கலந்து போகிறதுபோல, நம் உடம்பு அழிந்தால், இதி லிருந்த உயிர், அகண்டாகாரமான சிவனுகிய பெரிய உயி ரோடு அடையாளம் தெரியாதபடி கலந்து போகிறது. சிவ னுகிய மொத்த உயிர் எல்லாவற்றையும் எரித்த சாம்பலைப் பூசிக்கொண்டு ஏகாங்கியாய் ஆண்டியாயிருக்கிறது. ஆகை யால், ஆண்டான் அடிமை என்ற வியவகாரத்திற்கே இட மில்லை. எனவே அவர்களுக்கு சேஷன், சேஷி பாவம் கிடையாது. ஸ்மார்த்தர்களில் சிலர் சேஷ ஐயர் என்றும்,

அவர்களுடைய ஸ்திரீகள் சேஷி என்றும் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அதற்கு அர்த்தமென்னவென்று நீங்கள் கேட்கலாம். வைஷ்ணவர்கள் பரமாத்மா சேஷியென்றும், தாம் சேஷரென்றும் கருதுகிறார்கள். ஸ்மார்த்தர்களுக்கு பரமாத்மா சேஷியல்ல. சேஷி என்பது அவர்களுடைய மனைவிகளோடு நின்று போகிறது. கிறிஸ்தவர்கள், இஸ்லாமானவர்கள் ஆகியோர்கூட **Soul is immortal** என்ற கொள்கையை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, ஜீவாத்மா நிரந்தரமாயிருப்பது என்பது அதன் பொருள். ஒவ்வொருவருடைய ஜீவாத்மாவும் எப்போதும் தனி உருப்படியான ஜீவாத்மாவாகவே நிலைத்திருக்குமென்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் நம் ஆதிசங்கரர் சிஷ்யர்களான ஸ்மார்த்தர்கள் மாத்திரம் அதை மறுத்து, ஜீவாத்மாவின் தனிவடிவம் சிரஞ்சீவியானதல்லவென்றும், அது முடிவில் பரம்பொருளோடு ஒன்றாகி விடுகிறதென்றும் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள், 'நான்' என்பதை உயிரோடு நிறுத்திக் கொள்ளுகிறார்கள். சின்ன உயிர் பெரிய உயிரோடு சேர்ந்து விடுகிறது என்பது அவர்களுடைய எண்ணம். உயிர் உடம்பைப் பொருத்ததென்பதையும், அவ்விரண்டிற்கும் வேறான ஆன்மா ஒன்று நம்முடம்பிற்குள் நிரந்தரமாயிருக்கிறதென்பதையும், அவ்வாறு இப்பிரபஞ்சத்தில் எண்ணிக்கையற்ற வெவ்வேறு ஆன்மாக்கள் இருக்கின்றனவென்பதையும், அவைகளுக்கெல்லாம் நாயகனாய்ப் பரமாத்மா இருக்கிறதென்பதையும் அத்வைதிகள் ஒப்புக்கொள்வதில்லை. அவர்கள் உயிர் என்றும், ஆவி என்றும், சீவன் என்றும் குறிப்பார்களேயன்றி, ஆன்மா என்றோ ஜீவாத்மாஎன்றோ, குறிப்பதில்லை. சாதாரணமாய் அத்வைதிகள், உடல், பொருள்,

ஆவி என்பதோடு நிறுத்திக்கொள்ளுகின்றனரேயன்றி, ஆன்மாவைக் கணக்கில் சேர்ப்பதில்லை.

> " குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே
> உடம்பொடுயிரிடை நட்பு "

என்கிறார் திருவள்ளுவ நாயனார்.

> " எவ்வுயிரும் என்னுயிர்போல் இரங்கவும்நின்
> தெய்வ அருள்கருணை செய்யாய் பராபரமே "

என்கிறார் தாயுமானவர்.

> " பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
> கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
> காவிதான் போயினபின் பாரே அநுபவிப்பார்
> பாவிகாள் அந்தப் பணம் "

என்கிறார் இன்னொரு புலவர்.

இம்மாதிரி உயிர் என்றும், ஆவியென்றும் குறிக்கப்படுவது பிராண வாயுவேயாகையால், அது இந்த உடம்பை விட்டால், இப்பிரபஞ்சத்தில் அகண்டாகாரமாக நிறைந்திருக்கும் வாயுவில் இரண்டறக் கலந்து போகிறது என்று கருதுகிறார்கள் என நாம் எண்ண இடந்தருகிறது. ஆத்மன் என்ற சொல்லின் அர்த்தத்தை நாம் கவனித்தால் அதன் வேறுபாடு நன்றாக விளங்கிவிடும். ஆத்து என்றால் வீட்டு என்றர்த்தம்; மன் என்றால் தலைவன் என்றர்த்தம். அதாவது, நம் உடம்பாகிய வீட்டின் எஜமானே ஆத்மன் அல்லது ஆத்மா என்ற கருத்து த்வனிக்கிறது. ஆவி, அல்லது உயிர் என்பதும், உடம்பிற்குடையவன் என்பதும் அடியோடுவேறுபடுகின்றனவல்லவா. வைஷ்ணவர்களுக்கும்மற்றவர்களுக்கும் இந்த முக்கியமான விஷயத்தில் வித்தியாசம் இருப்பதனாலேயே அத்வைதம் முதலிய அடிப்படையான பேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இன்னம், நாம் ' சிவா '

என்ற சொல்லின் சரியான அர்த்தத்தைக் கண்டுபிடித்தால், நம் சிக்கல்களில் பெரும்பாகமும் அற்றுப் போய்விடும். விஷயமும் தெளிவுபட்டுப் போகும். 'சிவா' என்றால் மங்களகரமானது என்று ஒரு மடாதிபதி சமீப காலத்தில் வியாக்கியானம் செய்தார். சிவன் சங்காரக் கடவுளென்றும், அவருக்கு மகா பஸ்மம் என்று பெயர் என்றும் அதே மடாதிபதி தெரிவித்தார். சிவன் கோவில் ஸ்மசானத்திற்கு சமானமென்று ஸ்மார்த்தர்களே சொல்லுகின்றனர்; சிவன் கோவில் பிரஸாதங்களை அநேக ஸ்மார்த்தர்கள் கையால்கூடத் தொடுவதில்லை. மனிதர் இறந்து போனால் அதை அமங்கலமென்றே எல்லோரும் கருதி அடித்துக் கொண்டு அழுது புரளுகின்றனர். பூண் நூலை வலது பக்கம் போட்டுக்கொள்ளுகின்றனர்; தலை மயிரை ஈரத்தோடு தொங்கவிட்டபடியே அழுதுகொண்டு போகின்றனர்; நெற்றியில் சுபகரமான குறிகளை வைக்கிறதில்லை. புருஷனை இழந்த ஸ்திரீ அவளுடைய ஆயுள்காலம் முடிய அமங்கலி என்று குறிக்கப்படுகிறாள். அவள் எதிரில் வருவதே அபசகுனமாய்க் கருதப்படுகிறது. அப்படி இருக்க, இத்தனை அலங்கோலங்களையும் செய்துவைக்கும் சங்காரக் கடவுளின் பெயராகிய 'சிவா' என்ற சொல்லுக்கு மங்களகரமானது என்ற அர்த்தம் எங்கிருந்து வந்ததோ தெரியவில்லை. இந்தச் சொல்லின் உண்மையான வடிவம் மறைந்து போய்விட்டதாகையால் இதன் கருத்து எவருக்கும் சரியாகப் படாமல் மறைந்து போயிருக்கிறது. இதன் சரியான வடிவம் என்னவென்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால், தெலுங்கு பாஷையின் அரிச்சுவடியைப் பார்க்கவேண்டும். அது 'ஓம் நா மஹா சீ வா ய ஹா,' என்று ஆரம்பமாகிறது. ஓம் என்றால் சகலமும், நா என்றால் நாராயணன்

மஅஹா என்றால் நம் மனத்தில், சிவாயஹா என்றால் சிவன் நம்மனத்தில் என்ற பொருள் ஏற்படுகிறது. அதாவது, 'சகலத்திற்கும் அந்தராத்மாவான நாராயணன் நம்மனத்தில் இருப்பதாக, சிவன் நம்மனத்தில் இருப்பதாக' என்பது இதன் கருத்து. இவ்விடத்தில் நாம் எதை முக்கியமாய்க் கவனிக்க வேண்டியதென்றால், 'சிவா' என்பது சீவாய்' என்பதன் குறுக்கம் என்பதையே நாம் தெரிந்து கொள்ள வேண்டும். 'சீவாய்' என்பதைத் **திருவாய்** என்று மாற்றலாம். 'சீ' என்ற சொல்லிற்குப் பல அர்த்தங்கள் இருக்கின்றன. அது லக்ஷ்மி, சரஸ்வதி, பார்வதி முதலியவற்றைக் குறிக்கும். சாதாரணமாய்ப் பெண் என்ற அர்த்தத்தையே கொடுக்கும். சீ என்பது சம்பத்து அல்லது பிரகாசம் என்பதையும் குறிக்கும். ஸ்ரீ வில்லிபுத்தூர் என்பதை சீ வில்லிபுத்தூர் என்று குறிக்கின்றனர். ஸ்ரீநிவாச தாதாசாரி என்பதை சீமாதாதம் என்கிறார்கள். ஸ்ரீமான் என்பது சீமான் ஆகிறது. அண்ணச்சீ என்றும் அண்ணத்தே என்றும் சிலர் தம் அண்ணனைக் குறிக்கிறார்கள். 'சீ' என்பதும், 'தே' என்பதும், இவ்விடத்தில் தெய்வம் என்ற அர்த்தத்தைக் கொடுக்கிறது. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதுபோல, அண்ணனையும் தம்பி தெய்வமாய்க் கருதுவதை இந்தப் பிரயோகம் காட்டுகிறது. வைஷ்ணவ மடாதிபதிகள் சீயர் என்றும், ஜீயர் என்றும் குறிக்கப்படுகின்றனர். அவை 'சீ' 'ஜீ' என்பனவற்றின் மரியாதைப் பன்மை. சீ என்பதே ஷீ என்றும் ஜீ என்றும் மாறிப்போயிருக்கின்றது. வடதேசத்தார் ஸ்ரீராம் என்பதை ஷிரீராம் என்று சொல்லுகிறார்கள். கிருஷ்ணஜீ, காஜீ, ஹாஜீ, பாபாஜீ முதலியவற்றிலுள்ள ஜீ, நம் சீ என்பதன் திரிபே. இங்கிலீஷில் ஜீ+அரஜ என்பது ஜியார்ஜ்.

என்று மாறியிருக்கிறது. சீ அரசு என்பது அதன் கருத்து. அவர்கள் பெண்ணைக் குறிக்க உபயோகிக்கும் 'ஷீ' என்ற சொல்லும் 'சீ என்பதன் திரிபே. இருஷீ என்பது 'இருசீ' என்ற சொல்லின் திரிபு. இரு=பெரிய, சீ=திருவரு ளாளர் என்பது கருத்து. வெள்ளைக்காரிகள் சுசீ (Su Si) என்று பெயர் வைத்துக்கொள்ளுகின்றனர். அது சுபலக்ஷ்மீ அல்லது சுக்கிரனாகிய சரஸ்வதி என்ற அர்த்தத்தைத் தருகிறது. சீதா என்பதற்கு லக்ஷ்மியாகிய தாய் என்றர்த் தம். எனவே 'சீ' என்பதற்கு லக்ஷ்மீகரம் பொருந் திய, சகல சம்பத்தும் உடைய, தெய்வாம்சம் வாய்ந்த என்ற கருத்துகளைக் கொள்ளவேண்டும். வாய் என்ற சொல் ஆதிகாலத்தில் 'வா' என்று சுருக்கமாய்ப் பிரயோகப் பட்டிருக்கிறது. நாக்கு என்பதற்கு, **சிகுவா** என்று சொல்வ துண்டு. சிகு அல்லது செகு என்றால், வெட்டி நாசமாக்கு வது என்பது பொருள். ஆகாரத்தை உள்ளே போட்டால், அதை அதக்கி உள்ளே தள்ளுவது நாக்காதலால் அதை சிகுவாய் என்று குறித்தார்கள் போலும். அதுவே சம்ஸ் கிருதத்தில் ஜிஹ்வா என்று மாறியிருக்கிறது. கிறிஸ்தவர் களின் தெய்வம் ஜிஹோவா என்று குறிக்கப்படுகிறது; அதன் கருத்து நாக்கு என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சீவாய் என்பது காலக்கிரமத்தில் 'சிவா' என்று சுருங்கி யிருக்கிறது. 'சீவாய்' என்றால் தெய்வம் நம்மோடு பேசும் வாய், அல்லது, தெய்வத்தின் சம்பத்து, அல்லது, அருள் நமக்கு எந்த வழியாக வருகிறதோ அந்த இடம் என்று நாம் பொருள் கொள்வது பொருத்தமாகும். இவ்விதமான அர்த்தம் ஏற்படும்போது, சிவன் அழிக்கும் தெய்வம் என் றும், அது நம் சீவனுக்கு ஆதாரமானது என்றும் அதற்கு எப்படி அர்த்தங்கள் ஏற்பட்டன என்பதை நாம் ஆராய

வேண்டும். அதற்கு வானசாஸ்திரத்தின் உதவியையே நாம் நாடவேண்டும். அந்தசாஸ்திரம் இன்னின்ன தொழிலை இன்னின்ன கிரகங்கள் செய்கின்றனவென்பதை நன்ருகத் தெரிவிக்கிறது. நான் ஏற்கனவே ஒரு விஷயத்தைத் தெரிவித்தேன். அதாவது, நம் வயல் ஒன்றேயானாலும், ஒவ்வொருவிதமான விதையையும் ஒவ்வொருவித குண முடைய வஸ்துவையும் உற்பத்திசெய்து நமக்குஉதவுகிறது. இதேபோல, ஆகாயத்திலுள்ள ஒவ்வொரு கிரகமும் ஒவ் வோர் இலாகாவோடு சம்பந்தப்பட்டிருக்கிறது; ஒவ்வொன் றின் குணதிசயங்களும் பலவாருய்ப் பிரிக்கப்பட்டிருக்கின் றன. கடிகாரம் எப்படிப் பன்னிரண்டு பாகங்களாய்ப் பிரிக் கப்பட்டிருக்கின்றனவோ, அப்படியே, நமக்கு நாலாபக்கங் களிலும் அநந்தமாகப் பரவிக்கிடக்கும் ஆகாய வெளியும் பன்னிரண்டு பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை ஒவ்வொன்றும் ராசி என்று குறிக்கப்படுகிறது. ஆகாயம் ஒரே வெறு வெளியாயிருப்பதனால், ராசிகளின் பகுதியையும் அடையாளத்தையும் கண்டுகொள்வதற்கு, 27 நக்ஷத்திரங்களை மயில் கற்கள்போல் அடையாளங்களாய் வைத்துக்கொண்டிருக்கின்றனர். இந்தப் பிரம்மாண்டமா கிய பிரபஞ்சத்தையே இப்படி ஒரு கடிகாரம்போல் வகுத்து, சூரியன், சந்திரன் முதலிய கிரகங்களை அதன் முள்களாக வைத்துக்கொண்டு நம்முன்னேர் அற்புதமான எத்தனையோ கணக்குகளைக் கண்டு பிடித்திருக்கின்றனர். எல்லாம் பிரம்மாவென்று நாம் முன்னரே குறித்தோமல்லவா. அந்த பிரம்மாவே, விராட் புருஷன் என்றும், கால புருஷன் என் றும், கிருஷ்ணன் என்றும் குறிக்கப்படுகிறது. அதன் தேகம் ஆகாய வெளியாய் எங்கும் பரவியிருக்கிறது. சூரி யன், சந்திரன், நக்ஷத்திரங்கள் தோன்றினல், நமக்கு

வெளிச்சமுண்டாகிறது. அவைகள் யாவும் மறைந்திருந்தால், எங்கும் ஒரே இருள்மயமாய் நிறைந்து போகிறது. ஆகவே, இந்தப் பிரபஞ்சம் முழுமைக்கும் இயற்கையான நிறம் எது? அது கருப்பு என்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. இந்தப் பிரபஞ்சம் முழுதும், விராட் புருஷன், கிருஷ்ணன், அல்லது, கால புருஷன் என்று சங்கேதமாய்க் குறிக்கப்படும் தெய்வத்தின் சரீரம் என்றும், அது கருப்பு நிறமானதென்றும் வைஷ்ணவர்கள் குறிக்கிறார்கள். தேய்பிறைக்காலமாகிய பதினைந்து தினங்களிலும் சந்திரனுடைய ஒரு பாகமோ, அல்லது, முழுப்பாகமோ இருளால் மறைந்து போகிறது. அதைக் கிருஷ்ண பக்ஷமென்று நாம் குறிக்கிறோம். ஏனென்றால், அந்தக் கருமை நிறந்தான் இந்தப் பிரபஞ்சம் முழுதிற்கும் இயற்கையாக ஏற்பட்ட நிறம். இப்படிக் கருப்பாயிருக்கும் கால புருஷனாகிய கிருஷ்ணனுடைய உடம்பு நான் மேலே சொன்னபடி 12 பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாகமும் லக்னம் அல்லது ராசி என்று குறிக்கப்படுகிறது. ஒவ்வொரு பகுதியாகிய ராசியிலும் சூரியன் ஒவ்வொரு மாதகாலம் சஞ்சரிக்கிறானாகையால், பன்னிரண்டு மாதங்கள் ஏற்படுகின்றன. ஆகாயப் பரப்பின் பன்னிரண்டு பாகங்களான ராசிகளையும் அடியில் வருகிற மாதிரி கால புருஷனுடைய உடம்பின் பாகங்களாய்ப் பிரித்திருக்கிறார்கள் :

| ராசி | மாதம் | கால புருஷனுடைய அங்கம் |
|---|---|---|
| மேஷம் | சித்திரை | தலை |
| விருஷபம் | வைகாசி | இடது தோள் |
| மிதுனம் | ஆனி | வலது தோள் |
| கடகம் | ஆடி | இடது மார்பு |
| சிம்மம் | ஆவணி | வலது முழங்கை |
| கன்னி | புரட்டாசி | இடதுபக்க விலா |
| துலாம் | ஐப்பசி | வலது கை |
| விருச்சிகம் | கார்த்திகை | ஆண் பெண் குறிகள் |
| தனுசு | மார்கழி | துடைகள் |
| மகரம் | தை | முழங்கால்கள் |
| கும்பம் | மாசி | கணைக்கால்கள் |
| மீனம் | பங்குனி | அடிப்பாதம் |

இப்படி ஆகாய வெளியின் பன்னிரண்டு பாகங்களும் கால புருஷனுடைய உடம்பின் பல பாகங்களாய்க் கருதப் படுகின்றன. இதுபோலவே கிரகங்களும் கால புருஷ னுடைய அங்கங்களாகக் கருதப்படுகின்றன. அதுவன்றி, கிரகங்களின் நிறம், அவை செய்யும் தொழில், அவற்றின் திக்கு, அவற்றின் அதிகாரம் முதலிய தகவல்கள் நம் சோதிட சாஸ்திரங்களில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. அவைகளில் சிலவற்றை மாத்திரம் இங்கு நான் குறிப்பிடுகிறேன் :

| விவரங்கள் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | புதன் | குரு | சுக்கிரன் அல்லது அசுர குரு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| சொந்தமான தினம் | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
| சொந்த திக்கு | தென்கிழக்கு | மேற்கு | தெற்கு | வடக்கு | கிழக்கு | ஆக்னேயம் | வட மேற்கு |
| அதிதேவதை | சிவன் அல்லது அக்னி | வருணன் | எமன் அல்லது சுப்ரமணியன் | மாயன் | இந்திரன் | இந்திராணி அல்லது இந்திரசரஸ்வதி | படன் |
| பால் அல்லது தன்மை | ஆண் | பெண் | ஆண் | அலி | ஆண் | பெண் | அலி |
| நிறம் | பிங்கல நீலம் | வெண்மை | சிவப்பு | பச்சை | மஞ்சள் | வெண்மை | கருப்பு |
| பஞ்ச பூதங்களின் அதிகாரம் | தீ | ஜலம் | தீ | பூமி | ஆகாயம் | ஜலம் | வாயு |
| கால புருஷனுடைய அங்கம் | மார்பு | தோள் | தலை | கழுத்து | வயிறு | மூகம் | துடை |
| தாதுக்கள் | எலும்பு | ரத்தம் | மச்சை | தோல் | மூளை | இந்திரியம் | நரம்பு |
| ஜாதி | க்ஷத்திரியன் | வைசியன் | க்ஷத்திரியன் | வைசியன் | பிராம்மணர் | பிராம்மணர் | நீசன் |
| சுபாவம் | குரூரம் | ஸௌமியம் | குரூரம் | ஸௌமிய | ஸௌமிய | ஸௌமியம் | குரூரம் |
| ஆகுதி | சிம்மம் | கடகம் | மேஷம் | மிதுனம் | தனுசு, மீன | ரிஷபம், துலாம் | மகரம், கும் |
| அடையாளம் | நாற்சதுரம் | வட்டம் | உடுக்கு | அறுகோணம் | நீண்டவட்டம் | எண்கோணம் | முரம் அல்லது பாதிச் சதுரம் |

இவ்விவரங்கள் எல்லாப் புஸ்தகங்களிலும் ஒரேமாதிரியாகக் காணப்படவில்லை. இந்த அட்டவணையில் சிவனுடைய தொழில் சூரியன் மூலமாய் நடக்கிறதென்பது தெரிகிறது. சிவனை முக்கண்ணன் என்று குறிப்பதுண்டு. சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்றும் சிவனுடைய கண்களென்று கந்தபுராண உரை சொல்லுகிறது. பகவான் சூரியனிலும், அக்னியிலும், காயத்திரியிலும் இருப்பதாக நினைத்து ஆராதிக்கும்படி ஆதிசங்கரர் சொல்லியிருக்கிறார். ஜாதகாலங்காரம் என்ற நூல்,

> "ஆன வெள்ளி குரு அயனுகுமே,
> வான இந்தும் புதனும் மாயனுகும்,
> பானும் சேயும் சிவனெனப் பண்ணுவர்
> மான வன்னிய தேவதை மந்தனே"

என்று சொல்லுகிறது; அதாவது, சூரியனும், சேயனுகிய செவ்வாயும் சிவன் என்பது இதன் கருத்து; இரண்டும் நெருப்பிற்கு அதிபதிகள்; இரண்டும் குரூர கிரகங்கள். செவ்வாய் தென்திசைக் கடவுளாதலால், அதுவே எமன் எனப்படுவது. சுப்ரமணியமென்பதும் அதுவே. அதன் அடையாளம் உடுக்கு. சிதம்பரம் நடராஜருடைய கைகள் ஒன்றில் உடுக்கு வடிவம் காட்டப்பட்டிருக்கிறது. அது செவ்வாய் தெய்வம் என்பதைக் காட்டுவதற்காக அந்த உடுக்கடையாளம் வைக்கப்பட்டிருக்கிறது. ஒரு மடாதிபதி சமீபகாலத்தில் பிரசங்கம் செய்த சமயத்தில், விநோதமான ஒரு விஷயத்தைத் தெரிவித்தார். நடராஜர் உடுக்கை ஆட்டினராம், நம்முடைய வேதசாஸ்திர புராணங்களெல்லாம் அதிலிருந்து கொட்டியதாம் என்று அந்த மடாதிபதி மிக பயபக்தி விநயத்தோடு தெரிவித்தார். இவருக்கு ஜோதிட சாஸ்திரம் எவ்வளவு தூரம் தெரிந்திருக்கிறது என்பதை

உயிரென்றும், பிரம்மாவை அதன் உடல், அல்லது, ஸ்வரூப மென்றும் கருதுவதுண்டு. பிரம்மாவென்பது பரம், நாரா யணனென்பது அபரம். நாராயணன் திருப்பாற்கடலில் ஆதிசேஷனாகிய படுக்கையின்மீது ஆநந்தமாய் சயனித் திருப்பது போலவும், அவருடைய நாபியிலிருந்து ஒரு தாமரைக்கொடி வருவதுபோலவும், அதன் நுனியிலுள்ள தாமரைப் புஷ்பத்தில் சதுர்முகப் பிரம்மா வீற்றிருப்பது போலவும் வைஷ்ணவர்கள் கருதி, கடவுளையும் இந்தப் பிர பஞ்சத்தையும், இதிலடங்கிய ஜீவன்களையும் ஒரே வடிவத் தில் காட்டி அதையே தெய்வமாக வைத்துப் பூஜிக்கின் றனர். திருப்பாற்கடல் என்பதை சிலர் வெறும் பாலே நிறைந்த கடல் என்று அர்த்தம் செய்வதுண்டு. அது தவறு. வெள்ளைக்காரர்கள் இந்த பூலோகம் முழுதையும் சுற்றிப் பார்த்துவிட்டவர்களாதலாலும், எங்கும் உப்புத் தண்ணீரும் பனிக்கட்டியுமே இருப்பதைக் கண்டவர்களாத லாலும், நாராயணன் திருப்பாற் கடலில் பள்ளி கொண் டிருக்கிறாரென்ற விஷயத்தைப்பற்றிப் புரளி செய்து, நம் முன்னோரை முட்டாள்க ளாக்குவதுண்டு. நம்மவர்களே அதன் கருத்தை அறிய மாட்டாமல் தாறுமாறாய்ப் பிதற் றுவதுண்டு. நன்றாய்ப் படித்துப் பட்டங்கள் பெற்ற மேதாவிகளும், புராணீகர்களும்கூட இதன் கருத்தை நன் றாய் விளக்கமாட்டாமல் வாயில் வந்ததை உளறி வைப்பது வழக்கம். ஒரு கடல் முழுதும் பாலாகவே இருக்கவேண்டு மானால், அதற்கு எத்தனை பசுமாடுகள் வேண்டும், அத்தனை பசுமாடுகள் அகப்பட்டாலும், பால் கெடாமல் இருக்குமா, மனிதனே எவ்வளவோ ஸொகுஸான ஸயனங்களில் படுக் கையில், எல்லாவற்றையும் இச்சா மாத்திரத்தில் சிருஷ்டிக் கும் பரம்பொருளுக்கு ஒரு நல்ல படுக்கை கிடைக்கவில்

லையா, பாலின்மேல் யாராவது படுப்பதுண்டா, சர்வக் ஞான பரம்பொருள் பாலின்மேல் படுப்பாரா என்பன போன்ற சந்தேகங்கள் நமக்கே உண்டாகின்றனவே; நம் மைக்காட்டிலும் சிறந்த அறிவாளிகளாயிருந்த நம்முன் னோருடைய மனத்தில் இவ்வித சந்தேகங்கள் உண்டா யிருக்காவோ? அவசியம் உண்டாயிருக்குமென்றே எண்ண வேண்டும். எனவே, பால் என்பதை நாம் பசுமாடு முதலிய வற்றின் மடியிலிருந்து உண்டாகும் பால் என்று கருதுவது கூடாது. ஆண் வகுப்பாரை ஆண்பாலென்றும், பெண் வகுப்பாரைப் பெண்பாலென்றும் நாம் குறிக்கும்போது, பால் என்பது வேறு அர்த்தத்தைக் கொடுக்கவில்லையா? ஞானப்பால் என்று குறிக்குமிடத்தில், பால் என்பது வேறு வஸ்துவைக் குறிக்கிறதென்பது பிரத்தியக்ஷமாகத் தெரி கிறது. வெள்ளையர்கள் பனைமரத்தை **பால் மர (Palmyra)** என்று குறிக்கிறார்கள். இந்த இடத்தில், கள் பாலாகக் கரு தப்படுகிறது. நம்மவர் பாரமார்த்திக ஞானத்தைக் கடவுள் நமக்குப்புகட்டும் பால் என்றுநினைத்தால், வெள்ளைக்காரர்கள் கள்ளைப் பாலாகக் கருதுகிறார்கள். ஆனால், இவ்விரண்டும் பசு முதலியவற்றின் மடிகளிலிருந் துண்டாகும் பாலல்ல வென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. இந்தப்பிரபஞ்சத் தில் அடங்கிய சகலமான செல்வமும், இந்தப் பிரபஞ்சமும் பரம்பொருளின் அருளினால் உற்பத்தியாகி ஜீவித்திருக்கின் றனவல்லவா. அந்த அருள் கடல்போல் நிறைந்து பரவி இருப்பதாகவும், அந்தக் கடலிலிருந்து தாமரைப் புஷ்பம் போல் இந்தப் பிரபஞ்சம் முளைத்திருப்பதாகவும் கருதி அதைத் திருப்பாற்கடல் என்று குறிப்பிடுகிறார்கள். அந்தப் பாலாகிய திருவருள் நம் கண்ணிற்குத் தெரியாதது. குழந்தை தாயின் கர்ப்பப்பையில் இருக்கும்போது, அதன்

தொப்புள் ஒரு குழாயின்மூலம் தாயின் உடம்போடு சேர்க்கப்பட்டிருக்கிறது. குழந்தைக்கு வேண்டிய ஜீவரஸம் தாயின் உடம்பிலிருந்து அந்தக் குழாயின்மூலம் குழந்தையின் உடம்பிற்குப் போகிறதல்லவா. அதுபோல, திருப்பாற்கடலின் நடுவில் பரமாத்மாவாகிய நாராயணன் சயனித்திருப்பதாகவும், அவருடைய தொப்புளிலிருந்து கிளம்பும் தாமரைக் கொடியின் வழியாக திருப்பால் வந்து இந்தப்பிரபஞ்சமாகிய தாமரைப் புஷ்பத்தையும், அதன் உள்ளீடாகிய பிரம்மாவையும் சவரக்ஷிப்பதாகவும்வைஷ்ணவர்கள் மிகஅழகாய் உருவகப்படுத்தி இருக்கிறார்கள். நாராயணன் ஆதிசேஷனாகிய படுக்கையின்மீது சயனித்திருக்கிறார் என்பதற்கும் சிலர் விகாரமாக அர்த்தம் செய்கிறார்கள். பாலின்மீது படுப்பதைவிட பாம்பின்மீது படுப்பது, பதின்மடங்கு அதிக அசங்கியமானதென்பதை நான் சொல்ல வேண்டியதில்லையாதலால், ஆதிசேஷன் என்பதற்கும், நாம் சரியான அர்த்தம் செய்துகொள்ள வேண்டும். நாம் இவ்வுலகில் எதைப் பாம்பென்று கருதுகிறோமோ அதுவல்ல ஆதிசேஷன். சேஷன் என்றால் அடிமை; சேஷி என்றால் எஜமான். ஜீவாத்மாக்கள் எல்லோரும் பரமாத்மாவாகிய கடவுளுக்கு நிரந்தரமான அடிமைகள் என்று கருதுவது வைஷ்ணவர்களின் விசிஷ்டாத்வைதம். அதுவுமன்றி ஒவ்வொரு ஜீவாத்மாவும் மோக்ஷமடைந்த பிறகும் பிரத்யேகமான வடிவத்தோடிருப்பது என்பதும் அவர்களுடைய கொள்கை. அத்வைதிகளான ஸ்மார்த்தர்கள் அப்படிக் கருதுவதில்லை. நம்முடைய ஜீவாத்மாக்களெல்லாம் கடவுளின் ஒரு பாகமாதலால், பொய்த்தோற்றமாகிய இந்த பூதவுடம்பைக் கடவுள் எரித்து பஸ்மமாக்கியவுடன், நம் ஜீவாத்மாபரம்பொருளோடு இரண்டறக் கலந்து விடுகிறது என்று ஸ்மார்த்தர்கள் கருதுகிறார்

கள். ஆகையால், அவர்களுக்கு சேஷன்,சேஷி என்ற வித்யாசம் கிடையாது. அவர்களுடைய கடவுள் எப்போதும் பஸ்மத்தோடு கூடிய ஏகாங்கி. இவ்விடத்தில் சிலர் இன்னொரு கேள்வி கேட்கலாம். இந்தப் பிரபஞ்சமே பொய்த்தோற்றமென்றால், பொய்த்தோற்றம் எரிந்து பஸ்மமாகிறதென்பதற்கு அர்த்தமென்னவென்று சிலர் கேட்கலாம். அதை அவர்கள் அத்வைதிகளிடத்தில்தான் கேட்கவேண்டும். அவர்களுடைய மோக்ஷ லோகத்தில், தனிப்பட்ட ஜீவாத்மாக்களே இல்லை. ஆனல், ஜீவாத்மாக்களுக்கு பதில் பஸ்மம் என்ற வஸ்துவொன்று கடவுளுக்குத் துணையாக நிற்கிறது. அப்போதும் இரண்டு உருப்படிகள் மிஞ்சுகின்றன. ஆனல் அவர்கள் பஸ்மத்தையும், பொய்த்தோற்றமாகிய பிரபஞ்சத்தையும் கணக்கில் சேர்ப்பதில்லை. இங்கிலீஷ்காரர்கள்கூட **Body, Life and Soul** என்று பிரிக்கிறார்கள்; அதாவது, உடல், ஜீவன், ஜீவாத்மா என்று மூன்று பாகங்களாக்குகிறார்கள். அத்வைதிகளுக்கு தனிப்பட்ட ஜீவாத்மா (**Soul**) கிடையாது. உடல், ஜீவன் என்று இரண்டாகவே அவர்கள் கருதுகிறார்கள். உடல் பொய்த்தோற்றம். நம்முடைய உயிராகிய ஜீவன் அகண்டாகாரமாகிய பெரிய உயிராகிய சிவனில் இரண்டறக் கலந்து போகிறதென்பதே அவர்களுடைய மோக்ஷம். வைஷ்ணவர்கள் அப்படி நினைப்பதில்லை. உடம்பு, ஜீவன் (உயிர்), ஜீவாத்மா, பரமாத்மா என்று பிரிக்கிறார்கள். ஒவ்வொரு மனிதருக்குள்ளும் ஒவ்வொரு தனிப்பட்ட ஜீவாத்மா இருந்தாலன்றி அதனதன் கர்மபலன்களையும், பாப புண்ணியங்களையும் அதது அநுபவிக்கின்றதென்பதற்கு அர்த்தமில்லாமல் போகும். பூத உடம்போடு சேர்ந்து இறப்பு பிறப்பாகிய சாகரத்தில் சுழன்று கர்மபலன்களை அநுபவித்துக்

கொண்டிருக்கும் ஜீவாத்மாக்கள் பிரம்மாவிற்குள் இருப்பவை; இதிலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தவை ஆதிசேஷ கோஷ்டியில் கலந்து பரமாத்மாவாகிய நாராயணனுக்கு சதாகாலமும் தொண்டு செய்பவை. எனவே, ஆதிசேஷனென்பது இன்னதென்பது நமக்கு இப்போது சுலபத்தில் விளங்கும். ஆதிகாலம் முதல் இந்த பூலோகத்தில் ஜனித்த ராஜ ரிஷிகளும், யதீந்திரர்களும், இன்னும் பலவகைப்பட்ட புண்ணியாத்மாக்களும் கணக்கிலடங்காமல் பரமபதத்திற்குப் போய்ச் சேர்ந்துகொண்டே இருக்கிறார்கள். அப்படிப் போகும் சத்பாத்திரக் கோஷ்டியார் பாம்பு செல்வதுபோல நீளமாய்ப் போய்ச் சேர்ந்துகொண்டே இருப்பதால், அப்படி ஆதிகாலம் முதல் பரமபதம் போய்ச் சேர்ந்துகொண்டிருப்போர் ஆதிசேஷன் என்று குறிக்கப்படுகிறார்கள். அவர்களுள் ஒருவர்கூட அழியாமல் எல்லோரும் நிரந்தரமாயிருந்து பரம்பொருளுக்கு சதாகாலமும் தொண்டு செய்கிறார்கள் என்பதே வைஷ்ணவர்களின் கொள்கை.

> **“ சென்றால் குடையாம், இருந்தால் சிங்காசனமாம்,**
> **நின்றால் மரவடியாம், நீள்கடலுள்—என்றும்**
> **புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்**
> **அணையாம் திருமாற் கரவு ”**

என்று ஆழ்வாரொருவர் ஆதிசேஷன் பரம்பொருளுக்குச் செய்யும் தொண்டுகளை யூகத்தினால் ஒருவிதமாக விளக்கியிருக்கிறார். ‘அகம் ப்ரம்மாஸ்மி’ என்பது வேத வாக்கியம். அதாவது நான் ப்ரம்மா என்பது அதன் பொருள். இதை வைத்துக்கொண்டு அத்வைதிகள் ‘நான்’ என்பதும் பரமாத்மாவும் ஒன்றென்றும், கடைசியில் இந்த ‘நான்’ பரமாத்மாவோடு இரண்டறக் கலந்து போகிறதென்றும்

சொல்லி வாதாடுகிறார்கள். பிரம்மாவென்பது ஸத்யம், ஞானம், அநந்தம் என்று விளக்கப்பட்டதும், பரமாத்மாவின் சரீரமெனக் கருதப்படுவதுமான பாகமாதலால், 'நான்' என்பது நிரந்தரமான சரீர பாகமேயன்றி, பரமாத்மாவோடு ஒருநாளும் இரண்டறக் கலந்து போவதல்ல. 'நான்' என்பது இந்த பிரம்மாண்டமாகிய தாமரைப்பூவிலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைந்தால், ஆதிசேஷனாகிய பக்த கோஷ்டிகளோடு சேர்ந்து பரமாத்மாவாகிய நாராயணனுக்கு நிரந்தரமாகத் தொண்டுகள்செய்து, அவன் அநுபவிக்கும் நிரதிசயாநந்தத்தைத் தானும்அநுபவிக்கிறது. ஆதிசேஷன் ஆயிரம் பணாமுடிகளையுடையவன் என்பது, ஜீவாத்மாக்கள் தமது தனித்தன்மையை இழக்காமல் ஏராளமாக இருந்துகொண்டு பரமாத்மாவுக்கு நித்ய ஸேவை செய்கிறார்கள் என்பதைக் காட்டும் குறிப்பு. இவற்றிலிருந்து அத்வைதிகளாகிய ஸ்மார்த்தர்களுக்கு சேஷன், சேஷி என்னும் பாகுபாடு இல்லையென்பது ஸ்பஷ்டமாக விளங்குகிறது. ஆதாவது, பரமாத்மா ஆண்டான் (ஆண்டவன்), ஜீவாத்மாவாகிய நாம் அடிமை என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. பானை உடைந்தவுடன், அதற்குள்ளிருக்கும் காற்று, எங்கும் நிறைந்துள்ள காற்றோடு கலந்து போகிறதுபோல, நம் உடம்பு அழிந்தால், இதிலிருந்த உயிர், அகண்டாகாரமான சிவனாகிய பெரிய உயிரோடு அடையாளம் தெரியாதபடி கலந்து போகிறது. சிவனாகிய மொத்த உயிர் எல்லாவற்றையும் எரித்த சாம்பலைப் பூசிக்கொண்டு ஏகாங்கியாய் ஆண்டியாயிருக்கிறது. ஆகையால், ஆண்டான் அடிமை என்ற வியவகாரத்திற்கே இடமில்லை. எனவே அவர்களுக்கு சேஷன், சேஷி பாவம் கிடையாது. ஸ்மார்த்தர்களில் சிலர் சேஷ ஐயர் என்றும்,

அவர்களுடைய ஸ்திரீகள் சேஷி என்றும் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அதற்கு அர்த்தமென்னவென்று நீங்கள் கேட்கலாம். வைஷ்ணவர்கள் பரமாத்மா சேஷி யென்றும், தாம் சேஷரென்றும் கருதுகிறார்கள். ஸ்மார்த் தர்களுக்கு பரமாத்மா சேஷியல்ல. சேஷி என்பது அவர் களுடைய மனைவிகளோடு நின்று போகிறது. கிறிஸ்தவர் கள், இஸ்லாமானவர்கள் ஆகியோர்கூட **Soul is immortal** என்ற கொள்கையை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதா வது, ஜீவாத்மா நிரந்தரமாயிருப்பது என்பது அதன் பொருள். ஒவ்வொருவருடைய ஜீவாத்மாவும் எப்போதும் தனி உருப்படியான ஜீவாத்மாவாகவே நிலைத்திருக்குமென் பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் நம் ஆதிசங்கரர் சிஷ்யர்களான ஸ்மார்த்தர்கள் மாத்திரம் அதை மறுத்து, ஜீவாத்மாவின் தனிவடிவம் சிரஞ்சீவியானதல்ல வென்றும், அது முடிவில் பரம்பொருளோடு ஒன்றாகி விடு கிறதென்றும் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். அவர் கள், 'நான்' என்பதை உயிரோடு நிறுத்திக் கொள்ளு கிறார்கள். சின்ன உயிர் பெரிய உயிரோடு சேர்ந்து விடு கிறது என்பது அவர்களுடைய எண்ணம். உயிர் உடம் பைப் பொருத்ததென்பதையும், அவ்விரண்டிற்கும் வேறான ஆன்மா ஒன்று நம்முடம்பிற்குள் நிரந்தரமாயிருக்கிறதென் பதையும், அவ்வாறு இப்பிரபஞ்சத்தில் எண்ணிக்கையற்ற வெவ்வேறு ஆன்மாக்கள் இருக்கின்றனவென்பதையும், அவைகளுக்கெல்லாம் நாயகனாய்ப் பரமாத்மா இருக்கிற தென்பதையும் அத்வைதிகள் ஒப்புக்கொள்வதில்லை. அவர் கள் உயிர் என்றும், ஆவி என்றும், சீவன் என்றும் குறிப் பார்களேயன்றி, ஆன்மா என்றோ ஜீவாத்மாஎன்றோ, குறிப்ப தில்லை. சாதாரணமாய் அத்வைதிகள், உடல், பொருள்,

ஆவி என்பதோடு நிறுத்திக்கொள்ளுகின்றனரேயன்றி, ஆன்மாவைக் கணக்கில் சேர்ப்பதில்லை.

> " குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே
> உடம்பொடுயிரிடை நட்பு "

என்கிறார் திருவள்ளுவ நாயனார்.

> " எவ்வுயிரும் என்னுயிர்போல் இரங்கவும்நின்
> தெய்வ அருள்கருணை செய்யாய் பராபரமே "

என்கிறார் தாயுமானவர்.

> " பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
> கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
> காவிதான் போயினபின் யாரே அநுபவிப்பார்
> பாவிகாள் அந்தப் பணம் "

என்கிறார் இன்னொரு புலவர்.

இம்மாதிரி உயிர் என்றும், ஆவியென்றும் குறிக்கப்படுவது பிராண வாயுவேயாகையால், அது இந்த உடம்பை விட்டால், இப்பிரபஞ்சத்தில் அகண்டாகாரமாக நிறைந்திருக்கும் வாயுவில் இரண்டறக் கலந்து போகிறது என்று கருதுகிறார்கள் என நாம் எண்ண இடந்தருகிறது. ஆத்மன் என்ற சொல்லின் அர்த்தத்தை நாம் கவனித்தால் அதன் வேறுபாடு நன்றாக விளங்கிவிடும். ஆத்து என்றால் வீட்டு என்றர்த்தம்; மன் என்றால் தலைவன் என்றர்த்தம். அதாவது, நம் உடம்பாகிய வீட்டின் எஜமானே ஆத்மன் அல்லது ஆத்மா என்ற கருத்து த்வனிக்கிறது. ஆவி, அல்லது உயிர் என்பதும், உடம்பிற்குடையவன் என்பதும் அடியோடுவேறுபடுகின்றனவல்லவா. வைஷ்ணவர்களுக்கும்மற்றவர்களுக்கும் இந்த முக்கியமான விஷயத்தில் வித்தியாசம் இருப்பதனாலேயே அத்வைதம் முதலிய அடிப்படையான பேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இன்னம், நாம் 'சிவா'

என்ற சொல்லின் சரியான அர்த்தத்தைக் கண்டுபிடித்தால், நம் சிக்கல்களில் பெரும்பாகமும் அற்றுப் போய்விடும். விஷயமும் தெளிவுபட்டுப் போகும். 'சிவா' என்றால் மங்களகரமானது என்று ஒரு மடாதிபதி சமீப காலத்தில் வியாக்கியானம் செய்தார். சிவன் சங்காரக் கடவுளென்றும், அவருக்கு மகா பஸ்மம் என்று பெயர் என்றும் அதே மடாதிபதி தெரிவித்தார். சிவன் கோவில் ஸ்மசானத்திற்கு சமானமென்று ஸ்மார்த்தர்களே சொல்லுகின்றனர்; சிவன் கோவில் பிரஸாதங்களை அநேக ஸ்மார்த்தர்கள் கையால்கூடத் தொடுவதில்லை. மனிதர் இறந்து போனால் அதை அமங்கலமென்றே எல்லோரும் கருதி அடித்துக் கொண்டு அழுது புரளுகின்றனர். பூண் நூலை வலது பக்கம் போட்டுக்கொள்ளுகின்றனர்; தலை மயிரை ஈரத்தோடு தொங்கவிட்டபடியே அழுதுகொண்டு போகின்றனர்; நெற்றியில் சுபகரமான குறிகளை வைக்கிறதில்லை. புருஷனை இழந்த ஸ்திரீ அவளுடைய ஆயுள்காலம் முடிய அமங்கலி என்று குறிக்கப்படுகிறாள். அவள் எதிரில் வருவதே அபசகுனமாய்க் கருதப்படுகிறது. அப்படி இருக்க, இத்தனை அலங்கோலங்களையும் செய்துவைக்கும் சங்காரக் கடவுளின் பெயராகிய 'சிவா' என்ற சொல்லுக்கு மங்களகரமானது என்ற அர்த்தம் எங்கிருந்து வந்ததோ தெரியவில்லை. இந்தச் சொல்லின் உண்மையான வடிவம் மறைந்து போய்விட்டதாகையால் இதன் கருத்து எவருக்கும் சரியாகப் படாமல் மறைந்து போயிருக்கிறது. இதன் சரியான வடிவம் என்னவென்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால், தெலுங்கு பாஷையின் அரிச்சுவடியைப் பார்க்கவேண்டும். அது 'ஓம் நா மஹா சீ வா ய ஹா,' என்று ஆரம்பமாகிறது. ஓம் என்றால் சகலமும், நா என்றால் நாராயணன்

மஅஹா என்றால் நம் மனத்தில், சிவாயஹா என்றால் சிவன் நம்மனத்தில் என்ற பொருள் ஏற்படுகிறது. அதாவது, 'சகலத்திற்கும் அந்தராத்மாவான நாராயணன் நம்மனத்தில் இருப்பதாக, சிவன் நம்மனத்தில் இருப்பதாக' என்பது இதன் கருத்து. இவ்விடத்தில் நாம் எதை முக்கியமாய்க் கவனிக்க வேண்டியதென்றால், 'சிவா' என்பது சீவாய்' என்பதன் குறுக்கம் என்பதையே நாம் தெரிந்து கொள்ள வேண்டும். 'சீவாய்' என்பதைத் **திருவாய்** என்று மாற்றலாம். 'சீ' என்ற சொல்லிற்குப் பல அர்த்தங்கள் இருக்கின்றன. அது லக்ஷ்மி, சரஸ்வதி, பார்வதி முதலியவற்றைக் குறிக்கும். சாதாரணமாய்ப் பெண் என்ற அர்த்தத்தையே கொடுக்கும். சீ என்பது சம்பத்து அல்லது பிரகாசம் என்பதையும் குறிக்கும். ஸ்ரீ வில்லிபுத்தூர் என்பதை சீ வில்லிபுத்தூர் என்று குறிக்கின்றனர். ஸ்ரீநிவாச தாதாசாரி என்பதை சீமாதாதம் என்கிறார்கள். ஸ்ரீமான் என்பது சீமான் ஆகிறது. அண்ணச்சி என்றும் அண்ணத்தே என்றும் சிலர் தம் அண்ணனைக் குறிக்கிறார்கள். 'சீ' என்பதும், 'தே' என்பதும், இவ்விடத்தில் தெய்வம் என்ற அர்த்தத்தைக் கொடுக்கிறது. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதுபோல, அண்ணனையும் தம்பி தெய்வமாய்க் கருதுவதை இந்தப் பிரயோகம் காட்டுகிறது. வைஷ்ணவ மடாதிபதிகள் சீயர் என்றும், ஜீயர் என்றும் குறிக்கப்படுகின்றனர். அவை 'சீ' 'ஜீ' என்பனவற்றின் மரியாதைப் பன்மை. சீ என்பதே ஷீ என்றும் ஜீ என்றும் மாறிப்போயிருக்கின்றது. வடதேசத்தார் ஸ்ரீராம் என்பதை ஷிரீராம் என்று சொல்லுகிறார்கள். கிருஷ்ணஜீ, காஜீ, ஹாஜீ, பாபாஜீ முதலியவற்றிலுள்ள ஜீ, நம் சீ என்பதன் திரிபே. இங்கிலீஷில் ஜீ+அரஜ் என்பது ஜியார்ஜ்

என்று மாறியிருக்கிறது. சீ அரசு என்பது அதன் கருத்து. அவர்கள் பெண்ணைக் குறிக்க உபயோகிக்கும் 'ஷீ' என்ற சொல்லும் 'சீ என்பதன் திரிபே. இருஷீ என்பது 'இருசீ' என்ற சொல்லின் திரிபு. இரு=பெரிய, சீ=திருவருளாளர் என்பது கருத்து. வெள்ளைக்காரிகள் சுசீ (Su Si) என்று பெயர் வைத்துக்கொள்ளுகின்றனர். அது சுபலக்ஷ்மீ அல்லது சுக்கிரனுகிய சரஸ்வதி என்ற அர்த்தத்தைத் தருகிறது. சீதா என்பதற்கு லக்ஷ்மியாகிய தாய் என்றர்த்தம். எனவே 'சீ' என்பதற்கு லக்ஷ்மீகரம் பொருந்திய, சகல சம்பத்தும் உடைய, தெய்வாம்சம் வாய்ந்த என்ற கருத்துகளைக் கொள்ளவேண்டும். வாய் என்ற சொல் ஆதிகாலத்தில் 'வா' என்று சுருக்கமாய்ப் பிரயோகப் பட்டிருக்கிறது. நாக்கு என்பதற்கு, **சிகுவா** என்று சொல்வதுண்டு. சிகு அல்லது செகு என்முல், வெட்டி நாசமாக்குவது என்பது பொருள். ஆகாரத்தை உள்ளே போட்டால், அதை அதக்கி உள்ளே தள்ளுவது நாக்காதலால் அதை சிகுவாய் என்று குறித்தார்கள் போலும். அதுவே சம்ஸ்கிருதத்தில் ஜிஹ்வா என்று மாறியிருக்கிறது. கிறிஸ்தவர்களின் தெய்வம் ஜிஹோவா என்று குறிக்கப்படுகிறது; அதன் கருத்து நாக்கு என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சீவாய் என்பது காலக்கிரமத்தில் 'சிவா' என்று சுருங்கியிருக்கிறது. 'சீவாய்' என்முல் தெய்வம் நம்மோடு பேசும் வாய், அல்லது, தெய்வத்தின் சம்பத்து, அல்லது, அருள் நமக்கு எந்த வழியாக வருகிறதோ அந்த இடம் என்று நாம் பொருள் கொள்வது பொருத்தமாகும். இவ்விதமான அர்த்தம் ஏற்படும்போது, சிவன் அழிக்கும் தெய்வம் என்றும், அது நம் சீவனுக்கு ஆதாரமானது என்றும் அதற்கு எப்படி அர்த்தங்கள் ஏற்பட்டன என்பதை நாம் ஆராய

வேண்டும். அதற்கு வானசாஸ்திரத்தின் உதவியையே நாம் நாடவேண்டும். அந்தசாஸ்திரம் இன்னின்ன தொழிலே இன்னின்ன கிரகங்கள் செய்கின்றனவென்பதை நன்றாகத் தெரிவிக்கிறது. நான் ஏற்கனவே ஒரு விஷயத்தைத் தெரிவித்தேன். அதாவது, நம் வயல் ஒன்றேயானாலும், ஒவ்வொருவிதமான விதையையும் ஒவ்வொருவித குண முடைய வஸ்துவையும் உற்பத்திசெய்து நமக்குஉதவுகிறது. இதேபோல, ஆகாயத்திலுள்ள ஒவ்வொரு கிரகமும் ஒவ் வோர் இலாகாவோடு சம்பந்தப்பட்டிருக்கிறது; ஒவ்வொன் றின் குணாதிசயங்களும் பலவாறாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின் றன. கடிகாரம் எப்படிப் பன்னிரண்டு பாகங்களாய்ப் பிரிக் கப்பட்டிருக்கின்றனவோ, அப்படியே, நமக்கு நாலாபக்கங் களிலும் அநந்தமாகப் பரவிக்கிடக்கும் ஆகாய வெளியும் பன்னிரண்டு பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை ஒவ்வொன்றும் ராசி என்று குறிக்கப்படுகிறது. ஆகாயம் ஒரே வெறு வெளியாயிருப்பதனால், ராசிகளின் பகுதியையும் அடையாளத்தையும் கண்டுகொள்வதற்கு, 27 நக்ஷத்திரங்களை மயில் கற்கள்போல் அடையாளங்களாய் வைத்துக்கொண்டிருக்கின்றனர். இந்தப் பிரம்மாண்டமா கிய பிரபஞ்சத்தையே இப்படி ஒரு கடிகாரம்போல் வகுத்து, சூரியன், சந்திரன் முதலிய கிரகங்களை அதன் முள்களாக வைத்துக்கொண்டு நம்முன்னோர் அற்புதமான எத்தனையோ கணக்குகளைக் கண்டு பிடித்திருக்கின்றனர். எல்லாம் பிரம்மாவென்று நாம் முன்னரே குறித்தோமல்லவா. அந்த பிரம்மாவே, விராட் புருஷன் என்றும், கால புருஷன் என் றும், கிருஷ்ணன் என்றும் குறிக்கப்படுகிறது. அதன் தேகம் ஆகாய வெளியாய் எங்கும் பரவியிருக்கிறது. சூரி யன், சந்திரன், நக்ஷத்திரங்கள் தோன்றினால், நமக்கு

வெளிச்சமுண்டாகிறது. அவைகள் யாவும் மறைந்திருந்தால், எங்கும் ஒரே இருள்மயமாய் நிறைந்து போகிறது. ஆகவே, இந்தப் பிரபஞ்சம் முழுமைக்கும் இயற்கையான நிறம் எது? அது கருப்பு என்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. இந்தப் பிரபஞ்சம் முழுதும், விராட் புருஷன், கிருஷ்ணன், அல்லது, கால புருஷன் என்று சங்கேதமாய்க் குறிக்கப்படும் தெய்வத்தின் சரீரம் என்றும், அது கருப்பு நிறமானதென்றும் வைஷ்ணவர்கள் குறிக்கிறார்கள். தேய்பிறைக்காலமாகிய பதினைந்து தினங்களிலும் சந்திரனுடைய ஒரு பாகமோ, அல்லது, முழுப்பாகமோ இருளால் மறைந்து போகிறது. அதைக் கிருஷ்ண பக்ஷமென்று நாம் குறிக்கிறோம். ஏனென்றால், அந்தக் கருமை நிறந்தான் இந்தப் பிரபஞ்சம் முழுதிற்கும் இயற்கையாக ஏற்பட்ட நிறம். இப்படிக் கருப்பாயிருக்கும் கால புருஷனாகிய கிருஷ்ணனுடைய உடம்பு நான் மேலே சொன்னபடி 12 பாகங்களாய்ப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாகமும் லக்னம் அல்லது ராசி என்று குறிக்கப்படுகிறது. ஒவ்வொரு பகுதியாகிய ராசியிலும் சூரியன் ஒவ்வொரு மாதகாலம் சஞ்சரிக்கிறானகையால், பன்னிரண்டு மாதங்கள் ஏற்படுகின்றன. ஆகாயப் பரப்பின் பன்னிரண்டு பாகங்களான ராசிகளையும் அடியில் வருகிற மாதிரி கால புருஷனுடைய உடம்பின் பாகங்களாய்ப் பிரித்திருக்கிறார்கள் :

| ராசி | மாதம் | கால புருஷனுடைய அங்கம் |
|---|---|---|
| மேஷம் | சித்திரை | தலை |
| விருஷபம் | வைகாசி | இடது தோள் |
| மிதுனம் | ஆனி | வலது தோள் |
| கடகம் | ஆடி | இடது மார்பு |
| சிம்மம் | ஆவணி | வலது முழங்கை |
| கன்னி | புரட்டாசி | இடதுபக்க விலா |
| துலாம் | ஐப்பசி | வலது கை |
| விருச்சிகம் | கார்த்திகை | ஆண் பெண் குறிகள் |
| தனுசு | மார்கழி | துடைகள் |
| மகரம் | தை | முழங்கால்கள் |
| கும்பம் | மாசி | கணைக்கால்கள் |
| மீனம் | பங்குனி | அடிப்பாதம் |

இப்படி ஆகாய வெளியின் பன்னிரண்டு பாகங்களும் கால புருஷனுடைய உடம்பின் பல பாகங்களாய்க் கருதப் படுகின்றன. இதுபோலவே கிரகங்களும் கால புருஷ னுடைய அங்கங்களாகக் கருதப்படுகின்றன. அதுவன்றி, கிரகங்களின் நிறம், அவை செய்யும் தொழில், அவற்றின் திக்கு, அவற்றின் அதிகாரம் முதலிய தகவல்கள் நம் சோதிட சாஸ்திரங்களில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. அவைகளில் சிலவற்றை மாத்திரம் இங்கு நான் குறிப்பிடுகிறேன் :

| விவரங்கள் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | புதன் | குரு | சுக்கிரன் அல்லது அசுர குரு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| சொந்தமான தினம் | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
| சொந்த திக்கு | தென்கிழக்கு | மேற்கு | தெற்கு | வடக்கு | கிழக்கு | ஆக்னேயம் | வடமேற்கு |
| அதிதேவதை | சிவன் அல்லது அக்னி | வருணன் | எமன் அல்லது சுப்ரமணியன் | மாயன் | இந்திரன் | இந்திராணி அல்லது இந்திரசரஸ்வதி | படன் |
| பால் அல்லது தன்மை | ஆண் | பெண் | ஆண் | அலி | ஆண் | பெண் | அலி |
| நிறம் | நீலப்பிங்கல | வெண்மை | சிவப்பு | பச்சை | மஞ்சள் | வெண்மை | கருப்பு |
| பஞ்சபூதங்களின் அதிகாரம் | தீ | ஜலம் | தீ | பூமி | ஆகாயம் | ஜலம் | வாயு |
| காலபுருஷனுடைய அங்கம் | மார்பு | தோள் | தலை | கழுத்து | வயிறு | மூகம் | தொடை |
| தாதுக்கள் | எலும்பு | ரத்தம் | மச்சை | தோல் | மூளை | இந்திரியம் | நரம்பு |
| ஜாதி | க்ஷத்திரியன் | வைசியன் | க்ஷத்திரியன் | வைசியன் | பிராம்மணன் | பிராம்மணர் | நீசன் |
| சுபாவம் | குரூரம் | ஸௌமியம் | குரூரம் | ஸௌமிய | ஸௌமிய | ஸௌமியம் | குரூரம் |
| ஆக்ஷி | சிம்மம் | கடகம் | மேஷம் | மிதுனம் | தனுசு, மீனம் | ரிஷபம், துலாம் | மகரம், கும்பம் |
| அடையாளம் | நாற்சதுரம் | வட்டம் | உடுக்கு | அறுகோணம் | நீண்டவட்டம் | எண்கோணம் | முரம் அல்லது பாதிச்சதுரம் |

இவ்விவரங்கள் எல்லாப் புஸ்தகங்களிலும் ஒரேமாதிரி யாகக் காணப்படவில்லை. இந்த அட்டவணையில் சிவ னுடைய தொழில் சூரியன் மூலமாய் நடக்கிறதென்பது தெரிகிறது. சிவனை முக்கண்ணன் என்று குறிப்பதுண்டு. சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்றும் சிவனுடைய கண்களென்று கந்தபுராண உரை சொல்லுகிறது. பகவான் சூரியனிலும், அக்னியிலும், காயத்திரியிலும் இருப்பதாக நினைத்து ஆராதிக்கும்படி ஆதிசங்கரர் சொல்லியிருக்கிறார். ஜாதகாலங்காரம் என்ற நூல்,

> **“ ஆன வெள்ளி குரு அயனுகுமே,**
> **வான இந்தும் புதனும் மாயனுகும்.**
> **பானும் சேயும் சிவனெனப் பண்ணுவர்**
> **மான வன்னிய தேவதை மந்தனே ”**

என்று சொல்லுகிறது; அதாவது, சூரியனும், சேயனுகிய செவ்வாயும் சிவன் என்பது இதன் கருத்து; இரண்டும் நெருப்பிற்கு அதிபதிகள்; இரண்டும் குரூர கிரகங்கள். செவ் வாய் தென்திசைக் கடவுளாதலால், அதுவே எமன் எனப் படுவது. சுப்ரமணியமென்பதும் அதுவே. அதன் அடையா ளம் உடுக்கு. சிதம்பரம் நடராஜருடைய கைகள் ஒன்றில் உடு க்கு வடிவம் காட்டப்பட்டிருக்கிறது. அது செவ்வாய் தெய் வம் என்பதைக் காட்டுவதற்காக அந்த உடுக்கடையாளம் வைக்கப்பட்டிருக்கிறது. ஒரு மடாதிபதி சமீபகாலத்தில் பிரசங்கம் செய்த சமயத்தில், விநோதமான ஒரு விஷயத் தைத் தெரிவித்தார். நடராஜர் உடுக்கை ஆட்டினராம், நம்முடைய வேதசாஸ்திர புராணங்களெல்லாம் அதி லிருந்து கொட்டியதாம் என்று அந்த மடாதிபதி மிக பய பக்தி விநயத்தோடு தெரிவித்தார். இவருக்கு ஜோதிட சாஸ்திரம் எவ்வளவு தூரம் தெரிந்திருக்கிறது என்பதை

இது நன்ருகக் காட்டுகிறது. நம் வேதங்களுக்கு சோதிட சாஸ்திரம் ஒரு முக்கிய ஆதாரம். அது தெரியாவிட்டால், வேதங்களுக்குச் சரியானபடி அர்த்தம் செய்வதே முடியாத காரியம். சகல சக்தியும் வாய்ந்த நடராஜர் உடுக்கில் அடைக்கவேண்டிய அவசியமுமில்லை; அதை அசைத்துக் கொட்டவேண்டிய உபத்திரவமுமில்லை. நம் பெண் பிள்ளைகள் கடுகு முதலிய சாமான்களைக் குடுக்கையில் அடைத்து வைத்திருந்து, வேண்டியபோது கொட்டிக் கொள்வதுபோல் நடராஜரும் செய்கிருர் போலிருக்கிறது. தீய்க்கு அதிகாரியான செவ்வாய்க்கும் வேதசாஸ்திர புராணங்களுக்கும் என்ன சம்பந்தமென்பது தெரியவில்லை. அதுவன்றி ஸ்மார்த்தர்கள் அதை நடராஜன் என்று கருதுகிருர்கள். அதாவது கிரகங்களும், நக்ஷத்திரங்களும் எப்போதும் ஓடி நடனமாடிக் கொண்டே இருப்பதான இந்தப் பிரபஞ்சமாகிய நடன சபைக்கு செவ்வாயே ராஜன் என்று அவர்கள் கருதுகிருர்கள். அது தவறு. செவ்வாய் சேனதிபதியேயன்றி ராஜனல்ல. வியாழ பகவாஞகிய பிரகஸ்பதியே இந்திரனுதலால், அவரே தேவராஜன், அல்லது, தேவனுதன்; அதாவது சகலமான கிரகங்களுக்கும் அதிராஜன். நவக்கிரக ஸ்தோத்திரத்தில் 'ஸ்வர்க்கத் துவாராய நமஹா' 'மோக்ஷத் துவாராய நமஹா' என்ற அர்ச்சனைகள் சூரியனுக்கு உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, பரமபதத்திற்குப் போக சூரியனே வழி அல்லது வாயில் என்பது அதன் கருத்து. அதாவது, அதுவே சீவாய் அல்லது சிவா. ஸ்மார்த்தப் பிராம்மணர்கள் ஒவ்வொரு தினமும் மூன்று வேளைகளில் சந்தியாவந்தனம் செய்கையில் எமனைப்பற்றி அடியில் வருகிறபடி ஸ்தோத்திரம் செய்கிருர்கள்:

**எமாய தர்மராஜாய ம்ருத்யவே சாந்த காயசா**
**வைவஸ்வதாய காலாய ஸர்வ பூத க்ஷயாயச**
**ஔதும்பாய தத்னாய நீலாய பரமாத் மனே**
**வ்ருகோதராய சித்ராய சித்ர குப்தாயவை நமஹா.**

இதன்படி அவர்களுடைய எமனாகிய செவ்வாயையே அவர்கள் பரமாத்மாவாகக் கருதுகிறார்கள். ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு திரவியம் உரியதென்றும் சோதிட சாஸ்திரம் சொல்லுகிறது. அதன்படி செவ்வாயின் திர வியம் பொன். செவ்வாய் கிரகம் பொன்னம்பலம் என்றும் குறிக்கப்படுகிறது. "யாருக்குப் பொன்னம்பலம் கிருபை இருக்குதோ-அவனே பெரியவனாம்" என்று நந்தனார் சரித் திரத்தில் ஒரு பாடல் இருப்பதை நீங்கள் கேள்வியுற்றிருக்க லாம். செவ்வாய் கிரகம் கால புருஷனுடைய தலையாத லால், கபாலீசுவரன் என்பதும் செவ்வாயையே குறிக்கிறது. சிவன் கையில் கபாலத்தை ஏந்தி மயானச் சாம்பலைப் பூசிக் கொண்டு பிச்சை எடுப்பதாக சைவர்களுடைய ஐதிகம் சொல்வதுண்டு. சித்திரை மாதமாகிய, வருஷத்தின் முதல் மாதம் கால புருஷனுடைய தலையிலிருந்து ஆரம்பமா கிறது. அதனால், செவ்வாய் கபாலன் என்று குறிக்கப்படு கிறது. சித்திரை மாத வெயிலில் பயிர் பச்சைகள் யாவும் காய்ந்து சாம்பலாய்ப் போயிருக்கின்றன. சூரிய வெப்பம் சகிக்க முடியாததா யிருக்கிறது. அப்போது செவ்வாயின் ஆக்ஷி காலம். ஆகையால் அப்போது பூமியில் ஈசுவரர் கபா லத்தை வைத்துக்கொண்டு ஸ்மசானத்தில் ஆடுவதாகச் சொல்லுகிறார்கள். சிவன் உடம்பு முழுதும் எலும்பு மாலை யைத் தரித்திருப்பதாகவும் சைவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் அதன் கருத்தை சரியானபடி விளக்குவ தில்லை. மேலே காட்டிய அட்டவணையில் சூரியன் கால

புருஷனுடைய எலும்பு என்று காட்டப்பட்டிருக்கிறது. நம்முடைய உடம்பு நிலைத்து நிற்பதற்கு எலும்புக்கூண்டே அடிப்படையான ஆதாரம். அதுவே உடம்பின் பளுவாகிய பொறுப்பு முழுதையும் தாங்குகிறது. அதுபோல சூரியன் இந்தப் பிரபஞ்சம் முழுதையும் இழுத்துப் பிடித்துக் கொண்டிருப்பதால், எல்லாவற்றிற்கும் அதுவே ஜீவாதாரமாய் அமைந்திருக்கிறது. ஆகவே, அதைக் கால புருஷனுடைய எலும்பு என்றனர். எலும்பை அக்கு என்றும் சொல்வதுண்டு. மூத்த சகோதரியை அக்காள் என்று குறிப்பதுண்டு. மூத்த பெண்ணே வீட்டின் பொறுப்பை கவனிப்பவளாதலால் அவள் **அக்காள்** என்று குறிக்கப்படுகிறாள். அதாவது எலும்புபோன்ற பொறுப்பாளி என்பது அதன் கருத்து. எலும்பு என்ற கருத்துடைய அக்கு என்ற சொல்லே **ஹக்கு** அல்லது பொறுப்பு என்ற சொல்லாய் மாறியிருக்கிறது. எலும்பை அத்தி என்றும் ஹஸ்தி என்றும்சொல்வதுண்டு. சிவனை 'அத்தனே' 'ஐயனே'என்று சிவபக்தர் குறிப்பதுண்டு. சிவனை ஆத்திமர நிழலில் அமர்ந்த தேவன் என்றும் குறிப்பதுண்டு. **காளஹஸ்தி** என்பது ஒரு முக்கியமான சிவஸ்தலம். காளஹஸ்தீசர் என்பது ஸ்வாமியின் பெயர். அதன் சரியான பெயர் காலஹஸ்தீசர் என்பது. அதாவது, காலபுருஷனுடைய ஹஸ்தியாகிய சூரியன் என்பது அதன் கருத்து. ஆகவே, சிவன் என்று சூரியனும் செவ்வாயும் குறிக்கப்படுகின்றன; இரண்டும் அக்னிக் கடவுளாதலால், அழிக்கும் குணமுடையன; செவ்வாய் சேனாதிபதியாகையால், அதுவே சிவனுடைய வாயில்காக்கும் அதிகாரநந்தி என்றும் குறிக்கப்படுகிறது. நந்தீ என்றால் நம்முடைய நெருப்பு என்பது பொருள். ஜந்துக்களுக்கு உயிர் இருக்கும்வரையில் உடம்பில் உஷ்ணம் இருக்கிறது. உயிர்

போனால் உஷ்ணமும் போய்விடுகிறது. ஆகவே, அக்னிதான் நம் உயிர் என்பது சைவர்களது கொள்கை. இப்படி சகல மான ஜீவஜெந்துக்களுக்கும் ஜீவாக்னியைத் தருவதால்சூரிய னும் செவ்வாயும் சிவன் என்று குறிக்கப்படுகின்றன. செவ் வாயை சிவனுடைய புத்திரனான சுப்ரமணியரென்றும் கரு துவதுண்டு. ஆனால் சிவனுடைய அவதாரமே சுப்ரமணியரெ ன்று கருதுகின்றனராதலாலும், இரண்டுகிரகங்களும் அக்னி மயமான தன்மையுடையவையே ஆதலாலும், இரண்டும்சிவன் எனப்படுகின்றன. செவ்வாய்க்குசேயன்என்பதேஒருபெயர். அது சிவப்பு நிறமுடையது. ஆதித்தமிழர் குன்று என்பதை குந்து என்றும், குன்னு என்றும் குறித்தனரென்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. ஆகவே, செவ்வாய் 'செங்குந் தர்' என்று குறிக்கப்படுகிறது. அதுவே செந்தில்ஆண்டவர். சிவன் கைலாச பர்வதத்தில் இருப்பதாகக் கருதுகின்றனர். ஹிமய மலையின் மேல் இருக்கும் ஒரு சிகரமும் கைலாசம் என்று குறிக்கப் படுகிறது. அது சாதாரண ஸ்தலங்களுள் ஒன்று. அங்கு பனியும் குளிருமே இருக்கின்றன. சூரி யனுடைய ஆக்ஷி சிம்மராசியில் என்பதை நாம் மேலே குறி த்த அட்டவணையில் பார்க்கிறோம். சிம்மம் கால புருஷனு டைய வலதுமுழங்கை யாகிறதென்பதையும் நாம் அதற்கு முன்பக்கத்தில் தெரிந்துகொண்டோம். கையிலாஸ் என்பது கை+இல்+ஆசு என்பதன் சுருக்கம்; அதாவது, காலபுருஷ னுடைய கையாகிய இல்லத்தில் உள்ள ஸ்தானம்என்று அர் த்தமாகிறது. அதாவது ஐந்தாவது ராசியாகிய சிம்மராசியே சூரியனுடைய ஆக்ஷிஸ்தானம். அதுவே கைலாசம் என்று கருதப்படுகிறது. அது ஆவணி மாதத்தில் சூரியன் சஞ்சரிக்குமிடம். சுப்ரமணியர் சரவணப்பொய்கையில் வளர்ந்ததாகப் புராணங்கள் சொல்லுகின்றன. ஆவணி

மாதத்திற்கு ச்ராவணம் என்று பெயர். சரவணம்என்பதும் ச்ராவணம் என்பதும் ஒன்றே. சூரியன் என்பதைக் குறிக்க உபயோகிக்கும் எழுத்து 'சூ'; "சூர்யாயதன் ன மமா, ஓம் சூஸ் சுவாஹா" என்பது ஹோமமந்த்ரம். சூத்தரர் என்ற சொல்லின் அர்த்தம் இன்னதென்பதை அறிய மாட்டாமல் பெரிய பெரிய மேதாவிகளெல்லாம் மண்டையை உடைத்துக் கொள்ளுகிறார்கள்; 'சூத்தரர்' என்றால் 'சூரியனை'யே முடிவான தெய்வமாகக் கருதும் வகுப்பார் என்பது பொருள். சூர்ய நமஸ்காரம் செய்வதென்பது வைஷ்ணவர்களுக்குள் கிடையாது. ஸ்மார்த்தர்களே அதை மும்முரமாக அநுஷ்டிக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் கூட 'சூசேய்' என்று பெயர் வைத்துக் கொள்ளுகிறார்கள். அதன் கருத்து சூரியனுடைய குமாரன் என்பது. இப்போது நாம், 'சீவாய்' அல்லது சிவா என்பதன் கருத்தை ஒருவிதமாகத் தெரிந்துகொண்டோம். அதாவது, பரம்பொருளை அடையும் துவாரம் அக்னிக் கோள்களாகிய செவ்வாயும் சூரியனுமே என்பது சைவர்களுடைய அபிப்பிராயம் என்று நாம் தெரிந்து கொள்ளுகிறோம். வைஷ்ணவர்களுடைய கொள்கை இதுவல்ல. கால புருஷனுடைய மூளையாகிய பாகம் வியாழ பகவானுதலால், அது பிரகஸ்பதி என்று குறிக்கப்படுகிறது. பிரகஸ்பதி என்றால், மகா புத்திமான் என்றர்த்தம். இந்தப் பிரபஞ்சமாகிய பெரிய யந்திரத்தின் திறவுகோலாகிய விவேகம் பிரகஸ்பதியி னிடத்திலேயே அடங்கி யிருக்கிறதென்றும், ஆகையால் அதுதான் சீவாய் அல்லது பரம்பொருளை யடையும் துவாரம் என்றும் வைஷ்ணவர்கள் கருதி, அதற்கு வாசுதேவன் என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். வாசுதேவன் என்பது வா + ஆசு + தேவன் என்று பிரிகிறது. அதாவது, வாக்கு ஸ்தானத்

தின் தெய்வம். கடவுளின் வாக்கு ஏற்படும் ஸ்தானத்தின் அதிபதி. பிரகஸ்பதியை வாக்பதி, வாசஸ்பதி, திருநாவிற்கரசு என்று பலவாருய்க் குறிக்கின்றனர். வான சாஸ்திரங்களில் பிரகஸ்பதி மாத்திரம் கடவுள் என்ற பெயரால் குறிக்கப்பட்டிருக்கிறது. கடவுள் என்ருல் வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாமல் நிற்பது என்று சாதாரணமாக அர்த்தம் செய்கிருர்கள். அதைக் 'கடல் + உள்' அல்லது கடை+உள் என்று பிரித்து அர்த்தம் கொள்ளவேண்டும். வியாழ பகவானுடைய ஆக்ஷி ஸ்தானம் கடைசியான பன்னிரண்டாவது ராசியாகிய மீனம். அந்த ராசி முழுதும் ஜலம் நிறைந்த கடல்பாகம் என்பது ஜோதிட சாஸ்திரத் துணிபு. அப்படி ஜலம் கடல்போல் நிறைந்துள்ள ராசியான மீன ராசியில் இருப்பவரே கடவுள் என்று குறிக்கப்பட்டிருக்கிருர். இந்த ஆகாய வட்டம் 12-வது ராசியோடு முடிந்து போகிறது. பிறகு முதலாவது ராசி ஆரம்பமாகிறது. ஆகவே இந்தப் பன்னிரண்டு ராசிகளுக்கும் அப்பால் இருக்கும் அவ்வியக்த தெய்வமாகிய அபரத்தை யடைவதற்கு வழி 12-வது ராசிக்குள்ளேதான் அடங்கி இருக்கிறதென்றும், அங்கு ஆக்ஷி புரிவது பிரகஸ்பதி யாதலாலும், அது கால புருஷனுடைய மூளையாகிய ஞானபாக மாதலாலும், அதுவே மோக்ஷத்துவாரம் என்பது வைஷ்ணவர்களுடைய கொள்கை. ஆகையால், அதை வாசுதேவன் என்று குறிக்கிருர்கள். அதுவே தேவர்களுக் கெல்லாம் ராஜனை இந்திரன். அதை தேவராஜன் என்றும், தேவனுதன் என்றும், லோக குரு வென்றும், அயனென்றும், ஐயன் என்றும் குறிக்கிருர்கள். இந்திரன் கிழக்கு திக்கின் அதிபதியல்லவா. வைஷ்ணவர் என்பதை வைணவர் என்று குறிப்பதும் உண்டு. வைண தேவன் என்பது கருடனைக் குறிக்

கும் சொல். கருடன் பக்ஷி ராஜன் என்று குறிக்கப்படு கிறது. ஏழு கிரகங்களையும் ஐந்து பக்ஷிகளாகப் பிரித்து, பக்ஷி சாஸ்திரம் என்று ஒரு சாஸ்திரம் தயாரித்திருக்கிறார் கள். பக்ஷிகளுக்கெல்லாம் ராஜன் கருடனாதலால், தேவேந் திரனாகிய வியாழன் பக்ஷிராஜன் என்றும் கருடன் என்றும் குறிக்கப்படுகிறது. கருடதிக்கு என்பது கிழக்கு திக்கு. மகாவிஷ்ணு கருடன்மேல் ஏறிவருகிறார் என்றால், பரமாத்மாவாகிய நாராயணன் வியாழபகவான் மீது ஆவிர் பவித்து, அவர்மூலமாய் சகல காரியங்களையும் நடத்துகிறார் என்றுஅர்த்தம் செய்துகொள்ளவேண்டும். நம்நாட்டிலுள்ள சகலமான தேவாலயங்களிலும் பங்குனி மாதத்தில் பிரம் மோத்சவம் நடத்தப்படுவது நமக்குத் தெரியும்.! அப்போது கருட சேவை மிக விமரிசையாக நடத்தப்படுகிறது. ஏனெ னில், அந்த ராசி வியாழ பகவானுடைய ஆக்ஷிஸ்தானமாதலா லும், அவரே பக்ஷி ராஜனான கருடபகவானாதலாலும், கருட சேவை மிக விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. சைவர் கள், ஸ்மார்த்தர்கள் ஆகியோருடைய கோவில்களில் திரு விழா நடக்கும்போது ரிஷபவாகன உத்சவமே மிக விமரி சையாக நடத்தப்படுகிறது. ஈசுவரன் வெள்ளியங்கிரியிலி ருந்து ரிஷபவாகனத்தில் ஏறி வருகிறார் என்றும் சிலர் சொல்வதுண்டு. ஈசுவரன் என்பது சுக்கிரனையே குறிப்ப தாக நான் முன்னர் குறிப்பிட்டேன். அது வெள்ளிக்கிழமை யின் தெய்வம். அந்த கிரகத்தின் நிறமும் வெண்மையே. வைகாசி மாதத்தின் ராசியான ரிஷபராசி சுக்கிரனுடைய ஆக்ஷி ஸ்தானங்களில் ஒன்றாதலால், ரிஷபவாகன சேவை அந்த ஆக்ஷியைக் குறிக்கிறது. இதில், ராசியே வாகனமாக வும், கிரகம் தெய்வமாகவும் கருதப்படுகின்றன. கருட சேவையில், வியாழனாகிய கிரகம் கருடவாகனமாகவும், முடி

வான பரம்பொருள் அதற்குமேல் இருக்கும் தெய்வமாக வும் கருதப்படுகின்றன வென்பது பிரத்தியக்ஷமாகத் தெரி கிறது. வியாழனை இந்தப் பிரபஞ்சத்திற்கு முடிவான ஞான ஸ்தானமாகக் கருதுவதற்கு இன்னொரு முக்கியமான காரணமு மிருக்கிறது. இந்தப் பிரபஞ்சம் எப்படித் தோன்றி, எப்படி மறைகிறது என்பது வேதாகமங்களில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது. அதை நான் இரண் டொரு வாக்கியங்களில் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். முதலில் 'வாம்' என்ற நிவர்த்தி பீஜத்திலிருந்து, அமிர்த மயமான சமுத்திரமும், அதில் தாமரைமலரும், பிரம்மாவும் தோன்றுவதாகவும், பிரம்மாவில் இந்தப் பிரபஞ்சத்தின் ஜீவன் இருப்பதாகவும் நாம் பாவிக்க வேண்டும். 'பீம்' (Bheem) என்னும் பிரம்ம ஜீவனிலிருந்து புத்தியும், அதி லிருந்து 'வீம்' என்னும் அகங்காரமும், அதிலிருந்து மனஸூம் தோன்றுகின்றன. மனஸிலிருந்து ஆகாயவெளி தோன்றுகிறது. ஆகாய வெளிக்கு சப்தம், காது, நாக்கு ஆகிய இந்திரியங்கள் இருக்கின்றன. ஆகாயத்திலிருந்து வாயு உற்பத்தியாகிறது. அதில் சப்தம், ஸ்பரிசம், தோல், கைகள் முதலிய இந்திரியங்கள் இருக்கின்றன. வாயுவி லிருந்து அக்னி உற்பத்தியாகிறது. அதில் சப்தம், ஸ்பரி சம், ரூபம், கண்கள், கால்கள் முதலிய இந்திரியங்கள் இருக்கின்றன. அக்னியிலிருந்து ஜலம் உற்பத்தியாகிறது. அதில் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், நாக்கு, பாயு முத லிய இந்திரியங்கள் இருக்கின்றன. ஜலத்திலிருந்து பூமி உண்டாகிறது. அதில் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், கிராணம், உபஸ்தம் முதலிய இந்திரியங்கள் இருக் கின்றன. இவ்விதம் பிரம்மாவிலிருந்து பிரபஞ்சம் உண் டாவதாக நம் முன்னோர் வகுத்திருக்கின்றனர். அவை

திரும்பி ஒடுங்கும்போதும் இதே முறைமையில் அடியிலிருந்து மேலே காரியம் நடைபெறுகிறது. பூமி தண்ணீரில் ஒடுங்குகிறது; தண்ணீர் அக்னியில் ஒடுங்குகிறது; அக்னி வாயுவில் ஒடுங்குகிறது; வாயு ஆகாயத்தில் ஒடுங்கிப் போகிறது. அந்த ஆகாயமே பரவெளி எனப்படுகிறது. அதற்கு சப்தம், காது, நாக்கு ஆகிய மூன்று இந்திரியங்கள் மாத்திரம் இருக்கின்றன. நாம் மேலே கொடுத்துள்ள அட்டவணையில், பஞ்ச பூதங்களுக்கும் இன்னின்ன கிரகங்கள் அதிகாரிகள் என்று சொல்லி இருக்கிறோம். பூமி தண்ணீரில் ஒடுங்கும்போது, பூமியின் அதிபதியான புதனும் போய்விடுகிறது. தண்ணீர் அக்னியில் ஒடுங்கும்போது தண்ணீரின் அதிபதிகளான சுக்கிரனும், சந்திரனும் போய்விடுகின்றன. அக்னி, வாயுவில் ஒடுங்கும் போது, அக்னியின் அதிபதிகளான செவ்வாயும், சூரியனும் போய் விடுகின்றனர். அதாவது, சிவனும், எமனும் (சுப்ரமணியரும்) மறைந்து போகிறார்கள். வாயு ஆகாயத்தில் ஒடுங்கும்போது, வாயுவின் அதிபதியான சனியும் போய் விடுகிறது. எல்லாம் ஆகாயமாகிய பரவெளியில் மறைந்து போகிறது. ஆனால் ஆகாயத்தின் அதிபதியான வியாழ பகவான் மிகுந்து நிற்கிறார். அவர் மூலமாகவே நாம் திருப்பாற்கடலிலுள்ள ப்ரம்மத்தை அடையவேண்டியதாகிறது. ஆகவே, அவர் வாசுதேவன் என்று குறிக்கப்படுகிறார். அதாவது, தெய்வத்தை அடையும் வாயிற்படி வியாழபகவானே. அதுவே பரம்பொருளின் வாகனமாகிய கருடன், லோககுருவாகிய பிரகஸ்பதி, கடைஉள் ஆகிய ஐயன். இனி நாராயணன் என்ற சொல்லின் அர்த்தத்தைக் கவனிப்போம். சாதாரணமாக பண்டிதர்கள் அதன் கருத்துரையைச் சொல்வது வழக்கம். நாரன்+அயனன்

என்று அதைப்பிரித்து கடலில் இருப்பவர் என்று அர்த்தம் சொல்லுவார்கள். அதாவது, பங்குனி மாதமாகிய மீனராசிக்கு அப்பால்இருப்பவர் என்ற கருத்தை வெளியிடுவார்கள். அதுவும் பொருத்தமானதே. நாராயணன் என்ற பெயரின் பதங்களைப் பிரித்து நாம் அர்த்தம் பார்த்தால், அது இன்னம் நன்கு தெளிவுபடும். நா+ராயன்+அணன் என்று அதைப் பிரிக்க வேண்டும். நா+ராயன் என்பது நாக்கிற்கு ராஜனாகிய வியாழனைக் குறிக்கிறது. அணன் என்பது அணிமையிலிருப்பவன் என்ற பொருளைத் தருகிறது. அணிமை என்றால் சமீபம். எனவே, நா ராய அணன் என்பது வியாழ பகவானுக்கு சமீபத்திலிருப்பவன் என்ற பொருளைத் தருகிறது. ஆகாய வெளிக்கு காதும், நாக்கும் இருப்பதாகச் சொன்னோமல்லவா. அந்த நாக்கு பரம் பொருளின் நாக்காகிறது. அது கடைசிக் கிரகமான வியாழ பகவான் மூலமாய் வருகிறதாகையால், அவரை வாக்பதி, அல்லது, நாராயன் என்று குறிக்கின்றனர். கடைசி முடிவான பரவெளிக்கு அப்பால் அதற்கருகில் இருப்பவன் என்பதே நா ராய அணன் என்பதன் கருத்து. இந்தக் கருத்தே வேதத்தின் கருத்து; இது சாஸ்திரோக்தமாகவும், பகுத்தறிவிற்கு ஒத்ததாகவும் இருக்கிற தென்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. சைவர்கள் திருநாவிற்கரசு என்று பெயர் வைத்துக்கொள்ளுகிறார்களானாலும், அதுவும் சிவனுக்கே உரிய பெயரென்கிறார்கள். திருநா என்றால் பரம்பொருளின் நாக்கு, அரசு அல்லது ராயன் என்றால் அந்த நாக்கு ஸ்தானத்திற்கு அதிபதி, திருநாவிற்கரசு என்பதும் நாராயன் என்பதும் ஒரே கருத்துடைய சொற்கள்; இரண்டும் வியாழபகவானைக் குறிக்கின்றன. நாராயன் என்பதோடு அணன் (அணிமையிலிருப்பவன்)

என்பதைச் சேர்த்தால், அது பரம்பொருளை மிகத் தெளி வாகக் குறிக்கிறது. பரவெளியில் பரம்பொருளின் வாக்கு இருப்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறதாகையாலும், அதன் அதிபதி வியாழனாதலாலும் அந்த வியாழனுக்குள் தான் பரம்பொருள் சான்னித்தியமா யிருக்கிறாரென்பது ஆக்ஷேபனைக் கிடமில்லாத கொள்கை யல்லவா. இதே பொருளைத் தாயுமானவர் ஒரு பாடலில் எப்படி அமைத்தி ருக்கிறாரென்பதைப் பாருங்கள் :

நாதவடிவாகிய மகாமந்த்ர ரூபியே
    நாதாந்த வெட்டவெளியே
நற்சமயமான பயிர் தழைய வருமேகமே
    ஞானவானந்த மயிலே
வாதமிடும் பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
    மகிமைபெறு பெரிய பொருளே.
வரைராஜனுக் கிருகண் மணியாயுதித்த மலை
    வளர் காதலிப் பெண் உமையே.

இந்தப் பாடல் உமாதேவியைக் குறித்துப் பாடப்பட்டது. சப்தம், ஞானம், ஆநந்தம் மூன்றும் நிறைந்த வெட்ட வெளியே உமாதேவி என்று தாயுமானவர் குறிக்கிறார். இந்த உமை ஹிமவானுடைய புத்திரியாம்; சிவனுடைய மனைவியாம். இதிலடங்கிய கருத்துகள் வானசாஸ்திர விதிகளோடு பொருத்தத் தக்கனவாகத் தோன்றவில்லை. நாம் மேலே குறித்தபடி ஆகாயவெளிக்கு, சப்தம், காது, நாக்கு ஆகிய மூன்று இந்திரியங்களும் உண்டு. அந்த ஆகாயவெளிக்கு அதிபதி வியாழபகவான்; அவர் காலபுருஷ னுடைய மூளையாதலால், ஞானம் அவர் மூலமாகவே வெளிப்படுகிறது. அவருக்கு அருகிலிருப்பவரே பரமாத்மா வாகிய நாராயணன். நான் மேலே காட்டிய அட்டவணை

யில் வியாழ பகவானைக் குறிக்க ஏற்பட்டுள்ள குறி நீள் வட்டம். அதுவே வடகலை வைஷ்ணவர்களுடைய நாமத்தின் குறி. நாமம் என்ற சொல்லைப் பிரித்தால் நா + ஆமம் என்று பிரிகிறது. பரமாத்மாவினுடைய நாக்கின் ஆம ரூபம் என்ற பொருளை அது தருகிறது. ஆமம் என்றால் பசுமையானது அல்லது பளிச்சென்று தெரிவது என்பது பொருள். நா + ஆமம் என்றால், பரம்பொருளின் அவ்வியக்தமான நாக்கை வியக்த ரூபத்தில் காட்டுவது என்பது பொருள். வடகலை நாமத்தின் கீழ்ப்பாகத்தை நாக்கின் நுனியாக பாவித்து, முழு வடிவத்தையும் பார்த்தால், அது ஒரு நாக்குபோலவே தோன்றும். உள் நாக்கு முதலியவை மேல்பாகத்தில் தொக்கி இருப்பதாக எண்ணிக் கொள்ளவேண்டும். நாமத்தின் நடுவிலிருக்கும் ஸ்ரீசூர்ணம் மஞ்சளாகவே இருக்க வேண்டுமென்று கருதி வைதிக வைஷ்ணவர்கள் அதையே இடுவது வழக்கம். வியாழபகவானுடைய நிறம் மஞ்சளானதால், அதைச் சரியானபடி குறிப்பதற்கே மஞ்சளை இடுவது. அது அதிக சிவப்பாக இருந்தால், செவ்வாயைக் காட்டுமாதலால், அதை வைதிகர்கள் ஆக்ஷேபிப்பது வழக்கம். தென்கலை வைஷ்ணவர்களுடைய நாமம் அரைச் சதுர வட்டமாதலால், அது சனி பகவானுடைய குறி. சனிக்கு மகரமும் கும்பமும் ஆக்ஷி ஸ்தானங்கள். அவைகள் காலபுருஷனுடைய முழங்கால்களும் கணைக்கால்களு மாகின்றன. அவர்கள் காலபுருஷனாகிய பிரம்மாவின் கால்களை நெற்றியில் தரிக்கின்றனர். பிரம்மாவின் அடிப் பாதம் மீனராசி. அதன் ஆக்ஷி வியாழ பகவானுடையது. வடகலை நாமம் காலபுருஷனாகிய பிரம்மாவின் அடிப்பாதங்க ளாகின்றன. இவ்வளவே நான் இப்போது வைஷ்ணவர்களைப் பற்றி உங்களுக்குச்

சொல்ல விரும்புவது. நான் பேசுவதை நிறுத்து முன் இன்னம் ஒரே ஒரு விஷயத்தைக் குறிக்க விரும்புகிறேன். நம் ஆதிசங்கரருடைய காஞ்சி காமகோடி பீடத்திற்கு **இந்திர சரஸ்வதி** பீடமென்றும் பெயர். இந்திர சரஸ்வதி யென்பது சுக்கிரனாகிய அசுர குரு வென்பதை மேலே காட்டிய அட்டவணையில் நீங்கள் கண்டு கொள்ளலாம். அது கால புருஷனுடைய இந்திரிய ஸ்தானம். அந்த தெய்வத்தை வைத்துப் பூஜிப்பது இம்மையின் சுக போகங்களைக் கருதியே யன்றி வேறல்ல. அதன் ஆக்ஷி ஸ்தானங்கள் ரிஷபமும், துலாமும். ரிஷபவாகனத் திருவிழா மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகிற தென்பதை நான் முன்னரே தெரிவித்தேன். துலா ராசியாகிய ஐப்பசி மாதத்தில் கந்த சஷ்டி உத்சவம் நடக்கிறது. கந்தன் என்றால் இந்திரியத்தின் தெய்வம் என்பது பொருள். கந்தனை சுக்கிரமணியன் என்று பாமர ஜனங்கள் குறிக்கிறார்கள். ஐப்பசி மாதம் மழை உண்டாகும் மாதம். சுக்கிரனுக்கு மழைக்கோள் என்பது ஒரு பெயர். அதுவும் சந்திரனும் தண்ணீருக்கு அதிபதிகள். துலா ராசி கால புருஷனுடைய வலது முன்கை யாகிறது. அதாவது,சகல போகங்களையும் கொடுக்கும் கை. முகம்மதியர்கள் தங்கள் தெய்வத்தை வெள்ளிக்கிழமை யன்று மிக முக்கியமாகத் தொழுகிறார்கள். அல்லாப் பண்டிகையில் வெள்ளியினால் ஆன கையை தெய்வமாக வைக்கிறார்கள். அப்போது ஆலி, தூலா என்ற நாமஸ்மரணைகளையே சொல்லி கோஷிக்கின்றனர். ஆலம் என்றால் தண்ணீர். ஆலி என்றால் தண்ணீர்க் கடவுள். தூலா என்றால் துலா ராசியின் ஆக்ஷிக் கடவுள். இந்த தெய்வம் இன்ன தென்பதை நீங்களே அட்டவணையில் கண்டுகொள்ளுங்கள். ஸ்மார்த்தர்களில் பெரும்பாலோர் சந்

திரப் பிறைபோல சந்தனத்தால் நெற்றியில் குறி தரிக்கின்றனர்; சந்திர மௌளீசுவரர் என்பதும் அவர்கள் தெய்வம். அதற்கு மூளிச் சந்திரன் அல்லது பிறைச் சந்திரன் என்ற அர்த்தம் ஏற்படுகிறது. முகம்மதியர்களுடைய அடையாளமும் பிறைச் சந்திரன். இவைகளின் சம்பந்தா சம்பந்தங்களை நன்றாய் விளக்க இப்போது அவகாசமில்லாமையால், இவ்வளவோடு நான் நிறுத்துகிறேன்.—என்று கூறி மன்மத பீட மகா யோகீசுவரர் அவ்வளவோடு தமது உபந்நியாஸத்தை நிறுத்தி எல்லோருக்கும் முடிவாக விடை கொடுத்தனுப்பிவைத்தார்.

மறுநாள் விடியற்காலையில் யோகீசுவரர் அந்த ஊரை விட்டுப் புறப்பட்டுப் போகவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டிருந்த தாகையால், மகா ஜனங்கள் அதைப்பற்றி பெரிதும் ஏக்கமும் விசனமும் அடைந்து அவ்விடத்தைவிட்டுப் போகவே மனமற்றவர்களாய்த் தயங்கித் தயங்கி இருந்து தவிக்கலாயினர். சிலர் தமது விசனப் பெருக்கை சகிக்கலாற்றமல் குழந்தைபோல் வாய்விட்டுக் கதறி யழுதனர். பலர் அந்த இரவு முழுதும் தூங்காமல் இருந்து, சாமான்களைக் கட்டும் விஷயத்தில் யோகீசுவரருடைய காரியஸ்தர்களுக்கு உதவி புரிந்தனர்.

ஸ்வாமிகளின் பரிவாரங்களில் ஒரு பாகம் அன்றைய பகலிலேயே அவ்வூரை விட்டுப் புறப்பட்டுப் போய்விட்டன. மறுநாள் விடியற் காலையில் மற்ற பரிவாரங்களோடும் பிருதுகளோடும் யோகீசுவரரும் பிரயாணமானார். அவர் அமர்ந்திருந்த தந்தப் பல்லக்கை பிராம்மணர்களே சுமந்து, மாறு கால்போட்டு, அப்புறம் இப்புறம் திரும்பி வையாளி நடை நடந்து ஹவோ ஹம்ஹவோ, ஹவோ ஹம்ஹவோ என்று படிப் படியாக ஸ்தாயிகளை உயர்த்தி தாளகதிப்படி ஆநந்த

கோஷம் செய்து, யோகீசுவரைப் பல்லக்கோடு தாலாட்டிக் கொண்டே சென்றனர். மேளம் பாண்டு முதலிய வாத்தியங்கள் பெருமுழக்கம் செய்து முண்ணணியில் சென்றன. வைதிகப் பிராம்மணர்கள் பூர்ண கும்பங்களை ஏந்தி ருத்ரம், சமகம் முதலிய மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு கோஷ்டி கோஷ்டியாகப் பின்னுல் வந்தனர். வெள்ளிக் கட்டியம் தாங்கிய கட்டியக்காரர்கள் பல்லக்கின் நான்கு மூலைகளிலும் நடந்து "ஸ்வாமீஜீ, எச்சரிக்கை பராக்" என்று அடிக்கடி ஜனங்களை எச்சரிப்பதும், இடையிடையில், யோகீசுவரரின் புகழைப்பற்றிய ஸ்லோகங்களைச் சொல்வதுமாய்ப் பாராக் கொடுத்துச் சென்றனர். திருச்சின்னங்கள் புரூம் புரூம் புரூம் என்று கூவி ஒலித்தன.

பெரிய பண்ணை ஐயரவாளும், இன்னம் இதர பிரமுகர்களும், பல்லாயிரக் கணக்கான விடுதி பிராம்மணர்களும், நூற்றுக்கணக்கான ஸ்திரீ ஜனங்களும் சூழ்ந்து வந்தனர். இப்படி வழியனுப்ப வந்த மகா ஜனங்கள் சுமார் இரண்டு மயில் தூரம் தொடர்ந்த பின் ரஸ்தாவிலேயே சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து யோகீஸ்வரரை நமஸ்கரித்து, அவருடைய கடைசி ஆசீர்வாதத்தைப் பெற்று தயங்கித் தயங்கி நின்று விஷ்ணு புரத்தை நோக்கி நடப்பதும் அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்ப்பதுமாய் நடந்து சகிக்கவொண்ணுத ஏக்கமும் மனவேதனையும் நிறைந்த மனத்தினராய்ச் சோர்ந்து தளர்ந்து தம் தம் வீடு போய்ச் சேர்ந்தனர். பெரிய பண்ணை ஐயரவாளும், அவருடைய மனையாளான பர்வதலக்ஷ்மியம்மாளும் அந்தக் கடைசிப் பாட்டோடு "அப்பாடா" என்று ஓய்ந்து விழுந்து போயினர். நமது பாரதப்போர் கூட பதினெட்டு தினங்களே நடந்தன. விஷ்ணுபுரத்

தில் நடந்த பகாசுர போஜனப் போர் சுமார் இரண்டு மாத காலம் தொடர்ச்சியாய் நடக்கவே, ஒவ்வொரு வேளையிலும் பல்லாயிரக் கணக்கான ஜனங்களுக்குத் தேவையான போஜன பதார்த்தங்களை நிமிஷக் கணக்கின்படி தருவித்து பங்கீடு செய்ததும், இராப்பகல் ஓயாமல் நடந்துகொண்டே யிருந்த யோகீஸ்வரருடைய பூஜை முதலிய சாங்கியங்களில் ஆசாரசீலமாயிருந்து கலந்து கொண்டதும், கையிலிருந்த பல்லாயிரக் கணக்கான பணத்தை எடுத்தெடுத்துச் செலவிட்ட பின் பலரிடம் பெரும் பெரும் தொகைகளைக் கைமாற்று வாங்கப் பாடு பட்டதும் பெரிய பண்ணை ஐயரவாளுக்கும் பர்வத லக்ஷ்மி அம்மாளுக்கும் மலை போன்ற பிரயாசையாய் முடியவே, அவர்கள் உள்ளுக்குள் நரகவேதனையை அநுபவித்த படியே இருந்தனரானாலும், தங்கள் குரு பக்திப் பெருக்கில் எதையும் பொருட் படுத்தாமல், சிரித்த முகம் மாறுதபடியே கடைசிவரையில் இருந்து, சகலமான காரியங்களையும் அபாரமான பொறுமையோடு நிர்வகித்து மலைபோலிருந்த அந்தப் பெரிய தேரை இழுத்து நிலையில் சேர்த்து விட்டுத் திரும்பி வந்து சேர்ந்தனர். யோகீசுவரர் போனதில், மூச்சுவிடுவதற்கும், ஓய்ந்து தலை சாய்த்துப் படுப்பதற்கும் தங்களுக்கு அவகாசம் கிடைத்ததை ஒரு விதத்தில் அவர்கள் எவருக்கும் கிட்டாத சொர்க்கபோகமாய்க் கருதினராளுலும், யோகீசுவருடைய தரிசனம் பூஜை முதலியவற்றின் ஆநந்தமும், புளகாங்கித பரவச இன்பமும் தமக்கு நின்றுபோனதைப் பற்றிய அபாரமான ஏக்கமும் மனவேதனையும் ஒரு புறத்தில் வதைத்துக்கொண்டே இருந்தன.

பண்ணை ஐயரவாளும், அவரது பத்நியும் அப்போதைக்கப்போது ஏகாந்தமாயிருந்து ஒருவரோ டொருவர் வேடிக்

கையாக சம்பாஷித்து இன்புறுவது வழக்கம். யோகீசுவரர் வந்து முகாம் செய்த இரண்டு மாத காலத்தில் அவர்கள் ஒருவரை யொருவர் அடிக்கடி பார்ப்பதற்கோ, ஏகாந்தமா யிருந்து குதூகலமாய்ப் பேசுவதற்கோ சந்தர்ப்பம் வாய்க்காமல் போய்விட்டது.

கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும், குழந்தை சுந்தரியோடு அந்த இரண்டு மாத காலமும் பண்ணையாருடைய மாளிகையிலேயே இருந்தனர். அவர்கள் முதன் முதலில் அந்த ஊருக்கு வந்த காலத்தில் குடும்ப சம்பந்தமான சில அபாயங்களை விலக்கும் பொருட்டு நெடுந்தூரத்திலிருந்து குதிரை வண்டியின் இரு புறங்களிலும் திரைகள் போட்டுத் தங்களை மறைத்துக் கொண்டு திருவையாற்றை நோக்கிச் சென்றதையும், அங்கிருந்த தங்கள் பந்து ஒருவரின் வீட்டில் மறைந்து கொண்டிருக்க எண்ணியதையும் கேட்ட பர்வத லக்ஷ்மி அம்மாள், தங்கள் வீட்டிலேயே அவர்கள் இருக்கும்படி செய்தாளென்று நாம் முன்னரே தெரிவித்தோம்.

அவர்களுக்கு எவ்விதமான அபாயங்கள் நேரிட்டன என்பதையும், அவர்களுடைய குடும்பவரலாற்றையும் நாம் இங்கு சுருக்கமாகத் தெரிவிப்ப தவசிய மாகிறது. சேலம் ஜில்லாவைச் சேர்ந்த நாமக்கல்லிற் கருகிலுள்ள ஒரு ஜெமீன் கிராமத்தின் சொந்தக்காரனான ஐயர் ஒருவர் தம் புத்திரரைப் படிப்பின் பொருட்டு சென்னையில் விட்டிருந்தார். அந்தப் புத்திரர் பி. ஏ. பி. எல். முதலிய பரீட்சைகளில் தேறி, வக்கில் உத்தியோகத்தில் அமர்ந்து சென்னையிலேயே இருந்து வந்தார். பல வருஷகாலம் வரையில் அவருக்கு வக்கீல் தொழிலில் அதிக வருமானம் கிடைக்க வில்லை

யாதலால், அவர் மாதா மாதம் தமது சொந்த ஊரிலிருந்து பெரும் பெரும் தொகைகளை வரவழைத்து வைத்துக் கொண்டு தம் கௌரதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தாயிற்று. அவர் புரசைப்பாக்கத்தில் ஒரு பெரிய பங்களாவை வாடகைக்கு எடுத்துக் கொண்டு, ஏராளமான சிப்பந்திகளை அமர்த்தி, மோட்டார் வண்டி முதலிய பெரிய மனித அங்கங்களை வைத்துக்கொண்டு, தாம் பெரிய ஜெமீன் தார் என்பதைக் காட்டிக்கொண்டு, அந்த அந்தஸ்திற்குத் தக்கபடி ஆடம்பரமாகச் செலவுகள் செய்து கொண்டிருந்தார். அவருடைய தந்தை அதுவரையில் சேர்த்துப் பல இடங் களில் வட்டிக்குக் கொடுத்திருந்த தொகைகளை யெல்லாம் வாங்கி வாங்கி அனுப்பி ஓய்ந்து போய், அதே வருஷமா யிருந்து நோயில் பட்டு இறந்துபோனார்.

புத்திரராகிய வக்கீல் ஜெமீன் கிராமத்தின் [illegible] மேல் பல இடங்களில் கடன்கள் வாங்கித் தமது பழைய போக்கிலேயே வியவகாரங்களை நடத்தி வந்தார். அவ ருடைய புத்திரரே நம் கிருஷ்ணமூர்த்தி ஐயர். ஜெமீன் கிராமத்தின்மேல் இனி கடன் கிடைக்காதென்ற நிச்சயம் ஏற்படவே, வக்கீல் தாம் அதற்குமேல் பணத்திற்கு என்ன செய்வது என்பதைப் பற்றி இராப் பகல் சிந்தனையிலாழ்ந் திருந்து கவலையுற்று கடைசியாக ஒரு யுக்தி செய்தார்.

சென்னை திருவல்லிக்கேணியில் பிரபலமான ஒரு பாங் கியின் சொந்தக்காரர் **எஸ். ஆர். ஐயர்** என்ற பெயருடை வர் ஒருவர் இருந்தார். அவர் நகைகளின்மேல் மாத்திரம் கடன் கொடுத்து வந்தார். அவருடைய கைவசத்தில் சுமார் பத்து லக்ஷம் ரூபாய் பெறத்தக்க நகைகளும் பண மும் இருந்தன. அவரும் பங்களா, மோட்டார் வண்டி

முதலிய பெரிய மனித அங்கங்களோடு மிக கம்பீரமான வாழ்க்கை நடத்தி வந்தார். அவருடைய பூர்விக ஊர் எது என்பதையோ, அவருக்கு அவ்வளவு அபாரமான சொத்துக்கள் எங்கிருந்து எப்போது கிடைத்தன வென்பதையோ அறிந்தவர் எவருமில்லை. அவருடைய வயது சுமார் ஐம்பதிருக்கலாம். அவர் மிக ஆச்சரியமான சாமர்த்தியமும் புத்திசாலித் தனமும் வாய்ந்தவர். இதர மனிதர்களிடம் அவர்களுடைய தராதரம் நோக்கம் முதலியவற்றின்படி நடந்து, தமக்கு எப்போதும் லாபமே ஏற்படும் படியான வகையில் வியவகாரங்களை நடத்துவதில் அவரை நாம் கரடகதமனகரென்றே மதிக்க வேண்டும். தமக்கு ஒருவரிடம் ஒருகாரியம் ஆகவேண்டியதாயிருந்தால், அவர் அந்த மனிதரிடம் தங்கக் கம்பி போல நடந்து, தேன் சொட்டச் சொட்டப் பேசி, அவருக்கு ஒரே நிமிஷத்தில் பட்டுக் குல்லா போட்டு விடுவார்; அவரிடம் எவரேனும் ஓர் அநுகூலத்தை எதிர்பார்த்து வந்தால், அவரைப் பல வகையில் புரளி செய்து, இடுப்பை முறித்து மட்டந்தட்டி அவர் அவமான மடைந்து ஓடிப் போம்படி செய்வார். தாம் அதிகாரம் செய்யத் தக்க இடங்களில், அவரை நாம் கையில் பிடிக்க முடியாதபடி ஒரே துள்ளலாய்த் துள்ளிக் குதித்து ஆகாயம் வரையில் பறப்பார்; அடங்கிப் போக வேண்டிய சந்தர்ப்பங்களில், பெட்டிப் பாம்பாய் நடந்து கொள்வார்.

அவருக்கு தேவியும், பழனியாண்டவரும் பிரத்தியக்ஷ தெய்வங்கள். அவர் தம்முடைய பங்களாவில் ஒரு பெரிய ஹாலைப் பூஜைமண்டபமாகவே நிரந்தரமாய்ச் செய்து அதில் தேவி, பழனியாண்டவர் ஆகிய தெய்வங்களின் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்திருந்தார். அவைகளைத் தவிர எங்

கும் சுவாமிகளின் படங்களையே நிரப்பி வைத்து, அந்த ஹாலை ஓர் அரசனுடைய கொலுமண்டபம்போல் அற்புதமாக அலங்கரித்திருந்தார். விக்கிரகங்களுக்கும் படங்களுக்கும் அவர் அணிவித் திருந்த ஆபரணங்களின் கிரயமே சுமார் ஐம்பதாயிரம் ரூபாய் ஆகலாமென்றால், மற்ற அலங்காரச் சிறப்புகளை வாசகர்களே சுலபத்தில் யூகித்துக் கொள்ளலாம்.

அந்த ஹாலிலிருந்த விக்கிரகங்களுக்கு இரண்டு வேளைகளிலும் அபிஷேகம், பூஜை முதலியவைகளை நடத்தி வைக்க ஒரு சாஸ்திரியார் பிரத்தியேகமாக நியமிக்கப்பட்டிருந்தார். அந்த சாஸ்திரியாருடைய குடும்பத்தினர் வசிப்பதற்கு எஸ். ஆர். ஐயர் தம் பங்களாவின் ஒருபக்கத்தில் ஒரு சிறிய வீடு கட்டிக்கொடுத்திருந்ததன்றி சாஸ்திரியாருக்கு இரண்டு வேளைகளிலும் இலவச போஜனமும் மாதச் சம்பளம் 20 ரூபாயும் அளித்து வந்தார். எஸ். ஆர். ஐயர் ஒவ்வொரு நாளும் இரவு ஒருமணி, இரண்டு மணி வரையில் கண் விழித்திருந்து சீமை மதுக்களை ஏராளமாகப் பருகிப் பல விதமான லீலா விநோதங்களில் ஈடுபட்டிருந்து காலை சரியாகப் பத்து மணிக்கு எழுந்து வருவார். வந்தவுடன் ஸ்நானம் செய்து மடி வஸ்திரம் தரித்து, நெற்றியில் சந்தனம், குங்குமம், சாந்து முதலியவற்றைப் பிரமாதமாக அணிந்து கொண்டு, பூஜை மண்டபத்திற்குட்போய் மங்களாசனம் செய்து விட்டுத் தம் போஜன காரியத்தை முடித்துக் கொண்டு பாங்கிக்குப் போய் விடுவார். பகல் முழுதும் அவர் பரம வைதிக சிகாமணியாய் விளங்குவார்; அவருடைய நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு இல்லாத சந்தர்ப்பமே ஏற்பட்டதில்லை. இரவில் மிக ரகஸ்யமாய் நடந்த அவருடைய திருவிளையாடல்களை

அவருக்கு அந்தரங்கமாயிருந்த சிலரே அறிந்திருந்தனராகை யால் மற்ற பொதுஜனங்கள் அவரை ஒரு யோகீசுவரர் என் றே மதித்து வாய் ஓயாமல் கொண்டாடியபடி இருந்தனர்.

மடாதிபதிகள் முதலிய எதிகள் எவரேனும் சென் னைக்கு விஜயம்செய்தால், நம் எஸ். ஆர். ஐயரே முன்னின்று ஏராளமாகப் பணத்தைச் செலவிட்டு அவர்களைத் தம் பங்களாவிற் கழைத்துப் போய், பாத பூஜை முதலியவை நடத்தி உபசரித்து அனுப்பி வைப்பார். அவர்கள் இவ ருக்கு குருபக்த சிகாமணி, வைதிக தர்ம பரிபாலன கேசரி முதலிய ஆடம்பரமான பட்டங்களை வழங்கிவிட்டுப் போவார்கள்.

அத்தகைய அற்புதகுண புருஷருடைய புத்திரியே நம் ஸ்வர்ணம்பாள். அவளைத் தவிர அவருக்கு வேறு சந்ததி யில்லை. அவள்கூட அவருடைய வளர்ப்புப் பெ ண்ணே என்றும் சிலர் ஐயமுற்றனர். ஆனாலும் அவரு டைய அபார சம்பத்து முழுதும் அவளுக்கு வந்து சேரு மென்ற பிரஸ்தாபம் பரவி யிருந்ததாகையால், அவளைத் தம் தம் பிள்ளைக்குத் தரவேண்டு மென்று எத்தனையோ பிரபுக்கள் அவருக்குத் தூதனுப்பியபடி இருந்தனர். அவர்களுள் நம் கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய தந்தையான வக்கீலும் ஒருவர். அவர் பெருத்த கடனாளியாயிருந்தா ரென்றும், தமது ஆடம்பரச் செலவுகளுக்குத் தேவை யான பெருந் தொகையை அடையும் வழியைப் பற்றிச் சிந் தனை செய்து கொண்டிருந்தாரென்றும் நாம் முன்னர் தெரி வித்தோம். அவருடைய பங்களாவும் புரசைப்பாக்கத்தில் அடுத்திருந்தமையால், இவருடைய வெளிப் பகட்டைக் கண்டு அவரும், அவருடைய வெளிப் பகட்டைக் கண்டு

இருவரும் பிரமித்து ஒருவரைப் பற்றி மற்றவர் மிகப் பெருமையான அபிப்பிராயங் கொண்டிருந்தனர்.

பெரிய பாங்கரான எஸ். ஆர். ஐயருடைய ஏக புத்ரியான ஸ்வர்ணம்பாளைத் தம் புதல்வனுக்கு மனையாளாக்கி விட்டால், தாம் குபேர பட்டணத்தையே குத்தகைக்கு எடுத்து விட்டது போலத் தம் நிலைமை மாறிப் போகும் என்று வக்கீல் தமக்குள் நினைத்துப் பகல் கனவு கண்டு ஆகாயக் கோட்டை கட்டத் தொடங்கினர். பெண்ணைப்பற்றி எஸ். ஆர். ஐயருக்குத் தூதனுப்பிய மற்ற சீமான்களுக்கு இல்லாத ஒரு பிரத்யேகமான அநுகூலம் இந்த வக்கீலுக்கு இருந்தது. அதாவது இருவருடைய பங்களாக்களும் அடுத்தடுத் திருந்தமையால், வக்கீல் பெரிய ஜெமீனுக்கு உடையவரென்றும், அபார சம்பத்தில் கிடந்து புரளுகிறார் என்றும் எஸ். ஆர். ஐயர் தூரப்பார்வையிலிருந்தே மதிப்பிட்டு விட்டார். அதுவுமன்றி வேண்டுமென்றே வக்கீல் தமது புத்திரனை கிருஷ்ணமூர்த்தியை ஏதேனும் ஒரு சாக்கின்மேல் அடிக்கடி எஸ். ஆர். ஐயருடைய பங்களாவிற்கனுப்பி, கிருஷ்ணமூர்த்தி அவருடைய திருஷ்டியில் பட்டுக்கொண்டே இருக்கும்படி செய்தாராதலால், அது அவருடைய மனதில் பெரிய மாறுபாட்டை உண்டாக்கிக் கொண்டே வந்தது. கிருஷ்ணமூர்த்தி ஐயர் தத்ரூபம் மன்மதன் போலவே இருந்தாராதலாலும், அவர் அன்னிய மனிதருக்குமுன் புதுச் சோபனப் பெண்போல நாணிக் குனிந்து மான்குட்டி மருளுவது போல பயந்து பயந்து நடந்துகொள்ளும் அடக்கமான சுபாவமுடையவராதலாலும், அவருடைய மேனியழகையும், முக வசீகரத்தையும், ஒழுக்க விநயத்தையும் கண்டு மயங்காதவர் எவருமில்லை. ஆகவே, எவருக்கும் மசியாத

எஸ். ஆர். ஐயர் அவருடைய மோகனாஸ்திர வலையிற் சிக்கி, அவருடைய வசிகரத் தன்மைக்கு அடிமையாய்விட்டார். அதுவுமன்றி பங்களாவிற்குள் ளிருந்த ஸ்வர்ணாம்பாள் கிருஷ்ணமூர்த்தி ஐயர் அங்கே வரும்போதெல்லாம் அமிதமான நாணல் கோணல்களை வகித்து ஜன்னல்கள், கதவு மூலைகள், இண்டு இடுக்குகள் முதலிய மறைவிடங்களில் ஒளிந்து நின்று, திருட்டுத்தனமாக அவரைப்பார்ப்பதும், அவர் பார்த்தால் புன்னகையோடு தலையைக் குனியவைத்துக்கொள்வதுமாய் நடிக்கத் தொடங்கியதன்றி, தன் தந்தையோடும் தாயோடும் சம்பாஷித்த காலங்களில், கிருஷ்ணமூர்த்தி வந்ததைப் பற்றிய பிரஸ்தாபத்தைக் கிளப்பி, என்ன காரியத்திற்காக அவர் தமது பங்களாவிற்கு வந்தார் என்பது போன்ற தகவல்களை நிரம்பவும் கனிகரமாக விசாரித்துத் தெரிந்து கொள்வாள். எஸ். ஆர். ஐயர் அந்த இலாகாவில் முதல் வகுப்பில் தேறிய பழம் பெருச்சாளி யாகையால், அவளுடைய மனோவிகாரத்தை அவர் மிக சூட்சுமத்தில் தெரிந்து கொண்டார்.

அவருடைய மனதிலும் அவளைக் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கே வாழ்க்கைப் படுத்திவிடலாம் என்ற எண்ணம் ஏற்கனவே தோன்றி நிலைத்துக் கொண்டே இருந்ததற்கு அநுசரணையாகவே, ஸ்வர்ணாம்பாளும் நடந்துகொண்டதைக் காண, அதுவே முடிவான ஏற்பாடு என்று அவர் தமக்குள் தீர்மானித்துக்கொண்டு, அதைத் தந்திரமாய் அநுகூலப்படுத்திக் கொள்வதற்கான சந்தர்ப்பத்திற்காகக் காத்திருந்தார். தானே முதலில் அந்த விஷயத்தைப் பற்றி வக்கீலிடம் பிரஸ்தாபிப்பது அநுசிதமானதென்று கருதிய எஸ். ஆர். ஐயர் வேறொரு மனிதரைத் தூண்டி, அவர் மூலமாக விசையை முடுக்கிவிட்டார். அந்த மனிதர் தற்செயலாய் வக்கீ

லைக் கண்டு பேசுகிறவர்போல் நடித்து, எதிரில் உட்கார்ந்திருந்த கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்துவிட்டு அப்போதே நினைத்துக்கொண்டவர் போல் காட்டி, "நம்முடைய பிள்ளையாண்டானுக்குக் கல்யாணம் பண்ண வயசாய் விட்டதே. ஏன் பேசாமலிருக்கிறீர்கள்? நீங்கள் பெண்ணுக்காக கட்டு சாத மூட்டை கட்டிக்கொண்டு அதிக தூரம் போகவேண்டிய அவசியம்கூட இல்லைபோ லிருக்கிறதே. இதோ பக்கத்தில் பெரிய கோடீசுவரருடைய பெண் தங்கப் பதுமைபோலத் தயாராயிருக்கிறதே. இருவருக்கும் இருவரே ஜோடி சொல்லத் தகுந்தவர்கள். அந்தப் பெண்ணைக் கட்டி விடுகிறதுதானே?" என்றார்.

வக்கீல், "அடேயப்பா, நானெங்கே, அவரெங்கே. அவர் படீட படீட கைகளாய்ப் பார்க்கக்கூடியவரல்லவா. நம் வரையில் அது எட்டப் போகிறதா" என்றார்.

அந்த மனிதர், "என்ன நீங்கள் இப்படிப் பேசுகிறீர்களே. அவரவருடைய மகிமை அவரவருக்குத் தெரியாதென்று சொல்வது சரியாய்ப் போய்விட்டது. நீங்கள் மனசு வைத்தால் ஆகாத காரியங்கூட உண்டா? யோக்கியதா பக்ஷத்தில் நீங்கள் மாத்திரம் இளப்பமா என்ன? எந்த விதத்தில் நீங்கள் அவருக்குச் சளைத்தவர்கள். அவருக்கு ஐம்பது லக்ஷம் ரூபாய் பெறுமான பாங்கியிருந்தால், உங்களுக்கு அதற்குமேல் அதிகம்பெறத்தக்க ஜெமீன் இருக்கிறது. அதோடு எப்போதும் காமதேனுவைப்போல் பணத்தைச் சொரியும் வக்கீல் உத்தியோகமும் இருக்கிறது. அதோடு பெரிய அந்தஸ்து இருக்கிறது. உங்களுக்கு சம்மதமாயிருந்தால், சொல்லுங்கள். நான் போய் அவரிடம் கேட்டுப் பார்க்கிறேன். நீங்கள் அவரிடம் இதைப்பற்றி

நேரில் பிரஸ்தாபிக்க லஜ்ஜைப்படலாம். நீங்கள் ஒரு வார்த்தை சொல்லுங்கள். நான் போய் முயற்சி செய்து பார்க்கிறேன்" என்றார்.

அத்தகைய அநுகூலமான சந்தர்ப்பமும் வாய்க்குமா என்று ஆவலுற்று வாயைப் பிளந்துகொண்டிருந்த வக்கீல் அதற்கு உடனே இணங்குவது அநுசிதமானதென்று கருதி லகுபிகுவாக நடந்து தயங்கித் தயங்கி அதற்குச் சம்மதியளித்தார். அந்தத் தூதர் உடனே எஸ். ஆர். ஐயரிடம் வந்து, வக்கீலுக்கும் தமக்கும் நடந்த சம்பாஷணையைத் தெரிவிக்க, அவரும் தந்திரமாகவே நடந்து, தாம் அந்த விஷயத்தில் ஆத்திரப்படாதவர்போல் கடைசிவரையில் நடித்து, அந்த விவாகத்தை நிறைவேற்றிக் கொண்டார்.

விவாக காலத்தில் வக்கீலுக்கு ரொக்கமாகப் பதினயிரம் ரூபாய் கைமேல் கிடைத்ததாகையால், அதனுல் அவருடைய படாடோப காலக்ஷேபம் சில மாதகாலம் வரையில் நடந்தேறியது. எஸ். ஆர். ஐயருடைய சொத்துகள் முழுமைக்கும் ஸ்வர்ணும்பாளே உரியவளென்பது பிரத்தியக்ஷமாய்த் தெரியவே, மாப்பிள்ளை தங்கள் பங்களாவிலேயே இருந்துவிட வேண்டுமென்ற பிரஸ்தாபம் நடக்க, கிருஷ்ணமூர்த்தி ஐயர் இரட்டிப்புச் சந்தோஷத்துடன் அங்கேயே இருந்து, தம்மனையாளோடு ஆநந்தமாய்க் காலங்கழிக்கத் தொடங்கினர்.

அவ்வாறு அவர் பெருத்த ஐசுவரியத்தில் கிடந்து புரண்ட சமயத்தில், ஏராளமான சொத்துக்களைத் தெரிந்தும் தெரியாமலும் அபகரித்துத் தம் தந்தைக்கு அனுப்பி அவரைக் காப்பாற்றி வந்தார். அப்படிச் சில வருஷகாலமிருந்த சந்தர்ப்பத்தில் ஸ்வர்ணும்பாளுக்கு ஒரு பெண்

குழந்தை பிறந்தது. அதற்கு அவர்கள் சுந்தரி என்று பெயர் வைத்தனர். சுந்தரியின் அழகு எத்தகையதென்பதை நாம் ஏற்கனவே நன்றாக விளக்கி இருக்கிறோம். அதன் அற்புத தேஜஸைக் காணக்காண, எஸ். ஆர். ஐயர், அவருடைய மனைவி, கிருஷ்ணமூர்த்தி ஐயர், ஸ்வர்ணம்பாள், இன்னும் மற்றுமுள்ள சிப்பந்திகள் முதலிய எல்லோரும் பூரித்துப் பொங்கி அமோதோடு சதாகாலமும் கொஞ்சிக் குலாவியபடி அதை மாறி மாறித் தூக்கிச் சீராட்டிப் பாராட்டி வந்தனர்.

எஸ். ஆர். ஐயரின் குபேரச் செல்வத்தினால் அந்தக் குடும்பத்தாருக்கு ஏற்பட்ட அபார சந்தோஷசுகங்களைக் காட்டிலும் சுந்தரியின் விளையாட்டுகளும் மழலை மொழிகளும் ஆயிரமடங்கு அதிகமான ஆநந்த குதூகலத்தை உண்டாக்கின. எல்லோருக்கும் சுந்தரி விலைமதிப்பற்ற பொக்கிஷம்போல் விளங்கினாள்.

கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய தாய் தந்தையர் கூட ஒவ்வொரு நாளைக்கு ஒரு தடவையாகிலும் அங்கு வந்து சுந்தரியைத் தூக்கிச் சீராட்டாமல் போகமாட்டார்கள். அவள் பிறந்த பிறகு எஸ். ஆர். ஐயருடைய பாங்கியின் வருமானமும் அபாரமாய்ப் பெருகிப் போனதாகையால், சுந்தரி நிரம்பவும் அதிர்ஷ்டசாலி என்று எல்லோரும் அடிக்கடி வாய்விட்டுக் கூறி அதுபற்றியும் அவளைப் பன்மடங்கு அதிகமாய்ச் சீராட்டிக் கொண்டாடியதன்றி, அடிக்கடி திருஷ்டி தோஷம் கழித்து, அவளுக்காக சாஸ்திரிகளைக்கொண்டு வெள்ளி செவ்வாய்க் கிழமைகளில் முறையே அம்பாளுக்கும், பழனியாண்டவருக்கும் சகஸ்ர நாம அர்ச்சனைகள், விசேஷ ஏற்பாடுகள் முதலியவற்றை

விமரிசையாக நடத்தினர். அவ்விதமான சீராட்டுகளும், சடங்குகளும் சுந்தரிக்கு ஐந்து வயதாகும் வரையில் நடந்துவந்தன. எஸ். ஆர். ஐயருடைய பாங்கி வர்த்தகமும் அமோகமாய்ப் பெருகிப்போயின. அவர் அமிதமான ஆநந்தத்தினால் பூரித்து ஒன்றுக்கு நான்கு பங்காய்ப் பொதிர்த்து தொந்தி தொப்பைகள் பெற்று வடிவத்தில் பூதம்போல் மாறிப்போய் விட்டார்.

நிலைமை அப்படி இருந்த காலத்தில், திடீரென்று ஒரு முக்கியமான சம்பவம் நிகழ்ந்தது. அதுவரையில், எஸ். ஆர். ஐயர் புரசைப்பாக்கத்திலிருந்த தமது பங்களாவில் தம் போஜனத்தை முடித்துக்கொண்டு, மோட்டார் வண்டியில் உட்கார்ந்து திருவல்லிக்கேணியிலிருந்த தமது பாங்கிக்கி வந்தாரானால், இரவு பத்து மணிக்கே மறுபடி தம் பங்களாவிற்கு வந்துசேருவார். ஆனால் அதுவரையில் அவர் பாங்கியிலேயே இருக்க மாட்டார். பாங்கியின் அலுவல்கள் மாலை ஆறு மணியோடு முடிந்து போம். அதற்குமேல் அவர் கடற்கரைக்குப் போய்த் தமது மோட்டார் வண்டியை ஒரு பக்கத்தில் நிறுத்தி விட்டு, இரவு பத்துமணி வரையில் கடற்கரையில் அலைந்து திரிந்து பல நண்பர்களோடு உல்லாசமாய்ப் பொழுதைப் போக்கிவிட்டு, பங்களாவிற்கு வருவார்; வந்தால் போஜனத்தை முடித்துக்கொண்டு மேன்மாடம் போய் விடுவார். அங்கு என்னென்ன காரியங்கள் நடக்குமென்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம்.

இப்படி ஒரே மாதிரியாக நடந்துகொள்ளும் சுபாவமுடைய எஸ். ஆர். ஐயர் ஒருநாள் மாலை ஏழு மணிக்கே தமது மோட்டார் வண்டியை அபாரமான விசையோடு

ஓட்டிக்கொண்டு தம் பங்களாவிற்கு வந்து சேர்ந்தார். அவருடைய முகம் பெருத்த திகிலைக் காட்டியது. அவர் எவரோடும் பேசாமல் தமது சயன அறைக்குள் போய்ப் படுத்து விட்டார்.

அவர் அவ்வாறு வழக்கத்திற்கு மாறாக மாலையிலேயே வந்ததையும், அவருடைய கலவரமான தோற்றத்தையும், அவர் படுக்கையிற் படுத்துக்கொண்டதையும் கண்ட அவரது மனையாள், அவருக்கு தேக அசௌக்கியம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நினைத்துக் கவலைகொண்டு மிக விரைவாக அவரிடம் சென்று, விஷயத்தைக் கேட்க, அவர் எவ்வித மறுமொழியும் கூற மாட்டாமல் மருள மருள விழித்தபடி சிறிது நேரம் இருந்த பின், அவளை நோக்கி, "நம்முடைய விரோதி ஜெயிலிலிருந்து எப்படியோ தப்பித்துக்கொண்டு வெளியில் வந்து விட்டான். நம்மெல்லோருக்கும் இனி ஆபத்து சம்பவிப்பது நிச்சயம்" என்று திக்கித் திக்கிப் பேசினர்.

அவருடைய மனைவி திடுக்கிட்டு நடுங்கி, "ஹா, அப்படியா! அவன் ஜெயிலிலிருந்து வந்துவிட்டானு? எப்போது வந்தான்? அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்ருள்.

எஸ். ஆர். ஐயர்:—அவன் எப்போது வந்தானென்பது எனக்குத் தெரியாது. நான் வழக்கம்போல் கடற்கரைக்குப் போய் உலாவிவிட்டு ஒரு பெஞ்சியில் உட்கார்ந்திருந்தேன். எனக்குக் கொஞ்ச தூரத்தில் வேறு சிலர் நின்றுகொண்டிருந்தனர். துருக்கப் பக்கிரிபோல் உடுப்புகள் போட்டுக்கொண்டிருந்த ஒருவன் கொஞ்சதூரத்திற்கப்பால் நின்று, வேறு திக்கைப் பார்த்தபடி தனக்குத் தானே பைத்

தியக்காரன்போல உரக்கப் பேசிக்கொண்டிருந்தான். என் கவனம் அங்கு திரும்பியது. அவன் என்ன சொன்னுன் தெரியுமோ, "பாப்பார நாயி ஊருச் சொத்தைக் கொள்ளே யடிச்சு பாங்கி வச்சிருக்குதுடோய்! காலம் கிட்டிப்போச் சுன்னு சொல்லு போய். சீட்டுக் கிளிஞ்சி போச்சுடா பாப் பாரக்களுதே! கடைசிவரைக்கும் ஒத்தாசெ பண்ணினவனெ சயிலுக்கா அனுப்பறே! ஓங்க கருவெ அடியோடெ அறுத் துட்டு மறு வேலே பாக்கப்போருன் ஓம் பொஞ்சாதிக்கு ஆசை நாயகன்னு நெஞ்சுலெ வச்சுக்கடா நன்னிகெட்ட பன்னியே!" என்று தாறுமாருய்ப் பிதற்றிக்கொண்டிருந் தான். மற்றவர் அவன் பைத்தியக்காரன் என்று நினைத்து அசட்டையாக இருந்து விட்டனர். நான் அதை கவ னித்து அவனுடைய முகத்தை உற்றுப் பார்க்க, அவன் இன்னுன் என்பது எனக்கு உடனே விளங்கி விட்டது. நம் முடைய விரோதி அந்தமாதிரி வேஷம் போட்டுக்கொண்டு வந்து அந்த இடத்தில் எனக்காகக் காத்திருந்து, வேண்டு மென்றே அப்படிப் பயமுறுத்தினுனென்பது எனக்கு உடனே தெரிந்துபோய் விட்டது. எனக்கு உடனே பெரு த்த திகில் உண்டாய் விட்டது. நான் எழுந்து வந்துவிட வேண்டுமென்று நினைத்து நம் மோட்டார் வண்டியைப் பார்த்து இரண்டோரடி நடந்து வந்த சமயத்தில், அவன் தன் சட்டைக்குள் மறைத்து வைத்திருந்த பட்டாக் கத் தியை சரேலென்று இழுத்துப் பிடித்துக்கொண்டு என் கழுத்தில் குத்துவதற்கு இலக்குப் பார்த்துக்கொண்டு பாய்ந்து வந்தான். அதைக் கண்டு, பக்கத்திலிருந்தவர்கள் கும்பலாய் வந்து குறுக்கிட்டு அவனைப் பிடித்துக்கொண்டு, அவன் கத்தியைப் பிடுங்கிவிட்டனர். உடனே அவன் பைத்தியக்காரன்போல் சம்பந்தா சம்பந்தமின்றிப் பேசி

நாட்டியமாடத் தொடங்கினான். அவன் பித்துக்கொள்ளி யென்று மற்றவர் நினைத்துச் சிரித்தனர். அப்படியெல்லாம் அவன் பாசாங்கு பண்ணுகிறானென்பது எனக்கு நன்றாகத் தெரிந்தது. ஆனாலும், அதை நான் வெளியில் சொல்லவு மில்லை. அவன் இன்னான் என்பது எனக்குத் தெரியுமென்றும் நான் காட்டிக்கொள்ளவில்லை. சிலர் அவனைப் பிடித்துப் போலீஸாரிடம் ஒப்புவிக்கவேண்டுமென்றனர். "அவனுக்கு சித்தஸ்வாதீன மில்லைபோ லிருக்கிறது. விட்டுவிடுங்கள். போகட்டும்" என்று நான் சொல்லி, அவர்களை சமாதானப் படுத்திவிட்டு மோட்டாரை ஓட்டின சமயத்தில், அவன் வேறே திக்கைப் பார்த்தபடி, "ஐயா ரொம்ப தயாளப் பிரபு. நல்ல மனிசரு. ஆனக்கா, ஆளுங்க நாளைக்குள்ளற கூண்டோடெ கைலாஷத்துக்கு எல்லாரையும் அனுப்பிச் சுடப்போறானுவ. ஐயருக்கு மனசுலெ பயம் வாணுமின்னு காத்து மூலமாச் சேதி வருது. சீட்டுக் கிளிஞ்சு போச்சுது. கிளிஞ்சு போச்சுது. நல்ல காலம் பொறக்குது. நல்லகா லம் பொறக்குது. இந்தப் பட்டணத்தைப் புடிச்ச சனியன் ஒளிஞ்சு போவப்போவுது. நல்ல வாக்குச் சொல்லடி மூண்டே. இந்த அக்கினி மூலெலெ ஒரு விரோதி இருக்க றான். அவனாலெ, ஒரு குடும்பமே ஐயோன்னு போயிடப் போவுது. ஜெயம் பொறக்குது. ஜெயம் பொறக்குது. மோட்டாருக்காரனுக்கு அதிஷ்டம் வருது. அதிஷ்டம் வருது" என்று குடுகுடுப்பாண்டி மாதிரி பேசிக்கொண்டு அசட்டையாக அப்பால் போய்விட்டான். அவன் சொன்ன வார்த்தைகளின் குறிப்பை நான் தெரிந்துகொண்டு என் மோட்டாரை ஓட்டிக்கொண்டு விசையாக வந்துவிட்டேன். அதுதான் விஷயம். மற்றவர் அவனைத் தடுத்திருக்கா விட்டால், இந்நேரம் என் உயிர் போயிருக்கும். ஏதோ,

தெய்வ சங்கல்பத்தினால் நான் இப்போது திரும்பி வந்து சேர்ந்தேன். ஆனாலும், அவன் இனி சும்மா இருக்கிற வனல்ல. எந்த சமயத்தில் வந்து நம் எல்லோருக்கும் என்ன விதமான கெடுதலைச் செய்வானோ தெரியவில்லை.

**மனைவி** :— ஏன் நாம் போலீஸாருக்கு எழுதி, நம் பாங்கியிலும், இந்த பங்களாவிலும் சில போலீஸாரைக் காவலாக நியமிக்கும்படி கேட்டுக் கொண்டால் என்ன?

**எஸ். ஆர். ஐயர்** :— கேட்டுக் கொள்ளலாம். போலீஸார் சில தினங்கள் வரையில்தான் அப்போதைக்கப்போது வந்து பார்த்துக் கொண்டு போவார்கள். எப்போதும் நம்மோடு பல போலீஸார் இருப்பதென்றால், அது சாத்ய மானதல்ல.

**மனைவி** :— அப்படியானால் நாம் என்ன செய்கிறது?

**எஸ். ஆர். ஐயர்** :— நீங்கள் எல்லோரும் இந்த பங்களாவை விட்டுப் புறப்பட்டு எங்கேயாவது போய் ஒளிந்து கொள்ளுங்கள். நான் பத்துப் பதினைந்து கூலியாள்களையும் போலீஸாரையும் எனக்குத் துணை வைத்துக் கொண்டு சில தினங்கள் வரையில் இந்த ஊரில் இருந்து நம்முடைய சொத்துகளையெல்லாம் பந்தோபஸ்தாக வேறே பாங்கியில் வைத்துவிட்டு நீங்கள் இருக்கும் இடத்திற்கு வந்துசேரு கிறேன். அது வரையில் நீங்கள் பயப்படாமல் ஜாக்கிரதையா யிருங்கள்.

**மனைவி** :— நாங்கள் நம்முடைய மாப்பிள்ளையின் பங்களாவிற்குப் போய் ஒளிந்து கொண்டிருக்கலாமா?

**எஸ். ஆர். ஐயர்** :— அது உபயோகப்படாது. நீங்கள் இங்கே இல்லா விட்டால், பக்கத்து பங்களாவில்தான் இருப் பீர்களென்பது அவனுக்குத் தெரியும். எப்படியும் அவன் நீங்கள் இருக்கு மிடத்தைக் கண்டுபிடித்துவிடுவான்.

நீங்கள் இந்த ஊரிலேயே இருக்க வேண்டாம். இப்போதே நீ, மாப்பிள்ளை, ஸ்வர்ணாம்பாள், சுந்தரி ஆகிய நால்வரும், கையில் கொண்டுபோகக் கூடிய சொத்துக்களை எடுத்துக்கொண்டு ராத்திரி ரயிலிலேயே ஏறி, நாமக்கல்லிற்குப் பக்கத்திலிருக்கும் நம் மாப்பிள்ளையின் ஜெமீன் கிராமத்திற்குப் போய் விடுங்கள். அங்கே அவருடைய பெரியவர்களுக்குச் சொந்தமான ஜாகை இருக்கிறது. பல ஆள்களை உங்களுக்குத் துணையாகக் காவல் வைத்துக் கொண்டு அங்கே இருங்கள். நீங்கள் அங்கே இருப்பதாக இவன் சம்சயம் கொள்ளமாட்டான். இவன் அங்கே வந்தாலும், இவனுடைய ஆட்டம் அந்த ஊரில் பலிக்காது. அந்த ஊரில் உள்ள ஆள்கள் இவனைப் பலி போட்டுவிடுவார்கள். நானும் கூடியசீக்கிரம் நம் சொத்துகளை ஜாக்கிரதை பண்ணிவிட்டு அங்கே வந்துவிடுகிறேன் —என்றார்.

அது சரியான யோசனையென்று அவருடைய மனைவி ஏற்றுக்கொண்டு உடனே அவ்விடத்தை விட்டுப் போய் ஸ்வர்ணாம்பாள் முதலியோரைக் கண்டு, விஷயத்தை அவர்களுக்குத் தெரிவிக்க, எல்லோரும் ஆவேசங்கொண்டவர் போலக் கிளம்பி அங்குமிங்கும் ஓடித் தங்கள் தங்கள் கையில் அகப்பட்ட சொத்துக்களை எடுத்துப் பெட்டிகளில் வைத்துக்கொண்டு ரயிலுக்குப் போகப் பிரயாணமாயினர்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஒரு சிப்பந்தியைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பிவிட்டு, இன்னொருவனை வெளியில் அனுப்பி இருபது கூலியாள்களை அழைத்துவரச் செய்து, பாங்கிக் கட்டிடத்தையும், எஸ். ஆர். ஐயரையும் அவர்கள் காவல் காக்கும்படி செய்து, மற்றவர்களை அழைத்துக்கொண்டு இரகஸியத்தில் ரயில் ஸ்டேஷனுக்குப்போய்சேர்ந்தார்.

எஸ். ஆர். ஐயர் ஏராளமான ஆட்கள் தமது பாங்கிக் கட்டிடத்தையும், பங்களாவையும் மிக ஜாக்கிரதையாகக் காக்கும்படி செய்து, கோட்டைக்குள் இருப்பவர் போல் நிரம்பவும் பந்தோபஸ்தாக இருந்து வந்தார். அவருடைய பாங்கி, பங்களா ஆகிய இரண்டிடங்களிலும் பொருத்தப்பட்டிருந்த டெலிபோன் இயந்திரங்களுக்குப் பக்கத்திலேயே ஒவ்வொரு குமாஸ்தா இரவு பகல் பாராமல் எப்போதும் உட்கார்ந்திருந்தனர். ஏதேனும் விபரீதமான சம்பவம் நேர்ந்தால், உடனே போலீஸ் கமிஷனருக்கு அதைத் தெரிவிக்கும்படி எஸ். ஆர். ஐயர் இரண்டு டெலிபோன் குமாஸ்தாக்களுக்கும் கண்டிப்பான உத்தரவு பிறப்பித்திருந்தாராதலால் அவர்கள் எந்த நிமிஷத்தில் எவ்வித அபாயம் நேருமோ என்று சதாகாலமும் எதிர்பார்த்து, திகில் கொண்டு, நடுங்கிக் கலங்கியபடி இருந்து வந்தனர்.

எஸ். ஆர். ஐயர் பங்களாவிலிருந்து பாங்கிக்கும், பாங்கியிலிருந்து பங்களாவிற்கும் மோட்டார் வண்டியில் போன சமயங்களில், தமது வண்டியின் கதவுகளை மூடிக்கொண்டு பல ஆள்களோடு உட்புறத்தில் மறைவாக இருக்க, மோட்டார் ஓட்டி யொருவன் முன்னால் உட்கார்ந்து வண்டியை வாயுவேக மனோவேகமாய் ஓட்டிக் கொண்டு சென்றான்.

எஸ். ஆர். ஐயர், கட்டிடத்திற்குள்ளிருந்த சமயங்களில்கூட பலர் அவரைச் சுற்றிலும் எச்சரிக்கையாக இருந்து அன்னியர் எவரும் அருகில் நெருங்காதபடி பாராக் கொடுத்தனர். அவர் தமது கொடுக்கல் வாங்கல் வியாபாரத்தை மேற்கொண்டு நடத்தாமல், கையிருப்பில் இருந்த ஏராளமான சொத்துக்களைப் பெட்டிகளில் வைத்துப் பூட்டி அரக்கு முத்திரைகள் இட்டு, அவற்றை இம்பீரியல் பாங்கிக்கு அனுப்பி, அவ்விடத்தில் பத்திரப்படுத்தத்

தொடங்கினர். அவ்வாறு பெட்டிகள் யாவும் வெளியேறிய தகவலை எவரும் தெரிந்து கொள்ளாதபடி தினம் தினம் சில சிலவாக இரகஸியத்தில் யாவற்றையும் அப்புறப்படுத்தலானர்.

அவர் மேலும் ஒரு வாரகாலம் தாம் சென்னையிலிருந்து, தமது சகலமான சொத்துக்களையும் இம்பீரியல் பாங்கியில் வைத்து பத்திரப்படுத்தி விட்டு, வீடுகளை வாடகைக்கு விட்டு விட்டு, தாம் இரகஸியத்தில் அந்த ஊரைவிட்டுப் புறப்பட்டு, தமது மாப்பிள்ளையின் ஜெமீன் கிராமத்திற்குப் போய்விட வேண்டுமென்ற தீர்மானத்துடனிருந்துவந்தார்.

ஆரம்பத்தில் இரவில் தூங்காமல் சதாகாலமும் திகில் கொண்டு அஞ்சி நடுங்கி வேதனையி லாழ்ந்து தவித்தபடி இருந்தவர், சொத்துக்களில் பெரும்பாகமும் பத்திரப்படுத்தப்படவும், ஐந்தாறு தினங்கள் எவ்வித சம்பவமுமின்றிக் கழியவும், சிறிதளவு துணிவும் மன அமைதியு மடையத் தொடங்கினர். அதற்கு மேல் தமக்கு எதிரியால் எவ்வித அபாயமும் நேராதென்ற எண்ணமும் மனதில் தோன்றிப் படிப்படியாய் நிச்சயப்படலாயிற்று.

ஆயினும் தம்மை விட்டுப் பிரிந்து போன தம் மனைவி, முதலியோர் தம் மாப்பிள்ளையின் ஜெமீன் கிராமத்தில் க்ஷேமமாக இருக்கின்றனரோ வென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் ஒரு புறத்தில் அவரை வதைத்த தாகையால் அவர் தம் மாப்பிள்ளைக்குக் கடிதம் எழுதி இரகஸியத்தில் அதைத் தபாலில் அனுப்பிவைத்தார்.

அதற்கு இரண்டு தினங்களுக்குப் பிறகு கிருஷ்ணமூர்த்தி ஐயரிடத்திலிருந்து எஸ். ஆர். ஐயருக்கு ஒரு கடிதம் வந்தது. அது அடியில் வருவாறு எழுதப்பட்டிருந்தது :—

மகா-ள-ள-ஸ்ரீ தீர்த்த ரூபியான ஸ்ரீமான் மாமா அவர்கள் சமுகத்திற்கு, பாலன் கிருஷ்ணமூர்த்தி அநேக சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுதுவது. உபய குசலோபரி. தாங்கள் பிரியபூர்வமாக எழுதியனுப்பிய கடிதம் வந்து சேர்ந்தது. படித்துப்பார்க்க எல்லோருக்கும் கொஞ்சம் மன நிம்மதி ஏற்பட்டது.

அவ்விடத்தை விட்டுப் புறப்பட்ட தினத்திற்கு மறு நாள் பகலில் நாங்கள் எல்லோரும் சௌக்கியமாய் இந்த ஊருக்கு வந்து சேர்ந்தோம். இந்த ஊரிலுள்ள எங்கள் பூர்விகமான வீடு இரும்புக் கோட்டைபோல் நிரம்பவும் பந்தோபஸ்தாக இருக்கிறது. ஆள்கள் சிலரை வெளியில் காவல் போட்டு நாங்கள் தலைமறைவாக உள்ளேயே இருந்துவருகிறோம். இவ்வாள்கள் நல்ல முண்டர்களாகையால், எதிரியோ அவனுடைய ஆள்களோ இந்த இடத்திற்குள் வருவதே கூடாத காரியம்; வர முயன்றாலும், இவ்வாள்களும் இன்னும் கிராமத்தார் எல்லோரும் ஒன்றாகத் திரண்டு வந்து வளைத்துக் கொண்டு, அவர்களைத் தவிடுபொடி யாக்கிக் காற்றில் ஊதிவிடுவார்கள். ஆகையால், நாங்கள் எங்களைப்பற்றி எவ்வித பயமுமின்றி நிம்மதியாயிருந்து வருகிறோம்.

ஆனால், எங்கள் எல்லோருக்கும் உங்களைப்பற்றிய கவலை தான் ஓயாக்கவலையாக இருக்கிறது. அங்கிருந்து வந்தது முதல் இராப்பகல் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். உங்களைப்பற்றி முக்கியமாய் மாமி படுகிற சஞ்சலம் சொல்லமுடியாது. இங்கே வந்தபின் மாமிக்கு ஆகாரம் முதலிய எதிலும் நாட்டமே ஏற்பட வில்லை யாகையால், இளைத்துத் துரும்புபோலாய்விட்டாள். எங்கள் எல்லோரையும் விட்டுப் பிரிந்து நீங்கள் மாத்திரம் அந்த ஊரில் தனியாயிருப்பது எங்கள் மனதுக்குக் கொஞ்சமும் சரிப்படவில்லை.

ஆகையால் நீங்கள் நம்முடைய சொத்துக்களை பந்தோபஸ்து செய்துவிட்டு கூடிய சீக்கிரம், இங்கே வந்துவிடவேண்டும் என்று மாமி லக்ஷம்தரம் கேட்டுக் கொள்வதாக எழுதச் சொன்னுள். சகலமும் அறிந்தவர்களான உங்களுக்கு நாங்கள் அதிகமாய் எழுதவேண்டிய அவசியமில்லை யென்று நினைக்கிறேன். இந்த இடத்தில் நம் எதிரியின் முயற்சி பலிக்காதாகையால், நீங்கள் உடனே இங்கே வந்துவிட வேண்டும் என்று மாமி எழுதச் சொன்னுள்.

நீங்கள் இங்கே வருகிற வரையில் தினம் ஒரு கடிதம் எழுதி தவருமல் எங்களுக்கு அனுப்பினுல், அது எங்கள் மனவேதனைக்கு ஓர் ஆறுதலை உண்டாக்கும்.

இப்படிக்கு உங்கள் விதேயன்,

கிருஷ்ணமூர்த்தி.

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த எஸ். ஆர். ஐயர் மனத்துணிவும் உற்சாகமும் கொண்டார். தமக்கோ தம்மனிதருக்கோ எதிரி எவ்விதமான அபாயமும் விளைவிக்க இயலாதென்ற நம்பிக்கையும் மனோ திடமும் தோன்றி உறுதிப்படத் தொடங்கின. தமது பாங்கியின் சொத்துக்களை யெல்லாம் இம்பீரியல் பாங்கியில் பாதுகாப்பாக வைத்து விட்டுத் தாம் இரகஸியத்தில் ஊரை விட்டு ஓடிப்போய்த் தம் மாப்பிள்ளையின் ஜெமீன் கிராமத்தில் ஒளிந்து கொண்டிருக்கவேண்டுமென்று அவர் அதற்கு முன் செய்த தீர்மானம் தளர்வடையவாரம்பித்தது. தமது சொத்துக்களின் பெரும் பாகத்தை இம்பீரியல் பாங்கியில் வைத்து, அவசியமான சொற்ப பாகத்தைத் தம் வசத்தில் வைத்துக்கொண்டு தமது வர்த்தகத்தை நடத்தலாமென்ற எண்ணம் தோன்றலாயிற்று. மேலும் இரண்டொரு தினங்கள் வரையில் தாம் நிதானித்துப் பார்த்து விட்டு, அதற்கு

மேல் அந்தப் புதிய ஏற்பாட்டை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று நினைத்து எஸ். ஆர். ஐயர் தமது பகைவனைப்பற்றி அசட்டையாயிருந்த சமயத்தில் தபால் மூலமாய் அவருக்கு ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அதன் மேல்விலாசத்தின் எழுத்தைப் பார்த்த போதே, அவருடைய முகம் விகாரமாக மாறிப்போயிற்று. அவருடைய மனதில் அபாரமான திகில் குடிகொள்ளத்தொடங்கியது. உடம்பு கைகால்கள் முதலிய அங்கங்கள் யாவும் வெடவெடவென்று ஆடவாரம்பித்தன. அதீதமான அச்சத்தினல் ஏற்பட்ட மனக்குழப்பத்தினல், அவருடைய மனம் நிலைத்து நிற்காமல் சஞ்சல மடைந்து மயங்கியது. ஆயினும், அவர் இரண்டொரு நிமிஷகாலம் நிதானித்து, தம்மனத்தை திடப்படுத்திக்கொண்டு கடிதத்தைப் பிரித்துப் படிக்கலானர். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

இந்த எழுத்தைப் பார்க்கும்போதே இந்தக் கடிதம் யாரால் எழுதப்பட்டதென்பது உனக்கு சுலபத்தில் தெரிந்துபோகும். ஆகையால், நான் பெயர்களைக் குறிக்க வேண்டிய அவசியமில்லை யென்று நினைக்கிறேன். நீ அசாத்தியமான புத்திசாலி என்பதை நான் ஒப்புக்கொள்ளாமல் இருக்கமுடியாது. இத்தனை வருஷகாலமாய் நீ செய்துள்ள எத்தனையோ பராக்கிரமச் செய்கைகளைப்பற்றி நான் உன்னை மெய்ச்சிக் கொள்ளாமலும் இருக்கமுடியாது.

இது வரையில் நீ செய்த சாமர்த்தியக் காரியங்களை விட இந்த ஐந்தாறு தினங்களாய் நீ என்னை வென்றுவிடும் பொருட்டு செய்துவரும் ஏற்பாடுகள் உன் அசகாய சூரத்தனத்தை நன்றுகக் காட்டுகின்றன. ஆனாலும், இந்த உலகத்தில் உனக்குமாத்திரமே மூளை யிருப்பதாகவும், நீ மற்ற எல்லோரையும் கடைசி வரையில் ஏமாற்றிவிடலாமென்றும்

நினைத்து இறுமாப்படைந்து தந்திரமாக நடந்து கொள்வது தவறு என்று செய்கையின் மூலம் உனக்குக் காட்ட இந்த உலகில் ஒருவன் கங்கணங் கட்டிக் கொண்டு முனைந்து நிற்கிறு னென்பதை இந்த நிமிஷம் முதல் நீ நினைவில் வைத்துக் கொள்.

இதுவரையில் நீ, மற்றவர் விஷயத்திலும், என் விஷயத்திலும் செய்துள்ள பாவங்கள் எண்ணத் தொலையா. எனக்கும் உனக்கும் நெடுங்காலத்துக் கணக்குகள் தீராமலேயே இருந்து வருகின்றன. அவைகளை நான் தீர்த்துக்கொள்ள எத்தனிக்கிறேன் என்பதை உணர்ந்து நீ முன் ஜாக்கிரதையான பல ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, நிரம்பவும் பாதுகாப்பாயிருப்பதாக எண்ணி மனக்கோட்டை கட்டிக்கொண்டிருக்கிறுய். அந்தக் கோட்டையை ஒரே நொடியில் இடித்துத் தரைமட்ட மாக்கும் திறமை என்னிடம் உண்டு என்பதை நீ மிக சீக்கிரத்தில் தெரிந்து கொள்ளப் போகிறுய்.

இதுவரையில் நீ செய்துள்ள அட்டூழியச் செய்கைகள் கணக்கி லடங்கா. அவைகளுக்கெல்லாம் உன்னிடம் நான் இப்போது பரிகாரம் தேடுவதென்பது சாத்தியமற்ற காரியம். முக்கியமாய் நீ உன் மூத்த மனையாள் விஷயத்திலும், என் விஷயத்திலும் இழைத்த கொடுமைகளுக்கு உன்னைத் தண்டியாமல் நான் விடமுடியாது. அந்த தண்டனை இன்னதென்பதை நான் உன்னிடம் முகதாவிலே தான் தெரிவிக்கவேண்டும். ஆகையால் நீ இந்தக் கடிதத்தைப் படித்தவுடன், உன்னைச் சுற்றிலும், உன் பாங்கியைச் சுற்றிலும் காவல் காத்திருக்கும் தண்டச் சோற்றுள்களை அனுப்பிவிட வேண்டியதோடு நீ இம்பீரியல் பாங்கியில் கொண்டு போய் வைத்திருக்கும் சொத்துக்களையெல்லாம் கொணர்ந்து முன்போல் உன் வசத்

தில் வைத்துக்கொள்ள வேண்டியது. இந்த உத்தரவை நீ நிறைவேற்றினால், நான் நேரில் வந்து, உனக்கு உரிய தண்டனை இன்னது என்பதை நிரம்பவும் காருண்யத்தோடு நிர்ணயிப்பேன். இதுவே என்னுடைய முடிவான உத்தரவு.

எக்காரணத்தைக் கொண்டும் நீ இதை அசட்டை செய்தால், மிக பயங்கரமான அநர்த்த பரம்பரையை நீயே விலைக்கு வாங்கிக் கொண்டவனாவாய். இதுவரையில் நீ செய்தது போல் இனியும் செய்யலாமென்று நினைத்து ஏதேனும் தந்திரம் செய்ய எண்ண வேண்டாம். உன் தந்திரம் எதுவும் இனி பலியாதென்று நான் முக்காலும் உன்னை எச்சரிக்கிறேன்.

இப்படிக்கு உன் பிரிய
சட்டகன்.

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த எஸ். ஆர். ஐயர் மனக் கலக்க மடைந்து சிந்தனையி லாழ்ந்திருந்தாராலும், ஒரு மணி காலத்திற்குப் பிறகு அவர் தெளிவடைந்தவராய், அந்தக் கடிதத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் கிழித்து அசட்டையாக எறிந்துவிட்டுத் தமது அலுவல்களைக் கவனிக்கலானார். ஏராளமான ஆள்கள் தம்மைப் பாதுகாத்திருந்ததனாலும், தம் சொத்துக்கள் யாவும் இம்பீரியல் பாங்கியின் பொறுப்பில் வைக்கப்பட்டிருந்தமையாலும், தமக்கோ, தம் சொத்துகளுக்கோ எவ்வித அபாயமும் நேர சந்தர்ப்பம் ஏற்படாது என்ற நிச்சயம் அவருடைய மனத்தில் பூர்த்தியாக உண்டாகி விட்டது. அதுவுமன்றி, தம் மனைவி முதலியோர் மறைவாக இருந்த இடம் இன்னதென்பதே அந்தப் பகைவனுக்குத் தெரிந்திராதென்றும், அது தெரிந்தாலும், அவனுடைய திறமை

அவ்விடத்தில் பலியாதென்றும் எஸ். ஆர். ஐயர் நினைத்து, அந்த விஷயத்திலும் சிறிதும் கவலையோ, அச்சமோ கொள்ளாமல் இருந்து வந்ததன்றி, அந்தப் பகைவன் எழுதியிருப்பது பொய்யான பயமுறுத்தலென்றும், அவனுல் எந்தக் காரியமும் சாயா தென்றும் கருதி, தமது வர்த்தகத்தையும் சிறுகச் சிறுக நடத்தத் தொடங்கினுர்.

அவருடைய சொத்துக்களில் பெரும்பாகம் இம்பீரியல் பாங்கியிலேயே இருந்தது. ஏராளமான ஆள்கள் அவருடைய பாங்கிக் கட்டிடத்தையும், அவருடைய பங்களாவையும், அவரையும் இடைவிடாமல் பாதுகாத்து வந்தனர்.

அவ்வாறு எவ்வித சம்பவமுமின்றி சுமார் ஒரு வார காலம் கழிந்தது. எஸ். ஆர். ஐயருக்கு அவருடைய பகைவனிடத்திலிருந்து மறுபடி கடிதமும் வரவில்லை. அந்த மனிதனைப் பார்த்ததாக ஐயரிடம் அவருடைய நண்பர் அல்லது காவலாளர் எவரும் கூறவுமில்லை. கடைசியாகக் கடிதமெழுதித் தம்மை பயமுறுத்தி பார்த்துவிட்டு தம் பகைவன் அதோடு ஓய்ந்து சும்மா இருந்து விட்டானென்றும், அதற்குமேல் தமக்கு எவ்வித அச்சமுமில்லை யென்றும் ஐயர் நினைத்து தமது பாங்கியின் நடவடிக்கைகளைப் பூர்த்தியாக நடத்தவும், தமது மனைவி முதலியோரைத் தருவித்துக் கொள்ளவும் எண்ணி இருந்த காலத்தில், ஒரு நாள் தபாலில் அவருக்கு இன்னொரு கடிதம் வந்தது.

ஆனல் அந்தக் கடிதம் அவருடைய பகைவரிடத்திலிருந்து வந்த தல்ல. அது கிருஷ்ணமூர்த்தி ஐயரால் எழுதப் பட்டதென்பது மேல்விலாசத்தின் எழுத்தினுலேயே உடனே தெரிந்துபோயிற்று. எஸ். ஆர். ஐயர் அந்தக் கடிதத்தின் உறையைக் கிழித்து உள்ளே இருந்த கடிதத்தை

எடுத்துப் பார்த்துப் படிக்க, அது அடியில் வருமாறு எழு தப்பட்டிருந்தது :—

மகா-ா-ா-ஸ்ரீ தீர்த்த ரூபியான ஸ்ரீமான் மாமா அவர் கள் சமுகத்திற்கு பாலன் கிருஷ்ணமூர்த்தி அநேக சாஷ் டாங்க நமஸ்காரம் செய்து எழுதுவது. உபயகுசலோபரி.

மாமி இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு நான்கு தினங்க ளாகின்றன. அவள் க்ஷேமமாய் உங்களிடம் வந்து சேர்ந் ததற்கு இதுவரையில் அங்கிருந்து தகவல் வரவில்லை.

இப்போது அவ்விடத்து நிலைமை முற்றிலும் அநு கூலப்பட்டிருக்குமென்று நினைக்கிறேன். நம்முடைய எதிரி அடங்கிப்போய்விட்டானென்று நீங்கள் சுமார் ஒருவார காலத்திற்கு முன் எழுதிய உங்கள் கடைசிக் கடிதம் வந்த பிறகுதான் எங்கள் எல்லோருடைய மனவேதனையும் அடங் கியது. மாமி சௌக்கியமாக அங்கே வந்து சேர்ந்திருப்பா ளென்று நம்புகிறோம்.

உங்கள் இருவரையும் விட்டுப் பிரிந்து தனியாயிருப் பது சௌ. ஸ்வர்ணவுக்கு கொஞ்சமும் சகிக்கவில்லை. எனக்கும் அப்படியே. குழந்தை சுந்தரி, "தாத்தா எங்கே?", "பாட்டி எங்கே?" என்று அடிக்கடி கேட்டு நச்சுப் படுத்து கிறாள்.

ஆகையால் கூடிய சீக்கிரம் நாங்களும் அங்கேயே வந்து விடுவது உசிதமாயிருக்குமென்று நினைக்கிறேன். இது விஷயத்திலும் உங்கள் அநுமதியை எதிர்பார்க்கிறோம்.

மாமி சௌகரியமாய் அங்கே வந்து சேர்ந்ததைப் பற்றி மறுதபாலிலேயே ஒரு வரி எழுதி யனுப்பவும்.

இப்படிக்கு உங்கள் விதேயன்,

**கிருஷ்ணமூர்த்தி.**

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை எஸ். ஆர். ஐயர் படிக்கவே, அவர் திடுக்கிட்டு, பெருத்த திகிலும், வியப்பும் கொண்டவராய் முற்றிலும் கலங்கி வேதனைப்படலானார்.

தம்முடைய மனையாள் நான்கு தினங்களுக்கு முன் கிருஷ்ணமூர்த்தி ஐயர் முதலியோரை விட்டு வந்து விட்டா ளென்ற செய்தி அவர் சிறிதும் எதிர்பாராத பேராச்சரியமா யிருந்தது. தமது உத்தரவின்றி அவள் ஏன் புறப்பட்டு வந்தாள், யாரோடுகூட வந்தாள், கிருஷ்ணமூர்த்தி ஐயர் அவளை ஏன் தனிமையில் அனுப்பினார், நான்கு நாட்களுக்கு முன்னர் அங்கிருந்து வந்தவள் தம்மிடம் வராமல் எங்கு போயிருப்பாள் என்பன போன்ற நினைவுகளும், கவலை களும் எழுந்து அவரது மனத்தை உலப்பத் தொடங்கின. சில தினங்களுக்கு முன்னர் தம் பகைவன் தம்மை பயமுறுத் திக் கடிதம் எழுதியதற் கிணங்க, ஏதேனும் தந்திரம் புரிந்து தம் மனையாளை அபகரித்துக்கொண்டு வந்திருப்பானோ வென்றும், அப்படியானால், அவன் அவளை எவ்விதமான கொடுமைகளுக்கு உட்படுத்தி இருப்பானோ என்றும் நினைக்க நினைக்க, அவருடைய மனக் கலவரமும், சங்கடமும் சகிக்க இயலாதபடி பெருகி உச்ச நிலையை யடைந்து விட்டனவாத லால், தாம் அந்த விபரீத சந்தர்ப்பத்தில் என்ன செய்வது என்பதை நிச்சயிக்க மாட்டாதவராய்ப் பைத்தியங் கொண்ட வர்போல விழித்து, தம் அறைக்குள் அங்குமிங்கும் உலாவத் தொடங்கினார். அவருடைய தேகம் கட்டிலடங்காமல் பதறிப் பறக்கிறது. கை கால்கள் யாவும் படபடத்துத் தள்ளாடுகின்றன.

அவ்விதம் எஸ். ஆர். ஐயர் பரம சங்கடமான நிலைமை யில் கிடந்து சுமார் அரை நாழிகை காலம் தவித்த பின்னர் ஒரு விதமான தீர்மானத்திற்கு வந்து, தந்திக் காகித

மொன்றை எடுத்து கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு அடியில் வருமாறு தந்திச் செய்தி எழுதலானார்:—

உம்முடைய கடிதம் வந்தது; பார்த்து திடுக்கிட்டுப் போனேன். மாமி இன்னமும் இங்கே வரவில்லை. அவள் என்னுடைய தகவல் இல்லாமல் அங்கிருந்து ஏன் புறப்பட்டாள், அவளை அங்கிருந்து யார் அழைத்து வந்தார்கள் என்பன போன்ற விவரங்களைத் தெளிவாக மறு தந்தியில் உடனே தெரிவிக்க வேண்டும்.—என்று எழுதப்பட்ட தந்திக் காகிதத்தையும், அதற்குத் தேவையான பணத்தையும் ஓராளிடம் கொடுத்து உடனே தந்தியாபீசுக்கு அனுப்பி வைத்தார். அவன் அங்கு சென்று தந்தியை அனுப்பி விட்டு சுமார் கால் நாழிகைக் கெல்லாம் வந்து சேர்ந்தான்.

அதன் பிறகு மறுமொழித் தந்தி கிடைப்பதற்கு அவர் சுமார் நான்கு மணி காலத்திற்குமேல் காத்திருக்க வேண்டியதாயிற்றாதலால், அதுவரையில் அவர் சிறிதும் மன அமைதியின்றி சகிக்கவொண்ணாத வேதனைக் கடலில் கிடந்து அன்னம், தண்ணீர் முதலிய தேகபோஷணையில் கூட நாட்டங் கொள்ளாமல் தவித்தபடியே பொழுதைப் போக்கினார்.

அவர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் முதலியோரை அனுப்பிய தினம் மாலையில் எவ்வித மன நிலைமையை அடைந்திருந்தாரோ அந்த நிலைமை மறுபடி திரும்பி விட்டது. தாம் திரும்பவும் தமது பாங்கி வியவகாரங்களை நடத்த வேண்டுமென்றும், தம் மனைவி முதலியோரை வரவழைத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவர் அதற்கு முன் செய்துகொண்டிருந்த தீர்மானம் ஒரே நொடியில் பறந்துபோய் விட்டது. தமது சொத்துக்களில் பெரும் பாகமும் இம்பீரியல் பாங்கியில் இருந்ததுபற்றி, தம் எதிரி

அவைகளை அபகரிக்க இயலாதென்ற உறுதி அவருடைய மனதில் ஏற்பட்டதானாலும், அவன் எந்த சமயத்தில் எவ்வித தந்திரம் செய்து தமக்கும், தம் மனிதர்களுக்கும் என்ன விதமான அபாயம் விளைவிப்பானோ என்ற பீதி யொன்றே அவரை ஓயாமல் கலக்கியபடி இருந்தது. அவர் அன்றைய தினம் எங்கும் வெளியில் போகாமல் தமது பங்களாவிலேயே இருந்து மறுமொழித் தந்தியின் வருகையை எதிர்பார்த்துப் பார்த்து ஆவலே வடிவாக மாறிப்போயிருக்க, அவர் எதிர் பார்த்த தந்தி வந்து சேர்ந்தது.

எஸ். ஆர். ஐயர் அதை வாங்கிப் பிரித்துப் படிக்கலானார். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது :—

உங்கள் தந்தி வந்தது. பார்த்து பெருத்த திகில் கொண்டோம். நம்முடைய பாங்கியில் பெருக்கும் மீனியம்மாள் ஒரு மோட்டார் வண்டியில் நான்கு நாட்களுக்கு முன் இங்கே வந்து சேர்ந்தாள். நம்முடைய பாங்கி டலாயத் அப்பாத்துரை அந்த மோட்டார் வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தான். அந்த வண்டி மூடு பெட்டியோடு கூடிய புதிய வண்டி; சுமார் பதினாயிரம் ரூபாய் பெறக்கூடியது. அது உங்களுடைய சொந்த மோட்டார் வண்டி போலவே இருந்தது. உங்கள் சொந்த மோட்டார் வண்டியின் நெம்பர் தகடு அதில் காணப் பட்டது. திடீரென்று வந்த அந்த வண்டியைப் பார்த்தவுடன், காவல்காரர்கள் சந்தேகங் கொண்டு, அதை வளைத்துக் கொண்டனர். மீனியம்மாள் அவர்களிடம் மிக நயமாகப் பேசி, நீங்கள் ரகஸ்யமாய் உங்கள் வண்டியில் அவர்களை அனுப்பியதாகவும், மாமிக்கு நீங்கள் சில சங்கதிகள் சொல்லியனுப்பி இருப்பதாகவும், தானும், மோட்டார் ஓட்டியும் பாங்கியில் வேலை செய்கிறவர்கள் என்றும் சொல்ல, காவல்காரர்கள் வந்து மேற்படி விவ

ரங்களை எங்களிடம் தெரிவித்தார்கள். மாமி உடனே மினியம்மாளை அழைத்துவரச் செய்து உண்மையை விசாரிக்க, மினியம்மாள் நம்மிடம் அந்தரங்கமாக நடந்து கொள்பவள் போல நடித்து, நீங்கள் அவர்களை உங்களுடைய மோட்டாரில் வைத்து ரகஸியமாய் இங்கே அனுப்பியதாகவும் எதிரி ஒடுங்கி ஓய்ந்து போய் விட்டதாகவும், இனி அவனால் நமக்கு எவ்வித அபாயமும் உண்டாகாதென்றும், ஆனாலும், நாங்கள் எல்லோரும் ஒருமிக்க ரயில் வழியாகப் பிரயாணம் செய்து பட்டணம் வருவது உசிதமான காரியமல்லவென்றும், ஆகவே,ஒருவர் ஒருவராய் மோட்டார் வண்டியில் வந்துவிடவேண்டு மென்றும் முதலில் மாமியை அழைத்து வரச் சொன்னதாகவும், இப்படியெல்லாம் எங்களிடம் சொல்லி மாமியை ரகஸியமாய் வண்டிக்குள் வைத்து அழைத்து வரும்படி நீங்கள் அவர்களிடம் சொல்லி அவர்களை உங்களுடைய மோட்டார் வண்டியில் அனுப்பியதாகவும் தெரிவித்தாள். மோட்டார் வண்டி உங்களுடைய வண்டி மாதிரியே இருந்ததன்றி, உங்கள் வண்டியின் நம்பர் தகடும் அதில் இருந்தது. வந்தவர்களும் நம் பாங்கியில் வேலை செய்பவர்கள். ஆகையால் நாங்கள் மினியம்மாள் சொன்னதை யெல்லாம் நிஜமென்று நம்பி விட்டோம்; உடனே அவர்கள் இருவருக்கும் சாப்பாடு போட்டோம். மாமியும் அதற்குள் தன் சாப்பாட்டை முடித்துக்கொண்டு ஆயத்தமானாள். உடனே மினியம்மாளும், மாமியும் மோட்டார் வண்டிக்குள் உட்கார்ந்து கதவுகளை மூடிக்கொள்ள, அப்பாத்துரை பட்டணம் ரஸ்தா வழியாக வண்டியை விட்டுக்கொண்டு வந்துவிட்டான். மாமி க்ஷேமமாய் உங்களிடம் வந்திருப்பாளென்று நாங்கள் இதுவரையில் நினைத்திருந்தோம். உங்கள் தந்தியைப் பார்க்க, எங்களுக்குக் குலை நடுக்

கம் உண்டாகி விட்டது. நாங்கள் முன்னிலும் அதிக ஜாக்கிரதையாக இருக்கிறோம். நீங்களும் உங்களைப் பாதுகாத்துக் கொள்வதோடு, மாமி இருக்கு மிடத்தை உடனே கண்டு பிடித்து அவளை மீட்டு அழைத்துக்கொண்டு வருவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யவும். மாமி உங்களிடம் வந்து விட்டாளென்ற சந்தோஷச் செய்தி வந்தால் தான் எங்களுக்கு உயிர் திரும்பும். உங்களிடமிருந்து நல்ல செய்தி வருகிற வரையில் நாங்கள் தூங்கவும் மாட்டோம், சாப்பிடவும் மாட்டோம். மாமி விஷயத்தில் உடனே தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும். —கிருஷ்ணமூர்த்தி.

—என்று எழுதப்பட்டிருந்த தந்திச்செய்தியைப் படித்த எஸ். ஆர். ஐயர் பெரிதும் திக்பிரமை கொண்டு, இரண்டொரு நிமிஷகாலம் மெய்ம்மறந்து மயக்கத்தில் ஆழ்ந்துபோ யிருந்தபின் தெளிவடைந்து, தாம் என்ன செய்வதென்பதைப்பற்றி எண்ண மிடலானார். தாம் தமது எதிரியின் துஷ்ட நினைவுகள் பலியாமல் மிக சாமர்த்தியமாகக் காரியங்களைச் செய்துவிட்டோமென்று அவர் நினைத்து பெரிதும் தைரியமாயும் அசட்டையாயுமிருக்க, அவன் தம்மைக் காட்டிலும் பன்மடங்கு அதிகத் திறமையாகக் காரியங்களை நடத்தி, தம் உயிருக்குயிரான மனையாளையே மிக சுலபத்தில் அபகரித்துக் கொண்டு போனது பெருத்த திகிலையும், மலைப்பையும், சகிக்க வொண்ணாத விசனத்தையும் உண்டாக்கி விட்டது. தாம் தமது புத்திசாலித்தனம் முழுதையும் உபயோகப்படுத்தி எவ்வளவு அதிக சாமர்த்தியமாக நடந்து கொண்டாலும், எதிரி எப்படியும் தம்மை அழித்துவிடுவான் என்ற அச்சமும் கலக்கமும் எழுந்து நிமிஷத்திற்கு நிமிஷம் பெருகி வதைக்கலாயின.

தாம் தமது மனையாளைத் தேடி மீட்க முயற்சி செய்வதும் அத்யாவசியமானதாகத் தோன்றியது. ஆனால் அவளைத் தாம் எங்கே போய்த் தேடுவதென்பதும் அவருக்கு விளங்கவில்லை. அவ்வளவு ஆழ்ந்த யோசனையோடு வேலை செய்து தம் மனையாளை அபகரித்து வந்திருப்பவன் அவளைக் கொணர்ந்து தன் வீட்டில் வைத்திருக்கமாட்டானென்பது எளிதில்தெரிந்தது.சுமார் முப்பது மயில் பரவியுள்ளதும்,பல லக்ஷக்கணக்கான வீடுகளையுடையதுமான சென்னைப் பட்டணத்தில் எந்த இடத்தில் தம் மனையாள் மறைக்கப்பட்டிருக்கிறாள் என்பதைத் தாம் கண்டு பிடிப்பது முற்றிலும் சாத்தியமற்ற காரியம் என்ற நினைவு அவருக்கு உடனே உண்டாகிவிட்டதாகையால், தாம் தம் மனைவியை விடுவிக்காமலிருந்தால், தம் எதிரி அவளைக் கொன்று விடுவானோ, அல்லது, அவளை வேறு எவ்விதமேனும் மானபங்கப்படுத்துவானோ என்று அவர் பலவாறு எண்ணமிட்டு, எவ்விதமான பரிகாரத்தையும் காணமல் சோர்ந்து தளர்ந்து சுமார் பதினைந்து நிமிஷகாலம் சாய்மான நாற்காலியில் வீழ்ந்து ஓய்ந்து கிடந்தபின் ஒரு விதமான தீர்மானத்தோடு எழுந்து டெலிபோனண்டை போய், அங்கிருந்த குமாஸ்தாவை தூர அனுப்பிவிட்டு டெலிபோன் மூலம் போலீஸ் கமிஷனரை அழைத்து, நிகழ்ந்த விஷயங்களை அவரிடம் விரிவாகத் தெரிவித்தார்.

அதைக் கேட்ட போலீஸ் கமிஷனர் பெரிதும் வியப்பும் திகைப்பும் அடைந்தவராய், "ஆ, அப்படியா! காரியம் அவ்வளவு தூரம் நடந்துபோயிருக்கிறதா! ஆசாமி மிக சாமர்த்தியமாக வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறனே! எங்களுடையசேவகர்களும், சப்-இன்ஸ்பெக்டர்களும் இந்த விஷயத்தில் எத்தனையோ முயற்சிகள் செய்து பார்க்கிறார்கள்.

இதுவரையில் எவ்விதமான பலனும் உண்டாகவில்லை. அன்றையதினம் மாலையில் கடற்கரையில் உம்மைக் கத்தியால் குத்த எத்தனித்த உம்முடைய எதிரி எங்கே இருக்கிறானென்று கண்டு பிடிக்க, அவர்களால் ஆன பிரயத்தனங்களை யெல்லாம் செய்துபார்க்கிறார்கள். இதுவரையில் அவனைக் கண்டுபிடிக்க முடியவில்லை; அவனுடைய வீட்டிற்குள் போய்க்கூடப் பலதடவைகளில் சோதனை போட்டுப் பார்த்து விட்டார்கள். ஆள் வீட்டிலும் இல்லை. எப்போதாவது அவனோ, அவனுடைய நண்பர்களோ எவரேனும் அவனுடைய வீட்டிற்கு வந்து போகிறார்களாவென்று கவனித்துக் கொண்டிருக்கும்படி, சில ஜெவான்களை உத்தியோக உடுப்பில்லாமல் அவனுடைய வீட்டிற்கு அண்டையில் எவரும் சம்சயிக்காதபடி நிறுத்தி வைத்திருக்கிறோம். இதுவரையில் எவ்விதமான புலமும் அகப்படவில்லை. இப்போது நீங்கள் சொன்னதிலிருந்து, உங்கள் பாங்கிச் சிப்பந்திகளும் அவனுக்கு அநுசரணையாயிருக்கிறார்கள் என்பது நிச்சயமாகிறது. இந்த மினியம்மாளும், அப்பாத்துரையும் இப்போதும் உம்மிடம் வேலையில் அமர்ந்திருக்கிறார்களா?" என்றார்.

**எஸ். ஆர். ஐயர்:**—அவர்கள் இருவரும் இப்போது என்னிடம் வேலை செய்யவில்லை. நான் என் பாங்கியை மூடிய காலத்தில் இரண்டொருவரை மாத்திரம் வைத்துக் கொண்டு, மற்றவரை அவரவர்களுக்குச் சேர வேண்டிய சம்பளத்தைக் கொடுத்து அனுப்பி விட்டேன். அப்படி அனுப்பப்பட்டவர்களில் மினியம்மாளும் அப்பாத்துரையும் சேர்ந்தவர்கள்.

**கமிஷனர்:**—இவர்கள் எங்கே இருக்கிறார்கள்? வீட்டு விலாசங்களைச் சொல்லுங்கள். ஆள்களை அனுப்பி தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளச் சொல்லுகிறேன்.

**எஸ். ஆர். ஐயர்** :—ஆம். அப்படிச் செய்தால்தான் நமக்கு ஏதாவது புலம் கிடைக்குமென்று நினைக்கிறேன்; மினியம்மாள் என்பவள் அப்பாத்துரையின் வைப்பாட்டி. இருவரும் ஒரே இடத்தில்தான் இருந்தார்கள். திருவல்லிக்கேணி வெங்கட்டரங்கம் பிள்ளை தெருவில் கட்டைத் தொட்டிச் சந்தில் பல குடிசைகள் இருக்கின்றன. அங்கே ஒரு குடிசையில் இவர்கள் இருவரும் இருந்தார்கள். ஜெவான்கள் அங்கே போய் விசாரித்தால், இன்ன இடமென்பது உடனே தெரிந்துபோம். நீங்கள் எப்படியாவது முயற்சி செய்து என் மனைவியை மீட்டுக் கொடுத்தால், இந்த உபகாரத்தை நான் ஒரு நாளும் மறக்கமாட்டேன். அவளை ஒரு வேளை எதிரி கொல்ல நினைத்தாலும் நினைக்கலாம். ஆகையால் நீங்கள் இந்த விஷயத்தில் சீக்கிரம் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும்.

**கமிஷனர்** :—அவர்கள் உம்முடைய மனைவியைக் கொல்ல நினைத்தால், சென்னைப்பட்டணத்திற்கே கொணர்ந்திருக்கமாட்டார்கள்; வழியிலேயே கொன்று தூக்கி எங்கேயாவது காட்டில் எறிந்துவிட்டு வந்திருப்பார்கள். நாம் இந்த ஊரில் தேடுவது மாத்திரம் போதாது; நாமக்கல்லிலிருந்து இந்த ஊருக்கு வரும் ராஜபாட்டையில் உள்ள ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனுக்கும் இன்றையதினமே இதைப்பற்றிக் கடிதங்கள் அனுப்பினால், அவை நாளையதினம் எல்லா ஸ்டேஷன்களுக்கும் போய்விடும். அங்கங்கு இருக்கும் போலீஸார் இதைப்பற்றி முயற்சி எடுத்துக்கொண்டு பார்த்தால், ஏதாவது புலம் கிடைக்கலாம்; இல்லாவிட்டாலும், இனிமேல் இது சம்பந்தமாக ஏதாவது சம்சயமான சம்பவம் நேரிட்டால், அவர்கள் உடனே ஆசாமிகளைப் பிடித்து வைத்துக் கொண்டு நமக்குத் தெரிவிப்பார்கள்.

**எஸ். ஆர். ஐயர்** :—ஆம், தாங்கள் சொல்வது சரியான யோசனைதான்; தயவு செய்து இன்றைய தினமே கடிதங்களை அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள்.

**கமிஷனர்** :—ஓ, அவசியம் செய்கிறேன். உம்மிடம் நான் இன்னொரு விஷயம் கேட்க விரும்புகிறேன். மினியம் மாளும் அப்பாத்துரையும் ஏறிக்கொண்டு போன மோட்டார் வண்டி உம்முடையதா அல்லவா ?

**எஸ். ஆர். ஐயர்** :—என்னுடைய வண்டி விடப்பட்டிருக்கும் லாயம் என் அறைக்கெதிரிலேயே இருக்கிறது. என் வண்டி எப்போதும் லாயத்திலேயே இருக்கிறது. நான் ஒவ்வொரு நாளும் அந்த வண்டியில் ஏறிக்கொண்டு பாங்கி முதலிய இடங்களுக்குப் போய் வந்துகொண் டிருக்கிறேன்.

**கமிஷனர்** :—உம்முடைய மோட்டார் வண்டியின் நம்பர் தகடு விலக்கப்படாமல் அப்படியே இருக்கிறதா ?

**எஸ். ஆர். ஐயர்** :—ஆம், அப்படியே இருக்கிறது.

**கமிஷனர்**:—சரி; உம்முடைய எதிரி முன்யோசனையோடு இந்த யுக்தியைச் செய்திருக்கிறான். உம்முடைய மோட்டார் வண்டியைப்போல் இருக்கும் வேறொரு வண்டியை சம்பாதித்து, அதிலிருந்த நம்பர் தகட்டை எடுத்துவிட்டு, உம்முடைய வண்டியிலுள்ள நம்பர் தகட்டைப் போல் ஒரு புதிய தகட்டை உற்பத்திசெய்து, அதை வைத்துக்கொண்டு உம்முடைய மாப்பிள்ளை முதலியோரை ஏமாற்றச்செய்திருக்கிறான்.

**எஸ். ஆர். ஐயர்** :—அந்த வண்டி மறுபடி இந்த ஊருக்கு வந்தவுடன் பொய்த்தகட்டை எடுத்தெறிந்து விட்டு, அதன் சொந்தத் தகட்டை மாட்டியிருப்பார்கள்.

கமிஷனர் :—ஆம். அதைப்பற்றி சந்தேகமென்ன. அவசியம் அப்படியேதான் காரியம் நடந்திருக்கும்.

எஸ். ஆர். ஐயர் :—என் வண்டியைப் போலவே இருக்கும் வண்டிகள் இந்த ஊரில் எத்தனையோ இருக்கின்றன. அவன் யாருடைய வண்டியை இரவல் வாங்கிக்கொண்டு போனனென்பதை நாம் கண்டு பிடிப்பது சாத்தியமில்லை போலிருக்கிறதே.

கமிஷனர் :—இருக்கட்டும் ; எங்களால் ஆனவரையில் பிரயத்தனப்பட்டு அந்த விஷயத்தைப்பற்றியும் துப்பு விசாரித்துப் பார்க்கிறோம். சரி ; எனக்கு நேரமாகிறது. நான் இந்த விஷயத்தில் பலவிதமான முயற்சிகள் செய்யவேண்டும். இவ்வளவுதானே ? நீங்கள் என்னிடம் சொல்லிக் கொள்ளவேண்டியது வேறெதுவுமில்லையே ?

எஸ். ஆர். ஐயர் :—வேறொன்றுமில்லை. என் சம்சாரம் தனிமையில் அந்த துஷ்டனிடம் அகப்பட்டுக்கொண்டிருக்கிருள். அவளுக்கு எவ்வித உபத்திரவமுமில்லாமல் அவளைத் தப்பவைக்க, நீங்கள் உடனே தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும். அதுதான் நான் உங்களிடம் விக்ஞாபனம் செய்துகொள்ளவேண்டிய முக்கியமான விஷயம்.

கமிஷனர் :—(சிரித்துக்கொண்டு) நாம் இவ்வளவு தூரம் பேசியது அதைப்பற்றித்தானே ; அதை நான் இதற்குள் மறந்து போய் விட்டேனென்று நினைக்கிறீரா ? நீர் இந்தக் காரியத்தை மிக சுலபமாக நினைத்துப் பேசுகிறீர். உம்முடைய சம்சாரத்தை அவர்கள் வெளியூரிலேயே வைத்திருக்கிருர்களோ அல்லது இந்த ஊருக்குக் கொண்டு வந்திருக்கிருர்களோ என்பதையும், இந்த ஊரில் கொணர்ந்து வைத்திருந்தால், எந்த விடத்தில் ஒளியவைத்திருக்கிருர்கள்.

என்பதையும் நாம் தெரிந்து கொள்வது இலேசான காரி யமல்ல. அது தெரிந்து போனால், நாம் அந்த அம்மாளை உடனே மீட்டு விடலாம். நீர் ஒரு காரியம் செய்யும். அந்த அம்மாளுடைய போட்டோப்படம் சமீபத்தில் எடுத்தது உம் மிடம் இருந்தால், உடனே ஒரு படத்தை யாரிடத்திலா வது கொடுத்து என்னிடம் அனுப்புங்கள். நான் அதற்குப் பல நகல்கள் தயாரித்து, வெளியூர் போலீஸ் ஸ்டேஷன்க ளுக்குப் போகும் கடிதத்தோடு ஒவ்வொரு பிரதி அனுப்புகி றேன். அதைப் பத்திரிகையிலும் பிரசுரித்து, இந்த விஷ யத்தை விளம்பரப்படுத்தி, இந்த அம்மாளைக் கண்டால், மீட்டுக்கொடுப்பவருக்கு, அல்லது, உடனே அதைப்பற்றி போலீஸாருக்குத் தகவல் கொடுப்பவருக்கு சன்மானம் தருவதாகத் தெரிவிப்போம். அந்த சன்மானத்தொகையை நீர்தான் கொடுக்கவேண்டும்; தொகையை எவ்வள வென்று குறிக்கலாம்?

**எஸ். ஆர். ஐயர்:**—ஆயிரம் ரூபாயென்று குறிப்பிடுங் கள். நான் இதோ ஒரு போட்டோப் படத்தை ஓர் ஆள் மூலம் அனுப்புகிறேன். அதையும் நீங்கள் சொன்னபடி உபயோகப்படுத்துங்கள்—என்றார்.

அவ்வளவோடு அவர்களுடைய டெலிபோன் சம்பா ஷணை முடிவுற்றது.

எஸ். ஆர். ஐயர் இரண்டு மாத காலத்திற்கு முன்னர் பிடிக்கப்பட்ட தமது மனையாளின் படமொன்றை உடனே எடுத்து ஒரு காகிதத்தில் வைத்து மடித்து, தமது மோட்டார்ஓட்டியிடம் கொடுத்து, அவன் மோட்டார்வண்டி யிலேயே போய் சீக்கிரத்தில் அதைப் போலீஸ் கமிஷனரிடம் கொடுத்துவிட்டு வரும்படி திட்டம் செய்து அவனைத் தமது மோட்டாரில் அனுப்பிவைத்தார்.

அவன் அவ்வாறே சென்று அதைக் கமிஷனரிடம் கொடுத்துவிட்டு கால் மணி காலத்திற்கெல்லாம் திரும்பி வந்து சேர்ந்தான். அந்த சந்தர்ப்பத்தில் எஸ். ஆர். ஐயருடைய மோட்டார் வண்டி அங்கே போனபோது கமிஷனர் துரை அந்த வண்டியும், அதன் நம்பர் தகடும் பளிச்சென்று தெரியும்படி அவைகளுக்கும் ஒரு போட்டோப் படம் பிடித்துக்கொண்டு வண்டியை உடனே அனுப்பிவைத்தார்.

அதன் பிறகு போலீஸ் கமிஷனர் தமது கீழதிகாரிகளை வரவழைத்து, அந்த விஷயத்தில் அவசரமும், அவசியமுமான நடவடிக்கைகளை உடனே நடத்தும்படி உத்தரவிட, அவர்கள் அவ்வாறே முனைந்து வேலை செய்யத் தொடங்கினர்.

ஒரு சப்-இன்ஸ்பெக்டர்பலஜெவான்களோடு கட்டைத் தொட்டிச் சந்திற்குப் போய், அப்பாத்துரையும் மினியம்மாளும் வசித்த குடிசையை வளைத்துக் கொண்டு, அதன் உள் பாகத்தை சோதித்துப் பார்த்தனர். அந்தக் குடிசையில் அப்போது பொன்னுசாமி நாயகர் என்பவர் தமது குடும்பத்தோடு குடியிருந்தார். அந்தக் குடிசை காலியாயிருப்பதாய் ஒரு நண்பர் மூலம் கேள்வியுற்றுத் தாம் இரண்டு தினங்களுக்கு முன்னரே அங்கு குடி வந்ததாக அவர் கூறியதன்றி, அந்தக் குடிசையின் சொந்தக்காரர் இன்னார் என்ற தகவலையும் தெரிவித்தார்.

போலீசார் உடனே ஷெ சொந்தக்காரரிடம் போய் விசாரித்து, மினியம்மாளும், அப்பாத்துரையும் ஆறு தினங்களுக்கு முன்னர், தமக்குச் சேரவேண்டிய வாடகை முழுதையும் கொடுத்துவிட்டு, தங்கள் சாமான்களை எடுத்துக் கொண்டு போய்விட்டதாகவும், அவர்கள் எங்கே போனார்கள் என்ற தகவல் ஷெ சொந்தக்காரருக்குத் தெரியா

தென்பதையும் தெரிந்து கொண்டு அவ்விடத்தை விட்டு கமிஷனரிடம் போய்த் தங்கள் ஏமாற்றத்தை வெளியிட்டனர்.

உடனே போலீஸ் கமிஷனர் எஸ். ஆர். ஐயரோடு மறுபடியும் டெலிபோன் வழியாகப் பேசி, மினியம்மாள், அப்பாத்துரை ஆகிய இருவருடைய வயது, உயரம், பருமன், நிறம் முதலிய அங்க மச்ச அடையாளங்களை விவரமாகத் தெரிந்துகொண்டு, ஷை தகவல்களை சென்னையிலுள்ள எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் தெரிவிக்கச் செய்து, ஒவ்வொரு போலீஸ் சிப்பந்தியும் அவைகளை கவனத்தில் வைத்துக்கொண்டு தம்தம்மாலேன்ற வரையில் தேடிப்பார்த்து, ஷை நபர்கள் இருவர்களையும் பிடித்துக் கொடுக்க வேண்டுமென்றும், அப்படிச் செய்வோருக்கோ, அல்லது, ஷை நபர்கள் இருக்குமிடத்தைத் தெரிவிப்போருக்கோ நூறு ரூபாய் சன்மானம் அளிப்பதாகவும் அறிக்கையொன்றை வெளியிட்டார்.

அதுவன்றி, எஸ். ஆர். ஐயருடைய மனையாளின் போட்டோப் படம், அவருடைய மோட்டார் வண்டியின் போட்டோப் படம் ஆகிய இரண்டிற்கும் ஏராளமான பிரதிகள் தயாரிக்கப்பட்டன. அந்த அம்மாளை நாமக்கல்லிற்கு அருகிலுள்ள ஜெமீன் கிராமத்திலிருந்து மினியம்மாள் முதலியோர் மோசடியாய் மோட்டார்வண்டியில் வைத்தழைத்துக் கொண்டு வந்த வரலாற்றையும், அந்த அம்மாள் இருக்குமிடத்தைத் தெரிவிப்போருக்கு, அல்லது, அந்த அம்மாளை மீட்டுக் கொடுப்போருக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் கொடுக்கப்படு மென்பதையும் ஒரு விளம்பரமாகத் தயாரித்தனர். அதில் மினியம்மாள் அப்பாத்துரை ஆகியோரின் அங்க அடையாளங்களும், அவர்களைப் பிடித்துக்

கொடுப்போருக்குநூறு ரூபாய் சன்மானமளிக்கப்படுமென்ற தகவலும் சேர்க்கப்பட்டிருந்தன. ஷை விளம்பரமும் இரண்டு படங்களும் சகலமான பத்திரிகைகளிலும் வெளியாக்கப்பட்டன. அதோடு நாமக்கல்லிலிருந்து சென்னைக்கு வரும் ராஜ பாட்டையிலுள்ள எல்லாப் போலீஸ் ஸ்டேஷன்களுக்கும், சென்னையிலும் அதைச் சுற்றிலும் உள்ள எல்லாப் போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் அவற்றின் பிரதிகள் அனுப்பப்பட்டன. ஷை விளம்பரத்தில் இன்னொரு முக்கியமான விஷயமும் குறிப்பிடப்பட்டிருந்தது. படத்தில் காட்டப்பட்டிருந்த மோட்டார் வண்டியைப் போலவே இருக்கும் மோட்டார் வண்டிகள் சென்னையில் யார் யாரிடம் அல்லது எந்தக் கம்பெனியாரிடம் இருந்தனவோ, அவர்கள் அந்த விளம்பரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தினத்தன்று அத்தகைய தங்கள் வண்டியொன்று காணமல் போனதுண்டா, அல்லது, தங்களால் எவருக்கேனும் வாடகைக்குக் கொடுக்கப்பட்டதா என்பதை தயவு செய்து கமிஷனருக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

இவ்விதம் கமிஷனர் துரிதமான பல நடவடிக்கைகளை நடத்தி, காணமல் போன ஸ்திரீயையும், அதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகளையும் கண்டுபிடிக்க எல்லோரையும் தூண்டவே, எங்கும் அதே பேச்சாக முழங்கியது. போலீஸார் ஒவ்வொருவரும், பொது ஜனங்களில் பலரும் பெருத்த சன்மானத் தொகையைப் பெற்றுவிடலாமென்ற ஆசையினால் உந்தப் பட்டு, நபர்களைப் பிடிப்பதற்கு பகீரதப் பிரயத்தனம் செய்யத் தலைப்பட்டனர். ஷை விவரங்கள் யாவும் அப்போதைக்கப்போது எஸ். ஆர். ஐயருக்கும் எட்டியபடி இருந்தனவாதலால், அவர் பெரிதும் நம்பிக்கையும்

மனேதைரியமும் அடைந்து, போலீஸார் எப்பாடு பட்டாயினும் தமது மனையாளைக் கூடிய விரைவில் மீட்டுக் கொணர்ந்து தம்மிடம் சேர்த்து விடுவார்கள் என்றும், மினியம்மாள் அப்பாத்துரை ஆகிய இருவரையும் பிடித்து, அவர்களுடைய வாக்குமூலத்தின் ஆதாரத்தைக்கொண்டு தம் எதிரியையும் சிறைப்படுத்தி, மூவரும் தண்டனை பெறச்செய்வார்கள் என்றும், அதற்குமேல் தாம் எவ்வித அச்சமுமின்றி பழைய நிலைமையில் குடும்பத்தோடிருந்து பாங்கியின் வியவகாரங்களை நடத்தலாமென்றும் நினைத்துப் பகலிலும் கனவு கண்டபடி, கமிஷனரிடத்திலிருந்து தமக்கு எந்த நிமிஷத்தில் எவ்விதமான சந்தோஷச் செய்தி வருமோ வென்று எதிர்பார்த்து டெலிபோனுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தார்.

அப்படி சுமார் இரண்டு தினங்கள் கழிந்தன. போலீஸ் கமிஷனர் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளினுல், எஸ். ஆர். ஐயருடைய குடும்ப சம்பவங்கள் இந்த ராஜதானி முழுதிலுமுள்ள பெரும்பாலான ஜனங்களுக்குத் தெரிந்து போயினவாதலால், எல்லோரும் அதைப்பற்றியே பேசிப்பேசி அலுத்துப் போயினராஞலும், அதனுல் எவ்வித பலனும் ஏற்படவில்லை. எஸ். ஆர். ஐயருடைய மோட்டார் வண்டியைப் போலவே இருந்த மோட்டார் வண்டி உள்ள ஒவ்வோர் இடத்திற்கும் போலீஸ் சிப்பந்திகள் போய்த் துப்பு விசாரித்துப் பார்த்தனராஞலும், மினியம்மாளும், அப்பாத்துரையும் உபயோகித்த மோட்டார் வண்டி யாருடையது என்பதைக் கண்டு பிடிப்பது சாத்திய மற்ற வேலையாய் முடிந்தது. மினியம்மாள், அப்பாத்துரை ஆகிய இருவரையும் கண்டு பிடிக்கவேண்டு மென்று சென்னையிலிருந்த போலீஸார் எல்லோரும் தெருத் தெருவா யலைந்து வீடு

வீடாய் நுழைந்து பார்த்தனராஞலும், அவர்களுடைய பாடு கள் எல்லாம் வீணுயின.

நாமக்கல்லிலிருந்து சென்னைக்கு வரும் ராஜபாட்டை யின் மீதிருந்த போலீஸ் ஸ்டேஷன் அதிகாரிகள் அயல் கிராமங்களின் முன்சீப் முதலியோரது உதவியைப் பெற்று ராஜபாட்டையின் இருபுறங்களிலும் நெடுந்தூரம் வரையில் ஆள்களை அனுப்பி, எஸ். ஆர். ஐயருடைய மனையாள் எங் கேனும்கொல்லப்பட்டுக்கிடக்கிருளோவென்பதைஆராய்ந்து பார்த்து, எந்தக் குறிப்பையும் காணுமல் அலுத்துத் திரும் பினர்.

இவ்வாறு சென்னை போலீஸ் கமிஷனரது விளம்பரம் முதலியவற்ருல் ஊர் அல்லோலஹல்லோலப்பட்டுப்போ யிற்று. அது கிருஷ்ணமூர்த்தி ஐயர், ஸ்வர்ணும்பாள் முதலி யோருக்கும் எட்டியது.பத்திரிகைகளில் வெளியான விவரங் களையும் அவர்கள் நேரில் படித்துப்பார்த்து வர்ணிக்க இய லாத ஆவலும் திகிலும் கொண்டு, நெருப்பின்மேல் நிற்பவர் போல் தத்தளித்துப் பம்பரமாய்ச் சுழன்றுக் கொண்டிருந் தனர்.

எஸ். ஆர். ஐயர் அடிக்கடி டெலிபோன் யந்திரத்தை மாட்டி போலீஸ் கமிஷனராபீஸ் மானேஜரோடு பேசி, "ஏதாவது தகவல் கிடைத்ததா?" என்று குசலம் விசா ரித்தபடி நரகவேதனை யநுபவித்தவராய் இருந்துவந்தார். அவர்அவ்வாறு அமிதமான சஞ்சல மடைந்ததற்கு முக்கிய மான ஒரு காரணமுமிருந்தது.

எதிரிகளால் அபகரிக்கப்பட்டுப் போன அவருடைய மனையாள் அபூர்வமான அழகு வாய்ந்தவள். அவளு டைய தோற்றம் தத்ரூபம் கந்தர்வ ஸ்திரீயின் தோற்றமாக வே இருக்கும். அப்போது அவளுக்கு சுமார் முப்பத்

தைந்து வயதே ஆயிருந்தது. அவள் எஸ். ஆர். ஐயரு டைய இரண்டாவது மனைவி யென்பதை நாம் இங்கு அவ சியம் குறிக்கவேண்டும். அவளுடைய தந்தை சர்க்கார் கலாசாலையில் பேராசிரியர் பதவி வகித்தவர். அவருடைய மாதச் சம்பளம் ரூ. 1200. அவர் ஹிந்துக்களின் மதா சார சட்ட திட்டங்களின் வரம்பை முற்றிலும் கடந்து, சகல விஷயங்களில் வெள்ளைக்காரர் பழக்க வழக்கங்களையே அநுசரித்து, புது நாகரிக மோகத்தில் மதிமயங்கி இருந்தவர். அவர் தமது புதல்வியை இளம்பிராயத்திலேயே மணந்து கொடுக்காமல், அவள் பிரவிடையான பிறகும் கன்னிகை யாகவே வீட்டில் வைத்திருந்தார்.

அந்தப் பெண் நடையுடைபாவனைகளிலும், தோற்றத் திலும், பார்ஸீலேடி போலவே இருந்த தன்றி, விசேஷ மான அழகும், பக்குவகாலக் கவர்ச்சியும் வாய்ந்தவளா யிருந்தாளாதலால், எஸ். ஆர். ஐயர் அவளுடைய மோகவலை யில் வீழ்ந்து, அதன் பொருட்டே, ஏதேதோ சில முகாந் தரங்களைக் கற்பித்துத் தமது முதல் மனையாளை விலக்கி விட்டு, இரண்டாவது மனையாளை அடைந்தார். அவருக்கு அநேக லக்ஷம் ரூபாய் பெறத்தக்க சொத்துக்கள் வந்து குவிந்துபோயிருந்தனவானாலும், அவ்வளவு அதி அபார மான சம்பத்தின்மேல் அவர் வைத்திருந்த மதிப்பைக்காட்டி லும் ஆயிர மடங்கு அதிகமாய்த் தமது இளைய மனைவிமீது வைத்து அவளையே தமது உயிர் நிலையாக மதித்திருந்தார். ஆகவே, அவர் தமது பாங்கி வர்த்தகம் நின்று போனதைப் பற்றி அவ்வளவாக வருந்தவில்லை யானாலும், பஞ்சவர்ணக் கிள்ளைபோன்ற தமது இளைய மனைவி தம் எதிரியால் அப கரிக்கப்பட்டுப் போனதைப்பற்றி ஆறாத்துயரத்தில் ஆழ்ந்து, விவரிக்கவொண்ணாதபடி வேதனை அநுபவித்திருந்தார்.

அவருக்கு நேரிட்ட அபாயங்களில் தம் இளைய மனைவியைத் தம் பகைவன் வஞ்சித்து அபகரித்துக்கொண்டு போனது இந்த உலகமே இருண்டு பாழடைந்து போனது போலத் தோன்றியது. தமது உயிரும் மன உறமும் அடியோடு தம்மை விட்டு விலகிப் போனது போலவே, அவர் உணர்ந்தார்.

அவ்வாறு எஸ். ஆர். ஐயர் நிரம்பவும் பரிதாபகரமான நிலைமையில் கிடந்து தவித்திருக்க, நான்காம் நாட் காலையில் தபால் மூலமாய் அவருக்கு ஒரு கடிதம் வந்தது. அவர் அதை மிகுந்த ஆவலோடு வாங்கிப் பிரித்துப் படிக்கத் தொடங்கினர். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது :—

நாய் வாலின் கோணலை நிமிர்க்க யாராலும் முடியாது. அதுபோல, உன் புத்திப் போக்கை மாற்ற, உன்னைப் படைத்த பிரம்மாவே நினைத்தாலும், அது முடியாதென்று எண்ண வேண்டி யிருக்கிறது.

உன்னுடைய மூளையின் வேகம் அசாதாரணமானது. ஆரம்பத்தில் கேவலம் அன்னக்காவடியாயிருந்த உன்னை உன் மூளை வேகம் ஆகாயம் வரையில் உயர்த்தி, உலகப்பிரசித்தி பெற்ற பாங்கர் எஸ். ஆர். ஐயர் ஆக்கிவைத்திருக்கிறது. ஆகையால் அது எந்த சமயத்திலும் பொய்க்காது என்று நீ நினைத்து, உன் மனப்போக்கின் படியே காரியங்களை நடத்துவது சகஜமே.

ஆனாலும், முண்டனுக்கு இரண்டாள் என்று ஜனங்கள் சொல்லுகிறபடி, உன் மூளையைக் காட்டிலும் அதிகத்திறமையாக வேலை செய்யக் கூடிய பெருமூளை படைத்த ஒருவன் உனக்குப் பகைவனாக வந்து முளைத்தால், உன்பாடு திண்

டாட்டமாகிவிடும் என்பதை மாத்திரம் நீ நினைக்கவில்லை. ஏனென்றால், அப்பேர்ப்பட்ட பகைவன் உனக்கு இதுவரையில் ஏற்படவில்லை. ஆதிமுதல் நீ எண்ணியமோசக்காரியங்களெல்லாம் உனக்கு ஜெயமாகவே முடிந்தன. அவற்றைத் தடுத்து, உன்னை வெல்லக்கூடிய பகைவர் எவரும் ஏற்படவில்லை. ஆகவே, நீ இறுமாப்படைந்து, நம்மை வெல்லக்கூடியவன் எவனுமில்லை யென்று கருதி மனப்பால் குடிப்பது சகஜமே.

ஆனால் இப்போது உன் குருட்டுயோகம் மாறிப்போயிருப்பதையும், உன் சாமர்த்தியம் ஊத்துக்கு நிற்காமையால் நீ தவித்துத் திண்டாடி நிற்பதையும் உணர்ந்து இப்போதாகிலும் நீ உன் இயற்கை இறுமாப்பை விட்டு, இது வரையில் நீ செய்துள்ள எண்ணத் தொலையாப்பாவங்களுக்குப்பிராயச்சித்தம் செய்து கொள்வா யென்று நினைத்து உனக்குக் கடைசியாக நான் எழுதிய கடிதத்தைநீ முற்றிலும் அசட்டையாக எறிந்துவிட்டாய். அதன் பலன் கைமேல் கிடைத்திருக்கிறது. உனக்குச் சேர வேண்டிய முதல் தண்டனையை நான் நடத்திவிட்டேன். இனி தொடர்ச்சியாக மற்ற தண்டனைகளும் ஒன்றன்பின்னொன்றாக வந்து கொண்டே இருக்கப்போகிறது. நம்முடைய சென்னைப் போலீஸ் கமிஷனரோடு இந்த உலகத்திலுள்ள போலீஸ் புலிகள் எல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து திரண்டு இரவுபகல் உனக்குத் துணையிருந்தால்கூட, ஷை தண்டனைகள் நிறைவேறுவதைத் தடுக்க இயலாதென்பதை நான் இதன் மூலமாய் உனக்குத் தெரிவிக்கிறேன்.

நீ எந்த இளைய மனைவியின் மோகத்தால் மதி மயங்கி, மகா உத்தமியான உன் மூத்த மனைவிக்கும் எனக்கும் பொய் முடிச்சுப் போட்டு, அவளுடைய வயிற்றில் பிறந்த உன்

சொந்தக் குழந்தையையே கொன்று, அந்தப் பழியை அபாண்டமாக என்மேல் சுமத்தி என்னை அழிக்கப் பார்த்தாயோ, அந்த இளைய மனையாளையே முதலில் அரவான் பலியாகக் கொடுத்து இந்த பாரதப்போரை ஆரம்பிப்பது பொருத்தமான விஷய மாதலால் அதை நான்தொடங்கியதை நீயே ஆமோதிப்பாயென்று நம்புகிறேன்.

நீ உயிருக்குயிராய் மதித்து, இரவுபகல் பாத பூஜைநடத்தும் உயிர்த்தெய்வமான இளைய மனைவியைத் திரும்பவும் அடைய போலீஸ் கமிஷனரைத் தூண்டி பகீரதப் பிரயத்தனம் செய்வதும், அதற்காக ஆயிரம் ரூபாய் பரிசு கொடுப்பதாய் விளம்பரப் படுத்துவதும் பொருத்தமான காரியங்களே யானாலும், அவைகளால் நீ எதிர்பார்க்கும் அநுகூலம் மாத்திரம் உனக்கு ஏற்படா தென்பதை உனக்கு அறிவுறுத்தவே நான் மறுபடி உனக்கு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். அதுவன்றி உனக்கு நான் தொடர்ச்சியாகச் செய்து வைக்கத் தீர்மானித்துள்ள தண்டனைகளைத் தடுப்பதும் உன்னால் கூடாத காரியம் என்ற உறுதி மொழியை உனக்குத் தெரிவிப்பதற்காகவும் நான் இந்தக் கடிதத்தை உனக்கு எழுதுகிறேன். உன் இளைய மனைவிக்கு நான் எவ்விதமான சிட்சை விதித்தேனென்பதை நாளையதினம் காலைக்குள் நீ முகதாவில் தெரிந்து கொள்வாய். நாளைய தினம் காலைக்குள் அவளை நீ உன் கண்களால் காணப்போகிறாய்! அவள் என்ன நிலைமையில் உன்னிடம் வருகிறாளோ அதே நிலைமையில் கூடிய சீக்கிரம் ஸ்வர்ணம்பாளையும், சுந்தரியையும், கிருஷ்ணமூர்த்தியையும் நீ காணப்போகிறாய்.

அதோடு என் தண்டனையில் முக்கால் பாகமும் தீர்ந்து போகும். பிறகு கடைசியாக உன் முறை ஆரம்பமாகப் போகிறது. உனக்கு என்ன விதமான தண்டனை கிடைக்

கப் போகிறதென்பதை நீ இப்போதே தெரிந்துகொள்ள ஆவலுடையவனு யிருக்கலாம். அதையும் நான் சொல்லி விடுகிறேன். மிகவும் கொடிய காரியங்களைச் செய்வோருக்கு மரண தண்டனை விதிக்கவேண்டு மென்ற ஏற்பாடு உலக ராஜாங்க சட்டங்களில் இருந்து வருகிறது. அப்படிச் செய்வது தவறு என்பது என் அபிப்பிராயம். ஒருவனு டைய உயிர் போய்விட்டால், அதன் பிறகு, அவனுக்கு எவ் விதமான துன்பமும் உறைக்காமல் போகிறது. அவனுக்கு ஏற்படுத்தும் பயங்கரமான தண்டனையின் பலனை அவன் உணராமல் போய்விடுகிருன். சொற்ப குற்றங்களைச் செய்து, கடுங்காவல் முதலிய தண்டனைகளை அடைகிறவர்களுக்கு ஏற் படும் தேகத் துன்பம், மனவேதனை ஆகியவைகூட கொலைக் குற்றம் செய்தவனுக்கு இல்லாமல் போகிறது. ஆகவே, மரண தண்டனை ஒரு தண்டனையே அல்ல. குற்றவாளி தன் ஆயுட் காலம் முடிய ஓயாமல் வேதனைப்பட்டு, தான் செய்தது தவறு என்று உணர்ந்து உணர்ந்து தவித்துப் பரிதவிக்க வேண்டும். அப்படிச் செய்வதே சரியான தண் டனையாகும். ஆகையால் நான் உன்னைக் கொல்லப்போகிற தில்லை. நல்ல கூர்மையான அம்பட்டன் கத்தியின் உதவி யால் உன் கண்கள் இரண்டையும் அணு அணுவாய்ச் சீவி, கண் உருண்டைகள் முழுதையும் தோண்டி வெளிப் படுத்திவிட்டு, குழிகளில் மருந்து வைத்துப் புண் களை ஆற்றி, முழுக் குருடனுய் உன்னை ஆக்கி, அதோடு விட்டுவிடப் போகிறேன். அந்த நிலைமையில் நீ உன் ஆயுட்காலம் முழுதையும் கழிப்பதொன்றே உனக்குத் தகுதியான தண்டனை.

நான் இவ்வளவு தூரம் எழுதியிருப்பதும் பொய்யான பயமுறுத்தல் என்று நினைத்து விடாதே. நான் எழுதிய

முதல் கடிதத்தை அவமதித்ததன் பலனை நீ இப்போது கைமேல் கண்டு அநுபவிக்கிறாய். நாளையதினம் காலைக்குள் என் தீர்மான உறுதியை நீ திருப்திகரமாகத் தெரிந்து கொள்ளப் போகிறாய். அதற்குமேல் நான் அதிகமாய் உனக்கு எழுதவேண்டிய அவசியம் ஏற்படாது.

இப்படிக்கு உன்னைக் கனவிலும் மறவாத உன்

**சட்டகன்.**

என்று எழுதப் பட்டிருந்த கடிதத்தைப் படித்த எஸ். ஆர். ஐயர் பிரமித்து அப்படியே உட்கார்ந்துபோனார்.

அவன் பயமுறுத்தி இருந்த தெல்லாம் குழந்தைகளைப் பெற்றோர் பொய்யாக மிரட்டுவது போலத் தோன்றிய தானாலும், ஒரு கால் அவன் உண்மையிலேயே அப்படியும் செய்து விடுவானோ என்ற சம்சயமும் தோன்றி வதைக்கலாயிற்று. மறுநாளைய காலைக்குள் தம் மனையாள் தம்மிடம் வரப்போகிறாள் என்று அவன் எழுதியிருந்தது வெறும் புரளியா யிருக்குமோ, அல்லது, உண்மையிலேயே அவள் தம்மிடம் வருவாளோ என்ற சந்தேகமும் தோன்றி மனதைப் புண்படுத்தத் தொடங்கியது. எனினும், வேறு எந்த முயற்சியினாலும் தாம் தமது மனையாளைக் கண்டு பிடிக்க இயலாதிருந்த நிலைமையில், தமது பகைவனே அவளை அனுப்புவதாக எழுதி இருந்தது அபாரமான மனவெழுச்சியையும் படபடப்பையும் உண்டாக்கியது. அதுவன்றி, தம் அருமை மனையாளைப் பெரிய வஞ்சகச் சூழ்ச்சியினால் அபகரித்துப் போய், சில தினங்கள் மறைத்து வைத்திருந்து மறுபடி தம்மிடம் அவளை அவன் அனுப்புவதன் கருத்தென்ன வென்பதைப் பற்றியும் அவர் ஆழ்ந்து சிந்திக்கலானார். அவ்வாறு அவளை அபகரித்துக் கொண்டுபோய் வைத்திருந்து திருப்பி அனுப்புவது தன்

சாமர்த்தியத்தை நிரூபித்துக் காட்டுவதற்காகச் செய்யப்பட்ட சூசனையாயிருக்குமோ, அல்லது, அவளைக் கொண்டு போய் அவளுடைய கற்பை அழித்துக் கொணர்ந்து விடுகிருனே, அல்லது, அவள் மூலம் தமக்கு ஏதேனும் செய்தி சொல்லி அனுப்புகிருனே என்பன போன்ற நினைவுகளும் சந்தேகங்களும் ஓயாமல் தோன்றித் தோன்றி அவரது மனத்தை வதைத்து வாட்டத்தொடங்கின.

அந்தக் கடிதத்தைப் பெற்றவுடன், அதைத் தாம் உடனே போலீஸ் கமிஷனருக்கு அனுப்ப வேண்டுமென்ற மனத்துடிப்பு ஏற்பட்டதானுலும், அவர் ஆழ்ந்து யோசிக்க யோசிக்க, அதைக் கமிஷனருக்குக் காட்டுவது அநுசிதமாகப் பட்டது. அதில் தம் முதல் மனைவி, குழந்தை ஆகியோரைப் பற்றிய சில தகவல்கள் காட்டப்பட்டிருந்தன வாதலால் அந்தக் கடிதத்தைத் தாம் எவருக்கும் காட்டாமல் மறைத்து வைப்பதே நலமான தென்று எஸ். ஆர். ஐயர் தீர்மானித்தார். அவர் அவ்விதம் தீர்மானித்ததற்கு அவருடைய அச்சமும் இன்னொரு காரணமாயிருந்தது. அதாவது, தாம் அந்தக் கடிதத்தைப் போலீஸ் கமிஷனருக்குக் காட்டினுல், அவர் ஒருகால், அதன்மேல் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள, அது தம் பகைவனுக்குக் கெடுதலாய் முடிந்தால், அவன் தம்மீது முன்னிலும் அதிகமான கோபமும் பகைமையும் பாராட்டி, அதைப்பற்றி, ஏதேனும் தாறுமாருக எழுதுவானென்ற அச்சத்தினுலும் அவர் அந்தக் கடிதத்தை மறைத்து வைக்கத் தீர்மானித்தார்.

மறுநாளைய காலைக்குள் தாம் தமது ஆருயிர் மனையாளைப் பார்க்கப்போகிருேம் என்ற மன எழுச்சியும் பேராவலும் ஒவ்வொரு நிமிஷ முடிவிலும் ஒன்றுக்குப் பன்மடங்காய்ப் பெருகிக் கொண்டே போயின வாதலால்,

நாழிகை ஏற ஏற, அவரது மனோமெய்களின் நிலைமை கட்டிலடங்காததாகியது.

அவள் தனியாக வருவாளோ, வேறு எவரோடேனும் வருவாளோ, வண்டியில்வருவாளோ, நடந்தே வருவாளோ, என்ன நிலைமையில் வருவாளோ என்பன போன்ற எண்ணிக்கையற்ற சந்தேகங்களும் நினைவுகளும் எழுந்தெழுந்து அவரது மனத்தில் புதிய புதிய மனோபாவக் காட்சிகளை எழுப்பி, ஒரே குளறுபிடியான பெரிய நாடகமொன்றை நடத்தியபடி இருக்கவே, அவர் தமது ஸ்நானம் போஜனம், சயனம் முதலிய எவ்வித தேகாவஸ்தையையும் கவனியாமல் கல் போலச் சமைந்து வெறு வெளியைப் பார்த்தபடி ஒரே நிலையில் உட்கார்ந்திருந்தார்.

அன்றைய பகற் பொழுது கழிவது இரை விழுங்கிய மலைப்பாம்பு நகர முயல்வதுபோலவிருந்தது. அவர் வேண்டுமென்றே, வீதிப்பக்கத்தில் இருந்த ஒரு ஜன்னலிற்குப் பக்கத்தில் உட்கார்ந்தபடியே, எவரேனும் தம் பங்களாவிற்குள் வருகிறார்களோ வென்று உற்றுப் பார்த்த வண்ணமாக இருந்தார். வீதியில் இடைவிடாது மோட்டார்களும், ஜட்கா வண்டிகளும், மாட்டுவண்டிகளும் ஆறு ஓடுவது போலத் தொடர்ச்சியாய் இப்புறம் அப்புறம் போய் வந்தபடியே இருந்தனவாதலால், ஒவ்வொருவண்டியையும் கவனிப்பதும், அது தமது பங்களாவின் வாயிலைத் தாண்டி அப்பால் போனால், அதை விட்டு, அடுத்த வண்டிமீது தமது திருஷ்டியைச் செலுத்துவதுமாய் இருந்து இருந்து அவர் பட்ட பாட்டை நாம் நரகவேதனைக்கே ஒப்பிட வேண்டும். ஓயாமல் பார்த்துப் பார்த்து அவருடைய கண்களின் ஒளியும் மழுங்கிப் பஞ்சடைந்து போயிற்று. தலையும் கழுத்தின்மேல் நிற்கமாட்டாமல் தளர்வடைந்து, புண்பட்டுத் தவித்தது.

அவர் அண்டையிலிருந்த நாற்காலியில் சாய்வதும், நிமிர்ந்து பார்ப்பதுமாகவே மாறி மாறிச் செய்து அன்றைய பகற்பொழுதைக் கழித்தது பகீரதன் கங்கை கொண்டு வந்தது போல முடிந்தது.

அன்றைய இரவில் தம் மனைவி, ஒருகால், வரலாமென்ற எண்ணம் தோன்றியதாகையால், தாம் தூங்காமல் எச்சரிப்பாய் விழித்திருந்து இரவு முழுதும் கவனித்துத் தீர வேண்டு மென்று அவர் தீர்மானித்துக் கொண்டதன்றி, பங்களாவைச் சுற்றி நாலா பக்கங்களிலும் காவல் காத்திருந்த ஆள்களுக்கும் அந்தச் செய்தியை ஒரு மாதிரியாக மாற்றிச் சொல்லி அவர்களையும் எச்சரித்து வைத்திருந்தார். அதாவது, தம் மனையாள் அன்றையதினம் இரவில் பங்களாவிக்கு வரலாமென்று போலீஸார் எதிர்பார்ப்பதாய்த் தமக்குத் தகவல் கிடைத்திருக்கிறதென்றும், ஆகையால் அவர்கள் ஜாக்கிரதையாய் கவனித்திருந்து, தம் மனையாள் வந்தால், உடனே, உபசாரமாக அவளை உள்ளே அழைத்துக் கொண்டு வரவேண்டு மென்றும் எல்லோருக்கும் செய்தி சொல்லி அனுப்பி, அவர்களை எச்சரித்து வைத்திருந்தார்.

ஆகவே, காவல்காரர்களும் ஊக்கங்கொண்டு போக்கு வரத்து வண்டிகளையும், நடந்து சென்ற மனிதர்களையும் ஆவலோடு கவனித்தபடி எச்சரிப்பாக நிற்கலாயினர். இராப்பொழுது கழிந்து கொண்டே போயிற்று. காவற்காரர்கள் காத்துக் காத்துப் பார்த்து அலுத்துப் போயினர். வண்டிகளின் போக்கு வரத்தும், மனிதர்கள் நடமாட்டமும் பெரும்பாலும் குறைந்து போயின. அதற்கு மேல் அம்மாள் வரப்போகிறார்களா என்று நினைத்து ஆள்கள் அயர்ச்சி யடைந்து, அங்கங்கு கீழே உட்கார்ந்து கொள்வதும், மேல் துணியைக் கீழே விரித்துப் போட்டுப் படுப்ப

தும், பிறகு சிறிது நேரத்தில் திடுக்கிட்டு எழுந்து நிற்பது மாய்ப் பொழுதைப் போக்கினர். எல்லோருக்கும் களைப் பும் துயிலுணர்ச்சியும் பெருகி மென்மேலும் பளுவாக அழுத்திக்கொண்டே போயினவாகையால், அவர்கள் நிற்கவும் மாட்டாமல் படுத்துத் தூங்கவும் மாட்டாமல் தர்ம சங்கட நிலைமையில் கிடந்து தத்தளித்தவா றிருந்தனர்.

எஸ். ஆர். ஐயருக்கு பங்களாவிற்குள் இருக்கை கொள்ளவே இல்லையாதலால், அவர் ஆவேசங்கொண்டவ ராய் அடிக்கடி எழுந்து ஹாலில் உலாவுவதும் இடையிடை யில் அலுத்து உட்காருவதும் வீதியில் எவரேனும் பேசினல் ஜன்னலின் வழியாகத் தம் கவனத்தை வெளியில் செலுத்தி உற்று நோக்குவதுமாய்ச் செய்து நலிந்து நெடுநேரம் வரை யில் பொழுதைப் போக்கினர்.

விடியற்காலம் நான்கு மணி சமய மாயிற்று. எஸ். ஆர். ஐயர் சாய்மான நாற்காலியில் இருந்தபடியே கடுமையான துயிலில் ஆழ்ந்து போனர். பங்களாவின் முன் பக்கத்து வீதியில் உட்கார்ந்தும், நின்றும் காவல் காத்தவர்கள் தத் தம் உணர்வை இழந்து அப்படியப்படியே தூக்க மயக்கத் தில் மெய்ம்மறந் திருந்தனர். அப்போது அந்த வீதியில் கால்மணிக் கொருதரம் அரைமணிக் கொருதரம் மோட் டார் முதலிய வண்டி ஏதேனும் வருவதும் போவதுமாயிருந் தது. ஜன நடமாட்டம் அறுதியாய் நின்றே போய்விட்டது. அப்போது மிக விசையாகவும், சிறிதும் ஓசையில்லாமலும் வந்த ஒரு மோட்டார் வண்டி, எஸ். ஆர். ஐயருடைய பங்க ளாவின் வாசலுக்கருகில் வந்த காலத்தில், மோட்டார் ஓட்டி அதன் விசையை சடக்கென்று குறைத்து, அங்கு தூங்கி ஆடி வீழ்ந்து நின்ற ஆள்களை நோக்கி, "யாரய்யா அங்கே நிற்கிறவர்கள்? எஸ். ஆர். ஐயருடைய பங்களா எங்கே

இருக்கிறது தெரியுமா?" என்று அசட்டையாக வினவினன்.

அதைக் கேட்டு அங்கிருந்தவர்களில் சிலர் திடுக்கிட்டு விழித்து ஊக்கங்கொண்டு நின்று அந்த வண்டியை உற்று நோக்க, அவர்களுள் ஒருவன், "இதுதான் அந்த பங்களா; எதற்காக அதை நீ கேட்கிருய்?" என்ருன்.

மோட்டார் ஓட்டி தனது வண்டியை மெதுவாக ஓட்டிக்கொண்டு சென்றபடியே, "அதோ கொஞ்ச தூரத்திற் கப்பால் யாரோ ஒரு பாப்பாத்தி அம்மாள் இடந்தெரியாமல் நின்று தவிக்கிருர்கள். அந்த அம்மாள் எஸ். ஆர். ஐயர் பங்களாவுக்குப் போகவேண்டுமாம்; அந்த ஐயருக்குச் சொந்தமாம். யாராவது உடனே போய் அழைத்துக்கொண்டு வாருங்கள், பாவம்; இருட்டில் தனியாக நின்று சங்கடப்படுகிருர்கள்" என்று கூறிக்கொண்டே வண்டியின் விசையை அதிகப்படுத்திக் கொண்டு நெடுகப் போய்விட்டான்.

அந்த மோட்டார் ஓட்டி தெரிவித்த செய்தியைக் கேட்கவே, எஸ். ஆர். ஐயருடைய மனையாள்தான் அவ்வாறு வந்து வழியை அறியாமல் தவிக்கிருளென்று அவர்கள் ஊகித்துக் கொண்டனர். தரையில் படுத்துத் தூங்கியவர்களும் திடுக்கிட்டு விழித்தெழ, எல்லோரும் ஆவேசங் கொண்டவர்களாய்த் துடிதுடித்து நின்றனர்.

அந்த சந்தோஷச் செய்தியை உடனே எஸ். ஆர். ஐயருக்குத் தெரிவிக்கும் பொருட்டு ஒருவன் விரைவாக உள்ளே ஓடினன். இரண்டொருவர் நீங்கலாக மற்ற ஆள்கள், அந்த அம்மாள் நின்றதாக மோட்டார் ஓட்டி குறித்த திக்கில் விரைந்து ஓடினர்.

அந்த ரஸ்தா சுமார் அறுபதடி அகலமுடையதாய்த் தாரினல் மெழுகப்பட்டிருந்தது. இரண்டு ஓரங்களிலும் பெரிய பெரிய ஆலமரங்கள் தூர தூர நின்றுகொண்டிருந்

தன. ஆகாயத்தில் ஏராளமான நக்ஷத்திரங்கள் நிறைந்திருந் தன வாஞலும், ஆலமரங்களின் அடர்த்தியான கிளைகளின் நிழல் பாதையில் வீழ்ந்திருந்தமையால், எங்கும் கம்மல் நிறைந்திருந்தது. ஆனுலும், மனிதர் எவரேனும் அப்போது அந்த ரஸ்தாவில் நடந்தால், எதிரில் வருவோர் அவரை உடனே தெரிந்து கொள்ளலாம்.

ஆகவே, எஸ். ஆர். ஐயருடைய ஆட்கள் தங்கள் பார்வையை ரஸ்தாவோடு அதிக தூரம் முன்பக்கம் செலுத்தி, எவரேனும் நிற்கின்றனரோ வென்று கவனித்து உற்று நோக்கியபடி விரைந்து சுமார் கால் பர்லாங்கு தூரம் சென்றனர்.

அந்த ரஸ்தாவில் கண்காணும் தூரம் வரையில் அவர் கள் கவனித்துக் கூர்ந்து நோக்கினராஞலும், மனிதர் நின்ற குறிப்பே தெரியவில்லை.

ஒருகால் அந்த அம்மாள் தனியாக வர அஞ்சித் திரும்பி எங்கேனும் போயிருப்பாளோ, அல்லது, எஸ். ஆர். ஐயருடைய பங்களா எது என்பதை விசாரிக்கும் பொருட்டு, அண்டையிலுள்ள பல பங்களாக்கள் எதற்குள்ளேனும் நுழைந்து தங்கள் திருஷ்டியில் படாமல் மறைந்திருப்பாளோ என்று அவ்வாட்கள் பலவாறு சந்தேகித்துத் தமக்குள் ஒரு வருக் கொருவர் ஆக்ஷேபணே சமாதானங்கள் சொல்லிக் கொண்டு தயங்கித் தயங்கி மேலும் சிறிது தூரம் செல்ல, அப்போது அவர்களுள் ஒருவன், "அதோ ஆலமரத்தடியில் கருப்பாய் என்னவோ தெரிகிறதே! அதென்ன பாருங்கள்" என்று திடீரென்று வியப்பாகக் கூச்சலிட்டான்.

அதைக் கேட்டு மற்றவர்கள் திடுக்கிட்டு அவன் காட் டிய திக்கில் தமது பார்வையைச் செலுத்தி அந்த திக்கில் விரைந்து சென்றனர்.

அவ்வாறு அந்த இடத்தின் கிட்ட நெருங்கியபோதே ஒருவன், "மனிதர் நிற்பதுபோலத் தெரியவில்லையே. யாரோ தரையில் படுத்துக்கொண் டிருப்பதுபோ லல்லவா தெரிகிறது" என்றான்.

இன்னொருவன், "யாராவது பிச்சைக்காரன் படுத்துத் தூங்குகிறானோ என்னவோ" என்றான்.

வேறொருவன், "ஒருவேளை அந்த அம்மாளே பயந்து அல்லது அலுத்து மயங்கிக் கீழே விழுந்திருக்கலாம்" என்றான்.

அவ்வாறு சம்பாஷித்தபடி அவர்கள் பெரிதும் ஆவலும், ஆவேசமும் கொண்டவர்களாய் முன்னிலும் அதிக விசையாகப் பாய்ந்து, அந்த ஆலமரத்தடியை அடைந்து அதன் அருகில் நீளமாய்க் கிடந்தது என்னவென்று கூர்ந்து நோக்கினர்.

அந்த வடிவத்தின் நீளம், அமைப்பு முதலியவை அது மனித வடிவம் என்று காட்டின. ஆனால் நீண்ட தலையணை, அல்லது, வீணை முதலியவற்றிற்கு, உறை போடப்பட்டிருப்பதுபோல,அந்த வடிவம் முழுதும் ஒரு கித்தான் உறைக்குள் சொருகப்பட் டிருந்ததன்றி, உறையின் வாய் இருந்த இடம் தெரியாதபடி தைக்கப்பட்டிருந்தது. ஆகவே, நெல் முதலிய தானியங்களை சாக்குப்பைக்குள் போட்டு சாக்கின் வாயைத் தைத்து உருட்டி விடுவதுபோல, சுமார் ஐந்தடி நீளமிருந்த குறுகலான ஒரு கித்தான் பைக்குள் ஒரு மனித உடம்பைப் புகுத்தி இருந்ததாக அதன் தோற்றம் காட்டியது. அந்தக் குறிப்பை ஒரே நொடியில் உணர்ந்து கொண்ட ஆள்கள் திடுக்கிட்டு அபாரமான திகிலும், மனக் கலக்கமும், வேதனையும், ஆவலும் அடைந்து, அதற்குள் இருந்தது ஒரு பிணம் என்று யூகித்துக் கொண்டவர்

களாய்த் தாம் என்ன செய்வதென்பதை அறியாமல் இரண்டொரு நிமிஷ காலம் தவிக்கலாயினர்.

அப்போது அவர்களுள் ஒருவன், "என்ன விநோதம் இது! யாரோ அம்மாள் இங்கே தனியாக நின்றுகொண்டு, எஸ். ஆர். ஐயருடைய பங்களாவுக்குப் போக வழியறியாமல் தவிக்கிறதாக அந்த மோட்டார் ஓட்டி சொன்னான். நாம் உடனே இங்கே ஓடிவந்திருக்கிறோம். அவன் சொன்னதற்கும், நாம் வந்ததற்கும் இடையில் ஐந்து நிமிஷ காலம் கூடக் கழிந்திருக்காது. இதற்குள் அந்த அம்மாள் நம் கண்ணில் படாமல் அவ்வளவு தூரம் போயிருக்க முடியுமா? ஒருகாலும் முடியாது. அவன் பொய் சொல்லி நம்மை ஏமாற்றியிருக்கிறான்" என்றான்.

வேறொருவன்:—இந்த மாதிரி இங்கே பிணம் கிடப்பதைப் பார்த்துவிட்டு, அவன் அதை வேறு மாதிரியாக மாற்றி நம்மிடம் சொல்லிவிட்டான்போ லிருக்கிறது.

இன்னொருவன்:—என்ன நீ இப்படி சுத்த மூடத்தனமாய்ப் பேசுகிறாயே. நம் ஐயருடைய சம்சாரம் இன்றிரவு வரப்போவதாக ஐயர் நம்மிடம் சொன்னது, வழிப்போக்கனை ஒரு மோட்டார் ஓட்டிக்கு எப்படித்தெரிந்தது. அந்த அம்மாள் வந்து, எஸ். ஆர். ஐயருடைய பங்களா எங்கே இருக்கிறதென்பதை அறியாமல் தேடுவதாக அவன் சொன்னானே! தற்செயலாய் வழியோடு போகிற மோட்டார் ஓட்டி, இங்கே பிணங் கிடப்பதைக் கண்டு, அதை நம்மிடம் சொல்ல விரும்பினால், இப்படியெல்லாம் பொய்யை எதற்காகச் சொல்லவேண்டும்? நம் ஐயருக்கு சம்பந்தமான தகவல்களை, நாம் எதிர்பார்த் திருந்ததற்குத் தோதாக அவன் சொல்வது எப்படி சாத்தியமாகும்? இது பெரிய ஆச்சரியமாகவல்லவா இருக்கிறது!

மற்றொருவன் :—இந்த இரவில் மோட்டார் வண்டி விசையாய் ஓடுகையில் தலையணைமாதிரி நீளமாகப் பைக்குள் கட்டப்பட்டுக் கிடக்கும் இதைக் கண்டு, இதற்குள் பிணம் இருக்கிறதென்று யூகிப்பது அவ்வளவு சுலபமான காரியமா?

இன்னொருவன்:—அப்படியானால், அந்த மோட்டார் ஓட்டி இதைப் பார்த்தே இருக்கமாட்டானென்று சொல்லுகிறாயா ? அல்லது, இதைப் பார்த்திருந்தாலும், இதற்குள் பிணம் இருப்பதாக யூகித்திருக்க முடியாதென்கிறாயா ?

மற்றொருவன் :—மோட்டார் வண்டியின் முன்பக்கத்தில் இருக்கும் இரண்டு பிசாசு விளக்குகளின் வெளிச்சத்தில், மோட்டார் ஓட்டிக்கு இது சுலபத்தில் தெரியக்கூடியதே. ஆனால், அவன் அந்த சமயத்தில் இந்தப் பக்கம் திரும்பாமல் இருந்தால், ஒரே நொடியில் வண்டி இதைக் கடந்து அப்பால் போய்விடுமெல்லவா.

இன்னொருவன்:—அதெல்லாம் சரிதானப்பா. அந்த மோட்டார் ஓட்டி இதைப் பார்த்தாலும் பார்த்திருக்கலாம்; அல்லது, பார்க்காமலே போயிருந்தாலும் போயிருக்கலாம். யாரோ அம்மாள் இங்கே இருந்ததாக அவன் சொன்னது நிஜமா பொய்யா, பொய்யானால் நம்முடைய ஐயர் குடும்ப ரகஸிய சம்பந்தமான தகவலை அவன் எப்படித் தெரிந்து கொண்டு, சமயோசிதமாக நமக்குச் சொன்னான் என்பதல்லவா இப்போது நமக்குத் தெரியவேண்டும்.

மற்றொருவன் :—அதையெல்லாம் நாம் அவனிடம் தான் கேட்கவேண்டும். அவன் சொன்னது நிஜமாகவே இருக்கலாம். அந்த அம்மாள் இதோ பக்கத்திலிருக்கும் ஏதாவது ஒரு பங்களாவிற்குள் ஏன் நுழைந்திருக்கக் கூடாது ?

இன்னொருவன்:—ஏன், இன்னொருவிதமாகவும் இருக்கலாமல்லவா. அந்த மோட்டார் ஓட்டி நம் ஐயருடைய பகைவனைச் சேர்ந்த ஆளாயிருக்கலாம். அவனே இதைக் கொண்டுவந்து இங்கே போட்டுவிட்டு, நமக்கு இதைக் காட்டும்பொருட்டு, நம்மிடம் வந்து, யாரோ அம்மாள் எஸ்.ஆர். ஐயருடைய பங்களாவைத் தேடிக் கொண்டிருப்பதாகக் கயிறு திரித்திருக்கலாமல்லவா—என்றான்.

அதைக்கேட்டவுன் மற்றவர்கள் அப்படியும் இருக்கலாமென்று துடியாகக் கூறி ஆமோதித்தனர். உடனே ஒருவன், "அப்படியானல் இந்தப் பைக்குள் இருப்பது நம் ஐயருடைய சம்சாரத்தின் பிணம் என்றல்லவா நினைக்கவேண்டியதாகிறது" என்றான்.

இன்னொருவன், "ஆம். அப்படித்தானிருக்கும். ஆனல் அவர்கள் ஒருவேளை அந்த அம்மாளை அடித்து இதற்குள் திணித்து இங்கே போட்டாலும் போட்டிருக்கலாமாகையால், நாம் தாமதமின்றி இதைப் பிரித்துப்பார்த்து, ஆகவேண்டிய சிகிச்சைகளைச் செய்தால், உயிர் திரும்பினாலும் திரும்பலாம். நாம் இந்த அவசர சமயத்தில் வீண் பொழுது போக்குவது சரியல்ல. யாராவது ஒருத்தன் உடனே பங்களாவுக்கு ஓடி ஐயருக்கு இதையெல்லாம் சொல்லட்டும். ஐயர் வந்து ஆகவேண்டியதைச் செய்யட்டும். நாம் இதில் கையை வைக்கவேகூடாது. பிறகு ஏதேனும் நமக்கு உபத்திரவம் நேர்ந்தாலும் நேர்ந்துவிடும்." என்றான்.

மற்றொருவன், "இப்போதே என் மனதில் ஒருவித பயம் உண்டாகிறது. ஒருவேளை நாமே இதில் சம்பந்தப்பட்டிருக்கிறோமென்று போலீஸார் நம்மை மாட்டிவிட்டாலும் விடுவார்கள்" என்றான்.

இவ்வாறு அவர்கள் ஒருவருக்கொருவர் வாக்குவாதம் செய்தபடி, தூர விலகி நிற்க, அவர்களுள் ஒருவன் எஸ். ஆர். ஐயரிடம் அதைத் தெரிவிக்கும் பொருட்டு அவருடைய பங்களாவை நோக்கி விரைவாக ஓடினன்.

அவனுக்கு முன்னுக முதலில் வேருேர் ஆள் எஸ். ஆர். ஐயரிடம் போய், மோட்டார் ஓட்டி சொன்ன தகவல்களைத் தெரிவிக்க, அதைக் கேட்ட ஐயர் அளவிட இயலாத மகிழ்ச்சியும், ஆவலும் கொண்டு, மேலும் சில நிமிஷங்களில் தமது மனையாள் தம்மிடம் வந்துவிடுவாளென்று எதிர்பார்த்து ஆவலே வடிவாக நின்று தமது கண்கள் பிதுங்கிப்போகும் படி ஜன்னலின் வழியாக வெளியில் பார்த்தபடி இருக்க, பின்னுக ஓடிய ஆள் தானும், மற்ற ஆள்களும் சிறிது தூரம் சென்று தேடி முடிவில் ஆலமரத்தடியில் உறையால் மூடப் பட்டு மனித வடிவம்போலக் கிடந்த ஒரு வஸ்துவைக் கண்ட வரலாற்றைக் கூறவே, அது எஸ். ஆர். ஐயருக்குப் பெருத்த இடி வீழ்ந்ததுபோன்ற மன அதிர்ச்சியையும், அபாரமான திகிலையும், சகிக்கவொண்ணுத மனவேதனையையும் உண்டாக்கவே, அவர் பிரமிப்பும், மனக்குழப்பமும், மயக்கமும் அடைந்து பேச்சு மூச்சற்று ஓய்ந்து நின்றுவிட்டார்.

தமது பகைவன் தம் மனையாளை அடித்து வதைத்துப் பைக்குள் நுழைத்துத் தைத்துப் போட்டுவிடுவான் என்று அவர் கனவிலும் எதிர்ப்பார்த்தவ ரன்ருதலால், அதைக் கேட்க, தம்முடைய உயிரே போய்விட்டதுபோல அவர் உணர்ந்தாராதலால், அப்படியே பேந்தப்பேந்த விழித்தபடி சுமார் இரண்டு நிமிஷகாலம் தமது பிரக்ஞையை இழந்து ஸ்தம்பித்து ஓய்ந்து நின்றவர், ஒருகால் தமது மனையாளுக்கு அப்போதும் உயிர் இருந்தாலும் இருக்கலாம் என்ற எண்ணத்தினுல் ஊக்கப்பட்டவராய் சரேலென்று தெளி

வடைந்து அதீதமான ஊக்கங்கொண்டு விரைவாகப் பாய்ந்து டெலிபோன் இயந்திரத்தண்டை சென்று, அதை எடுத்து மாட்டிப் போலீஸ் கமிஷனருடைய ஜாகையில் இருந்த டெலிபோன் இயந்திரத்தோடு அதைச் சேர்க்கச்செய்து, அப்போது தூங்கிக்கொண்டிருந்த கமிஷனர் விழித்துக் கொண்டுவந்து பேசும்படிசெய்து, உளறிக் குளறி விஷயத்தை அவருக்குத் தெரிவித்தார்.

முதல்நாள் காலையில் தபால் மூலமாகத் தமக்குக் கடிதம் வந்ததாக கமிஷனரிடம் தெரிவிக்க எஸ். ஆர். ஐயர் அப்போதும் விரும்பவில்லை. அன்றைய இரவிற்குள் தமது மனைவி தம் பங்களாவிற்கு வந்து சேர்ந்துவிடுவாளென்று யாரோ ஒரு போலீஸ் ஜெவான் அன்றைய பகலில் தம்மிடம் தெரிவித்ததாகவும், தாம் அதை உண்மையென்று நம்பி, தமது ஆள்களை எச்சரித்து வைத்ததாகவும், அதற்கிணங்க அவர்கள் இரவு முழுதும் ஜாக்கிரதையாயிருக்க, விடியற்காலம் நான்கு மணிக்கு அந்தச் சம்பவம் நிகழ்ந்ததாகவும் அவர் கமிஷனரிடம் கூறியதன்றி, உடனே புறப்பட்டு அங்கே வரும்படி கேட்டுக்கொள்ள, கமிஷனர், தாம், இன்ஸ்பெக்டர், சப்-இன்ஸ்பெக்டர், டாக்டர் முதலியோருடன் சுமார் பத்து நிமிஷத்தில் அந்த ஆலமரத்தடிக்கு வருவதாகவும், அதற்குள் எஸ். ஆர். ஐயரும் அங்கு போயிருக்க வேண்டுமென்றும் கூறினர்.

தமது மனையாள் என்ன நிலைமையில் வந்திருக்கிறாளென்பதை அறிய வேண்டுமென்ற பேராவலினால், ஐயரது மனம் தூண்டப்பட்டு கட்டிலடங்கா விசையோடு பறந்தது. அவரது உடம்பும் கைகால்களும் ஆவேசங்கொண்டு பம்பரம்போல் சுழன்றன. ஆனாலும், தம் பகைவன் சிறிதும் இரக்கமின்றி தம் மனையாளை அத்தகைய கொடுமைக்கு

ஆளாக்கியிருக்கையில், தம்மை மிக பயங்கரமாக நடத்தப் பின்வாங்க மாட்டானுதலால், தாம் அந்த இரவில் பங்க ளாவை விட்டு ரஸ்தாவில் நடந்துபோனுல், தமக்கு ஏதே னும் அபாயம் நேருமோவென்று நினைத்து அபாரமான பீதியும் கலக்கமும் அடைந்தவராய்ச் சிறிது தயங்கி, தமது மோட்டார் வண்டியைத் தயார்ப்படுத்தச்செய்து அதற்குள் காவலாளர்களுடன் உட்கார்ந்து, வண்டியைச் சுற்றிலும் ஆள் களை வரச்செய்து, மெதுவாக ஆலமரத்தடிக்குப் போய்ச் சேர, அதே சமயத்தில் வேறு பல மோட்டார் வண்டிகளில் போலீஸ் கமிஷனர்,அசிஸ்டென்ட் கமிஷனர், சப்-இன்ஸ்பெக்டர், டாக்டர், சில ஜெவான்கள், ஆகியோர் வந்து சேர்ந்து கதவுகளைத் திறந்துகொண்டு தடதட வென்று கீழே இறங்கி அந்தப் பை கிடந்த இடத்தையடை ந்து அதை உற்று நோக்கினர்.

அங்கு வந்த பல மோட்டார் வண்டிகளின் முன் பக்கத்து விளக்குகள் அந்தப் பை கிடந்த இடத்திற்கு நேரா கத் திருப்பி வைக்கப்பட்டன வாதலால், ஒரே காலத்தில் ஏராளமான பிசாசு விளக்குகளின் வெளிச்சம் ஆலமரத்தடிப் பக்கம் பிரகாசிக்கவே, அந்த இடம் பட்டப்பகலில் இருப் பதைவிட அதிக நன்ருக விளங்கியது.

அவ்வண்டிகள் அங்கு வந்ததற்கு முன்னர்,மனித வடி வமாயிருந்த ஒரு பை கிடந்ததென்பது தெந்ததேயன்றி, அதன் மேடு பள்ளங்கள், அசைவு முதலியவை தெரியாம லிருந்தன. வண்டிகளின் வெளிச்சம்' பளிச்சென்று அபார மாய் மோதவே, அதற்குள் ஒரு மனித உடம்பு இருந்த தென்பது நிச்சயமாக சுலபத்தில் தெரிந்ததன்றி, சிற்சில இடங்களில் அந்தப் பை அசைவது போலவும் தோன்றி யது. போலீஸ் கமிஷனர் முதலிய எல்லோரும் மேற்படி

அசைவுகளை உடனே கவனித்தனர். சிலர், "இன்னம் உயிர் இருக்கிறது. கைகால்கள் அசைகின்றன. சீக்கிரம் பையை அறுத்து விடுங்கள்" என்று ஆவேசத்தோடு கூச்சலிட்டனர்.

அதைக் கேட்ட போலீஸ் கமிஷனரும் துடிதுடித்து, "ஆம். பையை உடனே விலக்குங்கள். யாரிடம் கத்தி இருக்கிறது? இது கித்தான் பை. தையலைப் பிரிக்க, அதிக நேரம் பிடிக்கும். கத்தியால் நீளத்தில் கிழித்துவிடுங்கள்" என்றார்.

அங்கு வந்திருந்தவர்கள் எல்லோரும் கத்திக்காக தம் தம் மடியையும் சட்டைப் பைகளையும் தடவி சோதனை செய்யத் தலைப்பட்டனர்.

மற்ற எல்லோரையும்விட ஆயிரமடங்கு அதிக ஆவேசமும் பதைப்பும் அடைந்து, பைக்குள்ளிருந்த தமது மனையாளை விடுவிக்க ஆவல்கொண்டு மெய்ம்மறந்து துள்ளிக் குதித்து முன்னுக்குப் பாய்ந்த எஸ்.ஆர். ஐயர் தமது இடுப்பில் இருந்த சாவிக்கொத்தை சடக்கென்று எடுத்து, அதில் மாட்டப்பட்டிருந்த கூர்மையான ராட்ஜர்ஸ் பேனா கத்தியை நிமிர்த்தி, பையின் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டு பையைக் கத்தியால் அறுக்க முயன்றார்.

அவ்வாறு தாம் கத்தியால் அறுப்பதில், உள்ளே இருந்த உடம்பில் கத்தி படாமல் இருக்கவேண்டுமென்ற நினைவினால் அவர் கித்தானை சிறிதளவு தூக்கிப் பிடித்துக்கொண்டு, கத்தியால் தலைமுதல் கால்வரையில் அறுத்துக் கொண்டே போய்த் தமது ஆருயிர் மனையாள் என்ன நிலைமையில் இருந்தாளென்பதைப் பார்க்க வேண்டுமென்றும், பையில் இறுக்கப்பட்டுக் கிடந்தவளை உடனே விடுவிக்க வேண்டுமென்றும் பெரிதும் ஆவலும் பதைப்பும் கொண்டு கிழிபட்ட வாயைப் பிடித்து சரேலென்று இரண்டு பக்கங்களிலும் விலக்கிவிட

வே, அதற்குள் மூலைக்கொன்றாய்ச் சுருண்டு வளைந்து நெளிந்துகொண்டிருந்த நான்கு பெரியபாம்புகள் 'புஸ்''புஸ்' ஸென்று சீறி குபீரென்று கிளம்பி நீண்டு, எஸ். ஆர். ஐயர் மீதும், நான்கு பக்கங்களிலும் நெருங்கி உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த கமிஷனர் முதலியோர்மீதும் விழுந்து தாறு மாறாய் ஓடத் தொடங்கவே, **பாம்பென்றால் படையும் கலங்கும்** என்று சொல்வதற்கிணங்க, அங்கிருந்தோர் அனை வரும் அந்த ஒரு நொடியில் என்ன நிலைமையை அடைந் திருப்பரென்பது நாம் கூறாமலே விளங்கும்.

எஸ். ஆர். ஐயர், போலீஸ் கமிஷனர்,டாக்டர் முதலிய சகலமானவர்களும், "ஐயோ, பாம்பு, பாம்பு" என்று பிரமாத மாய் வீரிட்டு அலறி எவரையும் இலக்ஷியம் செய்யாமல் ஒருவரை யொருவர் மோதியடித்துத் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓட்டமாக ஓடி சுமார் இருநூறு கஜ தூரத்திற்கப் பால் போய்த் திரும்பிப் பார்த்தவரும், திரும்பாமலேயே தலைதெறிக்கப் பறந்தவருமாய்த் திக்கானுக் கொருவராய்ப் பிரிந்து போயினர்.

அவ்வாறு சிதரி ஓடியவர்களுள், உடம்பைத் திறந்து கொண்டிருந்த காவல் ஆள்களைவிட, சட்டைமேல் சட்டை கள், நிஜார், பூட்ஸ், கணைக்கால் பட்டிகள் முதலிய அலங் காரங்களோடிருந்தவர்களே அபாரமான கிலியடைந்துஅதிக தூரத்திற்கப்பால் போய் நின்றனர்.

காவல்காரர்களில் சிலர் முதல் அச்சத்தினாலும், மற்ற வர்கள் வந்து விழுந்து மோதியதனாலும் மருண்டு சிறிது தூரம் ஓடினார்களானாலும், பையிருந்த பாகத்தில் இடை வெளி ஏற்பட்டதையும், பாம்புகள் மூலைக்கொன்றாய் ஓடி யதையும் கண்டு துணிவுகொண்டு பாய்ந்தோடு பாம்புகளைத் துரத்தித் தம் கைகளிலிருந்த தடிக்கம்புகளால் அடிக்க

முயன்றனராலும், பாம்புகள் பக்கத்திலிருந்த பங்களா வின் வேலிக்குள் நுழைந்து ஒரே நிமிஷத்தில் மாயமாக மறைந்து விட்டன.

அதற்குமேல் காவல் ஆட்கள் துணிந்து பை கிடந்த இடத்தண்டை செல்லத் தொடங்கினர்.

தூரத்தில் நின்றவர்களில் சிலர், "இன்னம் பைக்குள் எங்கேயாவது பாம்பு மறைந்திருக்கப்போகிறது; ஜாக்கிரதை யாகப் போங்கள்." என்று கூறி எச்சரித்தனர். காவற்காரர் கள் துணிவாகவே சென்று பையின் கிழிபட்ட பாகங்களை இப்புறமும் அப்புறமும் மாறி மாறித் தூக்கி உதறிப் பார்த்து, வேறு பாம்பு இல்லையென்று உறுதிகூற,அதுவரை யில் தூரத்தில் நின்றவர்கள் எல்லோரும் திரும்பி வந்து சேர்ந்தனர்.

முதலில் எஸ். ஆர். ஐயர் பையை அறுத்துக் கித்தானை இரண்டாய்ப் பிரித்துவிட்ட காலத்தில், பாம்புகள் புஸ் புஸ்ஸென்று சீறிக் கிளம்பியதைக் கண்டு எல்லோரும் கிலி கொண்டு நிலைகலங்கித் தமது அறிவை இழந்து தம் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவதொன்றிலேயே தமது கவ னத்தைச் செலுத்தினராதலால், பாம்புகளைத் தவிர பைக் குள் என்ன இருந்தது என்பதை உற்றுக் கவனிக்க சந்தர்ப் பம் இல்லாமல் போய்விட்டது. யாரோ ஒருவருடைய உடம்பு அதில் இருந்ததென்ற மொத்தமான உணர்ச்சி மாத்திரம் பொறித்தட்டும் காலத்தில் எல்லோர் மனத்திலும் ஏற்பட்டதானாலும், அதற்குமேல் எவரும் அந்த விஷயத் தில் கவனம் செலுத்த இயலாமல் போயிற்று.

ஆயினும், பாம்புகள் ஓடிப்போன பின், எல்லோரும் திரும்பிப் பையண்டை நெருங்கி வந்து ஆவலோடு உற்றுப்

பார்க்கவே, ஸ்வர்ண பிம்பம் போன்ற சாயலோடு கூடிய அற்புதமான அழகு வாய்ந்த ஒரு ஸ்திரீயின் உடம்பு எவ் வித ஆடையுமின்றி முழு நிர்வாணமாய் இருந்ததை எல் லோரும் கண்டு, "ஹா! ஐயோ! என்ன அக்கிரமம் இது ! என்ன காரியம் செய்திருக்கிறார்கள் படுபாவிகள்! ஐயோ! பார்க்கக் கண்கூசுகிறதே !" என்று பதறிக் கூச்சலிட்டனர்.

அப்போதே எஸ். ஆர். ஐயரும் அங்கு நெருங்கி வந்தா ராதலால் அங்கு கிடந்த அற்புத தேஜஸோடு கூடிய ஸ்திரீ யைப் பார்த்தவுடன், "ஹா! ஐயோ! என் சம்சாரமல்லவா இப்படிக் கிடக்கிறாள்! ஆ! கொடுமையே! உயிரோடிருக்கும் பெரிய பாம்புகளோடு இவளைப் பையில் போட்டுத் தைத் திருக்கிறார்களே கொடும்பாவிகள்! ஐயோ! என் ராஜாத்தீ!" என்று வாய்விட்டுக் கதறி, அபாரமாகத் தம்மனதில் குபீ ரென்று பொங்கி யெழுந்த திகில், விசனம், அநுதாபம் முதலிய உணர்ச்சிப் பெருக்கினால் மேற்கொள்ளப்பட்டு மயங்கி மூர்ச்சித்து மரம்போலப் படீரென்று தரையில் சாய்ந்து பிணம்போ லாய்விட்டார்.

அந்த சமயத்தில் மற்ற எல்லோருடைய கவனமும், அங்குகிடந்த ஸ்திரீரத்னத்தின்மீதே சென்று லயித்துப் போயிருந்ததன்றி எல்லோருடைய மனமும் சகிக்க வொண்ணாத விசனப்பெருக்கிலும் பிரமிப்பிலும் ஆழ்ந்து போயிருந்ததனால், எஸ். ஆர். ஐயர் மூர்ச்சித்து வீழ்ந்ததை எவரும் கவனிக்கவில்லை.

அப்போது போலீஸ் கமிஷனர் டாக்டரை நோக்கி, "உயிர் இருக்கிறதா என்று பாருங்கள்" என்று மிக ஆவ லோடு கூற, உடனே டாக்டர் தமது ரப்பர் குழாயை எடுத்து அந்த ஸ்திரீயின் மார்பின்மீது வைத்து ஹிரு

தயத்தின் நிலைமையை ஆராயத் தொடங்கினர். அதற்குள் அங்கிருந்த காவலாட்களில் ஒருவன் எஸ். ஆர். ஐயருடைய உடம்பிலிருந்த அங்கவஸ்திரத்தைச் சரேலென்று எடுத்துப் பிரித்து, முழு நிர்வாணமாய்க் கிடந்த அந்த ஸ்திரீயின் உடம்பில் போர்த்தவே, டாக்டர் அந்த வஸ்திரத்தின் மேல் தமது ரப்பர் குழாயை வைத்து வைத்துப் பார்க்கத் தொடங்கினர்.

அவ்வாறு சுமார் ஐந்து நிமிஷம் வரையில் உடம்பின் பல பாகங்களைப் பரீட்சித்துப் பார்க்கப் பார்க்க டாக்டருடைய முகம் விசனகரமாக மாறிப்போயிற்று. அவர் கமிஷனரைப் பார்த்து ஏமாற்றக் குறியாக உதட்டைப் பிதுக்கி, "உயிர் போய்விட்டது." என்றார்.

அதைக் கேட்டு அங்கிருந்தோர் அனைவரும் பெருத்த ஏக்கமும், விசனமும், முகவாட்டமும் அடைந்தனர். முக்கியமாகப் போலீஸ் கமிஷனரே நிரம்பவும் அதிகமாய் மனவேதனைப்பட்டுத் தவித்தது அவரது முகக்குறியில் நன்கு தெரிந்தது.

அவர் உடனே டாக்டரைப் பார்த்து, "உயிர் போய் எவ்வளவு காலம் ஆயிருக்கும்? மறுபடி மூச்சை உண்டாக்க, இரண்டு விலாவைப் பிடித்து அழுத்தி அழுத்திப் பாருங்களேன். ஒரு வேளை மறுபடி சுவாசப் பைகள் வேலை செய்ய ஆரம்பித்தாலும் ஆரம்பிக்கலாமே" என்று குழந்தைபோலப் பேசினர்.

அதைக் கேட்ட டாக்டர் அசட்டுப் புன்னகை செய்தவராய் தமது உதடுகளை முன்னிலும் அதிக சப்பையாய்ப் பிதுக்கி முகத்தை இப்புறம் அப்புறம் அசைத்து, "உயிர் போய் சுமார் எட்டுமணி நேரமாவது கழிந்திருக்க வேண்

டும். இனி நாம் உபசாந்திகள் செய்து, பொய் மூச்சை உண்டாக்க முயலுவது பயன் தராது. சுவாசப் பைகள் விரைத்துப்போய்விட்டன. இனி அவை துருத்திபோல சுருங்கி விரியா. நாம் விலாக்களை அழுத்தினுல் கூட அவை மரக்கட்டைபோலவே இருக்குமன்றி மழமழப்பா யிரா.” என்றார்.

கமிஷனர், “மரணம் எதனுல் ஏற்பட்ட தென்பது தெரிகிறதா? பாம்புகள் கடித்ததனுல் உயிர் போயிருக் குமோ?” என்றார்.

டாக்டர், “அப்படியும் இருக்கலாம். அல்லது அடித்து உபத்திரவித்துக் கொலை செய்து பைக்குள் போட்டுத் தைத்த போது பாம்புகளையும் உள்ளேபோட்டிருக்கலாம்.” என்றார்.

கமிஷனர், “ஏன் அப்படிச் செய்யவேண்டும்?” என்றார்.

டாக்டர், “இந்த அம்மாளின் புருஷர் முதலியோர் மனதில் பெருத்த திகிலை உண்டாக்கும் பொருட்டு அப் படிச் செய்திருக்கலாம். ஆனுல், நான் இப்போது இவ் விடத்தில் எதையும் நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. இந்தப் பிணத்தை நம் வைத்திய சாலைக்குக் கொண்டு போய்ப் பகலில் நன்ருக ஆராய்ச்சி செய்து பார்த்தே முடிவான அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டும்” என்றார்.

கமிஷனர், “சரி; பிணத்தை எடுத்து மோட்டாரில் போடச் செய்து, வைத்திய சாலைக்குக் கொண்டுபோங்கள். நான் நாளைய பகலில் வந்து உங்களைப் பார்க்கிறேன். மூர்ச் சித்துக் கிடக்கும் எஸ். ஆர். ஐயரை மோட்டார் வண்டியில்

வைத்து அவருடைய பங்களாவுக்குக் கொண்டு போய்ப் படுக்கையில் விட்டு மூர்ச்சையைத் தெளியவையுங்கள். அவருடைய ஆள்கள் வழக்கப்படி அவருக்குப் பாதுகாப்பாயிருக்கட்டும்" என்று கூறினார்.

உடனே சிலர் பிணத்தையும், அது கட்டப்பட்டிருந்த கித்தான் பையையும் எடுத்து டாக்டருடைய மோட்டார் வண்டியில் ஏற்றினர். டாக்டரும், சில ஜெவான்களும் அந்த வண்டியில் ஏறி உட்கார்ந்துகொள்ள, அது புறப்பட்டு ஓடியது.

சிலர் எஸ். ஆர். ஐயரைத் தூக்கி அவருடைய மோட்டார் வண்டியில் படுக்கவைக்க, மோட்டார் ஓட்டி அதை மெதுவாக விட்டுக் கொண்டு சென்றான். அவரைச் சேர்ந்த காவலாட்கள் எல்லோரும் வண்டியைச் சுற்றிப் பாதுகாப்பாகச் சென்றனர்.

பிறகு போலீஸ் கமிஷனர் தம் சிப்பந்திகளோடு மோட்டாரில் ஏறி உட்கார்ந்துகொண்டு தமது பங்களாவிற்குப் போய்ச் சேர்ந்தார்.

மறுநாள் மாலையில் வெளியான பத்திரிகைகளில் அபயங்கரமான சம்பவத்தைப்பற்றிய விவரங்கள்யாவும் பிரசுரிக்கப் பட்டிருந்ததன்றி, டாக்டர் பிணத்தைச் சோதனை செய்து பார்த்துக் கூறிய அவருடைய முடிவான அபிப்பிராயமும் சேர்க்கப்பட்டிருந்தது. பிணத்தின் வெளிப் பக்கத்தையும், உட் பக்கத்தில் ஜீவாதாரமான பாகங்களையும் வேறு சில வைத்திய நிபுணர்களை வைத்துக் கொண்டு சோதித்ததில், அடிகள் முதலிய தேகபாதை எதனாலும் மரணம் நேர்ந்ததாகச் சொல்வதற்கே இடமில்லை. உடம்பில் பல இடங்களில் பாம்பின் விஷப்பற்கள்

அழுந்திய குறிகள் காணப்படுகின்றன வானுலும், உடம்பிற்குள் பாம்பின் விஷமே ஏறியிருக்கவில்லை யாகையால், பாம்புக் கடியினுலும் மரணம் நேரவில்லை என்பது நிச்சயமாகத் தெரிகிறது. ஹிருதயத்தின் நிலைமையை ஆராய்ந்ததில், திடீரென்று அபாரமான திகிலும், மன அதிர்ச்சியும் ஏற்பட்டதனுல், ஒரே க்ஷணத்தில் சடேரென்று ஹிருதயம் நின்றுபோயிருக்க வேண்டுமென்று நிர்ணயிப்பதற்குப்போதிய குறிகள் இருக்கின்றன. ஆகையால், இந்தக் காரியத்தைச் செய்த மனிதர்கள் அடியில் வருமாறு இதை நடத்தி இருக்கலாமென்று யூகிக்க வேண்டியதாகிறது.

அதாவது, இந்த அம்மாள் மாலை வேளையில் ஆடைகளை விலக்கி விட்டு மறைவில் குளித்துக் கொண்டிருந்த சமயத்தில் திடீரென்று பல முரட்டு மனிதர்கள் பாய்ந்து பலவந்தமாகப் பிடித்துத் தூக்கிக் கித்தான் பைக்குள் புகுத்தி யிருந்தாலும் இருக்கலாம்; அல்லது, இரண்டொருவர் கைகால்கள் முதலியவற்றை அழுத்திப்பிடித்துக் கொள்ள, மற்றவர் ஆடைகளை விலக்கி இருக்கலாம். பிறகு இந்த அம்மாள் நிர்வாணமாய்க் கித்தான் பைக்குள் போடப்பட்டிருக்கலாம். அப்படிச் செய்தபின், அவர்கள் நான்கு பாம்புகளைக் கித்தான் பைக்குள் போட்டு அதன் வாயை மூடித் தைத்திருக்கலாம். பாம்புகள் தன் உடம்பில் வந்து விழுந்த வுடன், இந்த அம்மாள் சகிக்க இயலாத திகிலும், மன அதிர்ச்சியும் அடைய, அதனுல், உடனே ஹிருதய ஓட்டம் நின்றுபோ யிருக்கலாம். பாம்புகளின் பற்கள் பட்ட குறிகள் பல இடங்களில் காணப்படுகின்றன வானுலும், விஷம் உடம்பில் ஏருதிருந்ததை கவனித்தால், பாம்புகள் விஷமற்ற தண்ணீர்ப் பாம்பாக யிருக்க வேண்டும், அல்லது, விஷப் பற்கள் தீய்க்க பெற்ற பாம்புகளா

யிருக்கவேண்டும் என்ற அநுமானமே ஏற்படுகிறது. பை தைக்கப்பட்ட பிறகு அவர்கள் அதைத் தூக்கிப் பல இடங்களில் வைத்ததில், உள்ளே இருந்த பாம்புகளின்மீது இந்தப்பிணத்தின் பளு உறைத்ததனால், அவைகள் கோபங் கொண்டு தங்களுடைய வெறும்பற்களினால் பல இடங் களில் கடித்திருக்கலாம். இவையன்றி, இன்னோர் அநுமான மும் செய்ய இடமிருக்கிறது. பலவந்தமாய் ஆடைகளை விலக்கும் போதும், அல்லது, இந்த அம்மாளைத் தூக்கிப் பைக்குள் திணிக்கும்போதும், பாம்புகளை உள்ளேபோட்ட போதும், இந்த அம்மாள் ஓங்கிக் கூச்சலிட்டு அலறியிருப் பது சகஜமே. ஆனால் வாயில் துணி அடைக்கப்பட்ட தாகத் தெரியவில்லை. ஆகையால், இந்த அம்மாள் கத்தி னாலும், அது பிறருக்குக் கேட்காத இடத்தில் இந்தக் காரியம் நடத்திருக்க வேண்டுமென்றும் நாம் கருத வேண்டி யிருக்கிறது. எனவே, இந்தப் பை தைக்கப்பட் டது வரையில் ஆன காரியங்கள் சென்னைப்பட்டணத்திற்கு வெளியிலுள்ளதும், ஜனப்பழக்கமில்லாததுமான ஓரிடத் தில் நடத்திருக்கவேண்டும்.

என்பது போன்ற அபிப்பிராயத்தை டாக்டர் தெரி வித்தாராதலால், மரணவிசாரணை செய்த ஜூரிகள் முதலி யோர் அதைத் தழுவியே தமது தீர்மானத்தைக் கூறி, அந்தப் பிணத்தை எஸ். ஆர். ஐயரிடம் கொடுத்து விடலா மென்று உத்தரவிட்டனர்.

அந்த வரலாறும் பத்திரிகைகளில் வெளியிடப்பட்ட தாகையால், அதற்கு முன் போலீஸ் கமிஷனரால் வெளி யிடப்பட்ட விளம்பரத்திற்கு இது பரிகாரமாய் முடிந்தது.

எஸ். ஆர். ஐயரை மோட்டாரில் படுக்கவைத்துக் கொண்டு போய், அவருடைய பங்களாவில் படுக்கையில்

விட்ட ஆள்கள் அவருக்குச் செய்த உபசாந்திகளின் பயனாய் அவர் தெளிவடைந்து விழித்துக் கொண்டு தமது மனையாள் முன்னிரவிலேயே இறந்துபோ யிருக்க வேண்டுமென்று டாக்டர் கூறியதையும், அவளது பிணம் வைத்திய சாலைக்குப் போய்விட்டதென்ற செய்தியையும் கேட்டு, "ஐயோ ஐயோ" வென்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு விழுந்து புரண்டு குழந்தைபோலக் கோ வெனக் கதறி யழத் தொடங்கிவிட்டார்.

பங்களாவிலிருந்த சிப்பந்திகளும் காவலாட்களும் அவரது பரிதாபகரமான நிலைமையைக் கண்டு நிரம்பவும் இரங்கி இளகி அவருக்குத் தேறுதல் மொழிகள் கூறி அவரை உபசரித்தனரானாலும், அவருடைய அபாரமான விசனம் தணிவதாகவே தோன்றவில்லை. அவர் தமது பாங்கியின் சம்பத்து முழுதையும் இழந்திருந்தால்கூட அதில் நூற்றில் ஒரு பங்குகூட வருந்தியிருக்கமாட்டார்; மகா சித்ராங்கியான தம் இளைய மனையாளை இழந்த விசனத்தில் அவருடைய மனதும் உடம்பும் கட்டிலடங்காமல் வேதனைப்பட்டு உருகித் தவிக்கும்படி செய்துவிட்டதாகையால் அவர் எவருடைய ஆறுதல் மொழியையும் பொருட்படுத்தாது ஓயாமல் தலையில் கைகளால் அறைந்து கொண்டு, "ஐயோ என் ராஜாத்தி போயிட்டாளே! ஐயோ, நான் இன்னமே எப்பிடி இருக்கப்போறேன்! ஐயோ, என் ராஜாத்தி போயிட்டாளே! ஐயோ, நான் இன்னமே எப்பிடி இருக்கப் போறேன்" என்ற பல்லவியைத் திரும்பத் திரும்பச் சொல்லி ஓலமிட்டுப் புலம்பிக் கண்ணீரை ஆறாய் ஓடவிட்டவராய்த் தமது படுக்கையிலேயே அன்றைய பகல் முழுதும் புரண்டுகொண்டு கிடந்தார்.

அவருடைய மனையாளின் சவத்தைப் பரிசோதனை செய்த முக்கிய டாக்டரின் அபிப்பிராயத்தை அவர் தெரிந்து கொள்ளவே, அவருடைய அபரிமிதமான விசனப் பெருக்கிற்குத் துணையாகப் பெருத்த திகிலுணர்ச்சியும் சேர்ந்து கொண்டு அவரைச் சித்திரவதை செய்யத் தொடங்கியது.

தம் எதிரி தமது மனைவியின் ஆடைகளை விலக்கி சுத்த நிர்வாணமான நிலைமையில் அவளை கித்தான் பையில் சொருகிய காலத்திலும், பாம்புகளை அதற்குள் போட்ட காலத்திலும் அவளுடைய மனதும் உடம்பும் என்னபாடு பட்டிருக்குமென்பதையும், அந்த சமயத்தில் அவளுக்குண்டான பீதியும் குலைநடுக்கமும் எப்படி இருந்திருக்குமென்பதையும் அவர் மனதால் நினைத்துப் பார்க்கப் பார்க்க அதே க்ஷணத்தில் அவருடைய உயிரும் போய்விடுமோ என்று அஞ்சும்படியான நிலைமையை அவர் அடைந்தார்.

தம் எதிரியின் விஷயத்தில் எவ்வித கெடுதலும் செய்யாதவளான தம் இளைய மனையாளை மகா பயங்கரமான அவ்வளவு கொடிய தண்டனைக்கு உட்படுத்திக் கொன்று அதைத் தாமும் முகதாவில் பார்க்கும்படி செய்திருக்கும் ஈவிரக்கமற்ற பரம துஷ்டனான தமது பகைவன், தனது கடிதத்தில் எழுதியபடியே கடைசிவரையில் எல்லோருக்கும் தண்டனைகள் செய்து வைப்பான் என்ற நிச்சயம் அப்போதே அவருடைய மனதில் ஏற்பட்டுப்போய் விட்டதாகையால், எந்த சமயத்தில் ஸ்வர்ணம்பாள், சுந்தரி, கிருஷ்ணமூர்த்தி ஆகியோரையும் தாம் அதே நிலைமையில் பார்க்க நேருமோ என்ற நினைவும், எந்த சமயத்தில் அந்த எதிரி தம் இரண்டு கண்களையும் அம்பட்டன் கத்தியால் சீவி எடுக்கப்போகிறானோ என்ற நினைவும் தோன்றத் தோன்ற,

அவைகள் அப்போதே தம் கண்களின்முன் செய்கையில் நடப்பதுபோல அவர் அப்போது முதலே உணர்ந்து மரண வேதனை அநுபவிக்கத் தொடங்கினர்.

மறு நாளைய இரவில் தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட தமது மனையாளின் சவத்தைத் தமது பங்களாவில் கொணர்ந்து வைத்துக்கொண்டு, எஸ். ஆர். ஐயர் அதன்மீது விழுந்து புலம்பி முட்டி மோதி யடித்துக்கொண்டு கதறி யழுது அன்றையஇரவையும் மறுநாள்பகலில் பெரும்பாகத்தையும் அதேவிதமான துக்க வெறியில் கழித்து, பிணத்தை எடுத்துப் போய்க் கொளுத்த மனமற்றவராய்க் கிடந்து தவிக்க, மற்றவர்களது வற்புறுத்தலின்மேல் அந்தப்பிணத்திற்கு தகன கருமம் நிறைவேறியது. எஸ். ஆர். ஐயர் நெருப்புச்சட்டியை எடுத்துக்கொண்டு நடந்து செல்லமாட்டாமல் சோர்ந்து துவண்டு முற்றிலும் செயலற்றுப் போய்விட்டாராதலால், அவர் மயானத்திற்குப் போனதும் திரும்பிவந்ததும் மோட்டார் வண்டியின் உதவியினலேயே நடைபெற்றன.

அவ்வாறு தகன காரியத்தை முடித்துவிட்டு வந்தவர் இனி பிழைக்கமாட்டார் என்று பிறர் சந்தேகிக்கத் தக்க மகாகேவலமான நிலைமையை அடைந்து படுத்த படுக்கையாய் விழுந்துவிட்டார்.

எஸ். ஆர். ஐயருடைய இளைய மனையாளின் சவம் கித்தான் பைக்குள் திரும்பி வந்த சம்பவத்தைப் பற்றிய வரலாறுகள் வெளியாயிருந்த பத்திரிகைகளை கிருஷ்ண மூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும் பெற்றுப் படித்து திடுக்கிட்டுக் குலைநடுக்கங் கொண்டு அபாரமான திகிலும், விசனமும், பிரமிப்பும், கலவரமு மடைந்து தாம் உடனே புறப்பட்டு சென்னைக்குப் போவதா அல்லது வேறு என்ன செய்வது

என்பதை நிச்சயிக்கமாட்டாமல் சித்தப்பிரமை கொண்ட வர்கள்போ லிருந்து கதிகலங்கித் தவித்திருந்த சமயத்தில் எஸ். ஆர். ஐயரிடத்திலிருந்து அவர்களுக்கு அடியில் வருமாறு ஒரு தந்திச்செய்தி கிடைத்தது :—

மினியம்மாளேயும் அப்பாத்துரையையும் நான் வேலையிலிருந்து நீக்கிவிட்டேன். அவர்கள் நம் எதிரியின் தூண்டுதலினுல் அங்கே வந்து உங்களே ஏமாற்றி மாமியை அழைத்து வந்துவிட்டார்கள்; அழைத்து வந்தவர்கள் மாமியின் புடவை, ரவிக்கை முதலியவற்றைப் பிடுங்கிக்கொண்டு அவளே கித்தான் பையில் திணித்து, அதற்குள் நான்கு பெரிய பாம்புகளேயும் போட்டுத் தைத்துவிட்டார்கள். அவள் அந்த பீதியினுல் உடனே இறந்து போய்விட்டாள். அந்தப் பையை எதிரி நம் பங்களாவிற்குப் பக்கத்தில் கொண்டுவந்து போட்டுவிட்டான். அதை நாங்கள் எடுத்துப் பிரிக்க, பாம்புகள் ஓடிவிட்டன. மாமியின் உடம்பை நான் கொளுத்திவிட்டேன்.

நம்முடைய எதிரி மாமியை எப்படிக் கொன்ருனே அதுபோலவே, உங்கள் மூவரையும் கொன்று எனக்கு அனுப்பப் போவதாகவும், முடிவில் என்னுடைய கண்களேப் பிடுங்கிவிடப் போவதாகவும் பயமுறுத்திக் கடிதம் எழுதி இருக்கிருன். அவன் அப்படியே நடத்தக் கூடியவன். என்னேப்பற்றி நான் கொஞ்சமும் பயப்படவில்லே. மாமி போனவிசனமே என்னேக் கூடிய சீக்கிரம் கொன்றுவிடும்போலிருக்கிறது. ஆகையால், நம் எதிரி என் கண்களேத் தோண்டும் வரையில் நான் உயிரோடிருக்க மாட்டேனென்று நினேக்கிறேன். இப்போது நான் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாத மகா கேவலமான துர்ப்பல நிலேமையில் இருக்கிறேன். ஆகையால், உங்களேப் பாதுகாக்கும் விஷயத்தில்

நான் எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ள மாட்டாத அசக்தனு யிருக்கிறேன். நீங்கள் அங்கே இருப்பது நம் எதிரிக்கு நன்ருய்த் தெரிந்திருக்கிறது. ஆகையால், அவன் எப்படியாவது சூதுசெய்து உங்கள் மூவருக்கும் அபாயம் விளைவிக்க முயற்சிப்பான். நீங்கள் இனி ஒரு க்ஷண காலம்கூட அந்த இடத்தில் இருப்பது உசிதமானதல்ல. நீங்கள் உடனே புறப்பட்டு, இந்த ஊருக்கு வருவதாக அங்கிருப்போரிடம் சொல்லிவிட்டு, தலைமறைவாகவே பிரயாணம் செய்து,தூரமான ஊர் எதற்காகிலும் போய் ஒளிந்துகொண்டிருங்கள். அப்படி இருக்கையில் ரகஸியமாய் எனக்குக் கடிதம் எழுதி நீங்கள் இருக்கும் இடத்தைத் தெரிவியுங்கள். அப்போது இருக்கும் நிலைமைக்குத் தக்கபடி பிறகு நாம் நடந்துகொள்ளலாம். அவசரம், ஜரூர், அசட்டை வேண்டாம். உடனே புறப்பட்டுப் போய்விடுங்கள். இல்லாவிட்டால், நீங்களும் மாமியின் முடிவை அடைவது முக்காலும் நிச்சயம். —எஸ். ஆர். ஐயர்.

என்று எழுதப்பட்டிருந்த தந்திச் செய்தியைத் தெரிந்துகொண்ட கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும் என்ன நிலைமையில் இருந்திருப்பார்கள் என்பதை வாசகர்களே சுலபத்தில் யூகித்துக் கொள்ளலாம்.

தாம் உடனே புறப்பட்டுப் பறந்துபோய் அடுத்த நிமிஷம் புரசைப்பாக்கத்திலிருந்த தமது பங்களாவை அடைய வேண்டுமென்ற ஒரே ஆவல் கிளம்பி அவர்களிருவரையும் ஊக்கியதானுலும், அடுத்த நிமிஷம் அந்த எண்ணம் மாறியது. ஏனென்ருல், எஸ். ஆர். ஐயருடைய மனையாளைக் கடைசியாகவேனும் ஒரு தரம் பார்க்கவேண்டுமென்ற ஆசை

யினால் அந்த ஆவல் தோன்றியதாகையால், அவளுடைய தகனம் நிறைவேறிப் போய்விட்டதென்ற விஷயத்தை கவனிக்கவே, அதற்குமேல் தாம் அவ்வளவு அவசரமாய் அங்கு போகவேண்டிய தில்லையென் றுணர்ந்தனர். ஆயினும், அவளிடம் ஸ்வர்ணம்பாளும் கிருஷ்ணமூர்த்தி ஐயரும் கரை கடந்த அபாரமான வாஞ்சை வைத்திருந்தவர்க ளாதலால், அவள் திடீரென்று கொல்லப்பட்டுப்போனாள் என்ற செய்தி அவர்களால் தாங்க இயலாத பிரமாதமான விசனத்தை உண்டாக்கிவிட்டது. அதுவன்றி, எதிரி அவளை எவ்வித ஆடைகளுமின்றி, கித்தான் பைக்குள் திணித்து, பாம்புகளை உள்ளே போட்டுப் பையின் வாயைத் தைத்து, அவள் பெருத்த திகிலும், குலைநடுக்கமும், மன அதிர்ச்சியும் கொண்டு இறந்துபோகும்படி செய்துவிட்டானென்ற விஷயம் சகிக்கவொண்ணாத வேதனையையும், பிரமிப்பையும், நடுக்கத்தையும் உண்டாக்கி, அவர்களுடைய மன நிலைமையை சின்னபின்ன மாக்கிச் சிதர அடித்துவிடவே, எஸ். ஆர். ஐயர் எப்படி சித்தப்பிரமை கொண்டவர்போல் மாறிப் போனாரோ, அதுபோலவே இவர்களிருவரும் தமது மனோவேகத்தையும், மனத் தெளிவையும், ஊக்கத்தையும் இழந்து, கேனம் பிடித்தவர்கள்போ லாயினர்.

அதுவன்றி, எதிரி தங்களையும் விடாமல், அதேவிதமான பயங்கர முடிவிற்கு உள்ளாக்க எண்ணியிருக்கிறானென்றும், ஆதலால், ஜெமீன் கிராமத்தை விட்டு எங்கேனும் ஓடி மறைந்துகொண்டிருக்க வேண்டுமென்றும், எஸ். ஆர். ஐயர் எழுதி இருந்தது அவர்களுக்கு அபாரமான ஊக்கத்தையும் ஆவேசத்தையும் உண்டாக்குவதற்கு மாறாக, அவர்கள் சோர்ந்து தளர்ந்து செயலற்று, தாங்கள் என்ன செய்வது, எங்கு செல்வது என்பதை அறியாமல் மலைத்து நடைப்

பிணங்கள்போல் தவித்துத் திண்டாடும்படி செய்துவிட்டது. அந்த நிலைமையில் அவர்கள் அன்றைய பகல் முழுதும் அந்த ஊரில் இருந்தனர். அப்போது கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு ஓர் எண்ணமுண்டாயிற்று.

அவர் சென்னையில் கலாசாலையில் படித்த காலத்தில், அவரோடுகூடப் படித்த **ராமமூர்த்தி** என்ற பெயருடைய ஒரு சகா மாணவனுக்கும் அவருக்கும் அந்தரங்கமான நட்பும் பிரியமும் ஏற்பட்டுப்போ யிருந்தன. அவர்கள் பல வருஷ காலம் ஒன்றுயிருந்து உயிரும் உடலும்போலப் பழகினுர்களாதலால், அவர்களுடைய படிப்பு முடிந்த பின்னர் இருவரும் பிரிந்து போகவேண்டிய சந்தர்ப்பம் வந்தபோது, ஒருவரை யொருவர் விட்டுப் பிரிய மனமற்றவராய் இருவரும் கோவென்று கதறி யழுதுவிட்டனர். ராமமூர்த்தி என்ற மாணவன் திருவையாற்றிற் கருகிலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு பெரிய மிராசுதாருடைய ஏக புத்திரன்; அதிக செல்வாக்கும், செல்வமும் வாய்ந்தவன். முடிவாக அவர்கள் பிரிந்த காலத்தில் கிருஷ்ணமூர்த்தி எப்படியாகிலும் கூடிய சீக்கிரம் தனது கிராமத்திற்கு ஒரு நடை வரவேண்டுமென்று ராமமூர்த்தி வாக்குறுதி வாங்கிக்கொண் டிருந்ததன்றி, தன்னுடைய ஊருக்குப் போன பிறகு அதைப்பற்றி நினைப்பூட்டி கிருஷ்ணமூர்த்திக்கு அடிக்கடி கடிதங்களும் எழுதிக் கொண்டே இருந்தான். அந்த நண்பனுடைய நினைவு இந்த சமயத்தில் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு உண்டாயிற்று. எனவே, தாம் தமது அபாய சமயத்தில் ராமமூர்த்தியிடம் போய் அவனுடைய வீட்டில் இருக்கலாம் என்ற யோசனை கிருஷ்ணமூர்த்தியின் மனதில் எழுந்தது. அதை அவர் ஸ்வர்ணம்பாளிடம் தெரிவிக்க, தாம் போய்த் தங்கியிருக்கத் தக்க இடம் வேறு இல்லாமையால், அவளும் அதற்கு இணங்கினுள்.

ஆனால் அங்கு போயிருப்பதில் ஓர் இடையூறு இருந்த தாகவும் கிருஷ்ணமூர்த்தி ஐயர் உணர்ந்தார். அதாவது, ராமமூர்த்தியின் சொந்தத் தாய் இறந்துபோகவே, அவனுடைய தந்தைக்கு இரண்டாவது மனைவியொருத்தி ஏற்பட்டிருந்தாள். அவளுக்கு ஓர் ஆண் குழந்தையும் பிறந்து விட்டது. ஆகையால் அவளுக்கு ராமமூர்த்தியிடம் பற்றுதலும் அன்பும் குறைந்துபோகவே, அவள் தனது புருஷனுக்குத் தலையணை மந்திரோபதேசம் செய்து செய்து, அவரும் தமது மூத்த புதல்வனை வெறுக்கும்படி செய்து வைத்திருந்தாள். அந்த விஷயத்தை ராமமூர்த்தி கிருஷ்ணமூர்த்திக்கு எழுதிய கடிதங்களில் அடிக்கடி எழுதித் தனது சிற்றன்னையின் கொடுமையை வெளியிட்டிருந்தானாகையால், தாம் அவர்களுடைய வீட்டிற்குப் போய் மாதக் கணக்கில் மறைந்திருப்பதென்றால், ராமமூர்த்தியின் சிற்றன்னை அதற்கு சம்மதித்திருப்பாளோ மாட்டாளோ, ஒருகால், அவளே தங்களை எதிரியிடம் காட்டிக்கொடுத்துவிடுவாளோ என்ற சந்தேகங்கள் கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய மனத்தில் உண்டாகி வதைத்தன வானாலும், வேறு வகை இல்லாதிருந்தமையால், அவ்விடத்திற்கே போகலாமென்று தீர்மானித்து, தாம் உடனே புறப்பட்டு அவசரமாய் சென்னைக்குப் போகவேண்டுமென்று அங்கிருந்த மனிதர்களிடம் தெரிவித்துவிட்டு, ஒரு குதிரை வண்டியை அமர்த்தினார். விடிய ஜாமத்திற்கு குதிரை வண்டி வந்து ஆயத்தமாக நிற்க, கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும், சுந்தரியோடு ஏறி உட்கார்ந்து கொள்ள, வண்டி திருவையாற்றை நோக்கி ஒரே முசுவாய் ஓடி வரத் தொடங்கியது.

அந்த வண்டி பகல் சுமார் ஒருமணி சமயத்தில் விஷ்ணுபுரம் என்னும் கிராமத்தண்டை வந்த காலத்தில், எதி

ரில் வந்த சத்திரம் மணியகாரரான கைலாசையர் வண்டிக் காரனேடும், கிருஷ்ணமூர்த்தி ஐயரோடும் சம்பாஷித்து அவர்களைப் பண்ணை எஜமான் ராமாமிர்த ஐயருடைய மாளிகைக்கு அழைத்துக்கொண்டு போனதுமுதலிய வரலாறுகள் இந்தக் கதையின் ஆரம்பத்தில் முதலாவது அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

அவ்விடத்தில் அவர்களுக்கு மன்மத பீட மகா யோகீசுவரருடைய அருள் ஏற்பட்டது, அவர் சுந்தரியை வைத்துப் பூஜை செய்ய உத்தேசித்தது, அவர்களுடைய குடும்ப வரலாற்றைக் கேட்டு பண்ணை ஐயரும், அவரது மனையாளும் தங்கள் மாளிகையிலேயே இருந்துவிடும்படி அவர்களிடம் கேட்டுக்கொண்டது, அர்த்தராத்திரியில் அம்பாள்பிரஸன்னமானது, ஸ்வர்ணும்பாள் சித்தப்பிரமைகொண்டு யோகீசுவரரது மந்திரரட்சையில் இருந்து குணமடைந்தது, குழந்தைப் பிராயத்தில் காணுமற்போன பண்ணை ஐயருடைய பெண்குழந்தைபோல சுந்தரியும், பண்ணை ஐயருடைய மனையாள்போல ஸ்வர்ணும்பாளும் இருப்பதாக பண்ணையாரும் அவருடைய மனையாளும் கருதி, அதுபற்றி மூவரிடத்திலும் அவர்கள் பரமப்பிரீதியா யிருந்தது, பண்ணையாருடைய ஏக புத்திரனை கோபாலரத்னமும் சுந்தரியும் இணைபிரியா விளையாட்டுத் தோழர் தோழிகளானது, மன்மத பீட மகா யோகீசுவரர் அந்த ஊரில் முகாம் செய்த இரண்டு மாத காலம் இவர்கள் மூவரும் அந்த ஊரிலேயே இருந்தது முதலிய வரலாறுகளை யெல்லாம் முன் னதிகாரங்களில் விரிவாகக் கூறி யிருக்கின்றேம்.

இவர்களுடைய குடும்ப சங்கடங்களையெல்லாம் கேள்வியுற்ற பண்ணையாரும் அவருடைய மனையாளும் இவர்கள் விஷயத்தில் பெரிதும் இரக்கமும் அநுதாபமும் கொண்டு இவர்

களை ஷை இரண்டு மாத காலமும் மிக பத்திரமான இடத்தில் வைத்து, கண்களை இமைகள் காப்பதுபோலக் காத்து வந்தனர். யோகீசுவரரும் இவர்களுடைய குடும்பத் துன்பங்கள் எல்லாம் மிக சீக்கிரத்தில் நிவர்த்தியாகி விடுமென்று தீர்க்க தரிசனம் கூறியிருந்தாராதலால், தங்களுக்குக் கூடிய விரைவில் விமோசன காலம் ஏற்படுமென்று நினைத்து அதை எதிர்பார்த்திருந்தனர். அந்தக் காலத்திற்குள் அவர்கள் மூவரும் பண்ணையாருடைய சொந்தக் குழந்தைகள் போலவே கருதப்பட்டு மிக கண்ணியமாகவும் ஆசாபாசங்களோடும் நடத்தப்பட்டு வந்தமையால், அவர்கள் பண்ணையார் குடும்பத்தோடு ஐக்கியப்பட்டு எவ்வித வேறுபாடுமின்றி இருந்து வந்தனர். முக்கியமாய் சுந்தரியே பண்ணையார் குடும்பத்தைச் சேர்ந்த எல்லோருக்கும் மிகக் கவர்ச்சியுடைய காந்தமாயிருந்து எல்லோருடைய பிரியத்தையும் மனத்தையும் கொள்ளைகொண்டுவிட்டாளாதலால், மாறிமாறி பண்ணையாரும் பர்வத லக்ஷ்மியம்மாளும் அவளைத் தூக்கி வைத்துக் கொண்டு எப்போதும் கொஞ்சிக் குலாவி சீராட்டிப் பாராட்டி வந்தனர்.

அவர்களது செல்வப் புதல்வனை கோபாலரத்னம் எப்போதும் சுந்தரியை விட்டுப் பிரியாமல் அவளுடனேயே ஓடியாடிப் பொழுதைப் போக்கிக்கொண்டிருந்தானுதலால் இருவரும் உடலும் உயிரும்போல் ஒன்றுபட்டு சதாகாலமும் இணைபிரியா அன்னியோன்னிய நட்பினர் ஆய்விட்டனர். சிற்சில சமயங்களில் பண்ணையாரும், அவருடைய மனையாளும் சுந்தரியை வைத்துக் கொஞ்சி அவளது மழலைமாருச்சொற்களாகிய தேவாமிருத விருந்தை ஆநந்தமாகச் சுவைத்துக்கொண்டிருக்கையில், கோபாலரத்னம் அவளை விளையாட்டிற்கு அழைக்க அங்கு வந்துவிடுவான்; சுந்தரியும்

அவனோடு செல்ல ஆவல்கொண்டு துடிப்பாள். அப்போது பர்வதலக்ஷ்மியம்மாள் சுந்தரியைத்தூக்கி மார்போடணைத்து முத்தமிட்டு, "ஏண்டி கண்ணு, நீ ஆருக்கு வாக்கப்படப் போறே?" என்று மிகக் கொஞ்சலாகக் கேட்பாள்.

சுந்தரி புன்னகையோடு கோபாலரத்னத்தைப் பார்ப்பதும் நாணிக் கோணிக் கண்களை மூடிக்கொண்டு முகத்தை அந்த அம்மாளுடைய மார்பில் புதைத்துக்கொள்வதுமாய் சகிக்கவொண்ணாத இன்ப உணர்ச்சியில் கிடந்து தவிப்பாள்.

உடனே பர்வதலக்ஷ்மியம்மாள் மேன்மேலும் கொஞ்சி முத்தங்கள் கொடுத்து, "சுந்தரீ, வெக்கப்படாமெசொல்லு, நீ யாருக்கு வாக்கப்படப்போறே, நம்ப கோபுக்குத்தானே? ஆமான்னு சொல்லு, பயப்படாதே" என்று கூறி நயமாக ஊக்குவாள்.

சுந்தரி தனது கண்களை மூடிக்கொண்டிருந்தபடி, "ஆமா" என்று மிக வசீகரமாகத் தனது தலையை அசைப்பாள்.

அதைக் கேட்டு பண்ணை ஐயரும், பர்வதலக்ஷ்மியம்மாளும் ஸ்வர்க்கலோகத்தையே நேரில் பார்த்துவிட்டவர்கள் போலக் கரைகடந்த ஆநந்த வெள்ளத்தில் கிடந்து திளைத்துக் கலகலவென்று நகைத்துப் பூரித்துப் பொங்கிப் போவார்கள். அவ்வாறு அவர்கள் சுந்தரியிடத்தில் அபரிமிதமான ஆசாபாசங்களைக் கொண்டதற்கு அடிப்படையான காரணம் அதற்கு சுமார் பதினேழு வருஷ காலத்திற்குமுன் காணாமற்போன ஐந்துவயதடைந்திருந்த அவர்களுடைய மூத்த பெண்ணைப்போலவே சுந்தரி அழகு, சாயல், நிறம், முக அமைப்பு, தேகத்தோற்றம் முதலிய எல்லா அம்சங்களி

லும் இருந்ததே. தமது செல்வ புதல்வனை கோபாலரத்னத்திற்கு வாழ்க்கைப்பட சுந்தரி விரும்புகிறுளா வென்று கேட்டது வெறும் பேச்சோடு நிற்பதற்கன்று. சதிபதிகள் இருவரும் உண்மையிலேயே சுந்தரியைத் தம் குமாரனுக்கு வாழ்க்கைப் படுத்திவிட வேண்டுமென்று மனப்பூர்வமான வேட்கை கொண்டு துடித்தன ராதலால், அவர்களுடைய மனத்தி லெழுந்த எண்ணம் அடிக்கடி வார்த்தை மூலமாய் வெளிப்பட்டது. ஏனெனில், சுந்தரியை எப்போதும் பார்ப்பது காணுமல்போன தங்கள் குழந்தையை தத்ரூபம் நேரில் காண்பது போன்ற மகிழ்ச்சியையும் உள்ளப் பூரிப்பையும் உண்டாக்கிய தாகையால், அவர்களுடைய மனதில் அந்தத் தீர்மானமே சதாகாலமும் தலையெடுத்து நின்றது.

அவர்கள் தங்கள் விருப்பத்தை கிருஷ்ணமூர்த்தி ஐயர், ஸ்வர்ணும்பாள் ஆகியோரிடத்தில் கூடத் தெரிவிக்கவும், அவர்களுடைய சம்மதியைப் பெறவும் உள்ளுக்குள் ஆவல் கொண்டு துடித்தன ராலுைம், ஸ்வர்ணும்பாளின் தாய் சமீபகாலத்தில் இறந்ததனுலும், எஸ். ஆர். ஐயர் நோயில் படுத்திருக்கிறு ரென்ற செய்தி வந்துகொண் டிருந்தமையாலும், அவர்களுடைய பகைவன் ஸ்வர்ணும்பாள். முதலியோருக்கு ஏதேனும் கெடுதல் செய்வானே என்ற பீதி அப்போதும் மாருமல் இருந்தமையால், ஸ்வர்ணும்பாளும், கிருஷ்ணமூர்த்தி ஐயரும் பெருத்த வியாகுலத்தில் ஆழ்ந்து சதாகாலமும் வேதனைப்பட்டு வாடித் துவண்டிருந்தன ராதலாலும், அந்த அசந்தர்ப்ப காலத்தில் தாங்கள் கல்யாணப் பிரஸ்தாபத்தை எடுப்பது யுக்தமானதன்றென நினைத்து பண்ணையாரும், பர்வத லக்ஷ்மியம்மாளும் தங்கள் மனத் துடிப்பை அடக்கிக் கொண்டிருந்தனராலுைம் சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் ஜாடை ஜாடையாய்த் தங்கள்

கருத்தை வெளிப்படுத்தி, கல்யாண விஷயத்தைப்பற்றி அடிக்கடி கோடி காட்டிக்கொண்டே இருந்தனர்.

கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும் அவர்களுடைய கருத்தைத் தெரிந்து கொண்டு, தங்கள் பெண் சுந்தரிக்கு அதைவிட மேலான, அல்லது, அதற்கு சமதையான இடம் இந்த உலகத்தில் கிடைக்காதென்றும், அந்தக் கல்யாணம் கூடியசீக்கிரம் நிறைவேறவேண்டுமென்று தாங்களும் தெய்வங்களை வேண்டிக்கொண்டிருப்பதாகவும்,ஆனால் தங்கள் குடும்பத்தாருக்கு நேர்ந்துள்ள இடர்கள் யாவும் நீங்கியவுடனே ஷை விவாகத்தை முடித்துவிடலாமென்றும் சொல்லி வந்தனர்.

அந்த நிலைமையிலேதான் மன்மத பீட மகா யோகீசுவரர் தமது பரிவாரங்களுடன் அந்த ஊரை விட்டுப் புறப்பட்டுச் சென்றார்.

யோகீசுவரர் அந்த ஊரில் தங்கியிருந்த காலத்தில் அதிமானுஷ அற்புதச் செய்கைகள் பலவற்றைச் செய்து காட்டி எல்லோரும் பிரமிப்படையும்படி நடந்து கொண்டாரென்பது வாசகர்களுக்குத் தெரிந்த விஷயம்.

ஒரு சந்தர்ப்பத்தில் அவர் பண்ணையாருடைய மாளிகையின் சகலமான பாகங்களுக்கும் சென்று பார்த்துவிட்டு வந்தாராதலால், அப்போது அவர் பண்ணையாருடைய காணமற் போன பெண்ணின் படத்தைப் பார்க்கவே, அச்சமயம் ராமாமிர்தையர் அந்தப் பெண் தமது முதற் குழந்தை யென்றும், அது ஐந்தாவது பிராயத்தில் திடீரென்று காணமல் போய்விட்டதென்றும், தேடிப் பார்த்துப் பார்த்து அதன் பொருட்டு சுமார் லக்ஷம் ரூபாய் வரையில் செலவிட்டுத் தாங்கள் ஓய்ந்து போய் விட்டதாகவும்,

அந்தப் பெண்ணை இழந்ததனால் தங்களுடைய ஆயுட்காலம் முழுதும் தாங்கள் சந்தோஷமற்ற வாழ்க்கை நடத்திவருவதாகவும், பகவான் தங்களுக்கு சகலமான ஐசுவரியத்தையும் ஏராளமாக வாரி விட்டிருந்தாரானாலும் அந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் ஆருத்துயரை நிரந்தரமாய் வைத்துவிட்டார் என்றும், அந்தக் குழந்தை அப்போது உயிரோடிருக்கிறதா, இறந்துபோய்விட்டதா என்ற விஷயத்தை யோகீசுவரர் தமது ஞான திருஷ்டியால் பார்த்துச் சொன்னால்,அது தங்களுக்கு ஒருவித ஆறுதலைத் தருமென்றும் மிகப் பணிவாக யோகீசுவரரிடம் விக்ஞானம் செய்து கொண்டார்.

அந்தப் பெண்ணின் அபூர்வமான அழகையும், முக விலாஸத்தையும் கண்ட யோகீசுவரர் அது காணமற்போனதைப்பற்றி விசன மடைந்தாராஞலும், இரண்டொரு நிமிஷகாலம் தமது கண்களை மூடி,மூக்கின்மேல் ஆள்காட்டி விரலை வைத்துக்கொண்டு தமது அகக்கண்ணல் உண்மையை ஆராய்ந்து பார்க்க முயன்ற பின்னர் தமது கண்களைத் திறந்து,"ஐயரவாள்! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் பூஜை செய்யும் பராசக்தி தேவியின் மூலஸ்தானம் சென்னைக்கடுத்த திருவொற்றியூரில் இருக்கிறது. நான் கூடிய விரைவில் அந்த ஊருக்குப் போய்ச்சேர உத்தேசிக்கிறேன். நான் அங்கே போய் ஜெபம் பண்ணினல் பராசக்தி தேவி என் கண்முன் பிரஸன்னமாவாள். இந்த விஷயத்தை அவளிடம் விக்ஞாபனம் செய்து, இதன் உண்மை வரலாற்றை அறிந்து உங்களுக்கு நான் கடிதம் எழுதுகிறேன். அது வரையில் பொறுத்திருங்கள்" என்று மறுமொழி கூறியிருந்தார்.

அது வன்றி, கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும் கடைசியாக யோகீசுவரரது பாதங்களில் வீழ்ந்து அவ

ருடைய ஆசியைப் பெற்றுக்கொண்ட காலத்தில் யோகீசு வரர், "உங்கள் இருவரையும் பார்க்கும்போது தான் என் மனம் நிரம்பவும் சங்கடப்பட்டுத் தவிக்கிறது. உங்கள் குடும் பத்திற்கு நேர்ந்துள்ள இடர்களைக் கேட்டதுமுதல், உங்க ளுக்கு சீக்கிரம் நல்ல காலம் பிறக்க வேண்டுமென்று நான் அம்பாளுக்கு அர்ச்சனை செய்யும்போ தெல்லாம் பிரார்த் தித்துக்கொண்டேதா னிருக்கிறேன். உங்கள் அல்லல்க ளெல்லாம் சூரியனுக்கு முன் பனியென அதிசீக்கிரம் நீங்கி விடுமென்று அம்பாள் நல்ல குறி காட்டி யிருக்கிறுள். நான் உங்களை மறந்து விடுவேனென்று நினைக்கவேண்டாம். நான் சக்தி தேவியின் மூலஸ்தானத்திற்கு இன்னம் சில தினங் களில் போய்ச் சேருவேன். அங்கே நான் ஜெபம் செய்து, பராசக்தி தேவியின் சூலாயுதத்தை ஏவி, உங்கள் எதிரி எங் கிருந்தாலும் அவனுடைய இருப்பிடத்தைக் கண்டுபிடித்து அவனை என்முன் கொண்டுவரச் செய்து, அவனுக்கு நல்ல புத்தி புகட்டி, இனி அவன் உங்களுக்கு எவ்வித அபாய மும் விளைவிக்காதபடி செய்கிறேன். கூடிய சீக்கிரம் என் னிடமிருந்து உங்களுக்கு சந்தோஷச் செய்தி வரப்போகி றது. நீங்கள் உங்களுடைய வியாகுலத்தையும் சோர்வை யும் விட்டு சந்தோஷமாயிருங்கள்" என்று திருவாய் மலர்ந்து, அவர்களிருவரையும் ஆசீர்வதித்து, ஸ்வர்ணம் பாளின் முகத்தையும் கடைக்கண்களால் குளிரக் கடா க்ஷித்துப் புன்முறுவல் செய்தருளினுர்.

அது வன்றி, இன்னொரு முக்கியமான விஷயத்தையும் யோகீசுவரர் தெரிந்து கொண்டிருந்தார். பண்ணையாரும், அவருடைய மனையாளும் சுந்தரியைத் தம் குமாரன் கோபால ரத்னத்திற்கு வாழ்க்கைப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று நிரம்பவும் ஆவல் கொண்டிருந்ததையும்,

அதற்கு கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணாம்பாளும் சம்மதித்திருந்ததையும், அந்த மகான் அறிந்திருந்தார்.

ஆகவே சகலமான விஷயங்களிலும் இரண்டு குடும்பத்தாருக்கும் அநுகூலம் ஏற்படுவதற்கு அவர்கள் மன்மதபீட மகா யோகீசுவரருடைய தெய்விக சக்தியிலேயே பூர்த்தியான நம்பிக்கை வைத்து, அவரையே மலைபோல மதித்திருந்ததன்றி, அவருடைய ஸ்ரீமுகம் தங்களுக்கு எப்போது கிடைக்குமென்று ஆவலோடு எதிர்பார்த்து, ஒவ்வொரு நாளைய தபாலின் வருகையையும் கவனித்தபடியே இருந்தனர்.

யோகீசுவரர் அந்த ஊரை விட்டுப் போய் சுமார் ஒரு வாரகாலம் கழிந்தது. அவரிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட ஸ்ரீமுகம் வந்து சேர்ந்தது. பண்ணை ராமாமிர்த ஐயர் அதை வாங்கி இரண்டு குடும்பங்களைச் சேர்ந்த மற்றவர்களையும்கூட வைத்துக்கொண்டு படிக்க, அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது :—

மகா-௱-௱-ஸ்ரீ விஷ்ணுபுரம் பண்ணை ஐயரவாள் சமுதிற்கு போலிச்சாமியார் பொன்னுசாமி ஐயர் மிக வணக்கமாய் எழுதிக் கொள்ளும் விக்ஞாபனம். அநேக நமஸ்கார உபய குசலோபரி.

இதில் உபயோகிக்கப்பட்டுள்ள "போலிச்சாமியார்" என்ற சொற்களைப் படிக்கும்போதே நீங்கள் திடுக்கிட்டு பிரமித்துப்போவீர்களென்பது நிச்சயம்! அப்போது உங்கள் மனம் எவ்விதமான சந்தேகங்களையும் எண்ணங்களையும் கொண்டு தவிக்குமென்பதையும், உங்களுக்கு என்மேல் எவ்வளவு அதீதமான கோபாவேசம் உண்டாகுமென்பதையும் நான் நன்றாயறிவேன். இந்த சமயத்தில் நான் உங்களுக்கெதி

ரில் இருந்தால், என் பாடு என்ன ஆகுமென்பதையும் நான் என் மனதால் சுலபத்தில் பாவித்துணர்கிறேன். ஆனு லும் உங்களுடைய ரௌத்திராகாரமான கோபம் என் வரை யில் எட்டக்கூடாத தூரத்தில் நானிருக்கிறேனுகையால், துணிந்து சில உண்மைகளை உங்களுக்கு விக்ஞாபனம் செய்துகொள்ள எண்ணுகிறேன். நான் என்னைப் போலிச் சாமியார் என்று குறித்துக் கொள்வதிலிருந்து, கேவலம் சுயநலங்கருதிப் பிறரை வஞ்சிக்கும் பொருட்டு வெளிக் கிளம்பும் வெறுங் காஷாய வஸ்திர ருத்ராக்ஷப்பூண என்று என்னை நீங்கள் எண்ணிவிட வேண்டாம். உண்மையில் நான் அந்த வகுப்புத் துறவி யல்லேன் என்பதை நான் உறுதியாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எவருக்கு உடலபிமானம், உயிரபிமானம், சுயஜாதி அபிமானம், உறவின ரபிமானம், பொருளபிமானம், பரம் பரையான மடத்து சொத்துக்கள், அதிகாரம் முதலியவற்றி லபிமானம் ஆகிய பற்றுதல்கள் இருக்கின்றனவோ, அவர் உண்மையாக உலகைத் துறந்தவராகார் என்பதை நான் எடுத்துக் காட்ட வேண்டிய அவசியமே இல்லையென்று நம்பு கிறேன்.

“வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.”

என்று கடவுளைக் குறிப்பதுண்டு. அதுபோல எதிலும் அல்லது எவரிடத்திலும் அதிகப் பற்றுதலும், எதன்மீதும் அல்லது எவரிடத்திலும் பகைமையும் இல்லாமல் இருப்ப வர் எவரோ அவரே உண்மையான துறவி. அந்த சம்பூர்ண லக்ஷணம் என்னிடத்தில் இல்லையாகையால் நான் என்னைப் போலிச் சாமியார் என்று குறித்துக் கொண்டேன். நான்

போலிச் சாமியார் என்று என்னைக் குறித்துக் கொண்ட தற்கு இன்னொரு முக்கிய காரணமு மிருக்கிறது. நான் முக்கியமான ஒரு பரோபகார தர்மத்தை ஸ்தாபிக்கும் பொருட்டு இந்த ராஜதானியிலுள்ள பெரும்பாலான பெரிய மனிதர்களிடம் போய் யாசித்து, கஜகரணம் கோகரணம் குட்டிக்கரணமெல்லாம் போட்டுப் பார்த்ததில், என்னை அவர்கள் சிறிதும் இலட்சியம் செய்யாமல் மிக கேவலமாக நடத்தி கருடப்பார்வை பார்த்து வெறுங்கையோடு துறத்தி விட்டனர்; சிலர் தாறுமாருக வைது, நான் பொது நலப் போர்வையைப் போர்த்திக்கொண்டு சுய நல எண்ணத்தோடு ஊரைக் கொள்ளையடிக்க முயற்சிக்கிறேன் என்று சொல்லி என்னைப் பலவாறு இகழ்ந்து அனுப்பினர்; சிலர் மகா மூர்க்கமான மிருகம்போலக் கோபாவேசங்கொண்டு துர்ப் பாஷையை உபயோகித்து என்னை ஓட்டி விட்டனர்; மற் றும் பல மகான்கள் என்னை அடித்து பலவந்தமாகத் தம் வீட்டிலிருந்து வெளியேற்றினர். வேறு பலர் ஆகட்டும் ஆகட்டுமென்று முடிவில்லாமல் வாய்தாக்கள் வைத்துக் கொண்டேபோய், நானே அலுத்து நின்று விடும்படி தந்தி ரம் செய்தனர். ஆனல் ஏராளமாகப் பணம் படைத்தவர் களைவிட, பரம ஏழைகளாயிருப்பவர்களே என் கருத்தை ஆமோதித்து, நான் படும்பாட்டைக் கண்டு என்னிடம் இரக்கமும் அநுதாபமும் கொண்டு, தம் தம்மா லேன்ற வரையில் காலணு அரையணுவாகிய சிறுசிறு தொகைகளை உதவினர்.

அந்த இனத்தில் என்னிடம் சுமார் ஐந்நூறு ரூபாய் சேர்ந்ததானலும், நான் இந்த ராஜதானியிலுள்ள பெரும் பாலான பெரிய மனிதர்களிடம் யாசிக்கும் பொருட்டுப் பல தடவைகள் பிரயாணம்செய்து போய் அலைந்து திண்

டாடியதில், என் கையில் இருந்த ஷ சொற்பத் தொகை யும் விரயமாகிவிட்டது. அதுவரையில் நான் பட்டபாடுக ளெல்லாம் விழலுக்கிறைத்த தண்ணீராய் முடிந்து போயின.

இவ்வாறு என் முயற்சிகள் ஏமாற்றத்திலும் அப ஜெயத்திலும் முடியவே, என் மனத்தில் உண்டான கோபத் திற்கும் வீராவேசத்திற்கும், நான் அளவு சொல்ல முடி யாது. சிவன் ஒரு நிமிஷகாலம் அவருடைய நெற்றிக் கண்ணை எனக்கு அந்த சமயத்தில் இரவல் கொடுத்திருந் தால், இந்த ராஜதானியிலுள்ள அத்தனை சீமான்களும், அவர்களுடைய பாபகரமான சொத்துகளும் சாம்பலாய்ப் போயிருப்பது திண்ணம். ஆனால் சிவன் அப்படிச்செய்ய முன்வரவில்லை. ஆகையால், என்னுடைய கோபாவேசமும், குரோத உணர்ச்சியும் கொஞ்ச காலத்தில் தணிந்து போயின. நான் எடுத்துக்கொண்ட பரோபகார தர்ம கைங்கரியத்தைக் கைவிட்டுவிட எனக்கு மனமில்லை. இந் தக் கட்டை அழிந்து மண்ணாகுமுன், எப்பாடுபட்டாவது சுமார் லக்ஷம் ரூபாயாவது சேர்த்து அந்த தர்ம கைங்கரி யத்தைச் செய்து விட்டால், என்னால் எத்தனையோ ஆயிரம் ஏழை ஜனங்கள் சாசுவதமான நன்மையை அடைந்து கொண்டே இருப்பார்கள் என்ற எண்ணம் என் மனதில் மூர்க்கமான ஆவேசத்தை உண்டாக்கிக்கொண்டே இருந்த தாகையால், அதற்கு முன் பணம் கொடுக்க மறுத்த லோபிகளிடத்திலிருந்தே எனக்குத் தேவையான பெருந் தொகையை வசூலித்துத் தீர வேண்டுமென்று நான் தீர் மானித்துக் கங்கணம் கட்டிக்கொண்டேன். வேறு எந்த வகையில் முயற்சித்தால், அல்லது, எந்தத் தந்திரத்தைப் பின்பற்றினால் பணம் சுலபத்தில் கழலும் என்று யோசித்து யோசித்துப் பார்த்து முடிவில் சாமியார் வேஷம் போடு

வதே சரியான வழி என்று கருதினேன். வெறும் சாமியா ரானல், அதனல் ஒரு பயனும் உண்டாகாதென்பதை உணர்ந்து ஒரு மடாதிபதி போலவே வேஷம் போட்டு, அதற்குரிய எடுபிடிகள், பல்லக்கு, பீடம், ஆள் மாகாணங் கள் முதலிய உபகரணங்களோடு திக்விஜயம் செய்யத் தொடங்கினல், எப்பேர்ப்பட்ட வணங்காமுடி மன்னர்கள் கூட என் காலில் விழுந்து, என்னை ஸ்வாமி, ஸ்வாமி என்று கொண்டாடி, நான் கேட்காமலிருக்கும்போதே பெரும் பெரும் தொகைகளை என் காலடியில் கொட்டி எனக்குப் பாதபூஜையும் செய்வார்கள் என்று நினைத்து, அப்படியே செய்யத் தீர்மானித்து, இரண்டொரு வருஷகாலம் பாடு பட்டு ஒரு மடாதிபதிக்கு வேண்டிய சாமான்களையும், ஆள் மாகாணங்களையும் காலக்கிரமத்தில் சேகரித்து அதிகப்படுத் திக்கொண்டு சுமார் ஒரு வருஷகாலத்திற்கு முன்னிருந்து நான் பூண் நூலை அறுத்துப் போட்டுவிட்டு, காஷாய வஸ் திரமணிந்து, ஏகதண்டத்தைத் தாங்கி, மடாதிபதியின் பட் டத்தை எனக்கு நானே உண்டாக்கிக் கொண்டு திக்விஜயம் செய்யப் புறப்பட்டேன்.

இந்த உலகில் என் தாயாரைத் தவிர நான் வேறு உறவி னரைப் பார்த்தறியேன். நான் நிர்ணயந் தவருத பிரம்ம சாரி. என் தாய் சம்பூர்ணமான துர்ப்பாக்கியவதி. அவள் ஒரு பணக்கார சாஸ்திரியாருடைய புத்திரி யென்று என் னிடம் பல தடவைகளில் சொல்லி யிருக்கிருள். என் தகப் பனர் பெரிய லக்ஷப்பிரபு. என் தாயார் மகா பரிசுத்தமான குணவொழுக்கமுடைய உத்தமியாளுலும், பார்வைக்குக் கறுப்பாயும், முகத்தில் அம்மைத் தழும்புகள் நிறைந்த வளாயுமிருப்பாள். வெளித்தோற்றத்தில் அவள் பிரம்மா வால் அப்படி சிருஷ்டிக்கப்பட்டிருந்ததே அவள் தன் புரு

ஷனுக்குச் செய்த மன்னிக்க முடியாத துரோகம். என் தகப்பனுர் பெரிய லக்ஷாதிபதியாகையால், என் தாயார் மேல் பொய்யான பழிகளைச் சுமத்தி அவளை விலக்கிவிட்டார். அப்போது நான் என் தாயாருடைய கர்ப்பத்தில் இருந்தேன். என் தாயாரை விலக்கிய என் தகப்பனுர் அழகில்லையென்று விலக்கி யிருந்தால், அவள் தன் தாய் வீட்டிற்குப்போ யிருப்பாள். அவள்மீது இழிவான பழியைச் சுமத்தி அவளை அவர் விலக்கி விட்டாராகையால், அவள் தன் தாய் வீட்டிற்குப் போகக் கிலேசமடைந்து வீடு வீடாய் நுழைந்து நாராயண முஷ்டி எடுத்தும், சில வீடுகளில் சமயல் முதலிய சாக்கிரி வேலைகள் செய்தும் தன் ஜீவனத்தை மானமாய் நடத்தி, என்னைப் பெற்று அரும்பாடுபட்டு வளர்த்து எனக்கு வாரச்சாப்பாட்டுக்கு இடங்கள் தேடிக் கொடுத்து, தர்மப் பள்ளிக்கூடங்களில் என்னைப் படிக்க வைத்து ஆளாக்கி விட்டாள். அந்தப் புண்ணியவதி இன்னமும் ஒரு வக்கீலின் வீட்டில் சமையல் வேலை செய்துகொண் டிருக்கிருள்.

நான் ஏதேனும் உத்தியோகத்தில் அமர்ந்தாவது, ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு குடும்பம் நடத்த வேண்டுமென்று அவள் எனக்குச் சொன்னுளானுலும், எனக்கு இந்த உலகத்தில் வெறுப்பும் விரக்தியும் உண்டாகி விட்டன. என் தாயார் எனக்கு அவ்விதம் புத்தி போதித்தாளானுலும், அவளும் என்னைக்காட்டிலும் பன்மடங்கு அதிகமாய் இந்த உலக வாழ்க்கையில் வெறுப்பும் விரக்தியும் கொண்டு உண்மைத் துறவிபோல் இருந்து வருகிருள்.

அவளுடைய உதாரணத்தைப் பின்பற்றி நானும் அதே மனப்போக்கைப் பெற்று உண்மையில் இந்த உலகத்தில்

வேண்டுதல் வேண்டாமை இல்லாமல் இருந்துவரப் பழகிக் கொண்டேன். ஆனாலும், நான் இளம்பிராயத்துப் பையனா யிருப்பதாலும், நான் எனக்கு பிரம்மாவால் ஏற்படுத்தப் பட்ட என் ஆயுட்காலத்தைப் போக்கவேண்டியவனா யிருந் தமையாலும், குடும்ப வாழ்க்கை உத்தியோகம் முதலிய வற்றை வகித்து எனக்கென வாழாமல், ஏழை ஜனங்களுக் குப் பரோபகாரமான சில தர்ம கைங்கரியங்களைச்செய்து பிறர்க்காக வாழ்வதிலேயே என் பொழுதையும், என் பாட் டையும், என் கவனத்தையும், என் உடலையும், என் உயிரை யும் அர்ப்பணம் செய்து அதில் ஈடுபட்டிருந்தே இந்தக் கட்டையைப் போடவேண்டுமென்பது என் கருத்தாதலால், அதற்காகவே, நான் ஆதியில் பொருள்தேட முயன்று, ஏமாற்றமடைந்து, பிறகு யுக்தி செய்து மடாதிபதியின் ஸ்தானத்தை வகித்துக்கொண்டேன். ஆகவே, மடாதிபதி யின் ஸ்தானத்தை வகிப்பதிலும், கேவலம் பணத்தைச் சேகரிப்பதோடு வீண் பொழுது போக்கக்கூடா தென்று நினைத்து, ஒழிந்த காலங்களில் பாமர ஜனங்களுக்கு நம் மத தத்துவங்களிலுள்ள மேம்பாடுகளையும், தவறான கொள் கைகளையும் என்னாலேன்ற வரையில் எடுத்துச் சொல்ல வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டேன்.

அதுவன்றி, நான் அதிக காலம் இந்தப் பொய்யான வேஷத்தில் இருந்து பிறரது பொருளைக் கொள்ளைகொள்ள விரும்பவில்லை. ஆகையால் கூடிய சீக்கிரத்தில் எனக்குத் தேவையானதொகையைச் சேகரம் செய்து உடனே இந்தப் போலி வேஷத்தைக் கலைத்து நான் கருதிய தர்ம கைங்கரி யத்தில் ஈடுபடக் கருதினேனாகையால், ஜனங்களிடத்தி லிருந்து பணத் தொகைகள் துரிதத்தில் பெயரும்படி தந்

திரத்தினுல் சில ஜாலவேடிக்கைகள் செய்யும் முறைகளையும் நான் கற்றுக்கொண்டேன்.

ஆனுல் வெறும் ஜால வேடிக்கைகளை மாத்திரம் காட்டும் பீதாம்பரைய்யர், தொம்பக் கூத்தாடிகள் முதலியோருக்கு அதிக மதிப்போ, பெருந் தொகைகளோ கிடைப்பதில்லையாகையால், நான் தந்திர ஜாலங்களை யெல்லாம் என்னுடைய மந்திர சக்தியினுலும், தபோ பலத்தினுலும் நடப்பதுபோலக் காட்டி நடித்தேன். பெரிய மடாதிபதியின் ஸ்தானத்தை வகிப்பவர் ஜால வித்தைகளைக் கையாடினுலும் ஜனங்கள் அவைகளை ஜாலவித்தைகள் என்று மதிக்கமாட்டார்களல்லவா.

உதாரணமாக, நான் உங்கள் ஊரில் தங்கியிருந்த காலத்தில் செய்த சில அதிமானுஷச் செய்கைகள் எல்லாம் வெறும் ஜாலவித்தைகளே! மறுநாள் குழந்தையை வைத்துப் பூஜை செய்வதென்ருல், முதல்நா ளிரவில் குழந்தையும் தாயும் என் பூஜை மண்டபத்திற்குப் பக்கத்தில் பரிசுத்தமாகப் படுத்துக்கொள்ள வேண்டுமென்று கட்டளை இடுவேன்; தாய்க்கு அம்பாள் பிரஸன்னமாவாள் என்றும் நான் சொல்லி வைப்பேன். இரவில் நான் பெண் வேஷம் போட்டுக்கொண்டு, சரஸ்வதி போல மயில் முதலியவற்றை வைத்துக் கட்டிக்கொண்டு சுவரண்டை போய் இருளில் நிற்பேன். என் காரியஸ்தர் ஒருவர் பல நிறங்களைக் காட்டும் ஒரு வெளிச்ச யந்திரத்தை என் பக்கம் காட்டி பல நிறங்கள் காட்டும்படி திருப்புவார். தூக்கக் கலக்கத்தில் என்னைப் பார்ப்பது பெருத்த பிரமிப்பையும் பயபக்தியையும் உண்டாக்கிவிடும்.

அந்த சமயத்தில் நான் அந்த ஸ்திரீயோடு தந்திரமாகப் பேசி, அவளுடைய குடும்ப ரகஸியங்களை கிர

கித்து, பின்னால் அவைகளை சமயோசிதமாய் உபயோகித்து, நான் என் ஞானதிருஷ்டியால் அவைகளைத் தெரிந்து கொண்டதுபோல நடிப்பேன்.

அதுவுமன்றி, என் கையில் ஒரு பெரிய பூச்செண்டை வைத்திருப்பேன். அதற்கு நடுவில் ஒரு சிறிய சீசாவில் மயக்கத்தை உண்டாக்கும் குளோரபாரம் என்னும் மருந்தை மறைத்து வைத்திருப்பேன்; அதை அந்த ஸ்திரீ முகரும்படி தந்திரம் செய்வேன். அவள் முகர்ந்து உடனே மயக்கத்தில் வீழ்ந்து விடுவாள். நான் அப்போது ஒரு காரியம் செய்வேன். அவளுடைய தலையின் பின்புறத்தில் சில ஆயுதங்களைக்கொண்டு ஓர் ஆபரேஷன் செய்து, ஊசியைக் கொண்டு ஓர் இங்கிலீஷ் மருந்தை மூளைக்குள் ஏற்றிவிடுவேன். அதை நான் ஒரு பிரபல ஜெர்மன் டாக்டரிடத்தில் கற்றுக்கொண்டேன். மூளையில் அந்த மருந்தை ஏற்றிவிட்டால், அப்போது அவளுடைய கண்களுக்கு முன் என்ன காட்சி தென்படுகிறதே அதே காட்சி சுமார் பதினைந்து தினங்கள் வரையில் மாறாமல் நிற்கும். அவள் அது சம்பந்தமான நினைவுகளைக் கொள்வாளேயன்றி வேறு பழைய நினைவுகளை யெல்லாம் மறந்தே போய்விடுவாள்.

இந்த ஆபரேஷனை நான் ஸ்வர்ணம்பாள் முதலிய பல ஸ்திரீகளுக்குச் செய்து, அவர்கள் பதினைந்து தினங்கள் வரையில் உலகை மறந்து அம்பாளையே நேரில் கண்டு அவளைப்பற்றிய ஸ்தோத்திரங்களையே பாடும்படி செய்தேன்.

இன்னம், நான் திருப்பதியிலிருந்து பிரஸாதம் வரவழைத்ததும் வெறும் ஜாலமே. அது, பின்புறத்தில் ரஸம் பூசப்பெற்ற இரண்டு பெரிய நிலைக்கண்ணாடிகளைத் தந்திர

மாகப் பொருத்தி, எனக்குப் பின்னுக வைத்துக்கொண்டு, அவற்றிற்குப் பின்னுல் ஆள்களை மறைத்துவைத்து, சாமான்களை அவர்களிடம் கொடுத்து வாங்குவதே அந்த ஜாலம். அந்தக் கண்ணுடிகளின் முன்பக்கத்திலுள்ள ஓரங்கள் இரண்டும் இடைவெளியின்றி ஒன்ருேடொன்று சேர்ந்திருக்கும். அவை முன்பக்கம் கூராகவும் பின் பக்கத்தில் விரிந்துமிருக்கும். கண்ணுடிகள் வைக்கப் பட்டிருப்பதோ, அவற்றிற்குப் பின்னுல் ஆள் இருப்பதோ முன்னுல் இருப்பவருக்குத் தெரியாது. கண்ணுடிகள் ஓர் ஆள் உயரம்வரையில் இருக்குமாதலால், நான் என் தலைக்குமேல் கைகளை உயர்த்தும்போது எனக்குப் பின் னுள்ள கண்ணுடிகளுக்கு அப்பால் மறைந்துள்ள மனிதர் சாமான்களை மேலே உயர்த்தி நீட்டினுல், சாமான்கள் மாத்திரம் ஆகாயத்தில் தெரியும். அவை அந்தரத்தில் வரு வதுபோலிருக்கும்.

திருவிழாக்காலங்களில் எட்டுக்கால், எட்டுக்கை, பாடுந் தலை முதலிய காட்டப்படும் ஜாலம் இதேமாதிரியான கண் ணுடி ஜாலமே. இதன் உதவியாலேயே நான் திருப்பதிப் பிர ஸாதம் வரவழைத்தேன். அங்கிருந்து வந்ததாகக் காட் டிய பாத்திரங்களில் நாமம் முதலியவை இருந்தால், ஜனங்க ளுக்கு அது பூர்த்தியான நம்பிக்கையை உண்டாக்குமென்று கருதி வேண்டுமென்றே நான் சில பாத்திரங்களில் நாமம் முதலிய திருப்பதிக்கோவில் சின்னங்களைப் போட்டு வைத் துக் கொண்டிருக்கிறேன். கடைசியில் நான் வாயு ஸ்தம் பனம் செய்து பீடத்தோடு உயர்ந்தது காந்தத்தினுல் செய் யப்படும் ஜாலம். என்னிடத்தில் இருக்கும் பீடம் இலே சான இரும்புத் தகட்டினுல் செய்யப்பட்டது. அதற்குமேல் தங்க முலாம் பூசி இருக்கிறேன். நான் வாயு ஸ்தம்பனம்

செய்ய எண்ணும் தினத்தில் நான் என்னுடைய பீடத்திற்கு மேல் உச்சியில் புஷ்பப்பந்தலின் மறைவில் ஒரு பிரம்மாண் டமான காந்தப்பாளத்தை வைத்து, அது மூடப்பட்டிருக் கும் உறையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் திறந்து விடும்படி ஓர் ஆளையும் மறைத்து வைத்தால், காந்தப் பாளத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய்த் திறக்கத் திறக்க, அது இரும்புப் பீடத்தை மெதுவாய் மேலே இழுக்கும். பீடம் அந்தரத்தில் நிற்கும். அதன்மேல் நானும் உட்கார்ந்திருப்பேன்.

இவ்விதமான பல ஜாலங்களை நான் சமயோசிதமாக மற்ற ஊர்களிலும் உங்கள் ஊரிலும் காட்டி உங்கள் எல் லோரையும் ஏமாற்றினேன். இத்தந்திர ஜாலங்கள் எல் லோருடைய பணங்களையும் ஏராளமாகப் பிடுங்கி என்னி டம் கொடுத்துவிட்டன. நான் எதிர்பார்த்ததைவிட மிக சொற்பகாலத்தில் எனக்குத் தேவையான பொருளைவிடப் பன்மடங்கு அதிகமான பொருள் குவிந்துபோய் விட்டது. நான் மடாதிபதி வேஷம் போட்ட ஒரே வருஷத்தில் எனக்கு ஐந்து லக்ஷம் ரூபாய் வந்து குவிந்துபோய் விட் டது. இனி எனக்குப் பணமும் தேவையில்லை. நான் மடாதிபதி வேஷம் போடவேண்டிய அவசியமும் தீர்ந்து போய் விட்டது. உங்களைப்போன்ற பக்த கோடிகளின் அபிமான விசேஷத்தால், இனி நான் ஆதிமுதல் கோரிய பரோபகார தர்ம கைங்கரியத்தைத் தொடங்கப் போகி றேன்.

இனி நான் வெறுங் காஷாயவஸ்திர ருத்ராக்ஷப் பூனை யான போலிச்சாமியாரா யிராமல், வேண்டுதல் வேண்டா மையை விட்ட உண்மைத் துறவியாகவே இருந்து, இந்தக் கட்டையை வீழ்த்த வேண்டுமென்ற தீர்மானத்தைக் கடைப்பிடித்து நிற்கிறேன்.

இந்தக் கடிதத்தில் நான் எழுதியுள்ள விஷயங்களை நீங்கள் கனவிலும் நினைத்திருக்க மாட்டீர்களாதலால், இவைகளைப் படிக்கும்போது நீங்கள் திடுக்கிட்டு அப்படியே பிரமித்து ஸ்தம்பித்துப் போவீர்களென்பது நிச்சயம். அதுவன்றி, இந்த இரண்டு மாதகாலமாய்ப்பட்ட பாடுகளும், செலவிட்ட பணங்களும், அடைந்த அசௌகரியங்களும், கொஞ்சமும் அருகமற்ற ஒரு போலிச்சாமியார் பொருட்டல்லவா என்ற நினைவும், அபாரமான வேதனையும், மனக்கொதிப்பும், ஏமாற்றமும், ஏக்கமும் உங்களுக்கு உண்டாவதும் சகஜமே. அதுவன்றி, இரண்டு மாதகாலமாய் யாரோ ஒரு சிறு பையன் பல்லாயிரக்கணக்கான வயோதிகர்கள் தன் காலில் வீழ்ந்து வணங்கும்படிசெய்து பிரமாதமான கபட நாடகத்தை நடத்தி, எல்லோரையும் வஞ்சித்து ஏமாற்றி விட்டானே என்ற எண்ணமும், சகிக்கவொண்ணாத கோபாவேசமும் உங்கள் எல்லோர் மனத்திலும் பொங்கி யெழுந்து உங்களை அபாரமாய் உலப்புவதும் சகஜமே.

நான் செய்யப்போகும் பெரிய ஏழை ஜன தர்மகைங்கரியத்திற்காக வென்றே நான் உங்களெல்லோரையும் இவ்வளவு அதிகமான கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாக்கிவிட்டேனுகையால், நான் செய்யப்போகும் அந்த தர்ம காரியத்தினுல் ஏற்படும் புண்ணியம் பெரும்பாலும் உங்களையே சேர்ந்ததாகும்.

அது மாத்திரமல்ல. "பைத்தியக்காரன் கிழித்தது கோவணத்திற்கு ஆயிற்று" என்று பாமர ஜனங்கள் ஒரு பழமொழி சொல்வதுண்டு. அதைப்போல, நான், சென்ற இரண்டு மாதகாலம் உங்கள் ஊரில் தங்கியிருந்ததில், சில பயங்கரமான அபாயங்களைத் தடுப்பதற்கும், வேறு எவ

ராலும் செய்ய சாத்தியமற்ற ஒரு பேருபகாரத்தை உங்களுக்குச் செய்யவும் தெய்வச்செயலாக எனக்கு சந்தர்ப்பம் வாய்த்தது. அவைகளை நான் சொல்லி விளக்கினால், உங்கள் மனதில் இப்போது தோன்றும் ஏமாற்றம், கோபாவேசம் முதலிய உணர்ச்சிகள் யாவும் உடனே அபாரமான சந்தோஷமாய் மாறுவது திண்ணம். ஆனால் அவைகளை நான் இப்போது நிச்சயமாய்ச் சொல்லக்கூடாத நிலைமையில் இருக்கிறேன். என்னுடைய அடுத்த கடிதத்தில் நீங்கள் இப்போதைக் காட்டிலும் நூறுமடங்கு அதிகமாய் பிரமிக்கும்படியான புதுமைகள் இருக்குமென்று நான் நம்புகிறேன்.

காணாமல் போன உங்கள் பெண் குழந்தையின் படத்தை நான் பார்த்தகாலத்தில், நான் உங்களுக்கு ஒரு வாக்குறுதி செய்து கொடுத்தேன். அதாவது, நான் திருவொற்றியூரை யடைந்தவுடன், மூலஸ்தானத்திலுள்ள பராசக்திக்கு ஜெபம் செய்து, காணாமல் போன குழந்தை இப்போது உயிரோடிருக்கிறதா இறந்துபோய் விட்டதா என்பதுபோன்ற தகவல்களைக் கேட்டுத் தெரிவிப்பதாகச் சொல்லி யிருந்தேன்.

அதுவுமன்றி கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஸ்வர்ணம்பாள் ஆகியோருக்கும் நான் இது போலவே ஒரு வாக்குறுதி செய்து கொடுத்துவிட்டு வந்தேன்; அதாவது, பராசக்தியின் சூலத்தை ஏவி, அவர்களுடைய விரோதியைக் கொண்டுவரச் செய்து, அவன் இனி அவர்களுக்கு எவ்வித அபாயமும் விளைவிக்காதபடி திட்டப்படுத்துவதாகச் சொல்லிவிட்டு வந்தேன். அவைகளையும் நான் மறக்கவில்லை.

ஆனால், நான் தந்திரங்களினால் ஜாலவித்தைகள் செய்து காட்டும் போலிச்சாமியார் என்பதை நானே ஒப்புக்கொண்டு விட்டேனாகையால், பராசக்தியை நான் என் ஜெபத்தின் வல்லமையினால் வரவழைத்து, அவளுடன் பேசுவது, அவளுடைய சூலத்தை ஏவுவது ஆகிய விஷயங்களெல்லாம் வெறும் காற்று மூட்டை என்பதை நானே உங்களுக்குத் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. பராசக்தி

யென்பது போலிச்சாமியாரான என் ஜெபத்திற்குக் கட்டுப் படக் கூடியதல்ல; நான் உண்மைச் சாமியாரா யிருந்தாலும் கூட, அப்போதும் அது என்னை இலட்சியம் செய்யக்கூடிய தல்ல. இந்த உலகத்திலுள்ள வேறு எப்பேர்ப்பட்ட யோகியாலோ, மந்திரவாதியாலோ, வெறும் ஜெபத்தினுலும் இச்சாமாத்திரத்தினுலும் பராசக்தியை வசப்படுத்த இய லாது. பராசக்தி யென்பது இந்தப் பிரபஞ்சத்திலடங்கி யுள்ள சகலமான இயற்கைச் சக்திகளையும் குறிக்கிறது. கடவுளின் இச்சாமாத்திரத்தால் ஏற்பட்டு, நிரந்தரமா யிருந்து வரும் சட்டதிட்டங்களுக்கு பராசக்தி உட்பட்டு நடந்து கொள்ளும். மனிதர்களாகிய நாம் ஜெபம் செய்வ தாலோ, இச்சைப்படுவதாலோ எந்த சக்தியும் நம் பிரியப் படி நடந்து கொள்ளாது. நாம் தந்திரத்தினுலும், தக்க கருவிகளினுலும் இயற்கைச் சக்திகளை அடக்கி, அவை நம்மிச்சைப்படி நடந்து கொள்ளும்படி செய்யலாமேயன்றி, நாம் மனதால் மாத்திரம் நினைத்து ஏவினுலோ அல்லது கைகளைக் கட்டி மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்த படி விரும்பினுலோ, எந்த சக்தியும் நம்மைப் பொருட்படுத் தாது. சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவருக்குத்தான் வெறும் இச்சாமாத்திரம் எதையும் ஆக்கி அழித்து மாற் றும் மகிமை உண்டு. மனிதருக்கு அந்த மகிமை இல்லை.

ஆகையால், பராசக்தியின் மூலமாகவோ, அநுமான் உபாசனையினுலோ, யக்ஷணி, குறளி, முருகன் முதலிய இன்னதென்று தெரிந்துகொள்ள முடியாத குட்டித் தெய் வங்களின் உபாசனையினுலோ, எவரேனும் அதிமாநுஷச் செய்கைகளை நடத்தப் போவதாகவோ, நடத்துவதாகவோ சொன்னுல், அதை நீங்கள் சுத்த அண்டப்புளுகென்று மதித்து அசட்டை செய்வீர்களென்று நம்புகிறேன். மனித ருடைய செய்கை முயற்சியினுலும், யந்திர தந்திரச் சூழ்ச்சி களினுலும் மனிதன் அரிய பெரிய காரியங்களைச் சாதிக் கலாமென்பது மாத்திரம் நிஜமேயன்றி, மந்திரத்தில் மாங் காய் விழுமென்பது வடிகட்டின மோசம்.

ஆகவே, நான் திருவொற்றியூரிலுள்ள பராசக்தியின் மூலஸ்தானம் என்று குறித்தது, நான் எப்போதும் இருந்து முயற்சிகள் செய்து காரியங்களை நிறைவேற்றும் என் சொந்த ஜாகையையே. அங்கே நான் வந்து சேர்ந்து முக்கியமாய் நான் வாக்குக் கொடுத்துவிட்டு வந்த விஷயங்களிலேயே என் கவனத்தைச் செலுத்திக்கொண் டிருக்கிறேன். கூடிய விரைவில் எல்லாத் தகவல்களையும் நிச்சயமாகத் தெரிந்து கொண்டு அவைகளை அடுத்த கடிதத்தில் உங்களுக்கு எழுதலாமென்று நம்புகிறேன்.

ஆனால் இப்போது ஒரே ஒரு விஷயம் எனக்கு நிச்சயமாகத் தெரிந்துபோய் விட்டது. அதை மாத்திரம் உங்களுக்கு இப்போது தெரிவித்து விடுகிறேன். திருவல்லிக் கேணி பிரபல பாங்கரும், இப்போது மரணப்படுக்கையாய்ப் படுத்திருப்பவரும், சுமார் 25 லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்ட சொத்துக்களை தற்காலம் இம்பீரியல் பாங்கியில் போட்டிருப்பவருமான எஸ். ஆர். ஐயருக்கும் ஸ்வர்ணாம்பாளுக்கும் எவ்வித பாந்தவ்வியமும் இல்லை; ஸ்வர்ணாம்பாள் சமீப காலத்தில் கொல்லப்பட்டுப் போன அவருடைய இளைய மனைவிக்கு ஜனித்தவளன்று. ஆகையால், தன் சொந்தத் தாய் பயங்கரமான நிலைமையில் இறந்துபோய் விட்டதாக எண்ணி அவள் விசனத்திலாழ்ந்து ஏக்கங்கொண்டு சோர்ந்துக் கிடப்பதற்கு, இது ஒருவிதப் பரிகாரமா யிருக்குமென்று நம்பி இந்தத் தகவலை நான் முன்னுகத் தெரிவிக்கிறேன்.

ஆனால் இந்த உலகத்தில் துன்பம் கலவாத இன்பமில்லை என்று சொல்வதற்கிணங்க, இந்த சந்தோஷத்தில் அவளுக்கு ஒரு பெரிய தீமையும் அடங்கி யிருக்கிறது. ஸ்வர்ணாம்பாளுக்கும், எஸ். ஆர். ஐயருக்கும் எவ்வித பாந்தவ்வியமுமில்லை யென்ற நிச்சயம் ஏற்பட்டதில், அவருடைய அபார சம்பத்திற்கு அவளே ஏகபோக வார்சுதாரி என்னும் உரிமை இருந்து வந்ததும் இப்போது இல்லாமல் போய்விட்டது.

இவ்வளவே நான் உங்களுக்குத் தெரிவிக்கக்கூடிய நிச்சயமான செய்தி. மற்றவைகளை மேலும் தீர விசாரித்துப் பின்னால் எழுதுகிறேன்.

இங்ஙனம் உங்களை
என்றும் மறவாத
போலீச்சாமியார் பொன்னுசாமி ஐயர்.

என்று மிக நீளமாய் எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்த பண்ணை ஐயரும், அதைக்கேட்ட மற்றவர்களும் என்ன நிலைமையில் இருந்திருப்பர் என்பதை வாசகர்கள் சுலபத்தில் யூகித்துக் கொள்வார்களாதலால், நாம் அதை விஸ்தரித்துக் கூறுவது மிகையானதே.



## அத்தியாயம் — 7

### மலை விழுங்கி யப்பன்—தலை வாங்கிப் பிள்ளை

இந்த அபூர்வக் கடிதத்தைப் படித்த பண்ணை எஜமான் ராமாமிர்த ஐயர் அதைப் படித்த காலத்தில் பல இடத்தில் அதீதமான பிரமிப்பினாலும் ஆவேச உணர்ச்சிப் பெருக்கினாலும் மேற்கொள்ளப்பட்டுத் திணறி ஒவ்வொரு நொடிகாலம் பேச்சு மூச்சற்று ஓய்ந்து நின்று நின்று படித்து அதை முடித்தது ஆகாயத்தை யளாவிய மலை போன்ற பிரம்மாண்டத் தேரை இழுத்து நிலையில் கொண்டு போய் நிறுத்தியதுபோ லிருந்தது.

அவர் அவ்விதமான விசித்திர சம்பவங்களைத் தமது ஆயுட்காலம் முடியக் கேட்டிராத பரமஸாது மனிதராகையால், அவருடைய பரிசுத்தமான மனதிற்கு அவைகள் நம்பிக்கையே படவில்லை ; தாம் அந்தக் கடிதத்தைப் படித்ததும், மன்மத பீட மகா யோகீசுவரர் அதை எழுதி யிருப்பாரென்பதும் நிஜம்போலவே படவில்லை. தமது ஐம்புலன்

களும் உணர்ந்தது பொய்யென்றும், தாம் அப்போது கனவே காண்கிறோமென்றும் அவர் அடிக்கடி சம்சயித்தார்.

திவ்ய தேஜஸோடு பரம ஸாதுவாய் விளங்கிய மன்மத பீட மகா யோகீசுவரர் போலிச்சாமியார் என்பதும், அவர் செய்து காட்டிய அதிமாநுஷ விநோதங்கள் யாவும் தந்திர ஜாலங்களென்பதும் முக்கியமாய் அவரால் சகிக்கக்கூடிய வரம்பை மீறிய ஆச்சரிய உணர்ச்சியையும் மனவேதனையையும் உண்டாக்கி விட்டன.

அவையன்றி, ஸ்வர்ணம்பாள் எஸ். ஆர். ஐயருடைய மகளன்று என்று எழுதப்பட்டிருந்த விஷயம் சுத்தப் புரளி போலவே பட்டது. ஏனெனில் ஸ்வர்ணம்பாள் எஸ். ஆர். ஐயர் தனது சொந்தத் தகப்பனரென்றும், தான் அவருடைய இளைய மனையாளின் வயிற்றிலுதித்த சொந்தப் பெண்ணென்றும் வந்தது முதல் உறுதியாய்ச் சொல்லிக் கொண்டிருந்ததற்கு மாறாய், யாரோ ஒரு மோசக்கார மனிதர் ஒரு புதிய சங்கதியை எவ்வித ஆதாரமுமின்றிச் சொல்ல வந்தது, அவருக்கு, பைத்தியக்காரனுடைய பிதற்றல்போலத் தோன்றியது. ஸ்வர்ணம்பாள் மாத்திரமன்றி, பெரிய ஜெமீன்தாரும், ஹைகோர்ட் வக்கீலுமான ஒரு கனவானுடைய புதல்வரான கிருஷ்ணமூர்த்தி ஐயர் நெடுங் காலமாய் எஸ். ஆர். ஐயர் பங்களாவில் இருந்து, பழகி அவர்களுடைய குடும்ப மர்மங்களை அறிந்திருந்தவர்; அவரும் ஸ்வர்ணம்பாள் எஸ். ஆர். ஐயருடைய சொந்த மகளென்ற ஹோதாவில் அவளை மணந்து கொண்டதன்றி, எஸ். ஆர். ஐயர் தமது செல்வம் முழுதும் ஸ்வர்ணம்பாளுக்கே உரியதென்று பல தடவைகளில் கூறியதையும் கேட்டிருந்தவர். அந்தத் தகவலையும் அவர் அதற்குமுன் இரண்டொரு சந்தர்ப்பங்களில் வெளியிட்டிருந்தார்.

அத்தனை ஆதாரங்களுக்கும் விரோதமாய் போலிச் சாமியார் திடீரென்று தோன்றி, பிரத்தியக்ஷமாக எல்லோருக்கும் தெரிந்திருந்த ஓர் உண்மையை அடியோடு மாற்றி

யது சிறிதும் நம்பிக்கைக்கு யோக்கியமற்ற முழுப்புரட்டாகத் தோன்றியது.

இவ்விதம் ஒரு பெரிய விஷயத்தை மாற்றி அபாண்டமான ஒரு கற்பனையை உற்பத்தி செய்யத் தக்க மனிதர் சொல்லும் மற்ற விஷயங்களும் அதுபோலவே பொய்யாயிருக்குமென்ற சம்சயத்தை உண்டாக்கவே, தாம் ஏதோ ஏழைகளின் விஷயத்தில் பரோபகார தர்ம கைங்கரியம் செய்ய வேண்டுமென்ற மேலான நோக்கத்துடன் போலி மடாதிபதியாய் நடித்ததாக அவர் எழுதி இருந்ததும் பொய்யான முகாந்திரமா யிருக்கவேண்டும் என்றும் பண்ணை ராமாமிர்த ஐயர் கருதினார்.

அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த விஷயங்களை மேன்மேலும் சிந்திக்கச் சிந்திக்க, ஐயரவர்களுக்கு போலிச் சாமியார் விஷயத்தில் அபாரமான கோபாவேசம் பொங்கியபடி இருக்கவே, தாம் உடனே போலீஸ் அதிகாரியை வரவழைத்து, அந்தக் கடிதத்தை அவரிடம் கொடுத்து அந்த மோசக்கார வேஷதாரியை அவர்கள் சிறைப்படுத்தி தண்டனைக்குக் கொண்டுபோகச் செய்ய வேண்டுமென்ற ஆவேசமும் துடிதுடிப்பும் தோன்றிப் பெருகின.

அவருடைய மனதில் எவ்விதமான நினைவுகளும் சம்சயங்களும் உணர்ச்சிகளும் பொங்கி யெழுந்து வதைத்தனவோ, அவ்விதமாகவே அங்கிருந்த மற்றவர்களுடைய மனதிலும் பொங்கி வதைத்தனவானாலும் எல்லோருக்கும் பெரியவரான ஐயரவாள் பேசாமலிருக்கையில் தாம் எதையும் சொல்வது தவறென்று நினைத்து மற்றவர் மௌனமாக இருந்தனர்.

அந்த மௌனம் சுமார் ஐந்து நிமிஷகாலம் நீடித்திருக்க, பண்ணை ராமமிர்த ஐயர் கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய முகத்தைப் பார்த்து, "என்ன, ஐயரவாள், பேசாமலிருக்கிகளே! மௌனம் கலகம் நாஸ்தி என்று நெனைக்கருப்புலெ இருக்கு!" என்றார்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர்:—பெரியவாள்ளாம் சகிச்சுண்டு பேசாமெ இருக்கச்சே, நாங்கள்ளாம் என்ன சேயக் கெடக்கு!

பண்ணை ஐயர் :—நேக்கும் கிட்டத்தட்ட அஞ்சு கழுதெ வயசாயிட்டுது. இது வரையிலெ நம்ப ஸத்தரத் துக்கும், நம்ப ஆத்துக்கும் எத்தனையோ பெரியவாளும், யோகிசுவராளும், சந்நியாசிகளும் வந்திருக்கா. இந்தமாதிரி நான் யாருக்கிட்டவும் ஏமாந்ததே கெடையாதுன்னு. இது எந்தக் காலத்துலெயும் ஆரும் காதாலெ கேக்காத வேடிக்கை யான்னு இருக்கு! எம்பிட்டேண்டு வழுக்கைப் பய, எப்பேர்ப் பட்ட பிரமாதமான காரியத்தைப் பண்ணீட்டுப் பேட் டானே! ரெண்டு மாஸகாலம் இந்தாத்துலெ இருந்து ஆடம் பரம் பண்ணிருக்கான்! ஒத்திருக்காவது கொஞ்சங்கூட சந்தேகம் உண்டாகல்லியே! அதுன்னு ஸாமர்த்தியம். பசு மாட்டெ அடிச்சு, தோலெ செருப்புக்காக பிராம்மணு ளுக்கு தானம் பண்ணறதூன்னு பெரியவா ஸ்லோகம் சொல்லுவா. அதுபோலேன்னு இருக்கு இந்தப் பய சொல்லியிருக்கற ஞாயம்! என்னமோ தர்ம கைங்கிரியம் பண்ணப் போறுனும்; அதுக்காகப் பணம் சேக்கணும்னு இப்பிடி யெல்லாம் பண்ணுனும். தர்ம கைங்கிரியம் பண் ணனுங்கறது இவனுக்குத்தான் தெரியும்போ லிருக்கு. நம்பிளுக்கெல்லாம் தர்மங்கறது இன்னதூன்னு தெரியுமா என்ன! தெரியாமெத்தான் நம்ப பெரியவாள்ளாம் அன்ன ஸத்தரம், பாடசாலே, பூரிதக்ஷணை, பிராம்மண ஸந்தர்ப் பணை எல்லாம் ஏற்படுத்திருக்கா! ஏண்டா தென்னமரத் துலெ ஏறினேன்னுனும். கன்னுக்குட்டிக்குப் பில்லுப்புடுங்க ஏறினேன்னு பதில் சொன்னுனும். தென்னமரத்துலெ பில்லேதுடான்னு கேட்டா, அதுனுலெதான் இப்ப எறங்கி வந்திண்டிருக்கேன்னுனும். அந்த மாதிரிக் கதையான்னு இருக்கு இது. இப்ப நேக்கு வர ஆத்தரத்துலெ இந்தக் கடுதாசியைப் போலீஸ்காரருக்கு அனுப்பிச்சு அவனெப் புடிச்சு பத்து வருஷம் எட்டு வருஷம் தெண்டிச்சுப் புட ணும்னு இருக்கு.

**பர்வதலக்ஷ்மி அம்மாள்:**—(கதவின் மறைவிலிருந்தபடி மிருதுவான குரலில் பேசத்தொடங்கி) என்னமோ பாவம் பிராம்மணப் புள்ளே. அவர் தண்டனேக்குப் போனு, அந்த அவுமானம் நமக்கில்லியா! அவாளவா பண்ணற பாவம் அவா ளவாளோடெ. எல்லாத்தியும் பாத்துண்டு மேலே பகவான் ஒத்தர் இருக்கார். அக்கிரமம் பண்ணறவாளுக்குத் தக்கின கூலி குடுத்துட்ருர். அவரெ தண்டனெக்கி அனுப் பற பாவத்துலெ நாமேன் போகணும். எல்லாத்தியும் பக வான் கிட்ட ஒப்பிச்சுட்டுக் கடுதாசியெக் கிழிச்சுப் போட் டுட்டு சிவனேன்னு பேசாமெ யிருங்கோ.

**கிருஷ்ண மூர்த்தி ஐயர்:**—மாமி சொல்றது சரியான ஞாயமாத்தான் இருக்கு. மல்லாந்து படுத்துண்டு தம்ப லத்தெ உமிஞ்சா, மார்லெதான் விழும்னு சொல்லுவா. அந்த மாதிரி இந்தக் கேலிக்கூத்தெ நாம்பளே வெளீலெ சொல்லீண்டா, நமக்குத்தான் இளிச்சவாத்தனம். திரு டனெத் தேளுக் கொட்டினுப்புலேன்னு சொல்றதுண்டு. அது சரியாப் போச்சு. ஆனு, நேக்கு இதுலெ இன்னொரு ஆச்சிரியம் என்னன்னு, இப்பிடியெல்லாம் வேஷம் போட்டு, ஜெகஜாலப் பெரட்டெல்லாம் பண்ணி ஒரு வருஷ காலமா ஊரைக் கொள்ளேயடிச்ச மனுஷன், தான் பண்ணினத்தை யெல்லாம் துணிஞ்சு இப்பிடி வெளிப்படுத்திக்குவனுங் கறதுதான் நேக்கு நம்ப முடியல்லெ. இப்பிடியெல்லாம் சொன்னு, இந்த மோசத்துனலெ ஏமாந்துபோனவாள்ளம் தனக்கு தெண்டனெ பண்ணிவைக்க மாட்டாளாங்கறது அவுனுக்கு புத்தீலெ படாமெ இருக்குமா? இத்தெ அவனே இழுதி யிருப்பனு, இல்லாட்டா, அவனெச் சந் தீலெ இழுத்து விடணும்னு அவனேடெ விரோதி ஆராவது இப்பிடி இழுதியிருப்பனுங்கறது நேக்கு சந்தேகமா இருக்கு.

**பர்வதலக்ஷ்மியம்மாள் :**—ஊர்லெ பொறுமைக்காரர் ரொம்ப ஜாஸ்தி. கண்டவா கண்டபுடி சொல்லுவா. அத்தெ யெல்லாம் நாம்ப காதுலெ போட்டுக்கப்படாது. இது பொய்

யாயிருந்தா, பெரியவாளெ அவுமானப்படுத்தற தோஷம் நம்பளெத்தானே சேரும். அதெல்லாம் நாம் ஆத்தரப்பட்டு எத்தெயும் செயப்போகாது. ஆருவேண்ணு எப்பிடி வேண்ணாலும் சொல்லிண்டு திரியட்டும். நீங்க காதுலெ போட்டுக் காமெ விச்சா இருந்துடுங்கோ. நமக்கேன்னு அந்தப் பழி யெல்லாம்.

பண்ணை ஐயரவாள்:--ஆமு இதுலெ நாம்ப இன்னொரு முக்கியமான சங்கதியெயும் கவுனிக்கணும். இந்தக் கடுதாசிலெ, ஸ்வர்ணம்பாளெப்பத்திப் பிரஸ்தாபம் பண்ணிருக்கு. இத்தெ நாம்ப இப்ப போலீஸ்காரங் கிட்டக் குடுத்தா, இத்தெ வச்சிண்டு இதுக்குமின்னே இந்த சங்யாசி போயிருந்த எடத்துக்கெல்லாம் போயி விசாரிப்பா ; கச்சேரிலே இத்தெ தாக்கல் பண்ணுவா. இவா இஞ்செ இருக்காங்கற சங்கதி பகிரங்கமாயிடும். இவாளோடெ பகையாளிக்கு அது தெரிஞ்சுபோனு, பெரிய அபாயமா முடியும். வாண்டாம். வாண்டாம். இது வந்துதுங்கற சங்கதியே அசலார் ஆருக்கும் தெரியவாண்டாம். விட்டுடுங்கோ.

பர்வதலக்ஷ்மியம்மாள்:—அந்தக் கடுதாசியெ மின்னுலெ இரும்புப் பொட்டிலெ வச்சுச் பூட்டிட்டு மறுகாரியம் பாருங்கோ. அன்னியாயமா நம்மாலெ இவாளுக்குக் கெடுதல் வந்துடப்போறது.

கிருஷ்ணமூர்த்தி ஐயர்:—இத்தெ இழுதினவன் அடுத்த கடுதாசிலே இன்னும் என்னென்னமோ சங்கதியை இழுதப் போறுனமே. அதுவும் வரட்டும்; என்னன்னு தெரிஞ்சுக்கலாம்.

பண்ணை ஐயரவாள்:—ஆம். வாஸ்தவம் தான். ஐயரவாள் சொல்றதும் நல்ல யுக்திதான். அடுத்த கடுதாசிலெ என்ன வரதுன்னு பாக்கலாம்—என்று கூறினர்.

அவ்வளவோடு அவர்களுடைய அன்றைய சம்பாஷணை முடிவுற, அவரவர்கள் தம்தம் காரியங்களை கவனிக்கும் பொருட்டுப் பிரிந்து போயினர்.

அதன் பிறகு அந்தக் கடிதத்தைப்பற்றியாவது, அதில் இருந்த விஷயங்களைப்பற்றியாவது எவரும் எவ்விதமான பிரஸ்தாபமும் செய்யாமல் இருந்தனர். ஆனால், ஒவ்வொருவரது மனதிலும், அதிலிருந்த முக்கியமான விஷயங்கள் உறுத்திக்கொண்டே இருந்தன. முக்கியமாய், கிருஷ்ணமூர்த்தி ஐயரும், ஸ்வர்ணம்பாளும் முன்னிலும் அதிக வியாகுலமும், முகவாட்டமும் அடைந்தவர்களாய்த் தோன்றி, பண்ணையாரையும், பர்வதலக்ஷ்மியம்மாளையும் காணும்போதெல்லாம் நிரம்பவும் அதிகமான கிலேசமடைந்தவர்களாய் நடந்துகொண்டனர்.

அவர்கள் அவ்வாறு நடந்துகொண்டதற்கு ஒரு காரணமுமிருந்தது. பெரிய லக்ஷாதிபதியான எஸ். ஆர். ஐயருடைய பெண், மாப்பிள்ளை என்ற ஹோதாவில், பண்ணையாரும், அவருடைய மனையாளும் தங்களுடன் சம்பந்தம் செய்துகொள்ள விரும்புகிறார்கள் என்ற நினைவை அவர்கள் ஏற்கனவே கொண்டிருந்தனராதலால், தங்களுக்கு உண்மையில் எஸ். ஆர். ஐயருடைய பாந்தவ்வியம் இல்லையென்று போய்விட்டால், தாங்கள் எவ்விதத்திலும் அவர்களுக்கு சமதையாக மாட்டோமென்றும், அதன்பிறகு அவர்கள் தங்கள் பெண்ணை தம் புத்திரனுக்குக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பமாட்டார்களென்றும் நினைத்தனராதலால், அவர்களது மனதில் தானாகவே ஒருவித கிலேசம் அப்போது முதலே உள்ளுக்குள் தோன்றி உறுத்திக்கொண்டேயிருக்கத் தொடங்கியது.

அதன் பிறகு சுமார் ஒருவார காலம் கழிந்தது. போலிச் சாமியாரிடமிருந்து இன்னொரு கடிதம் வந்து சேர்ந்தது. அதை வாங்கவோ, பிரித்துப் படிக்கவோ, பண்ணை ஐயரவாளும், அவரைக்காட்டிலும் அதிகமாய்ப் பர்வத லக்ஷ்மியம்மாளும் விரும்பவில்லை.

ஆனால் கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய வேண்டுதலின் மேல், அவரே அந்தக் கடிதத்தைப் படிக்கும்படி பண்ணை ராமாமிர்த ஐயர் கொடுத்துவிட்டார். கிருஷ்ணமூர்த்தி ஐயர்

அதைப் படிக்க, மற்றவர் அதை அசட்டையாய் கவனித்துக் கொண்டிருந்தனர். கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

"மகா-ஈா-ஈா-ஸ்ரீ விஷ்ணுபுரம் பண்ணை ஐயரவாள் சமுகத்திற்கு போலிச்சாமியார் பொன்னுசாமி ஐயர் மிக வணக்கமாய் எழுதிக்கொள்ளும் விக்ஞாபனம். அநேக நமஸ்கார உபய குசலோபரி.

"நான் சில தினங்களுக்கு முன் எழுதியனுப்பிய கடிதம் உங்களிடம் வந்து சேர்ந்திருக்குமென்றும், அதைப் பார்த்து விஷயங்களைத் தெரிந்து கொண்டிருப்பீர்களென்றும் நம்புகிறேன். அதைப் படித்தபின் நீங்கள் எல்லோரும் என்னைப்பற்றி எவ்விதமான அபிப்பிராயம் கொண்டிருப்பீர்களோ வென்பதை நான் அறியக் கூடவில்லை. ஆனாலும், நான் எழுதியுள்ள விஷயங்களெல்லாம் சிறிதும் பொய்யே கலவாத மெய்யாதலால், உண்மையைச் சொன்னதனால், எனக்கு இழிவுநேர்ந்தாலும், அதைப்பற்றி நான் சிறிதும் வருந்தப்போகிறவ னன்று. உங்களுக்கு மறுபடியும் கடிதம் எழுதி நான் முக்கியமான சில விஷயங்களைத் தெரிவிக்கப் போவதாய் எழுதி இருந்தேன். அதுவன்றி, இந்த ஒருவாரகாலத்தில் இங்கு பல விசேஷ சம்பவங்கள் நேர்ந்துவிட்டனவாதலால், அவைகளையும் நான் உங்களுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டவ னுய்விட்டே னுதலால், நான் மறுபடியும் இந்தக் கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன்.

"நான் இதற்குமுன் உங்களுக்கு எழுதிய கடிதத்தில், என் தகப்பனர் ஒரு பெரிய லக்ஷாதிபதி என்றும், என் தாயார் விகாரமான முகத்தோற்ற முடையவளா யிருந்தமையால், அபாண்டமான சில குற்றங்களைக் கற்பித்து அவளை என் தகப்பனர் விலக்கிவிட்டார் என்றும், அப்போது நான் என் தாயின் கர்ப்பத்தில் இருந்தேனென்றும் தெரிவித்தேனல்லவா. எனக்கு இப்போது இருபத்திரண்டு வயது நிறை

கிறதாகையால், என் தாயாரை என் தகப்பனர் விலக்கியது இருபத்திரண்டு வருஷ காலத்திற்கு முன்பு என்பதை நான் தெரிவிக்க வேண்டியதில்லை.

"அவர் எப்படி என் தாயாரை விலக்கினரென்ற தகவலை இதுவரையில் என் தாயார் என்னிடம் சொல்லவில்லை. சில தினங்களுக்குமுன் நான் சில காரணங்களினல் சம்சயப்பட்டு, என் ஜாகைக்கு என் தாயாரை வரவழைத்து வற்புறுத்திக் கேட்டதில், அவள் அப்போது நடந்த சில சம்பவங்களைத் தெரிவித்தாள்.

"அந்தக் காலத்தில் என் தகப்பனர் கோயம்புத்தூரில் பெரிய பாங்கி வைத்து, கொடுக்கல் வாங்கல் வியாபாரம் நடத்திவந்தார். அவர் அப்போது யௌவன முறுக்கும் பணத்திமிரும் கொண்டு, எவரும் தமக்கு நிகரில்லையென்று கருதி, எவரையும் மதியாமல், எந்தக் கட்டுப்பாட்டையும் மீறி, அவருடைய மனம் போனபடியெல்லாம் நடந்துவந்தார். அப்போது அந்த ஊரிலிருந்த அழகுடைய சகலமான தாசிவேசிகளும் அவருக்கு இணக்கமானவர்களாயிருந்தனராதலால், விகாரமான முகத் தோற்றமுடைய அவருடைய மனைவியான என் தாயாரைக் கண்டால், அவருக்கு ஜென்மப்பகை. என் தாயாரைத் தம் மனைவியென்றுசொல்லிக்கொள்ளவும் வெட்கி, அவள் தங்கள் வீட்டு வேலைக்காரி என்று சொல்லுவார். அந்த சமயத்தில் அவ்வூரில் வேறொரு பிரபுவிற்கு அற்புதமான அழகுவாய்ந்த ஒரு பெண்ணிருந்தாள். அவள் பருவகாலமடைந்து பருத்துச் செழித்து மிக ஸொகுஸாகவும், காண்போர் மனதை மோகிக்கச்செய்யும் அற்புத வசீகரத்தன்மை வாய்ந்தவளாகவும் இருந்தாள். அவள்மீது மோகங்கொண்ட என் தந்தை எப்படியும் அவளையே தாம் இளைய மனைவியாய்க் கொள்ள வேண்டுமென்று தீர்மானித்து, ஏதேனும் சாக்கைவைத்து என் தாயாரை விலக்கிவிட வேண்டுமென்றும் தமக்குள் முடிவு செய்துகொண்டார்.

"அந்த சமயத்தில் அவரிடம் அந்தரங்கமான காரியஸ்தன் ஒருவன் இருந்தான். அவன் அதற்குமுன் பல வருஷ காலம் அவரோடிருந்து, அவர் ஏராளமான பொருளைத் தேடுவதற்கு அநுசரணையா யிருந்தவன். அவ்வாறு அவன் அநுசரணையாயிருந்த காலத்தில், என் தகப்பனார் அவனையும் வர்த்தகத்தில் ஒரு கூட்டாளியாய்ச் சேர்த்துக்கொள்வதாக வும், தம்முடைய சொத்துகளில் மூன்றில் ஒரு பாகத்தை அவனுக்குக் கொடுப்பதாகவும் வாக்களித்தாராம்.

"அந்த வாக்குறுதியை அவர் பலவருஷகாலம் வரையில் நிறைவேற்றாமலே அவனை ஏமாற்றிக் கொண்டுவர, அவன் அதைப்பற்றி அடிக்கடி அவரை நச்சுப்படுத்தி வந்தானாகை யால், அவனைத் தாம் எப்படி ஒழிப்பது என்பதைப் பற்றி யோசித்து, ஒரே கல்லால் இரண்டு பட்சிகளை வீழ்த்தத் தீர்மானித்தார்.

" அவனுக்கு என் தாயாரிடம் நிரம்பவும் இரக்கம் ஏற் பட்டது. என் தந்தை என் தாயாரைப் பலவகையில் கொடு மையாய் நடத்தி அக்கிரமமாக அடித்தும் வைதும் நிர்ப்பந் தித்து வந்தாராகையால், இருவரும் தனிமையில் ஒருவரை யொருவர் பார்க்கையில், ஒருவருக்கொருவர் அநுதாப மொழிகள் கூறிக்கொள்வர். தமக்கு வர்த்தகத்தில் பங்கு கொடுப்பதாகச் சொல்லி ஏமாற்றுகிறார் என்று காரியஸ்தன் என் தாயாரிடம் புகார் சொல்வான்; என் தாயார் தம்மை அவர் பலவகைகளில் கொடுமையாய் நடத்துவதாய்ச் சொல் வாள். இவ்வாறு அவர்கள் சொல்லிக் கொண்டதற்குமேல் அதிகமாய் எவ்விதமான சம்பந்தமும் வைத்துக்கொண்ட வர்களன்று.

மற்ற வேலைக்காரர் மூலமாய் இதை எப்படியோ தெரிந்துகொண்ட என் தகப்பனார், தம்முடைய கருத்திற் குத்தோதாகச் சில பொய்ச்சாட்சிகளைத் தயாரித்துக்கொண் டார். அப்போது என் தாய்க்கு மூன்று வயதில் ஒரு பெண் குழந்தை இருந்தது. அந்தக் குழந்தையும் என் தாயைப் போல் அழகற்றதாயிருந்த தாகையால், அதனிடத்திலும்

என் தகப்பனுர் வெறுப்பாயிருந்து வந்தாராகையால், அவர் அதைக் கையால்கூடத் தொடுவதில்லை; ஒருநாள் விடியற் காலம் சில ஆட்களை ஏவி அந்தக் குழந்தையை இரகஸியத் தில் தூக்கிக் கொண்டுபோய்த் தோட்டக்கிணற்றில் போட்டு அதைக் கொல்லச்செய்து, உடனே கூக்குரலிடும்படி செய்து போலீசாரையும் வரவழைத்து விட்டார்.

ஆள்கள் கட்டுப்பாடாய்ச் சொன்ன சாட்சியத்தின் மேல், போலீசார் காரியஸ்தனையும் என் தாயையும் கைதிசெய்து அழைத்துக்கொண்டு போய்விட்டனர். என் தாயின் படுக்கைக்கு அர்த்தராத்திரியில் காரியஸ்தன் பலதடவைகளில் போய் வந்ததைத் தாங்கள் கவனித்ததாக வும், அவர்கள் இருவரும் ஒன்ருயிருக்கையில், பெண் குழந்தை விழித்துக்கொண்டு கத்திய காலங்களில், காரி யஸ்தன் அது இருக்கும்வரையில் தங்களுக்கு அபாயம் வந்துவிடுமென்றும், ஆகையால், அதைத் தான் கிணற்றில் போட்டுக் கொன்றுவிடப் போவதாகவும் சொல்ல, என் தாயார் அப்படிச்செய்ய வேண்டாமென்று தடுத்ததாகவும், அதன்பிறகு அம்மாள் தூங்கிய காலத்தில் காரியஸ்தன் இரகஸியமாய்க் குழந்தையைத் தூக்கிக்கொண்டு போய்க் கிணற்றில்போட்டுவிட்டதாகவும், வேலைக்காரர் பலர் பொய்ச் சாட்சி கூறவே, நியாயாதிபதி லஞ்சம் வாங்குகிற சுபாவ முடையவராதலால், என் தகப்பனுரிடம் பெரிய தொகை யைப்பெற்று என் தாயாரை எச்சரித்துவிட்டு, காரியஸ்த னுக்கு, வெவ்வேருன மூன்று குற்றங்களுக்காக மொத்தத் தில் இருபத்தொரு வருஷகாலத்திற்கு தண்டனை யளித் தார். அவன் குழந்தையைக் கிணற்றில் போட்டதை நேரில் பார்த்ததாக யாரும் சாட்சி சொல்லவில்லை யாதலால், அவ னுக்கு மரணதண்டனை விதிக்காமல் 14 வருஷகாலம் அந்த மான் தண்டனையும், அயலானுடைய மனைவியை அபகரித் தது முதலிய வேறு குற்றங்களுக்காக ஏழு வருஷக் கடுங் காவலும் ஆகமொத்தம் இருபத்தொரு வருஷ தண்டனை விதித்தார். அதோடு அந்தக் காரியஸ்தன் ஒழிந்து போனுன். என் தந்தை என் தாயையும் விலக்கிவிட்டார் ; அதன் பிறகு

சில மாதகாலத்தில், என் தந்தை மேலே குறித்த பிரபுவின் பிரவிடையான பெண்ணை இளைய தாரமாய்க் கல்யாணம் செய்து கொண்டார்.''

பர்வதலக்ஷ்மி யம்மாள் :—ஐயோ! கேக்க சகிக்கல்லியே! நேக்குக் கொலை நடுக்கம் எடுக்கறதே! ஐயோ கொடுமையோ! இப்பிடியும் சேவாளோ!

பண்ணை ஐயரவாள்:—அவன் பிராம்மணனா பதிதனா, அவனெ என்னன்னு சொல்றது! தன் சம்சாரத்துக்கும் சூத்தரக் காரியஸ்தனுக்கும் முடிச்சுப் போட்றதாவது! தன் சொந்தக் கொழந்தையையே கொல்றதாவது! ரெண்டு பேரையும் கோர்ட்டுலெ கொண்டுபே நிறுத்தறதாவது! காரியஸ்தனுக்குப் பங்கு குடுக்கறேன்னு சொல்லிப்புட்டு அவுனுக்கு இருவத்தோரு வருஷ தண்டனெ பண்ணி வைக்கறதாவது! ஒடனே இன்னொரு தெரண்ட பொண்ணெக் கல்யாணம் பண்ணிக்கறதாவது! என்ன கிராதகத்தனம் இது! அவன் பிராம்மணனா சண்டாளனா, அவனை என்னன்னு சொல்றது! இது ஒலகத்துலெயே நடக்காத அதிசியமா யிருக்கே!

கிருஷ்ணமூர்த்தி ஐயர்:—அவன் ஆரோடெ அப்பாங்கறத்தெ நீங்க மறந்து பேசறுப்லெ இருக்கு. இந்த இரண்டு மாச காலத்துலெ புள்ளெ இங்கே வந்து, இந்திர ஜாலம் மகேந்திர ஜாலமெல்லாம் பண்ணிப்புட்டானே. புள்ளெக்கி இருக்கற குணாதிசயமெல்லாம் அப்பாக் கிட்ட இருந்துதானே வந்திருக்கணும்; அப்பா, புள்ளெ, ரெண்டு பேரும் ஒத்தருக் கொத்தர் சளச்சவாளா யில்லெ. கடுதாசியெ மேலே படிக்கறேன் கேளுங்கோ.

(கடிதத்தை மேலும் படிக்கிறார்)

“இந்தப் பழைய வரலாற்றை சில தினங்களுக்கு முன்பே நான் என் தாயார் சொல்லத் தெரிந்து கொண்டேன். அதைக் கேட்டு நான் ஒரு விஷயத்தில் பெரிதும் சந்தோஷ மடைந்தேன். இப்பேர்ப்பட்ட மகா பாவியான மனிதரோடிருந்து லக்ஷக்கணக்கான அவருடைய குபேர சம்பத்தை அநுபவிப்பதைவிட, என் தாயாரும், நானும்

அவரிடமில்லாமல் பிச்சை யெடுத்து ஜீவிக்க நேர்ந்தது நாங்கள் பூர்வகாலத்தில் செய்த புண்ணிய பலனென்று நான் நினைத்து ஆநந்த மடைந்தேன்.

"இதையன்றி, என் தகப்பனுருடைய ஆதிகால வரலாற்றையும் நான் சமீபகாலத்தில் வேறொரிடத்திலிருந்து தெரிந்து கொண்டேன். அதை நான் உங்களிடம் வெளியிட வேண்டிய அவசியம் ஏற்படவில்லையானாலும், அது ஒருகால் பத்திரிகைகளில் வெளியானாலும் ஆகலாமாதலால், அதை நீங்கள் எப்படியும் பார்க்கப் போகிறீர்கள். ஆகையால், நானே அதையும் இப்போதே உங்களுக்குத் தெரிவித்து விடுகிறேன்.

"என் தகப்பனுரைப் பெற்ற பாட்டனுர் சென்னையில் கூலிக்குப் பிணம் தூக்குகிறவர். அவர் அந்தத் தொழிலில் தினம் ஒன்றுக்கு சுமார் பத்து ரூபாய் சம்பாதித்தாராலும், கூத்தி, குடி, மாமிச போஜனம் முதலியவற்றில் அவர் எல்லாப் பணத்தையும் செலவிட்டு விடுவார். என் பாட்டி பரம தரித்திர நிலைமையில் இருந்து எப்போதும் பஞ்சக் காலக்ஷேபம் செய்து, அவரிடம் ஓயாமல் அடிகளும், உதைகளும், வசைகளும் பெற்று ரௌரவாதி நரகத்தில் வாசம் செய்து வந்தாள். அவர்களுடைய குமாரராகிய என் தகப்பனுர் கூர்மையான புத்தியும், சுறுசுறுப்பாக உழைக்கும் சுபாவமு முடையவர். அவர் யாசகத்தின் உதவியால் சில வகுப்புகள் வரையில் பள்ளிக்கூடத்தில் படித்தார். அப்போது என் பாட்டனுர் திடீரென்று வாந்திபேதி நோயால் இறந்துபோய் விட்டார்.

"என் பாட்டி பழமண்டி வியாபாரியான ஒரு கோமுட்டிச் செட்டியாருடைய வீட்டில் சமயல் செய்யும் வேலையில் அமர்ந்திருந்தாள். அவளுடைய சிபார்சின்மேல் என் தகப்பனுர் செட்டியாருடைய பழமண்டியில் குமாஸ்தா வேலை பெற்று, தமது கடமைகளை மிக சாமர்த்தியமாகச் செய்து, செட்டியாருடைய பூர்த்தியான நம்பிக்கைக்கும் பிரியத்திற்கும் பாத்திரமா யிருந்ததன்றி, வீட்டிலேயே மேன்மேலும் படித்து, எப், ஏ, பி. ஏ. முதலிய பரீட்சைகளிலும்

தேர்ச்சி பெற்றார். செட்டியாருக்குப் பணமாகவும், வீடு களாகவும் சுமார் மூன்று லக்ஷம் ரூபாய்க்குச் சொத்து கள் இருந்தன. அவருக்கு, மனையாளொருத்தியும், இளம் பிராயத்துக் குழந்தைகள் இருவரும் இருந்தனர். செட்டி யார் பெரிய ஸ்திரீலோலராதலால், அவர் தனக்குயில் என்ற அழகான யௌவன தாசி யொருத்தியை வைப்பாக வைத்துக்கொண் டிருந்தார். அவருடைய மோட்டார் வண்டியை ஓட்டியவன் ரத்னவேல் என்ற பெயருடைய ஒரு குறவன்.

"செட்டியார் தனது வைப்பாட்டியான தனக்குயிலை மோட்டாரில் உட்கார வைத்துக்கொண்டு ஒவ்வொரு நாளைய மாலையிலும் கடற்கரைக்குக் காற்று வாங்கப் போவார். அப்போது ரத்னவேல் முன்னால் உட்கார்ந்து வண்டியை ஓட்டிக்கொண்டு போவான்."

"அவ்வாறு அம்மூவரும் ஒரு நாள் மாலையில் கடற் கரைக்குப் போன காலத்தில், வண்டி கடற்கரை ரஸ்தா வில் குறட்டோரமாய் நிறுத்தப்பட்டது. தனக்குயில் தனக்குத் தலை நோவாயிருப்பதால், தான் வண்டியிலேயே இருப்பதாய்ச் சொல்ல, செட்டியார் மாத்திரம் இறங்கிக் குறட்டில் அங்குமிங்கும் உலாவிய காலத்தில், வண்டியில் இருந்த குறப்பையனும், தாசியும் மோக விகாரமான சில காரியங்களைச் செய்ய, செட்டியார் அதைக்கண்டு, அவர்கள் இருவரையும் விலக்கி அங்கேயே இறக்கி விட்டுவிட்டு, மோட்டாரைத் தாமே ஓட்டிக்கொண்டு தம் வீட்டிற்குப் போய் விட்டார்.

"என் தகப்பனார் பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்கிறபடி செட்டியாருக்குப் பரம மித்திரரா யிருந்ததோடு, ரத்னவேலுக்கும் அந்தரங்கமான சகாவா யிருந்தார். ரத்னவேல், செட்டியார் செய்த காரியத்தை என் தகப்பனாரிடம் ரகஸியத்தில் சொல்ல, இருவரும் கலந்து யோசனைசெய்து செட்டியாரை ஒழித்துவிடத் தீர் மானித்தனர். தாசிப்பெண்ணை வைத்து சவரக்ஷிக்கப் போதுமான பணம் குறவனிடம் இல்லையாதலால் தனியான

ஓர் இடத்தில் அவளைக் கொண்டுபோய் என் தகப்பனார் வைத்து, அவளிடம் போக்குவரத்தா யிருந்தார்.

"தாம் அப்படிச் செய்வது செட்டியார் முதலிய பிறருக்குத் தெரியக்கூடாது என்னும் எண்ணத்தை வைத்துக் கொண்டு அவர் ஒரு தந்திரம்செய்தார். தனக்குயிலுக்கு பார்ஸீ லேடிமாதிரி ஆடையாபரணங்களை அணிவித்து, அந்த இடத்தில் வைத்ததன்றி, தாம் அந்த இடத்திற்குப் போன போதெல்லாம் பார்ஸீ டாக்டர்மாதிரி டொப்பி, சட்டை, நிஜார், பூட்ஸ் முதலியவற்றோடு போய்வந்து கொண்டிருந்தார். பெரிய ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கும் ஒரு பார்ஸீ டாக்டரும் அவருடைய மனையாளான பார்ஸீ லேடியும் அங்கிருந்ததாக வேலைக்காரி முதலியோர் நினைத்து அதே தகவலை வெளியிடும்படி என் தந்தை செய்திருந்தார்."

**பர்வதலக்ஷ்மி யம்மாள்:**—ராமராமா! என்ன கண்றாவிக் கதையிது! காதாலெ கேக்க சகிக்கல்லியே! காது புளிச்சுப் போறதே!

**பண்ணை ஐயரவாள்:**—பையன் தலைவெட்டினா, அப்பன் மலை முழுங்கியா யிருக்கமாட்டானா! அவசரப்படாதே! இன்னும் சொச்சப் பிரபாவத்தையும் கேப்போம். ஐயரவாள், மேலே வாசிங்கோ.

**கிருஷ்ணமூர்த்தி ஐயர்:**-வேஷம் போட்றத்துலெ, அப்பாவும் புள்ளெயும் நிபுணரா யிருக்காளே!

(கடிதத்தை மேலும் படிக்கிறார்.)

"அன்றைய இரவு முதல் செட்டியாருடைய வீட்டில் மலைப்பிஞ்சுகள் மழை பெய்வதுபோல வந்து இறங்கத் தொடங்கின. விடியற்காலம் அவருடைய வீட்டின் வாசலில் கழிப்புக்கழித்த பாவைகள் முதலிய பயங்கர வஸ்துக்கள் வைக்கப்பட்டிருந்தன; மலச்சட்டிகள் உடைக்கப்பட்டிருந்தன. இக்காரியங்கள் பல நாட்கள் வரையில் தொடர்ச்சியாக நடைபெற, செட்டியார் திகில்கொண்டு ஏங்கி நோயில் வீழ்ந்து விட்டார். செட்டியாரம்மாளும் கிட்டத்தட்ட அதே நிலைமையை யடைந்து விட்டாள்.

"என் தந்தை எதையும் அறியாத பரம ஸாதுபோல் நடந்து, செட்டியாருக்கு அந்தரங்கமான நண்பராயிருப்பது போல் நடித்து, போலீஸாரைக்கொண்டு, கற்கள் முதலிய விழுவதைத் தடுக்க முயற்சிக்க, அது பயனற்ற முயற்சியா யிற்று. செட்டியார் மிக கேவலமான நிலைமையை யடைந்து விடவே, அவருக்கு வைத்திய சிகிச்சை செய்ய ஒரு பார்ஸீ டாக்டரையும், அவருடைய மனையாளையும் அழைத்து வருவதாகச் சொல்லி தாமும், தாசியும் வேஷம் போட்டுக் கொண்டு வந்து அவருக்கு மருந்துகள் கொடுத்து, அவர் தம்முடைய சொத்துகளின் விஷயத்தில் 'உயில்' எழுதி வைக்கும்படிசெய்து, மறுநாளிரவில் அவருடைய படுக்கை யண்டை காவலாயிருக்கும்படி தனக்குயிலை பார்ஸீலேடி உடையில் அனுப்ப, அவள் இரவு முழுவதும் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, தனது ஸாகஸங்களால் அவருடைய மோகாவேசத்தைக் கிளப்பி விட்டபடி இருந்து, உடம்பை துர்ப்பலப்படுத்தக்கூடிய மருந்துகளைக் கொடுத்துவிட்டுப் போக, மறுநாள் செட்டியார் இறந்துபோய் விட்டார்.

"மூன்று லக்ஷம் ரூபாய் பெறத்தக்க செட்டியாருடைய சொத்துகளை யெல்லாம், அவருடைய இரண்டு குழந்தைகளும் மேஜர் ஆகும் வரையில், என் தகப்பனுரே நிர்வகிப்பதென்றும், செட்டியாரம்மாள் போஷகியா யிருப்பதென்றும், 'உயில்' எழுதப்பட்டதானுலும், கற்களும் மலச்சட்டிகளும் விழுந்தது, பாவைகள் வைக்கப்பட்டது ஆகியவற்றுல் ஏற்கனவே தளர்வடைந்து துர்ப்பலமடைந்திருந்த செட்டியாரம்மாள் தன் கணவர் இறந்து போனபின் அபாரமான திகிலும் மனவேதனையும் அடைந்து எப்போதும் படுத்த படுக்கையாகவே இருக்க, என் தகப்பனுர் மறுபடியும் பார்ஸீ டாக்டரையும், பார்ஸீ லேடியையும் அழைத்து வந்து செட்டியாரம்மாளுக்கும் வைத்தியம் செய்விக்க, அவள் அந்த ஊரை விட்டு, தேகாரோக்கியத்திற்கு அநுகூலமான குற்றுலம் முதலிய வேறு ஊர் எதற்காவது போய்ச் சில மாதகாலம் இருந்தாலன்றி உடம்பு தேறுதென்று டாக்டர் சொல்லி விட்டார்.

"குற்ருலத்தில், ஓரிடத்தை வாடகைக்கு எடுத்து அங்கு செட்டியாரம்மாளேயும், அவளுடைய குழந்தைகள் இரண்டையும், என் பாட்டியையும், இன்னம் சில சிப்பந்திகளேயும் வைத்து, என் தந்தை அங்கே போவதும் சென்னைக்கு வருவதுமாயிருந்தார். செட்டியாருக்கு ரொக்கமாகவும் நகையாகவும் சுமார் 2½-லக்ஷம் ரூபாயும், ½-லக்ஷம் ரூபாய் பெறும்படியான வீடுகளும் இருந்தன. ரூபாயும் நகைகளும் அவருடைய வசமாய் விட்டன. வீடுகளே யெல்லாம் அவருடைய பெயருக்கே முச்சலிக்கைகள் பெற்று வாடகைக்கு விட்டு வந்தார்.

"செட்டியாருடைய குடும்ப வரலாறுகள் குற்ருலத்திலிருந்த எவருக்கும் தெரியாதிருந்தன. செட்டியாரம்மாளுடைய உடம்பு தேருமலேயே இருந்து ஐந்தாறு மாதக் காலத்தில் படிப்படியாய் முற்றிலும் கேவல நிலைமையை அடைந்து விட்டது. செட்டியாருடைய குழந்தைகளே என் பாட்டி தன் சொந்தக் குழந்தைகள் போலவே பிரியமாய் நடத்திப் பாதுகாத்து வந்தாளாதலால், செட்டியாரம்மாள் என் பாட்டியும், என் தகப்பனுரும் தன் குழந்தைகளே வஞ்சிக்க மாட்டார்கள் என்று பூர்த்தியான நம்பிக்கை வைத்துவிட்டதன்றி, தன் உயிர் அதிகமாய் நில்லாதாகையால் இனி முழுப் பொறுப்பையும் என் தகப்பனுரே வகிக்கும்படி வேண்டிக்கொண்டாள். மறுபடி இன்னெரு பத்திரம் எழுதப்பட வேண்டுமென்று என் தகப்பனுர்கூற, செட்டியாரம்மாள், 'உங்கள் இஷ்டம் எப்படியோ அப்படியே பத்திரம் எழுதிக் கொள்ளுங்கள். நான் கையெழுத்துப் போட்டு ரிஜிஸ்டர் செய்துவைத்து விடுகிறேன்' என்று கூறிருள். ஒரு புதிய பத்திரம் எழுதப்பட்டது. தன் புருஷரால் விடப்பட்டுப்போன சொத்துக்களே யெல்லாம் என் தந்தையே நிர்வகிப்பதோடு, குழந்தைகளுக்கும் போஷகரா யிருக்க வேண்டுமென்றும், தேவையானல், வீடுகள் முதலிய ஸ்தாவர சொத்துக்களேயும் அவர் விற்றுவிடலாமென்றும், குழந்தைகள் மேஜராவதற்கு முன் தெய்வ சங்கற்பத்தால் இறந்து போனல், சகலமான சொத்துகளேயும் அவரே எடுத்

துக் கொள்ளுவதென்றும் ஒரு பத்திரம் எழுதப்பட்டது. அதில் என்ன புதிய விஷயங்கள் எழுதப்பட்டனவென் பதை செட்டியாரம்மாள் கேட்கவே இல்லை. அவள் உடனே கையெழுத்துப் போட்டு ரிஜிஸ்டரும் செய்துவைத்து விட்டாள். அதற்குப் பிறகு இரண்டு மாதகாலத்தில் அவள் பரலோகப் பிராப்தி யடைந்தாள்.

"செட்டியாருடைய குழந்தைகள் இரண்டும் அதற்கு மேலும் குற்றாலத்திலேயே இருந்தன. என் பாட்டியும், மற்ற சிப்பந்திகளில் சிலரும் அங்கே இருந்தனர். அது வரையில் செட்டியாரம்மாளுக்குமுன் வராமல் மறைவி லேயே இருந்துவந்த ரத்னவேல், செட்டியாருடைய குழந் தைகளுக்கு முக்கியக்காவலனுனான். குழந்தைகள் இரண்டும் நான்கு வயதிற்குட்பட்டவர்களாகவே இருந்தனவாதலால், ரத்னவேலைவைப்பற்றிய பழைய வரலாறு எதுவும் அவர் களுக்குத் தெரியாதாகையால், அவனிடம் நிரம்பவும் பற் றுதலோடிருந்து வந்தன.

"என் தந்தை குற்றாலத்துக்குப் போவதையே விட்டு விட்டார். சென்னையில் செட்டியாருக்குச் சொந்தமா யிருந்த வீடுகளையெல்லாம் அவர் விற்றுப் பணமாக்கிக் கொண்டு, ஒரேயடியாக சென்னையை விட்டு கோயம்புத் தூரை யடைந்து, அங்கே ஒரு பெரிய கட்டிடத்தை வாட கைக்கு எடுத்துக்கொண்டு தம்மிடமிருந்த மூன்று லக்ஷம் ரூபாயையும் முதலாக வைத்து பாங்கி வர்த்தகம் நடத்தத் தொடங்கினர். சொத்துகள் யாவும் தம்முடைய சொந்த சொத்துகள் என்றே தஸ்தாவேஜிகள் எழுதி சகலமான நடவடிக்கைகளையும் நடத்திக்கொண்டு போனார்.

"அவர் சென்னையை விட்டு வந்தகாலத்தில் அங்கு அவ ருக்கு வைப்பாக இருந்த தனக்குயிலுக்கு ஆயிரம் ரூபாய் பணம் கொடுத்து, வேறு எவரையாவது பிடித்துக் கொள் ளும்படி சொல்லிவிட்டுத் தாம் இன்ன ஊருக்குப் போகி ரேம் என்ற தகவலைக்கூட அவளுக்குச் சொல்லாமல் போய் விட்டார். கோயம்புத்தூரில் அவருக்கு முதல் கல்யாணம் நிறைவேறியது. என் தாயாரைப் பெற்ற பாட்டனர் ஒரு

சாஸ்திரியார் என்று நான் முன்னரே எழுதி இருக்கிறேன். அவருக்கு என் தாயைத் தவிர, வேறு மனிதரே இல்லை. அவர் என் தாயை அவருக்குக் கல்யாணம் செய்துகொடுத்து தம்முடைய பெரும்பலான சொத்துகளையும் கன்யாதான மாய்க் கொடுத்துவிட்டார்.

"கோயம்புத்தூர் பாங்கியின் வர்த்தகம் அமோகமாய் விருத்தியடைந்து கொண்டே போயிற்று. சில வருஷ காலத்திற்குள் அவர் சுமார் பதினைந்து லக்ஷத்திற்கு உரியவராய் விட்டார். அந்தக் காலத்தில் குற்றாலத்திலிருந்து ஒரு செய்தி வந்தது. அந்த ஊர் நீர்வீழ்ச்சியில் ஸ்நானம் செய்யும் பொருட்டு என் பாட்டியோடும், ரத்னவேலோடும் சென்ற செட்டியாருடைய குழந்தைகளிரண்டும் ஸ்நானம் செய்யும்போது காணமல் போய்விட்டன என்றும், சில தினங்களுக்குப் பிறகு அவர்களுடைய பிணங்கள் அகப்பட்டன வென்றும் செய்தி வந்தது. என் தகப்பனர் இரகஸிய மாகப் புறப்பட்டுக் குற்றாலத்திற்குப் போய், செட்டியாருடைய குழந்தைகளின் பிணங்களைக் கொளுத்திவிட்டு தம் தாயையும் ரத்னவேலையும் அழைத்துக்கொண்டு கோயம்புத்தூருக்கு வந்து சேர்ந்தார்.

"அதன் பிறகு, என் தந்தை சகலமான சொத்துக்களுக்கும் ஏதேச்சாதிகாரம் வாய்ந்த சொந்தக்காரராய் அட்டகாசம் பண்ணவாரம்பித்தார். ரத்னவேல் முதலியோர் குற்றாலத்தில் இருந்த காலத்தில், செட்டியாருடைய குழந்தைகள் மலையருவியில் விழுந்து இறந்துபோகும்படி செய்து, அந்தச் செய்தியைத் தமக்குத் தெரிவித்தால் தாம் தமது வர்த்தக சொத்தில் மூன்றில் ஒரு பாகத்தை அவனுக்குக் கொடுப்பதாக வாக்களித்திருந்தார்.

"அதை நிறைவேற்றுமல் பல வருஷ காலம் ஏமாற்றி வந்தமையால், அவன் அதைப்பற்றி அவரை நச்சுப்படுத்தவும், என் தாயிடம் குறை கூறவும் நேர, அதன் பலனய் அவனுக்கு இருபத்தொரு வருஷ தண்டனை வந்து லபித்தது."

பண்ணை ஐயரவாள் :—ஆஹாஹா! என்ன மோசம்! என்ன மோசம்! இது எந்தக் காலத்துலெயும் ஆரும் காதாலெ கேக்காத படுமோசமான்னா இருக்கு! செட்டி குடும்பத்தெ அடியோடெ க்ஷவரம் பண்ணி, சொத்தெயெல்லாம் ஸ்வாஹாப் பண்ணிப்புட்டானே. புள்ளையைவிட அப்பன் பலே பேர்வழியா இருக்கானே! அவுனுக்கு ஏற்பட்ட காரியஸ்தனும், கழுவுக்கேத்த கோமுட்டிதான். சபாஷ்! சபாஷ்! மனுஷன் பணம் சம்பாதிச்சாலும் இப்பிடீன்னா சம்பாதிக்கணும்! அந்தக் காரியஸ்தனுக்கு இருவத்தோரு வருஷ தண்டனை கெடைச்சது ஞாயமான காரியந்தான்! அன்னியாயமா ரெண்டு கொழந்தையளைக் கொலை பண்ண பழி லேசானதா!

பர்வத லக்ஷ்மியம்மாள் :— அப்படியானா, குத்தாலத்துலெ ஜலத்துலெ விழுந்து செத்துப்போன செட்டிக் கொழந்தெயளே அந்தக் காரியஸ்தனே கொண்ணிருப்பான்னா சொல்றைக ?

பண்ணை ஐயரவாள்:—அடி பைத்தியக்காரீ போ. இது தெரியல்லியா நோக்கு! நண்ணா வெட்ட வெளிச்சமாத் தெரியறதே! அதுக்காகத்தானே அந்தக் காரியஸ்தனுக்கு மூணத்தொரு பாகங் குடுக்கறேன்னு சொன்னது. ஒரு ரூவாயா, ரெண்டு ரூவாயா, மூணத்தொரு பங்கூன்னா, அப்ப இருந்த சொத்துக்கு அஞ்சு லக்ஷம் ரூபா ஆகுமே! ஜீவாதாரமான கொலை பண்ணறத்துக்காகத்தான் அம்பிட்டுப் பெரிய தொகையைக் குடுக்கறேன்னு சொன்னான். இல்லாட்டாப் பைத்திக்காரத்தனமா அவன் அப்பிடிச் சொல்லிருப்பானா! ஒருநாளும் சொல்லிருக்க மாட்டான். தொகை பிரம்மாண்டமா இருந்தத்துனாலெதான், குடுக்க மனம் வராமெ, காரியஸ்தனை இந்த மாதிரி அடியோடெ வேரெக் களைஞ்சு வென்னீரை விட்டுட்டான்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர்:—ஆசாமி பெரிய அசுர ஜென்மத்தெச் சேந்தவனா இருக்கானே! மனுஷ ஜென்மத்துலெ சேந்தவனாவே இல்லியே!

பர்வத லக்ஷ்மியம்மாள்:— இப்பிடி யெல்லாம் ஊர்ச் சொத்தெக் கொள்ளையடிச்சு லக்ஷம் லக்ஷமாச் சேத்து என்ன பண்ணப்போறுங்கறது தெரியல்லியே! சொந்தப் பொண்ணையே கொன்னு, மூத்த ஆம்படையாளெத் தள்ளிப் புட்டு, அவளோடெ வயத்துலெ பொறந்த புள்ளையாண் டானையும் பராரியா விட்டுட்டு, அவர் மாத்தரம் ஏகாங்கியா யிருந்து இத்தனும் வெள்ளம் சொத்தையும் என்ன பண் ணப் போறூர். இன்னெனக்கிச் செத்தா நாளைக்கி ரெண்டு நாளாச்சே.

கிருஷ்ணமூர்த்தி ஐயர்:—ஏன். அவர்தான் ரெண்டாந் தாரம் ஒத்தியெக் கல்யாணம் பண்ணிண்டிருக்காறுமே! அவுளுக்குக் கொழந்தை குட்டி யிருக்கும். அவுளுக்குப் பின்னாலெ அவாளுக்குச் சேரலாமோன்னோ!

பண்ணை ஐயரவாள்:—ஆனாலும் இந்த மனுஷன் மகா கிராதகன்னு! இவனோடெ மொகத்துலெ முழிச்சாக்கூட நமக்குப் பஞ்சமா பாதகம் வந்துசேரும். இத்தனை அட்டூழி யங்களும் சும்மா விட்டுடாது. அவுனுக்கு ரௌரவாதி நரகத்தெத் தவிர வேறே முடிவு கெடையாது. இருக் கட்டும். கடுதாசியெ மேலே வாசிங்கோ. சொச்ச வைபவத் தையும் கேக்சலாம்.

(கிருஷ்ணமூர்த்தி ஐயர் கடிதத்தை மேலும் படிக்கிறார்.)

"என் தகப்பனாருடைய இளைய சம்சாரம் தத்ரூபம் கந்தர்வ ஸ்திரீபோலவே, மகா அற்புதமான அழகும் முக வசீகரமும் வாய்ந்தவளாதலால், என் தகப்பனர் அவளுக்கு சாசுவத அடிமை முறி எழுதிக்கொடுத்துவிட்டவர்போலாய் அவள் காலாலிட்டதைத் தலையால் செய்கிறவர்ஆய்விட்டார். அவளால் தமக்கு அழகான பல குழந்தைகள் பிறக்குமென் றும், அவைகளுக்குத் தம் சொத்துகளெல்லாம் சேர வேண்டுமென்றும் அவர் அவாவுற்று ஆவலோடு எதிர் பார்த்து, அவளோடு சதாகாலமும் இணைபிரியாதிருந்து அவளை ஒரு சக்கரவர்த்தினிபோல நடத்தி, எப்போதும் அவள் ஆநந்தமாயிருக்கும்படி செய்து வந்தார்.

"இரண்டாவது வருஷத்தில் அவள் கர்ப்பிணியானாள். ஆனால் மூன்றாவது மாதத்தில் கர்ப்பச் சிதைவு ஏற்படவே, அந்த வேதனையைப் பொறாமல் அவள் இறந்துபோய்விடுவாளோ வென்று அஞ்சத்தக்க பயங்கரமான நிலைமையை அடைந்தாள். அதன்பொருட்டு பல வைத்திய நிபுணர்கள் தருவிக்கப்படவே, அவர்கள் அவளுக்கு மயக்க மருந்தைக் கொடுத்து, ஆபரேஷன் செய்து, குறைச் சிசுவை பலவந்தமாய் வெளிப்படுத்தினர். அவர்களுள் முக்கியஸ்தராயிருந்த வெள்ளைக்கார துரையொருவர் அப்போது குடி வெறியால் தடுமாற்ற மடைந்து கர்ப்பப் பையை அடியோடு அறுத்தெடுத்து வெளியில் போட்டுவிட்டார். அதனால் அவளுக்கு அதற்குமேல் கர்ப்பமே எப்போதும் தரிக்க மார்க்கமில்லாமல் போய்விட்டது. அவள் மூலமாய்த் தமக்குப் பிறக்கும் குழந்தைக்கே தம் சொத்துகள் சேர வேண்டுமென்று அவர் எண்ணி மனப்பால் குடித்தது நிறைவேறக் கூடாததாய் முடிந்தது."

**பர்வத லக்ஷ்மியம்மாள்:**—மூத்த ஸம்ஸாரத்து வதை வீணாப்போமா! எல்லாத்தியும் பாத்துண்டு, அததுக்குத் தக்கபடி கோணக்கழி வெட்ட பகவான் காத்துண்டிருக்கச்சே, கேவலம் மனுஷன் விச்சாத்துள்ளிக் குதிக்கறத் என்ன ஆயிடப்போறது. ஏறுங் கடைசீலே மிஞ்சறது அவா ளவா பண்ணின பாவ புண்ணியத்துப் பலந்தான்.

**பண்ணை ஐயரவாள்:**--அதுக்கப்பறம் இன்னொத்தியைக் கல்யாணம் பண்ணிண்டாரோ என்னமோ! அப்பேர்ப்பட்ட ஆசாமி அதுக்கு மேலெய்யும் சும்மா இருப்பாரா!

(கிருஷ்ணமூர்த்தி ஐயர் சிரித்துக்கொண்டு மேலும் கடிதத்தைப் படிக்கிறார்.)

"தம்முடைய ஆசை நாயகியான இளைய மனைவிக்கு அதற்குமேல் குழந்தை பிறக்காது என்ற நிச்சயம் ஏற்பட்டுப் போகவே, அவர் ஏமாற்றமும், ஏக்கமும், வியாகுலமும் அடைந்து அதைப்பற்றி அடிக்கடி கவலைப்பட்டாரானாலும், தாம் உயிருக்குயிராய் மதித்திருந்த, அவ்வளவு அற்புத அழ

கோடு கூடிய, இளைய மனையா ளிருக்கையில் இன்னொருத்தியை மணக்க எண்ணவில்லை. வருஷம் ஆக ஆக சதிபதிகள் இருவருக்கும் குழந்தை யில்லாத குற்ற பெருத்த தாக விடாய்போல் பெருகி அவர்கள் இருவரையும் சந்தோஷமற்றவர்களாய்ச் செய்துவிடவே, தாம் வேறு எவருடைய குழந்தையையாகிலும் வளர்த்துக் கொள்ளலாமோ என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தனர்.

"அப்போது முக்கியமான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அவர்கள் சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் விலையில் முதல்தரமான 'ரோல்ஸ்ராய்ஸ்' என்ற மோட்டார் வண்டியை எப்போதும் உபயோகித்து வந்தனர். எவ்வளவு தூரமான ஊருக்குப் போக வேண்டுமானாலும் சதிபதிகள் இருவருமே அதில் போய் வருவது வழக்கம். அந்த வழக்கப்படி அவர்கள் இருவரும் தங்கள் மோட்டார் வண்டியில் சென்னைக்குப் போய்விட்டுத் திரும்பி வந்தகாலத்தில், ஜன நடமாட்டமில்லாத ஒரு ரஸ்தாவின் வழியாக வந்தபோது, ஒரு வேலைக்காரி சுமார் ஐந்து வயதுள்ள ஒரு பெண் குழந்தையை ரஸ்தா ஓரத்தில் வைத்து விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள். அந்தக் குழந்தை பசுந்தங்கத்தினால் வார்க்கப்பட்ட பதுமைபோலவே இருந்தது. அது பிராம்மணக் குழந்தை யென்பதும் தெரிந்தது. பக்கத்தில் ஓர் அக்கிரஹாரம் தென்பட்டது.

"அந்தக் குழந்தையின் வசீகரமான அழகைக் கண்டு பிரமித்துப் போய் சதிபதிகள் இருவரும் தமது மோட்டார் வண்டியை அந்தக் குழந்தை விளையாடிய இடத்திற்கருகில் நிறுத்திக் கீழே இறங்கி, குழந்தையோடும், வேலைக்காரியோடும் பேச்சுக் கொடுத்தனர்.

"அந்தக் குழந்தை அப்போதே முதன்முதலாய் மோட்டார் வண்டியைப் பார்த்ததாகையால், அதைக் கண்டு ஆசையோடு உற்று உற்றுப் பார்த்து நாற்புறங்களிலும் சுற்றிச் சுற்றி, சக்கரங்கள் முதலியவற்றைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டே இருந்தது. அப்போது அந்த வேலைக்

காரி அந்தக் குழந்தையைப் பார்த்து, 'கண்ணூ! நீ வண்டி யெப் பாத்துக்கினே இரு. நானு ஆத்தாங் கரைக்கிப் போயி ஒரு வா தண்ணி குடிச்சுட்டு ஓடியாறேன்' என்று கூறியபடி தடதடவென்று சுமார் நூறு கஜதூரத்திற் கப்பா லிருந்த பிரம்மாண்டமான ஓர் ஆற்றுப்பக்கம் தலைதெறிக்க ஓடினாள். வழியில் இருந்த சப்பாத்துப் புதர்களுக்கு மறைவில் அவள் அவசரமாய் ஒதுங்கிவிட்டு, பக்கத்தி லிருந்த ஆற்றை யடைந்து குனிந்து இரண்டு கைகளாலும் தண்ணீர் எடுக்க முயல, அப்போது அவள் நின்ற இடம் அடியோடு பெயர்ந்து பிரவாகத்தில் சாயவே, அவளும் ஆற் றில் விழுந்து மறைந்து போனாள். அந்த இடத்தில் தண் ணீர் சுமார் அரைப் பனை ஆழம் போவதுபோலத் தோன்றிய தாகையால், அவள் முழுகிப்போன குறிப்பே தெரியாமல் போய் விட்டது.

"வண்டியிலிருந்தபடியே அந்த வேலைக்காரியைப் பார்த் துக் கொண்டிருந்த என் தகப்பனார், அவள் ஆற்றில் வீழ்ந்து மூழ்கிப்போனதை கவனித்தார். அந்த ஒரே க்ஷணத்தில் அவருடைய மனத்தில் ஓர் எண்ண முதித்தது. அவர் தமது வண்டிக்குள்ளிருந்த மல்கோவா மாம்பழமொன்றை எடுத் துக் கத்தியால் நறுக்கி, 'இந்தாம்மா பழம், சாப்பிடு' என்று அந்தப் பெண் குழந்தையிடம் கொடுக்க, அது அந் தப் பழத்துண்டை வாங்கிச் சப்பிடவே, அந்தப் பழத் தின் அதீதமான ருசி அதன் மனதைக் கவர்ந்து விட்டது. அதைத் தின்றபின் மறுபடியும் குழந்தை அவருடைய கையி லிருந்த பழத்தைப் பார்த்தது.

"என் தந்தை சுற்றுமுற்றும் பார்த்தார். மனிதர் யாரும் அவர்களை கவனிக்கவில்லை. அவர், 'கொழந்தே! இந்தப் பழத்தெ யெல்லாம் நோக்கே தறேன். மேலே வந்து ஒக்காண்டிண்டு சாப்பிட்றியா?' என்று நயமாகக் கேட்க, அது 'சரி!' என்று தலையை அசைத்தது. அவர் உடனே கதவைத் திறந்து, குழந்தையைத் தூக்கிக் கால்வைக்கும் பாகத்தில் வைத்து, மல்கோவாப் பழத்தையும் அதன் கையில் கொடுக்கவே, அது ஆவலோடு அந்தப் பெரிய

பழத்தை வைத்துக்கொண்டு சாப்பிடத் தொடங்கியது. அவள் வைக்கப்பட்ட இடத்திற்கு அருகில் இன்னும் ஏராளமான பழங்களும், பட்சணம் நிறைந்த தட்டும் இருந்தன. குழந்தை அவைகளைக் கண்டு மயங்கி மெய்ம்மறந்து போய்ப் பழத்தைத் தின்றபடி இருக்க, என் தந்தை கதவை ஓசையில்லாதபடி மூடி, வண்டி போகிறதென்பதையே அந்தக் குழந்தை உணராதபடி அதை விட்டுக் கொண்டு போகத் தொடங்கி, அந்தக் கிராமத்தைத் தாண்டி அரைமயில் தூரம் போனபின் விசையை ஒரே வேகமாய்த் திருப்பிவிட்டார்.

"குழந்தை உட்கார்ந்திருந்தஇடத்தில் வழுவழுப்பான வெல்வெட் தைக்கப்பட்டிருந்தது. வண்டி விசையாக ஓடியதால் உண்டான அதிர்ச்சியும் அதற்கு சுகமான புதிய உணர்ச்சியை உண்டாக்கவே, மாதுரியமான பழத்தைத் தின்றபடியே அந்தக் குழந்தை வெல்வெட்டுத் தரையில் படுத்து சுகமான நித்திரையில் ஆழ்ந்துபோய் விட்டது.

"மறுபடி அது விழித்துக் கொண்டபோது கோயம்புத்தூரில் அவர்களுடைய பிரம்மாண்டமான பங்களாவிற்குப் போய்ச் சேர்ந்துவிட்டது. அந்தக் குழந்தையின் மனதை அவர்கள் பல வகைகளில் மயக்கி, அதன் அழுகையை சமனப்படுத்தி, அதன் தாய் தந்தையருடைய நினைவை மாற்றி அதையே தங்கள் வளர்ப்புக் குழந்தையாக வைத்துக் கொண்டனர்."

**பர்வதலக்ஷ்மி யம்மாள்:**— (அபாரமான வியப்போடு) என்ன ஆச்சிரியம்! நம்ம லக்ஷ்மி காணாமெப்போன கதை மாதிரியே இருக்கே இதுவும். நம்ப லக்ஷ்மி காணாமெப் போயி பதினேழு வருஷமாறதே! இது எப்ப நடந்தது!

**பண்ணை ஐயரவாள்:**—(மிகுந்த பிரமிப்போடு) அந்தக் கொழந்தைக்கி அஞ்சு வயசுன்னு சொல்றான்! வேலைக்காரி ஆத்துலெ அமுங்கிப் போயிட்டான்னு சொல்றான்! நம்ப வேலைக்காரியோடெ பொணத்தெ, நாணப் பொதருலெ இருந்துதானே எடுத்தோம்! நம்ப குட்டி லக்ஷ்மி இப்பஅவா

கிட்டதான் இருக்காளா என்ன! அவா கோயம்புத்தூரு லேன்னு இருக்காளாம்! இருந்திருந்து நம்ப லக்ஷ்மி அந்தச் சண்டாளன்கிட்டவா போயிச் சேரணும்!

**பர்வதலக்ஷ்மி யம்மாள்:**—(ஆவலோடு) இன்னும் கடிதாசிலே என்ன இருக்குன்னு பாப்பம்.

(கிருஷ்ணமூர்த்தி ஐயர் கடிதத்தை மேலும் படிக்கிறார்.)

"அந்தக் குழந்தை அவர்களுக்குக் கிடைத்து சுமார் பதினேழு வருஷ மாய்விட்டது. அதற்கு அவர்கள் ஸ்வர்ணும்பாள் என்று பெயரிட்டார்கள்!"

**பர்வதலக்ஷ்மி யம்மாளும், பண்ணை ஐயரவாளும்** (வியப்பும் ஆவலும் கொண்டு) என்ன! என்ன! ஸ்வர்ணும்பாள் என்று பெயர் வைத்தார்கள்! இந்த அம்மாளுடைய பெயரும் அதுதானே! இவாளுடைய தகப்பனார் சென்னைப் பட்டணத்திலல்லவா இருக்கிறார்!

(கிருஷ்ணமூர்த்தி ஐயர் கடிதத்தை மேலும் படிக்கிறார்)

"தாங்கள் ஒரு குழந்தையைக் கொணர்ந்து வைத்துக் கொண்டிருப்பது அந்த ஊராருக்குத் தெரிந்தால், அது யாருடைய குழந்தையென்று கேட்பார்களாதலால், அதனால் ஏதேனும் வம்பு வளருமென்று பயந்து, அவர் சில மாத காலம் வரையில் குழந்தையை எவருக்கும் தெரியாமல் மறைவாய் வைத்திருந்து, தமது பாங்கியையே கோயம்புத்தூரை விட்டு சென்னைக்கு மாற்றி அதைத் திருவல்லிக்கேணியில் ஸ்தாபித்து, தங்களுக்கு புரசைப்பாக்கத்தில் ஒரு பங்களா வாங்கிக்கொண்டு ஸ்வர்ணும்பாளோடு அங்கே வந்துவிட்டனர்."

என்று படிக்கப்பட்டதைக் கேட்கவே எல்லோரும் திடுக்கிட்டு, திக்பிரமை கொண்டு மெய்ம்மறந்து தத்தளித்தனர்.

**பர்வத லக்ஷ்மியம்மாள்:**—என்ன விசித்ரம் இது. எல்லாம் இவாளுடைய கதையாவே இருக்கே! இந்த ஸ்வர்ணும்பாதான் நம்ப லக்ஷ்மியோ!

பண்ணை ஐயரவாள்:—மேலே படியுங்கோ, மேலே படியுங்கோ, நிறுத்த வாண்டாம்.

(கிருஷ்ணமூர்த்தி ஐயரும் அதீதமாய்ப் பொங்கி யெழுந்த உணர்ச்சியோடு மேலும் படிக்கிறார்.)

"அந்த ஸ்வர்ணம்பாளை அவர்கள் அந்த இளைய மனைவியின் சொந்தப் பெண்ணென்றும், அவளுக்கே எல்லா சொத்துகளும் சேருமென்றும் சொல்லிக்கொண் டிருந்தனர். தங்கள் பங்களாவிற்கடுத்த பங்களாவில் இருக்கும் வக்கீலும் ஜெமீன்தாருமான ஒருவருடைய புத்திரரான கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு அந்தப் பெண்ணை வாழ்க்கைப் படுத்த, அவர்களுக்கு சுந்தரி என்ற குழந்தை பிறந்தது. அதற்கு இப்போது ஐந்து வயதாகிறது." என்று படித்த கிருஷ்ணமூர்த்தி ஐயரே தமது மனக்கொந்தளிப்பினால் மேலே படிக்கமாட்டாமல் நிறுத்திவிட்டு, "என்ன ஆச்சிரியம் இது! எங்க ஸ்வர்ண ஒங்காத்து லக்ஷ்மிதான்போலிருக்கே!" என்று மிகுந்த தடுமாற்றத்தோடு கூறி கடிதத்தை மேலும் படிக்கத் தொடங்கினார்:—

"என் பாட்டனாருடைய பெயர் சுப்பராமையர். என் தகப்பனாருடைய பெயர் ராமகிருஷ்ணையர். அவைகளின் முதல் எழுத்துக்களைச் சேர்த்து என் தகப்பனார் எஸ். ஆர். ஐயர் என்று இங்கிலீஷ் எழுத்துகளால் பெயரை மாற்றி வைத்துக்கொண்டு திருவல்லிக்கேணியில் பாங்கி நடத்தினார். சில மாதங்களுக்கு முன் சிறைச்சாலையிலிருந்து திருப்பி வந்த ரத்னவேல் என்னும் குறவன் தன் பழியைத் தீர்த்துக் கொள்ள நினைத்து, அவருடைய இளைய மனைவியைக் கொன்றது முதலிய விவரங்களெல்லாம் பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. அவைகளை நான் உங்களுக்கு எழுதவேண்டிய அவசியமில்லை. காணமற்போன உங்களுடைய பெண்ணையும், உங்கள் மாப்பிள்ளையையும், அவர்களுடைய குழந்தையையும் தெய்வமே உங்களுடைய வீட்டில் கொண்டுவந்து சேர்த்துவிட்டது. நான் உங்கள் ஊரை விட்டு இங்கே வந்தவுடன் என் தாயை விட்டு அந்தக் குறவனைத் தேடச்செய்து, அவனோடு நானே பேசி, அவனுடைய கோபத்தைத்

தணித்து, அவன் உங்கள் பெண், மாப்பிள்ளை முதலியோ ருக்கும், என் தந்தைக்கும் இனி எவ்வித கெடுதலும் செய்வ தில்லையென்ற வாக்குறுதியை நான் அவனிடம் வாங்கிக் கொண்டேன்.

"அதன் பிறகு நான் என் தகப்பனாரிடம் சென்று நான் இன்னானென்பதைத் தெரிவித்து, அவருக்கு எவ்வித கெடு தலும் செய்யாதபடி நான் குறவனிடம் வாக்குறுதி பெற்ற தைத் தெரிவிக்க, அவர் அடியோடு புது மனிதராய் மாறி, தாம் செய்த குற்றங்களுக் கெல்லாம் வருந்தி வாய்விட்டுக் கதறியழுதலோடு, தமது சொத்துகள் முழுவதையும் என் வசத்தில் ஒப்புவித்து, அவைகளை நான் என்னிஷ்டப்படி விநியோகம் செய்துகொள்ளலா மென்று சொல்லிவிட்ட தோடு, மறுபடி என் தாயாரையும் மனைவியாக ஏற்றுக் கொண்டுவிட்டார்.

"என் தகப்பனார் தம் கடைசிக் காலத்திலாவது தம் அக்கிரமங்களை உணர்ந்து திருந்தி என் தாயாரை ஏற்றுக் கொண்டா ராயினும், அவருடைய மூளையில் தளர்வு ஏற் பட்டுப் போயிருப்பதாகத் தோன்றுவதால் அவர் கேனம் பிடித்தவர்போல் பிதற்ற ஆரம்பித்திருக்கிறார். அவருடைய காயமும் இனி அதிக காலம் நில்லாதென்பது நிச்சயம். இப்பேர்ப்பட்ட சொந்தக்காரரையும் அவருடைய இளைய மனைவியையும் இழந்ததைப்பற்றி உங்கள் லக்ஷ்மி முதலி யோர் இனி அவ்வளவாக வியாகுலமடைய மாட்டார்க ளென்று நம்புகிறேன்.

"என் தந்தையால் சேர்க்கப்பட்ட பணம் முழுதும் அக்கிரமத்தில் சம்பாதித்த பணத்தின் வளர்ச்சி யாதலால், எல்லாத் தொகையையும், நான் செய்ய உத்தேசித்திருக் கும் ஏழை ஜன தர்ம கைங்கரிய நிதிக்கே சேர்த்துவிட் டேன். குறவனும் இப்போது திருந்திப் போய்விட்டான். நான் ஸ்தாபிக்கப் போகும் ஏழை ஜன தர்ம கைங்கரியத தில், அவனும் சேர்ந்து சேவை செய்வதாய் வாக்களித்து என்னோடு கூடவே இருந்து வருகிறான்.

"என் தகப்பனுருடைய இளேய மனைவியை வஞ்சித் தழைத்து வந்த மினியம்மாளும் அப்பாத்துரையும் சிங்கப் பூருக்குப் போய்விட்டன ராதலால், அவர்களைப் பிடிக்கப் போலீஸாரால் இயலவில்லை. அந்தக் குற்றத்தில் குறவனை சம்பந்தப்படுத்தத் தக்க சாட்சியில்லை யாதலால், அவர்கள் அவனை உபத்திரவிக்காமல் விட்டுவிட்டனர்.

"இவ்வளவே நான் உங்களுக்கு எழுதவேண்டிய செய் திகள். நீங்கள் லக்ஷ்மியை எந்த நிலைமையில் விட்டுப் பிரிந் தீர்களோ, அதே நிலைமையில் சுந்தரி வந்திருக்கிருள். உங்க ளுக்கு ஏற்பட்ட மனக் குறைகளையும் ஏக்கத்தையும் அவள் தீர்த்து வைப்பாள். அதுவன்றி, அவள் உங்க ளுடைய குமாரனுக்கும் மனையாள் ஆய், உங்கள் வீட்டை விட்டுப் போகாத நித்திய லக்ஷ்மியாயும் விளங்குவாள். அதோடு உங்களுடைய குமாரியான சொந்த லக்ஷ்மியும் வட்டியும் முதலுமாய்த் திரும்பி வந்து சேர்ந்துவிட்டாள். இனி உங்கள் பாடு கொண்டாட்டமும் குதூகலமுமே. கிருஷ்ணமூர்த்தி ஐயருடைய தந்தையான உங்கள் சம்பந் திக்கும் இந்த சந்தோஷகரமான மாறுபாட்டைத் தெரி வித்து விட்டேன். அவரும் குடும்ப சகிதம் நாளேயதினம் உங்கள் ஊருக்கு வந்து சேர்ந்து, அங்கு நடக்கப்போகும் கொண்டாட்ட வைபவத்தில் கலந்துகொள்வார்.

இப்படிக்கு உங்களை எப்போதும் மறவாத,
**போலிச்சாமியார் பொன்னுசாமி ஐயர்"**

என்று கிருஷ்ணமூர்த்தி ஐயர் படித்து முடிக்க, பர்வத லக்ஷ்மியம்மாள், "அம்மா, லக்ஷ்மீ, திரும்பி வந்தியாம்மா!" என்று கூறி அபாரமான சந்தோஷப் பெருக்கோடு பாய்ந்து ஸ்வர்ணம்பாளைக் கட்டி மார்புறத் தழுவி ஆநந்த பாஷ் பத்தைச் சொரிய, அதுபோல பண்ணை ஐயரவாள் ஆசை யோடு சுந்தரியைத் தூக்கி, யணைத்து முத்தமழை பொழிய லானுர்.

**சுபம்! சுபம்!! சுபம்!!!**

